உ

குருவேதுணை.

# புலவர் புராணம்.

இஃது

திருப்புகழ்ச் சுவாமிகளென்றும்,

தண்டபாணிசுவாமிகளென்றும்

வழங்கும்

வண்ணச்சரபம்

ஸ்ரீமத் முருகதாசசுவாமிகளால்

இயற்றப்பட்டு

ஷை சுவாமிகள் குமாரர்

பு [illegible] பிள்ளையவர்களால்

சென்னை

[illegible] பாரத்திருகரம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விலைரூ கடகாவி

1908.

# முகவுரை.

புலவர்புராணம், என்பது ஆறும்வேற்றுமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையா யிந்நூற்குக் காரணக்குறியாயிற்று. இது, புலவர்களது பழமையானகதையைச்சொல்லு நூலெனவிரியும். புலவர் என்பதற்கு மெய்யறிவினை யுடையோர் என்பது பொருள். எல்லாமாகி யொன்றினுந்தாக்கற்றுள்ள விறைவனை யுள்ளவாறுணரு முணர்ச்சியொன்றே மெய்யறிவெனப்படும். அவ்வுணர்ச்சிக்குக் கல்வியே முதற்காரணமாம். அதுபற்றியன்றே? "கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவ னற்றாடொழாஅ ரெனின்" என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார். கல்வியென்பது வடமொழி, ஆந்தரம், கன்னட முதலிய பலபாடைகட்கும் பொதுப்பொருளினதேனும், ஈண்டுநூலாசிரியராலெடுத்துக் கொள்ளப்பட்டது தமிழ்ப்புலமைக் கல்வியொன்றேயாம். நிற்க.

இந்நூலாசிரியர், தென்பாண்டிநாட்டுத் திருநெல்வேலிச் சுத்த சைவ வேளாண்குலத்தினராகிய செந்தினையகம்பிள்ளை யென்பவர் வருந்திச்செய்த பெருந்தவப்பயனாய்க் கலியுகம், சகூசக, வருஷத்தில் அவதரித்துத் தமது பிதாவால், சங்கரலிங்கமெனப் பிள்ளைத்திருநாமஞ் சூட்டப்பெற்றுச் சிறுவர்களுடன் கல்விபயின்று வருங்கால் பிதாசிவபத மடைந்தனர். பின், ஸ்ரீ முருகப்பெருமான், இவரது மனவெளியிற்றுலங்கித்தமது பரத்துவநிச்சய முணர்த்தி யுபதேசித்தமையால், எட்டு வயதிலே கல்விப்பயன் கைவரப்பெற்று, அளவிறந்த தமிழ்க்கவிகள் புதுமையாகப் பாடுந்திறமையுற்றனர். ஞானசத்தியாகிய வேலாயுதத்தை நிறுத்திப்பூசிக்கும் பேராசையுற் றியற்றிவந்தனராதலின் இவருக்கு முருகதாசரென்றுலகோர் காரணப்பேரோதினர்.

இவ்விவரம், "இளநகைச்சிறுமியர்சொன் மொழியினுந் தித்தித் திருக்கின்ற தமிழ்மணத்தா, விலகுபொதியைக்கிரியி னருகிலுறுநெல்லை யினி டத்திலொரு குழவியாகி—வளவிலுள பாலரொடு பலவாறு விளையாடி வருகின்ற நாளிலென்னை, வலியவந் தாட்கொண்டு வேலாயுதப் பூசை வாஞ்சைக் கடற்குளாழ்த்திக்—குளம்விரவுபாலன்ன மதுரத்தமிழ்க்கவி கொழிக்குநல முதவியப்பாற், கோலமிகு செந்தூரி லொருவிதக் குறிகண்டு கொள்ளவோ ராடல்செய்தும்" என்ற இவரதுகவியால் விளங்கும்.

அத்தகைய அநுக்கிரகம் பெற்றதுமுதல், அநேகதலங்கட்குச் சென்று பன்னிருகைமாலை முதலியபிரபந்தகளியற்றி மீண்டு திருநெல்வேலியிற் சேர்ந்திருக்குநாள் "புலவர்புராணம்" என்னும் இக்காவியத்தை யியற்றிமுடிக்கவேண்டு மென்ற பேராசையுதித்தவாறு தொடங்கிப் பாயிரமுடித்தவுடன் கந்தக்கடவுள் காலந்தாழ்த்துப் பாடலாமென்ற கட்டளையைச் சிரமேற்பூண்டு விடுத்துப்பின், சிதம்பரம், சீரங்கம், பழனி, முதலிய தலங்கட்குச்சென்று, தில்லைத்திருவாயிரம், திருவரங்

கத்திருவாயிரம், பழனித்திருவாயிர முதலிய பிரபந்தங்க ளியற்றியவர் 'சான்றோருடைத் தென்றுன்றோர் புகழுந்தொண்டை நாட்டினுட் பிரிவான நடுநாட்டிலுள்ள சிவதலங்கள் இருபத்திரண்டினுட் சிறந்துள்ள தாய்க் கோமாதுருபுரமென்னுங் காரணப்பெயர்பெற்ற திரு ஆமாத்தூ ரடைந்து, அங்கெழுந்தருளியுள்ள ஸ்ரீ அபிராமேஸ்வரரைப் பதிகச்சதகம், சதகப்பதிகமுதலிய பிரபந்தங்களாற்றுதித்துறுநாள் ஸ்ரீ முருகப்பெருமான் முன்பு நீ பாடத்தொடங்கிய புலவர்புராணத்தை யிப்போது பாடுவாயென வுத்தரவு கொடுத்ததன்மேல், அருட்பெருமையும், தமிழ்ப்புலமையும், ஒருங்கேயமைந்த, அன்பர்களது அற்புதசரித்திரங்களை யனைவரு முணரத்தொகுத்துப் பாடத்தொடங்கினர். இவ்விஷயம், "நெல்லையினிற்றுவக்குமிது நெடுநாளென் மனக்கருவினின்றுதன்று, மெல்லையில்பாம்லையினம் பிறந்ததற்பின் மாதைநகரிடத்திந்நாளிற், குல்லைமலர்க் குகன்கடவ நடைதரும்" என, இந்நூலின் பொதியாசலப்படலத்தி லிவர்கூறியிருத்தலாற் பெறப்படும். அன்றியும், இவ்வாறு இவர், இக்காவியத்தைப்பாடி யதற்கு ஆதாரம், ஆன்றோர்வாக்கியமும், கலைமகளமைந்தநாவும், முருகப்பெருமான் றிருவடியுமேயன்றி வேறன்றென்பது, "ஆதார முன்னோர் நவின்மொழியுங் கலைவாணி நடம்புரியுநாவும், வேற்பிடித்து மலைதொறும்போய்த் திருவருட்போராடல், விளக்கு முழுதுணர்புலவன் விரைமலர்த்தாள்களுமே" என, இவர் இந்நூற்பாயிரத்திற் கூறியிருத்தலால் விளங்கும்.

இவர், சௌரவம், சைவம், பாத்மேயம், வைணவம், காணபத்தியம், கௌமாரம், என்னும் சண்மதத்தையுந் தழுவிய சமரச ஞானியேயாயினும், ஆதியிற் சண்முகனுற் றடுத்தாளப்பட்டமையின் முருகதாசசுவாமிகளெனவும், அளவற்ற சந்தக்கவிகளைப்பாடியமையின், திருப்புகழ்ச் சுவாமிகளெனவும், முழுநீறும், உருத்திராக்கமும், லங்கோடு கௌபீனமும், தண்டமும் பூண்டிருந்தமையின், தண்டபாணிசுவாமிகளெனவும் வழங்கப்பெற்றனர். இவராலியற்றப்பட்ட செய்யுட்டொகை யிலக்கத்துக்கதிகம்.

இந்நூலாசிரியசுவாமிகள் ஷை திருவாமாத்தூரிலே மடாலயம் அமைத்தெழுந்தருளி, கலி, ருக-ளுல ஆகிய விளம்பி ளுல த்தில் அரிய சமாதிநிலைகொண்டருளினர்.

இப்புராணத்தைச் சிலவேற்பாட்டினுல் முன்பதிப்பு அச்சிட்ட சென்னை திவான்பகதூர் - வ - கிஷ்ணமாசாரியாரவர்கள், சிலகவிகளை மாற்றியும், களைந்தும், இரண்டு மூன்று பாகமாகப்பிரித்தும் சிலரைக்கொண்டுபதிப்பித்தனர். இப்போது மூலப்பிரதிக்கிணங்கவொரே புத்தகமாய் வெளியிடலானேன்.

### இந்நூலாசிரியர் திருநக்ஷத்திரம்.

ஆண்டுவிளம்பிமதி யானியிருபான்மூன்றிற்
றீண்டுதிருவோணஞ் சேய்வாரம் - காண்டகுசீர்க்,
கும்பலக்னமென்பார் குருமுருகதாசனெங்கோ
னம்பனிருதாளடைந்த நாள்.

இங்ஙனம்
நூலாசிரியர் மாணக்கனும் குமாரனுமான
தி. மு. செந்திநயகன்.

குருவே துணை.

# சிறப்புக்கவிகள்.

## சென்னை

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

## பூவை - கலியாணசுந்தர முதலியாரவர்கள்

இயற்றியது.

செந்தமிழ்வண் ணச்சரப மெனவவதா ரஞ்செய்து செவ்வே லேந்துங்
கந்தனு தியதேவர்க் கைம்பதினு யிரங்கவிகள் கவினப் பாடி
முந்தபர வருணகிரி யெனுமுருக தாசனுயர் முனிவர் கோமான்
றந்தருளும் புலவர்புரா ணத்தருமை கலைமகள்வாய் சாற்று மாதோ.

---

இந்நூலாசிரியர்மாணாக்கர்

திருநெல்வேலி ஜில்லா கழுகுமலை

தமிழ் வித்வான்

## தி. இராமகிட்டிணப்பிள்ளையவர்களியற்றியது.

தெய்வத் திருவருள்சால் சித்தாீ தமிழ்ப்புலவர்
மெய்வர்க்க மாண்பொருங்கு மேதினிதேர்ந்—துய்வகையெங்
கோமான்கைத் தண்டபெற்றுங் கோலமுனி வன்புகன்றான்
பாமாது மேத்தும் படி. (க)

தனதன தான தந்தனத் தானனு.

அருள்வலிநீடு செந்தமிழ்ச்சீரெனு
வசமுடையார்க லங்கநற்பான்மையோர்
குருபதநாடி யுய்ந்திடச்சேய்முனுள்
குறுமுனியாதி துன்றருட்பாவலோர்
மருவுபல்சீர்து லங்கநற்சார்பெலாம்
வளர்தவமேவு தண்டுடைச்சீலனார்
பொருள்செறிமான்மி யம்பெறக்கூறுமோர்
புலவர்புராண மென்பதிற்காணுமே. (உ)

---

# சிறப்புக்கவிகள்.

இந்நூலாசிரியர் மாணாக்கர்
திருநெல்வேலி ஜில்லா கோபாலசமுத்திரம்
ச. சண்முகதாசப்பிள்ளையவர்கள் இயற்றியது.



சந்தனம் பொழிலிற் றென்றற் றமிழ்மணப் பொலிவும் வானோர்
செந்தனப் பொன்வாழ் மார்பன் றிசை முகன் முதலோர் போற்றுங்
கந்தனற் கருணைப் பேற்றூற் கடலயின் முனிக்கோன் மேவி
வந்தனச் சீருந் தோய்ந்து வயங்குதன் மலைய மாதோ. (௧)

தீரசாத் திரமுற்றோது சிறப்பெலாந் திகழப் பெற்றுப்
பாரத கண்டத் துள்ள பருப்பத மாமக் குன்றின்
சீரவிர் சிகரத் துற்றுத் திகழ்நதிக் கொரு குரோசத்
தோரநெல் வேலி யென்னு மொருநகர் மிகமே லாமால். (௨)

வேறு.

அங்நகரி னனவரத தானநெடு வீதியினி லறங்குன் றாமன்
மெய்ந்நலஞ்சால் கங்கைகுலத் துற்றசெந்தி லையகன்றான் வேட்கையோடு
செந்நயச்சொற் காந்திமதி யம்மைபதந் தொழுதுசிதஞ் செயுந்தவத்தாற்
பன்னருஞ்சீர்ச் சீகாழிச் சம்பந்த னெனப்புவியிற் பால னானான். (௩)

வேறு.

கொல்லங்க மாயிரத்துப் பதினைந்தாண்டு
குலவியகார்த் திகைமதியிற் கூறுபாதி
நல்லத்த நாண்மீன வோரையாறி
னாகஞ்சத் தமத்தின்மதி நவத்திற் புந்தி
யெல்லந்த கன்குளிகன் றசத்திற் செவ்வா
யெட்டிற்சுக் கிரன்பொனிலா பத்திராகு
புல்லலுடன் பஞ்சமத்தோன் றிசையும்வந்து
பொருந்துதலா லப்பெருமை புகலற்பாற்றே. (௪)

வேறு.

உருவேறத் திருவேறு மென்றபழ மொழியைமனத் துறுதியாக்கொண்
டொருவேளை யுஞ்சிறிது மறவாமற் சடாக்கரத்தை யுச்சரித்துப்
பெருவேதன் படைப்பிலுறு மற்றமிழிற் றேன்போலும் பிரபந்தங்கள்
பொருவேல்வைத் திருமாதர் நடக்குலவு முருகோன்மேற் புகன்று வந்தான். (௫)

அப்படிப்பல் பதிசூழ்ந்தான் கழைவனத்துற் றொருநாண னாலோசித்தா
னிப்படியிற் றிருவருள்பெற் றிசைபாடி யெண்ணியவா றியலப் பெற்றுத்
தப்படியற் றினிவாராத் தனிவீட்டிற் சார் புலவோர் சரித்திரத்தை
யெப்படியும் பாடிடவே வேண்டுமெனப் பாயிரமுற் றிசைத்துப் பின்னர். (௬)

எத்தனைநா ளோவிசைத்த னைவகையெண்ணிக் கையினடங்கா திருமுந்நீரை
யித்தனைநா ழியென்றளக்கப் போமோசொல் லிடற்கருக னியானல்லேன்கான்
மெய்த்தவத்தாற் றிருவருள்பெற் றச்சுதன்போல் விளையாட விழைந்தா னப்பே
றெத்தலத்தெக் காள்வருமோ வென்றாராய்ந் தாமாத்து ரிடத்திற் சேர்ந்தான். (௭)

அத்தலமெல் லாந்தருமென் றுண்டபெரு மான்மேன்மூ வாயிரம்பாப்
புத்தமுதம் போலுரைத்துப் பின்புலவர் புராணத்தைப் புகல வெண்ணி
யுத்தமச்சீர்க் கும்பன்முத லோரெழுபத் திருசருக்க முரைத்துத்தீர்த்தா
னித்தரையிற் கலைமகனேர் தமிழ்ப்புலவர் குழாமுணர்ந்திட் டிறைஞ்சுமாறே. (அ)

வேறு.

*தனன தானத் தனன - தனதத்த தானன.*

வறுமைநோ யுற்றுமதி சிதறிஞாயக் குறைவு
மருவு தாழ்மைக் கவிஞர் தெரியத்தகாததே
சிறுமைதீர் பச்சுடல னரவமீதிற் றுயில்கொள்
செழிய வாரிக்கு ளெழு மமிழ்துக்குமேலதே
மறுமைமா முத்திநெறி விழையுமேன்மைப் பெரியர்
மனது நாடித் தினமு முணர்சுத்தஞான நூல்
பொறுமை சீர்வித்தமலி முருகதாசப் பிரபு
புலவர் பேரிற் கழறு புதுமைப்புராணமே. (கூ)

---

இந்நூலாசிரியர் மாணாக்கர்
மஞ்சக்குப்பம் ஜில்லா உரத்தூர்
சின்னுரெட்டியாரவர்களியற்றியது.



திருவள ரிமையம் மீன்ற செல்வியைப் பரமனந்நாண்
மருமணஞ் சூட்டல் காண்பான் மலிசபை தன்னிலன்றே
னருமுனிக் காசை நோக்கி யன்பநீ பொதியைமேவி
யிருமணக் கோல மாங்கே யீகுவ மென்றுன்மாதோ. (க)

அந்தமா முனிவன் றுழ்ந்தே யகன்றுதென் பொதியைமேவிச்
சந்தமார் தமிழ்மூன் றென்னுந் தனையரைப் பயந்தன்னோர்க்காச்
சுந்தரக் காவன்ட லத்திற் சுரந்தபா லாகுந்தீர்த்தம்
வந்தது புவியிற் செம்பு மாநதி யெனப்பேர் தாங்கி. (உ)

நடந்தது பலகால் கொண்டு நற்றட நிரப்பிச்செய்யி
னிடந்தொறுஞ் செந்நெ லோங்க வெய்துமத்தீர்த்தந்தன்னி
லடைந்தவர் வினைக டீர்க்கு மகன்றுறை பலவவற்றுட்
டிடந்தவா மனத்தர் மேவுஞ் சிந்துபூந் துறையொன்றுண்டால். ()

அத்துறைக் குடபாலீச னமர்சின கரத்தின் மேவிப்
பைத்தலைப் பாயற்றூங்கும் பண்ணவன் முதலாம் விண்ணோ
ருத்தம முனிவர் வேத முணர்ந்தவர் சைவரன்ப
ரத்தவென் றேத்து மோதை யளவிடற் கரியதம்மா. (ச)

காம்புறழ் தோளி காந்தி மதியொடு நெல்லையப்ப
ரோம்பிய திருநெல்வேலி யுத்தம வேளாளர்க்குண்
மேம்படு செந்திநாதன் விரதங்கள் பலவாற்றித்
தாம்புகழ் மகப்பே றெற்குத் தந்தரு ளென்னவேண்டி. (ரு)

எங்குமாய் விளங்குமீச னினியகண் ணருளாற் பெற்றுப்
பங்குறு மனையாளோடு பாலனை வளர்க்கச் சீர்த்தி
தங்குசெந் தமிழ்ப்பா மாலை சாற்றினன் மழலைவாயாற்
பொங்குபே ரன்பா லாய்ந்த புலவரு மகிழ்ந்தாரன்றே. (சு)

அன்றுதொட் டொருநால் வேதத் தறமதத் தேவர்மீதுந்
துன்றுபே ரன்பு பூண்டுஞ் சூரனாதியரை வேலால்
வென்றுவா னவர்க ளெல்லாம் விண்குடி யேறச்செய்த
குன்றுதோ றாடுவானைக் குருபர னென்னக் கொண்டான். (எ)

இத்தகை யறிந்தமேலோ ரெண்ணில்சீர் முருகதாசன்
சத்திவேற்பூசை செய்யச் சலிப்புறாத் தண்ட பாணி
சித்திரச் சந்தமோதுந் திருப்புகழ்ச் சரபமென்ன
முத்திறத் திருப்பேரோத முழுமனத் தெளிவுற்றனன். (அ)

இல்லறத் தியற்கை தன்னோ டெழிற்றுற வறமும்பூண்டு
வல்லவ மாயுள்கல்வி மலிதரு செல்வம் வாய்மைச்
சொல்லறந் தவமெய்ஞ் ஞானத் தூய்மையார் புதல்வனீன்று
மல்லலார் வயல்சூழ் மாதை மாநகர் வந்துபின்னர். (கூ)

பன்னிரு புயத்துப் பெம்மான் பகர்மொழிப் படியேமுன்னஞ்
சொன்னதோர் கும்ப னாதித் தொகையெழு பானிரண்டு
மன்னிய தெய்வத் தன்மை மருவிய புலவர்காதை
யின்னிசைத் தமிழின்மூவா யிரங்கவி யிசைத்தான் மன்னோ. (க0)

ஓங்கிய மனத்தா லங்கா னுயர்பசுக் கூட்டத்துன்ப
நீங்கிய மாதையூரி னிலைபெறு தவஞ்செய் தென்னைத்
தாங்கிய வன்னைதந்தை சற்குரு தண்ட பாணி
பூங்கழல் வணங்கிநாளும் புகழ்ந்துவாழ்ந் திருப்பே னம்மா. (கக)



குருவேதுணை.

## இந்நூலாசிரியர் குமாரரியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

பூமகள் வதன தாமரை யெனுஞ்சீர் பொருந்திய பாண்டிநா டதனிற்
றேமலர்ப் பொழிலார் பொதியமால் வரையின் சிரத்தினி லினிதமர்ந் திலகு
மாமகத் துவஞ்சேர் கும்பமா முனிவன் வளர்கமண் டலத்தினின் றிழிந்தே
சாமளக் கடனோக் குபுகுண திசையிற் சாய்வது தாம்பிர வன்னி. (௧)

அந்தமா நதியி னிருகரைப் புறத்து மமைந்துள பலதுறை முகத்து
மூந்தருட் டிறஞ்சால் சிந்துபூந் துறையி னோரம்வேய் மூளையிடைச் சிவனார்
செந்தகை யிலிங்கத் திருவுரு வாகித் திகழ்தரு சீர்த்தியிற் சிறந்து
தந்தமா வுலவும் வீதியின் பெருமை தழைந்தது நெல்லைமா நகரம். (௨)

ஆயநன் னகரிற் சைவவே ளாள னரியவில் வாழ்க்கையிற் சிறந்தோன்
றாயமெய் யறிஞன் செந்தினா யகப்பேர் துதைந்தவ னருந்தவ மியற்றி
யேயதோர் மகப்பே றருளென வடிவா ளிருபதம் பணிந்துபின் னவடன்
சேயகன் னருளாற் பெற்றிடு பாலன் செய்யவேற் பூசனைப் பிரியன். (௩)

திருப்புகழ்க் காரன் றண்டபா ணியன்சீர் திகழ்தரு முருகதா சனுமென்
றொருப்பட வுலகோர் மூன்றுகா ரணப்பே ருரைத்திடப் பெற்றமெய்ச் சீல
னுருப்பொலி முழுநீ றக்கமா லிகைகீ ளுடுத்தகல் லாடைதன் டணிந்தே
குருப்பெரு வேடத் துடன்றமிழ்ப் பனுவல் கொழித்திடு முழுத்தவ ராசன். (௪)

சூரியன் சிவனம் பிகைநெடு மாயன் றும்பிமா முகன்கும ரேசன்
சீரிய குருவா விளங்கியா வையுமாந் தெய்வமொன் றென்னவே தெளிந்தோ
னோரியற் றிருமா மலைமிசை யேறி யெளிதுபூ மியிலுருண் டுய்ந்தோன்
வேரியந் தொடையன் மன்னர்மீ தெனினும் வேண்டியோர் துதிசொலா விரதன். ()

தில்லையா யிரமும் பழனியா யிரமுஞ் சீர்திக ழரங்கத்தா யிரமுந்
தொல்லைதீர் தெய்வத் தாயிர மேழா யிரமுந்தொல் லருணையின் சிகரிக்
குல்லைமா லிகைவேள் சகத்திர தீபங் குணித்தவன் னத்திலக் கணமு
மெல்லைதீ ரேகத் தாளித ழகலந் தாதியு மாறிலக் கணமும். (௬)

கலம்பகஞ் சந்தத் தொலியலந் தாதி கவின்செய்பிள் ளைக்கவி கோவை
யிலங்குசீர்ச் சதக மாதையூர்ப் புராண மிசைபதிற் றுப்பத்தந் தாதி
நலங்கொள்வெண் பாவந் தாதியும் பலவா நவின்றுசண் முகனடித் துணையே
பலங்கொளக் கருதி யாறெழுத் துரைக்கும் பண்பின னன்பினிற் சிறந்தோன். (௭)

என்னைநேர் சிலர்க்குந் தீமைதீர்ந் துயுமா றினிதருள் புரிந்துதன் னடியார்க்
கன்னைநேர் விளங்கிப் பம்பைமா நதிசூ ழணிதிகழ் மாதையூ ரதனிற்
றன்னைநேர் கருணை யழகிய நாதர் சந்நிதிச் சார்ந்திருந் திடுநாள்
மின்னைநேர் வடிவேற் குகப்பிரான் கனவில் விளம்புகென் றிசைத்தசொற் படியே.

அருட்பெருந் தகவுந் தமிழ்ப்பெருந் தெளிவு மமைந்திடப் பெற்றுமெய் யறிவா
மருட்பெருக் ககற்றி யுய்ந்தமெய்ப் புலவர் வண்புக ழனைத்தையும் விளக்கித்
தெருட்டுசொற் சுவையும் பொருட்சுவைப் பொலிவுந் திகழ்விருத் தத்தினாற்கேட்போ
ரிருட்பெருக் கறுபே ரின்பவாழ் வெய்தி யிகபர சாதனம் பெறவே. (௯)

உலகினிற் சிறந்தோர் சொல்லிடக் கேட்டு முரியநூல் சிலவற்று ணர்ந்துங்
கலனணி மயிலனோர் கலைமினு றைவிற் காட்டுசொற் பயனது தெளிந்து
நிலவுசெந் தமிழ்நாட் டிடைத்திகழ் தருமோர் நிகரிலா மணிவிளக் கென்னப்
பலர்புகழ்ந் திடுசீர்ப் புலவர்புராணம் பாடிடத் தொடங்குபு பரிவால். (௧௦)

எழுபதோ டிரண்டு சருக்கமா முடித்திட் டினியதன் மடாலயத் திடையே
தொழுபதக் குகன்பா லினிதரங் கேற்றித் துசளறு பொருள்விரித் துரைத்தான்
பழுதின்மு தறிஞ ரருகுகேட் டுவந்தார் பலவிதச் சுபசகு னங்கண்
முழுதுமாங் கியலக் கண்டதாற் றெய்வ மூதரு ளிலங்கிய தம்மா. (௧௧)

எத்தனை யோகா வியங்களிவ் வுலகத் திருப்பினு மியலருட் புலவோ
ருத்தமப் புகழ்ச்சீ ரொருங்கெடுத் துரைக்கு மொருபெருங் காவிய மிதுபோ
லித்தரை காறு மிசைத்துவைத் திட்டோ ரிலரென்றார் பலரவன் றனைத்தாட்,
சித்தம்வைத் தவன்றன் மைந்தனிப் பதிகஞ் செய்திரு யகன்மொழிந் தனனே.(௧௨)

---

௨

குருவேதுணை.

இந்நூ லாசிரியர் குமாரரியற்றிய

## சருக்கக்கோவை.

தென்பொதியைக் குறுமுனிவர் தமிழ்விரகர் வாகீசர் திகழ்வன் றொண்ட
ரன்பதிகத் திருவாத வூரடிகள் சேந்தனா ரருள்சேர் மூலர்
துன்பமில்சீர்க் காரைக்கா லம்மையிசைச் சேரமான் றதிநக் கீர
ரின்புலமைக் கல்லாடர் வெண்காடர் நாரையூ ரிசைந்த பாலர். (௧)

சேக்கிழார் மெய்கண்டா ருமாபதியார் விட்டுணுப்பேர்ச் சித்தர் கொல்லி
காக்குமர சாயகுல சேகரர்செந் நாப்புலவர் கரியோ னன்பிற்
றேக்குமிசைத் தொண்டரடிப் பொடியார்நம் பாணாழ்வார் செகத்திற் பல்லோர்க்
கேக்கமளித் திட்டபர காலரொடு பொய்கையா ரெழிற் பூதத்தார். (௨)

பேயாரென் றொருமூவர் திருக்குருகைப் பராங்குசப்பேர்ப் பிள்ளை யீலை
மாயாத தேசிகனு மணவாளன் றானுமென வண்பேர் வாய்ந்து
சாயாத புகழிகத்திற் கொளுமிரட்டைக் குரவாருட் டன்மை யாலே
வாயாரக் கவிபொழியு மௌவையா ரிடைக்காட் டோர்மகிமைச் சித்தர். (௩)

வள்ளுவர்பத் திரகிரியா ரொடுபொய்யா மொழிப்புலவர் வண்ணம்பாடிக்
கொள்ளையுரு வாமருண கிரிநாதர் வில்லிபுத்தூர்க் கிளர்ந்த சீலர்
கொள்ளைநயத் தமிழ்ப்புலமை யிரட்டையார் குகைநமசி வாய ரன்னார்
விள்ளுமிசைக் குருநமசி வாயரொடு தத்துவரா யப்பேர் மிக்கோர். (௪)

திருச்சிற்றம் பலநாடி யோடுசிவப் பிரகாசர் சிவபிரானை
யருச்சித்த சாந்தலிங்கர் குமாரதே வப்பெரிய ரருட்போ ரூரன்
விருப்புற்ற சிதம்பரப்பே ராளரருட் சோலையர்மெய் விளங்கும் யோகப்
பெருக்குற்ற தாயுமா னவர்குமர குருபரப்பேர் பெற்ற தூயர். (௫)

திருக்கோவ லூரிலிருந் தருட்டிருப்பா திரிப்புலியூர் சேர்ந்து மாயக்
கருக்கோதற் றுயுநெறிகோ ளாறுமுகப் புனிதருயர் கனகமன்றிற்
றிருச்சேவை பெற்றமுத்துத் தாண்டவர்கச் சியப்பசிவா சாரி யாருட்
செருக்காரும் புகழ்ப்பகழிக் கூத்தரிரு வயிணவராஞ் செவ்வே ளன்பர். (௬)

வரதுங்க பாண்டியர்மெய்க் கவிராச பண்டிதரும் வாம மார்க்கந்
துரமொன்று மபிராமப் பட்டர்புக ழேந்திதிற லொட்டக் கூத்தர்
சரதங்கொள் கம்பருயர் காளமே கப்புலவர் தகவார் காளி
வரமென்ற கொடுவாக்கின் வசைகவியாண் டானெனும்பேர் வாய்ந்த தீரன். (௭)

வீரபாண் டியப்புலவர் கந்தசா மிப்புலவர் விளம்பு மன்னூர்
சாரமுறு தவச்சிசுவா மாறுமுகப் புலவர்மதிட் டகைசால் கூடற்
சேரமலை யருளடைந்த சீநிவா சப்புலவர் திருக்குற் றாலத்
தோரமுறு கமசிவா யப்புலவர் முதுகுளத்தூ ருவந்த சீலர். (௮)

நெற்குன்ற வாணர்தலை மலைகண்ட தேவரரு ணைடுமாயற்சே
சொற்குன்றாத் துதிபகர்பிள் ளைப்பெருமா ளையங்கார் துணைக்கண் ணின்றிக்
கற்குன்றக் குகன்றரக்கொள் முத்துவயி ரவப்புலவர் காதலாட்காப்
பொற்குன்ற மெனப்புகழ்பரன் டியனெதிர்காட் டியபாணப் புலவர் மாதோ. (௯)

சத்திமுற்றத் தூர்ப்புலவர் முத்துலுக்கப் புலவரொடு தம்பேர் காணுஞ்
சித்தியற்றி யுடன்மறைந்த பலதெய்வப் புலவரருட் செயலின்றித்தம்
முத்தியினாற் செயலியற்று மறிவுத்தன் மைப்புலவ ருடனே யிந்தச்
சத்தியமாம் புலவர்புரா ணத்திலெழு பதிற்றிரண்டு சருக்கந் தானே. (௧௰)

முற்றிற்று.

தெய்வமேதுணை.



# சருக்க அட்டவணை.

P. M. Parthasarathy Naidu.

உ

குருவேதுணை.

# புலவர்புராணம்.

## பொதுப்பாயிரம்.

### பொதுக்கடவுள்வாழ்த்து.

போதுத்தேய்வம்.

யாவரெவ்வண்ணஞ்சொல்லு மெவற்றினுமிசைந்துநின்று
மூவலற்றொளிருந்தொல்சீர் முதற்பரம்பொருளைவாழ்த்திக்
காவலர்வெருண்டுபோற்றுங் கவித்தமிழ்ப்புலவர்காதை
யாவல்கொண்டுரைக்கலுற்றே னதுவுமென்செயற்பாற்றன்றே. (௧)

விநாயகர்.

எவ்வகைத்தொழிலெந்நாளி லெவ்விடத்தியற்றுமியாரு
மவ்வவைமுடியவேண்டு மானைமாமுகனைப்போற்றி
ஔவலம்பொன்னுநாணு நறுந்தமிழ்ப்புலவர்காதைப்
* பௌவமூடுணர்ந்தமட்டிற் பகர்ந்திடத்துணிவுற்றேனே. (௨)

முருகக்கடவுள்.

எழுதருமறைவல்லான்ற னீரிருசிரத்துமோதிப்
பழுதறுபிரமஞானம் பரமனுக்கருளிச்செய்து
முழுதறிபுலவனான முருகனைமுன்னிவாழ்த்தித்
தொழுதருட்புலவர்காதை சொல்லிடத்துவக்கினேனே. (௩)

சரசுவதி.

புண்ணியச்சுருதியாதிப் புனிதநூற்றொகுதியாவும்
வெண்ணிறக்கமலப்போதில் வீற்றிருந்தருள்வாடன்னைத்
திண்ணியவுணர்வானாடிச் செழுந்தமிழ்ப்புலவர்காதை
மண்ணினிற்பலருந்தேறி மகிழ்வுறவகுக்கின்றேனே. (௪)

பராசத்தி.

வாலையும்புவனைதானும் வளர்திரிபுரையுமாகிக்
காலையிற்பரிதிபோலக் கவின்றருகவுரியுண்கண்
வேலையெப்பொழுதும்போற்றி வியன்றமிழ்ப்புலவர்காதை
நூலையானுணர்ந்தவாறு நுவன்றிடமுயல்கின்றேனே. (௫)

---

* பௌவம் - கடல்.

### பரமசிவன்.

எண்வகைப்பொருளுமாகி யிணையிலைந்தொழிலுஞ்செய்து
திண்வரைச்சிலையொன்றேந்துஞ் சிவபிரான்றிருத்தாள்போற்றிப்
பண்வழிந்தொழுகும்பாடற் பயன்பெறுபுலவர்காதை
விண்வயிற் * புலவர்நாண விளம்புதல்விரும்பினேனே. (சு)

### திருமால்.

இகத்தொடபரத்துமேவி யெவ்வகையுயிருங்காக்கு
மகத்துவத்தயக்கிரீபன் மலரடிவணங்கிவாழ்த்தி
† நகத்தின்வாயமுதமாய நறுந்தமிழ்ச்சுவையுண்டார்க்கு
மகத்தருட்புலவர்தங்க ளணிக்கதையறைகின்றேனே. (எ)

## வழிபடுகடவுள் வாழ்த்து.

### அனவரததான விநாயகர்.

மணிகுலவுமுடிவேந்தர் வாழ்வனந்தஞ்சிதைந்தாலு மாறுதோங்குந்
திணிகுலவுகவிபாடும் புலவர்சரித்திரம்விரித்துச் செப்பச்செய்வாய்
பணிகுலவுதிருமேனிப் பரமனதுநெல்வேலிப் பதியிற்றெண்ட
ரணிகுலவுநெடுவீதி யனவரததானவிநா யகப்பெம்மானே. (அ)

### செந்திநாயகர்.

பன்னுமுத்தமிழ்ப் பாடலினுடல்கள் பயின்றுயர் புலவோர்தம்
மன்னுமெய்ப்புகழ்ச் சரித்திரமுறைப்படி வழங்கியாண் டருள்கூர்வாய்
மின்னுநாணுற விளங்கயிற்படைகொடு வியனெழிற் றிருச்செந்தூ
ரென்னுமாதவத் தலத்தில்வீற்றிருந்தெனக் கிசைந்தவாறுரைத்தோனே.

### வாக்குடைச்செல்வி.

திருவுருமாமலைத்தலத்தி லாறுவகையிலக்கணமுஞ் சென்னையூரிற்
பொருவில்பிள்ளைக்கவியுமரங் கேற்றியநாளுலகமுற்றும் புகழ்தற்கான
பெருவிளையாட்டியற்றியதோர் பெண்கொடியாம்வெண்கிளியே பேதை
லருள்வளமைப்புலவர்கதை யத்தனையுமுலகறிய வறிவிப்பாயே. [யேனு

### உண்ணாமுலையம்மை, காந்திமதியம்மை.

அண்ணாமலையி லடியேனை யாண்டுகொண்ட
வுண்ணாமுலையே யுயர்ந்ததிரு நெல்லையப்பர்
கண்ணார்வமெய்த்தவருங் காந்திமதியேயெனக்குட்
பண்ணார்கவிப்புலவர் பண்புதிக்கச்செய்வீரே. (கக)

---

* புலவர் - தேவர்கள். † நகம் - மலை.

நடராசர், அண்ணுமலையார், நெல்லையப்பர்.

தில்லைமன்றத் தொருத்திரு ணடவாய்
செங்கனற்கிரி யாகித் திகழ்ந்துளாய்
நெல்லைவேயின் முளைத்துல காளுவாய்
நேயம்வைத்து நிதந்துதி செய்குவே
னெல்லையின்றிய பாவலர் தங்குழாத்
தேறுபோன்றவ ரின்புகழ் யாவையும்
வல்லையோதத் துணிந்துகொண் டேனவை
வந்துதோன்றவரங் கொடுத்தாண்மினே. (கஉ)

கரியமாணிக்கப்பெருமாள், தேவநாதன், வரதராசர்.

நெல்லைமாநகர்க்கரிய மாணிக்கப்பெருமாளே நிறைந்தவாசக்
குல்லைமலிதிருவயிந்தைக் கோமானேபுதுவைநகர்க் கொண்டல்வண்ணு
கல்லைநிகர்வன்னெஞ்சக் கயவர்களுமஞ்சுதிறற் கவிஞர்சீர்த்திச்
சொல்லையுலகிகழாமற் புரந்தருளுங்கடனுமது சொந்தமாமே. (கங)

சற்குரு.

சூரியனுஞ் சந்திரனும் விழிகளாகிச்
சொல்லுமற்றைக் கடவுளர்பல் லுறுப்புமாகிக்
காரியமுங் காரணமுந் தானேயாகிக்
கருதுவாருளந்தொறும்போய்க் கலந்துநிற்குஞ்
சீரியசற் குருபரனே யெனையாட்கொண்ட
செல்வமே யாவும்வல்ல தெய்வமேமுன்
கூரியமுத் தமிழ்பொழிந்தோர் சரிதஞ்சற்றுங்
குழறுமற் பகரவரங் கொடுத்தாள்வாயே. (கச)

அபிமானக்கடவுள்வாழ்த்து.

பலதெய்வங்கள்.

பன்னிரண்டுசமயத்துங் கொலைபுலையிற்சாராத பான்மையோராத்
துன்னிவளர்பெரியோர்கள் வழிபடுமெத்தேவரையுந் துதித்தல்செய்வாம்
பொன்னிலங்குமுடிவேந்தர் நடுநடுங்கத்தமிழ்மாரி பொழிந்தகீர்த்தி
மன்னியமெய்ப்புலவர்சரித் திரத்தையொருபுராணமென வகுக்கவென்றே.

சமயச்சின்னம்.

வெந்தநீ றக்கங்காவி விளங்குசிந் தூரமண்ணென்னு
மைந்தணிந் *தறுவர்தம்மா லமைரா தமைந்தபின்னர்க்
† கந்தரஞ் சொரிதல்போலக் கவிபொழி கட்வுட்டன்மைச்
செந்தமிழ்ப் புலவர்காதை செப்பிடச்சிந்தித்தேனே. (கரு)

---

* அறுவர் - சட்சமயவாதிகள். † கந்தரம் - மேகம்.

### பெரியோர் பாததூளி.

இரக்கமாதிய நற்குணமியாவையு மெய்திச்
சுரர்க்கு மேலவ ராயவர் தம்பதத் துகளைச்
சிரத்தின்மீதணிந் திறைஞ்சுதுஞ் செழுந்தமிழ்ப் புலவர்
வரத்தி னூற்பெறும் வாழ்வினைச் சொலப்பெறு மாறே. (கஎ)

### புலவர்.

சொற்படி நடத்தும்வலி துன்னுபுலவோர்தங்
கற்பத மெனுங்கமல நாண்மலர் முடிப்பாம்
விற்பனர் விரும்புமவர் மெய்ப்புகழ்விளம்பிப்
பற்பலர் துதிக்குமுயர் பான்மையுறவென்றே. (கஅ)

### அபிப்பிராயம்.

அருணைநெடுஞ் சிகரிதிரு நெல்வேலிச்சிகரி
யாதியபற்பலவாகு மபிமானத் தலமுந்
திருவுருமாமலைவள்ளி மலைதிருமா மலைபோற்
சிந்தையறியநுபூதி செயுந்தலமுஞ் செப்பிற்
பெருகியதோர்காவியமா மாதலினாற் றுதியே
பிறங்குபொதுப் பாயிரத்தைப் பேசியமட்டடக்கி
வருசிறப்புப்பாயிரமென் றெண்ணுகின்றேன் கவிதை
வந்தபின்பார்த் துவப்பதென்றன் வழக்கமுலகோரே. (கக)

பொதுப்பாயிர முற்றிற்று.

---

## சிறப்புப்பாயிரம்.

### அவையடக்கம்.

அமரர்மன்னவ ராதியர்ப் புகழினு மலர்வெண்
கமலையேநிகர் கவிவலாரிகழ்வர்சற் றவர்தந்
தமரைவாழ்த்திடிற் பிழைபலசாரினுந் தள்ளார்
நமரென்றோர்கில ரிருப்பினும்பொருளல நமக்கே. (க)

### வேறு.

இப்புராணத்தூ டிலங்குமவ ரின்னருளா
லொப்புரைத்தற்கெட்டா துயர்ந்தபெருந் தன்மையுற்று
மெய்ப்புனிதனுகும் விருப்பால் விளம்புகின்றேன்
தப்புவருமாகிலவர் தம்மையே சாருமன்றே. (உ)

வேறு.

வம்பரைப் பாடுவோர்க்கும் வாக்கருள் வாணித்தாய்தன்
செம்பதத் தடிமைத் தன்மைத் திறலுறும் புலவர்காதைக்
கிம்பரார் புகழ்சீர்நல்கா திருக்கிலவ் விழிவுந்தீங்கும்
கொம்பர்நே ரவளையன்னோர் குழுவினைக் கூடுமன்றே. (௩)

நூற்பொருள்.

தென்றலைப் பொருநையைத் திரிவிதத் தமிழ்களைத்
தன்றவப் பயனெனத் தருமலைக் கிறைமுதற்
றுன்றருட் புலவர்தந் தொலைவின்மெய்ப் புகழ்வளப்
பென்றனுட் குலவுமட் டிதுநுவன் றிடுமரோ. (௪)

வேறு.

அகலமாகு மருந்தமி ழாக்கமுஞ்
சகலர்காணத் தகாவருட் டன்மையும்
பகலை நேர்புகழ்ப் பாவல ராண்மையும்
புகலுமிந்தப் புராண முணர்த்துமே. (௫)

நூற்பெயர் முதலியன.

நூற்பெயர்யா தெனிலுண்மைப் புலவர்புரா ணமதா
நுவலுமிடந் திருநெல்லை நகர்நுவலு நிமித்த
மேற்பவருக் கீவார்தம் பெருநலமு மீயா
ரிடும்பையுஞ்செந் தமிழ்ப்புலவோ ரெழிற்புகழும் விளக்கி
நாற்பொருளும் பெறவிரும்ப லாதார முன்னோர்
நவில்மொழியுங் கலைவாணி நடம்புரியு நாவும்
வேற்பிடித்து மலைதொறும்போய்த் திருவருட்பே றாடல்
விளக்குமுழு துணர்புலவன் விரைமலர்த்தாள் களுமே.()

உவகைவாழ்த்து.

செஞ்சுவைச்சொல் லுணர்ந்துபல காவியங்கள்
செப்பியவர் தமதுகுல தீபம்போன்று
விஞ்சுபுகழ்ச் சித்திநல மடைந்தோராய
மெய்ப்புலவர் சரிதமென்றும் விளம்பாதன்னோர்
நெஞ்சுளிருந் தொளித்தெனது நினைவிற்காட்டி
நிறைவேற்றத் துணிந்ததெய்வ நீதமும் வாழி
யெஞ்சுதலில் லாதவிப்பே றெய்தப்பெற்ற
யான்வாழி தமிழ்வாழி யிந்நூல்வாழி. (௭)

## புலமைமரபு.

அரன்முனட் டருமிபாண னன்புறுபெத்தான்கீரன்
றாமுல கறியப்பாடித் தமிழ்க்கவிப் புலவனானன்
கரங்கர் கொடியமைக்கட் கவுரிபாண் டியன்முற்செல்லு
மிரவல னிமித்தம்பாடி யியம்புமப் பரிசேய்த்திட்டான். (அ)

கணபதிப் பெயருள்ளான்மெய் கண்டதே சிகனற்செஞ்சொல்
புணர்கவி பாடியுண்மைப்புலவரி லொருவனானன்
மணமலர்க் கடம்பன்பாலே வனத்திலோர் புலவன்றன்னைக்
குணமுரட் பகழிக்கூத்த னுதியர்க் குறித்துப்பாடி. (கூ)

முழுதுணர் புலவனென்னு முற்பெயர் நிலைக்கப்பெற்றான்
விழுமிய வாணிநாடா முதலென்றோர் வெண்பாச்சொற்றுப்
பழுதில்சீர்ப் பனுவலாட்டி யெனும் பெயர்ப் பலிதங்கொண்டாள்
குழுவுமற் றையவானேரு மப்பெயர் கொண்டு வாழ்ந்தார். (க0)

ஆயினு மவர்சீர்சொல்லே னருந்தமிழ்ப் பொதியைக்குன்றின்
வாயிருந் துலகைக்காக்கும் வரமுனி முதலாச்சொல்வே
னீயிவனுவலுஞாய நிகழ்த்தெனி னிகழ்த்தொண்ணுது
பாயிருள் சிதைக்குஞானப் பரிதியோ ருணர்தற்பாற்றே. (கக)

உணர்தன்முற் றுமையாலெய்து மெளநிச முணர்ந்தமேலோர்
கணநுவன் றிடுதல்பற்றிக் கழறினுங் கணவன்றிண்டோள்
புணர்தலைத் தருணிமுச்சிற் புழுதியாட் குரைக்கைபோலா
மணவருஞ் சகுணபேதத் ததிரக சியந்தானம்மா. (கஉ)

அன்றியும் புலவர்க்கெல்லா மாதர வாகியம்பொற்
குன்றினின் றிலங்கும் பான்மைக் கொழுந்தமிழ்க் குலத்தையீன்
னென்றிடும் பெயரன்னேனுக் கிசைந்ததா லெனலுமாகு [ரோ
கன்றினி மலையவெற்பி னலமுத னவிலலுற்றும். (கங)

சிறப்புப்பாயிர முற்றிற்று.

---

ஆ கவி - கஉ.

---

உ

குருவேதுணை.

# புலவர்புராணம்.

## பொதியாசலப் படலம்.

கங்கைதோன்றிய விமயமுங்காவிரி யென்னு
நங்கையைத்தரு சையமுநாணுறப் பொருநை
மங்கையுங்குளிர் தென்றலுந்தமிழும்வந் ததனாற்
சங்கையின்றிய புகழ்பொறுத்ததுதடம் பொதியை. (௧)

உச்சிமீதுநின் றுயர்திணைத்துணைப்பெய ரொடுபோர்
நச்சிமேற்றிசை கீழ்த்திசைவழிக்கொடங் நலத்துப்
பச்சிருங்கடற் புணர்தருபொருநையாற் பல்லோர்
மெச்சிடும்படித் திகழ்ந்ததுவியன்றிருப் பொதியை. (௨)

சிற்றுயிர்ப்புறழ் தென்றல்சந்தனமணஞ் செறியப்
பெற்றுமாரனைக் கொடுவடதிசைவழி பெயர்ந்து
சுற்றுசெஞ்சடைச் சிவன்வரைகடந்தலை சுவற்றி
முற்றுதீக்கொல லிடுப்பதுமூவலில் பொதியை. (௩)

வள்ளையங்குழைப் பார்ப்பதிமலர்த்திரு மடந்தை
வெள்ளைவாணியென் றுளவொருமூவரில் விளங்கிக்
கள்ளைவானகத் தமுதினைப்பாலினைக் கடுக்குங்
கொள்ளைமுத்தமிழ்ப் பிறப்பிடங்குலவுதென் பொதியை. (௪)

சேவலங்கொடி யாமெனவெழுந்தகார் திரைநீ
ராவறீர்தரப் பருகலின்மயிலுரு வாகிப்
பாவலார்தமி ழெனப்பொழிமழைமுதற் பலவா
மோவலின்றிய வளத்தினதுயர்புகழ்ப் பொதியை. (௫)

அளவில்வானவர் தம்மிடையாளொடு பெண்ணு
வுளதொன்றுங்கு பன்மலைநதிபயப்பினு மொன்றே
கிளருமேற்கிலாண் கிழக்கினிற்பெண்ணெனக் கெழுமும்
வளமைதோய்ந்தது மாழைமால்வரையுறழ் பொதியை. (௬)

துதிக்கையும்பிறைக் கோடுமெய்யருண்மதத் தொகையு
மதிக்கைதீர்தரு மானமுந்தலைமையு மனத்தி
லுதிக்கை யற்றவர்தம்புடைச்சேர்க்கையு முற்றுக்
கதிக்கையாங்களிற் றனைநற்கடுக்குமப் பொதியை. (௭)

ஆறுமாமுகம் பன்னிருகைத்தல மயில்வேல்
கூறுசேவலங் கொடிபெருந்திருப்புகழ்க் குலத்தாள்
வீறுசித்தனை யாணலமாதிய மேவித்
தேறுசெந்தமிழ்ப் பருப்பதங்குகனெனத் திகழும். (அ)

பையராவணி பனித்தவார்சடைக்கொடி பைம்புல்
செய்யமான்கனன் மதிதவழுறுநெடுஞ் சென்னி
துய்யகோவணந் திகம்பரமுதலிய தோய்ந்து
பொய்யர்போற்றரும் பொதியையீச்சுரனெனப் பொலியும். (௯)

நீங்குறுப்புனற் சேர்க்கையுநீடிய நிவப்புங்
காங்குபோர்த்தன கோலமும்பொருவருங் கருணை
தாங்குநீர்மையுந் தமிழ்க்குடன்படுதலுந் தழுவித்
தீங்குதீர்நெடு மாலெனத்திகழ்வதச் சிலம்பு. (கo)

சிங்கவாகனக் காளியும்பணிதரத் திகழும்
புங்கயத்துணைப் பதத்துமையுலகெலாம் பரிக்குந்
துங்கநீரெனத் தமிழ்த்திருநாட்டினைத் துலக்கு
மங்களாகரப் பெரும்பொருளாயது மலயம். (கக)

பரிதியென்றுள பரவெளிக்காவலன் பன்னாட்
பிரியமாதென மதியொடுஞ்சேய்முதற் பேசு
முரியகோட்டொகைக் கேளிர்கடம்மொடு முலவும்
பெரியமேடையிற் பிறங்குமத்தென்றலம் பிறங்கல். (கஉ)

உயிர்க்கெலாமொரு தாயகமாகிநின் றுணர்வார்
செயிர்க்கெலாமரு மருந்ததாய்ச்செப்பருந் தெய்வப்
பயிர்க்கெலாந்திரு வருட்புனலூட்டுபு பரமா
* யயிர்க்கெலாந்தலை யாமுணர்வளிக்குமவ் வசலம். (கங)

கயிலைபொன்வரை யிமயமந்தரமுதற் கவினுஞ்
சயிலகோடியிற் றங்கினரனைவருந் தாமே
வெயில்குலாமணித் திரண்மலிபொதியையை வியந்து
பயில்வர்சந்தனப் பசும்பொழிலாதிய பண்பால். (கச)

குன்றெலாமுடைக் குருபரன்பகர்பொருள் கொண்டோர்
மன்றெலாநடிப் பவன்குறுமுனியெனும் வகையா
னின்றெலாவரை யினுமுயர்கயிலையை நிகரா
மென்றெலார்களும் புகழ்தரத்தகுமலை யிதுவே. (கரு)

வெள்ளிமால்வரைச் சிவனவன்மனையொடும் வேற்கைப்
பிள்ளைதன்னொடு மானிடவுருக்கொடு பேணிக்
கொள்ளவல்லசெந் தமிழ்வளநாட்டினுட் குலவு
மெள்ளறீர்மலைக் கிணைசொலிலெம்மலை யிசையும். (கசு)

* அயிர் - நுட்பம்.

கானவேட்டுவர் தங்குலக்கன்னியைக் கவரும்
வானவன்றனைக் குறித்துமானதட்பறை முழக்கித்
தேனளாவிய புதுத்தினைமாமிகச் செய்வ
தானநல்விழா வணியினுமுயர்ந்ததவ் வசலம். (கஎ)

தேவர்கின்னரர் சித்தராதியர்பலர் செறிந்து
காவகத்தினிற் கலந்திசைத்துவப்புறு கவினு
மூவர்மாதனை நிகாரமகளிர்த மொய்ப்புஞ்
சேவல்கேகய முதற்பலபுள்ளொலிச் சிறப்பும். (கஅ)

மருவிவானிடை வளர்தருமலயமால் வரையி
லருவியாயிர மடற்களிறுயிர மார்க்கும்
பொருவிலோசையைப் புணரியிற்போய்ப்புனல் புசித்த
கருவிமாமுகில் கேட்டுளநாணுறீஇக் கலங்கும். (கக)

அன்னவாகனத் தயன்றருபுதல்வரு ளண்ண
றுன்னலாலுயர் பொதியையின்றொலைவறு பெருஞ்சீர்
பன்னகாதிபன் மிசைதுயின்மாயனும் படையா
னென்னவோதிடற் கிசைந்துளாருலகிலெண் ணிலரே. (உ0)

வேறு.

முருகவேளது முத்தமிழைத்தரு
மொருவன்றன்ன துயர்புகழ்ப்பாண்டிய
நிருபனுள்வதென் றேறிடநின்றுபே
ரருள்விளக்க மளிப்பதக்குன்றமே. (உக)

தேனும்பூவுஞ் செறிபொழிற்சீரதால்
வானுநாண வளர்மலையாசல
மானும்வல்லிய மும்பகைமாறுநீர்
தானுமல்கித் தனிப்புகழ்கொண்டதே. (உஉ)

இந்திரப்பத மெய்தலினீடுசால்
புந்தியின்றிப் புலம்புறு * புல்லன்மேல்
வெந்திலங்குடல் வேறுசெய்வித்தகன்
வந்திருந்த மலைக்கிணைவானமோ. (உங)

தெண்ணிலாமதிச் சென்னியன்சேவடிக்
கண்ணிலாவுங் கருத்தினராதியா
மண்ணிலாறு வகைச்சமயத்தரு
நண்ணிலார்வ நனிதருமந் † நகம். (உச)

செச்சைபூத்த செழுந்தகைக்காடுசூழ்
பச்சைமானிக ராமப்பருப்பூதங்
கொச்சைமைந்தர் குலமனையாதியா
மிச்சையில்லவ ரீட்டமும்வேட்பதே. (உரு)

* புல்லன் - கருடன்.   † நகம் - மலை.

கள்ளிறு கமழ்தருசாரல்வாய்ப்
புள்ளினந்தள ரப்புனம்புக்குவாழ்
வள்ளியன்ன மடந்தையர்வாய்மொழி
கொள்ளின்மஞ்ஞைக் குலமுவப்பெய்துமால். (உசு)

கல்லுபாசனை யின்றியகாவலர்
சொல்லுகாண விருண்டெளசூழல்வாய்
வில்லுடன்புகும் வேடரும்வேறுயிர்க்
கொல்லுநீர்மை தவிர்ந்ததக்குன்றமே. (உஎ)

மற்றவெற்பின் வனசரர்போலவே
கொற்றவிற்கரங் கொண்டவர்கொய்கனி
பெற்றசூரும் பிராணிகர்பீடுடை
நற்றவர்க்குண வாமிகநாளுமே. (உஅ)

வானநாடரும் வையகமன்னரு
மேனல்சூழ மெழிற்பெருஞ்சாரல்வாய்க்
கானவேட்டுவக் கன்னியர்க்கெஞ்சுபு
* ஞானபண்டித ஞமென நண்ணுவார். (உசு)

வேடமங்கையர் விண்ணினைவிட்டிழிந்
தாடவந்த வணங்கினர்தங்குழற்
காடரிந்து கயிறெனச்செய்துதம்
பூடணங்கள் புகுத்தணிந்தார்ப்பரால். (௩0)

கந்தனம்பொற் கழற்றுணைநீங்குறாச்
சிந்தனைக்குறு மாமுனிசேர்தலா
லெந்தமால்வரை யன்புசெய்வார்க்கெலாஞ்
சந்தமுத்தமி ழைத்தரத்தக்கதே. (௩க)

வழக்கின்மிக்க மரபின்வழிக்கொடு
கிழக்குநாடிய கேழ்கிளர்பூமகட்
† குழைக்கையான்மலை யொக்குமிவ்வோங்கலே
மழைக்கணெய்தி வலத்தனமாயதே. (௩௨)

கண்டமுற்றுங் கறுத்தவனுதியோர்
தொண்டர்சொல்லிய சொற்படிசெய்வது
மண்டர்நாணு மவர்க் ‡ கரசம்மலை
கொண்டதன்மையுங் கூறுதல்வேண்டுமோ. (௩௩)

மண்படைத்தவன் மைந்தரின்முன்னவன்
றண்படைத்த தமிழ்தருவெற்பின்மேய்
விண்படைத்தவர் வெஃகியவீறெலாங்
கண்படைத்தவர் காணல்கடனரோ. (௩௪)

---

* ஞானபண்டிதன்-முருகன். † உழை-மான். ‡ அரசு-அகத்தியமுனிவர்.

வேறு.

இந்திரலோகமும்பிரம னெழினகருந்திருமால்வீற் றிருக்குமூருஞ்
சந்திரசேகரன்வசிக்குந் தடங்கிரியுந்தமிழ்ப்பொதியை தனக்கொப்பா
மந்திரசடாக்கரசண் முககுமரகுருபரனை வணங்கும்பெட்பாற் [மோ
றந்திரமுற்றுணர்ந்துபுவி சலதியிற்சாயாதளித்தோன் சார்தலாலே. ()

கேடில்கலைமகளினம்போற் கெழுமுவவாலருவியினங் கிளர்பொன்மின்னார்
கூடிடலிற்சோதிவனங் குலவுவபல்லுமையவளிற் குழுவுமஞ்ஞை
யாடியவண்டிகழ்வலத் தறுசமயத்தொண்டர்களு மருள்பெற்றுய்வான்
பாடிடற்காந்தமிழ்விரித்தபவளவாய்முனிவன்வெற்பின்பாங்கர்மன்னே.

காமுகரிற்சசிபோலுங் கடவுளரிற்குகன்போலுங் கவிஞர்தீஞ்சொற்
பாமுதிர்பல்கலைப்பெருக்கிற் றமிழ்போலுங்கொடைவலத்திற் பரமன்போலுந்
தீமுனையாயுதத்திரளில் வேல்போலும்பதாகைகளிற் சேவல்போலு
மாமுனிவர்குலத்திலகத் தியன்போலுமலையினத்தின் மலயமாதோ. ()

மாதவர்சேகரன்றினமும் வாழ்தலினலமரார மகளிர்தம்மோ [லார்
டேதமின்மென்றளிர்த்துயில்கொள் பொழிற்செறிவாற்புதன்போலு மியற்பாவல்
போதவியந்திடும்வளத்தாற் றனேத்தானேங்கர்த்திலகு பொதியைவெற்பின்
சீதளத்தென்றலின்மதவேளிவரானேலைந்தொழிலுஞ்சிதைந்துபோமே.

சித்தர்களுநாவலருஞ் சென்றுகலையரங்கேற்றுஞ் சீர்த்திவாய்ந்து
முத்தமிழ்த்தாயெனநிலவி முனிக்கோமான்றனதிடமா மொய்ம்பார்குன்றை
யித்தனையின்மலைமுழுது மெண்ணியெண்ணிகாணும்வித மெழிலார்செவ்வேள்
கைத்தலத்துவேல்கருதி மற்றையர்கைப்படைகளொல்கல்கடுக்குமன்றே.

பண்டாயநான்மறையும் பகர்ந்தான்செய்தவப்பேறுய்ப் பரவைமுற்று
முண்டானுக்குறைவிடமா மொருமலையின்பெரும்புகழை யுணர்ந்தமட்டில்
விண்டார்க்குங்கேட்டார்க்கும் விரும்பினர்க்கும்வணங்கினர்க்கு மேவிக்கண்ணுற்
கண்டார்க்குமொருசிறிதுங் கலிபுருடனுதியர்செய் கலக்கமின்றே. (௪0)

கங்கணமென்றரவணியுங் கைப்பரமனுமையவட்செய் கலியாணப்போ.
தங்கணவும்பலர்வினவத் தனையனையனெனுமுனிக்கோ னகன்றிடாத
வங்கணமாக்கொளுமலையின் மகிமைமுழுதாரறிவார் வானத்தேகுங்
கொங்கணனுதியருமொரு சிறிதுணர்வரெனின்மனிதர் கூறற்பாற்றே.

வானரந்தாவலுமருவி சொரிதலுமாதியவியனே மலையின்கூட்டத்
தானவளமெனப்பலபல் புலவோர்முன்னுணைத்துள்ளா ரந்தவாறே
கானறையகாணுகின்றே னவின்றுலுந்திருடியதா நவில்வார்சில்லோர்
ஞானசித்திக்குறுமுனிவன் வசித்தலின்மேதகைத்தாமோர் நலமுமின்றே. (௪௨)

எம்மலைக்குமொருதலைமை பெற்றுளசண்முகப்பெருமா னிமையோரஞ்சச்
செம்மலர்ப்பீடத்தயனைச் சிறைசெயுகாளீசனொடு செப்பலாய
மெய்ம்மறையையுடன்வினவிப் பெறுமுனிவன்வளர்மலய வெற்பின்மாட்சி
பொய்ம்மழலைமொழிக்கவிஞர் புகன்றிடின்முற்றுறுந்தகைத்தோ புவனிமீதே. ()

கலையுணர்வார்பலர்தாமுந் தொன்றுதொட்டிந்நாள்வரையுங் கடல்சூழ்பாரி
னிலைபெறுபொன்மலைவெள்ளி மலையாதியனகோடி நிலவக்கண்டும்
புலைவெறுத்துச்சாபமிட்ட புகழ்முனிவன்வசிப்பிடமாம் பொதியையென்று
மலையழகுமிகப்பொலித லுணர்ந்தன்றோமலையமென வகுக்கின்றாரே. ()

சந்தனமுஞ்செந்தமிழுந் தவமுமரமகளிர்குழாற் சவரிக்காடு
மந்தகனைவென்றசித்த ராகமுந்தோய்தருசிறுகா லதனையேவி
மைந்தருடற்பிணிமுழுது மாற்றிவடகடற்பருகும் வடவைத்தீயை
யெந்தமலையவிப்பதுவோ வந்தமலைசொந்தமலை யெமக்குமாதோ. (௬௫)

அந்தமலைத்தலையிலுறு மவையிடைநாளொருகனவி லடைந்தவாறுஞ்
சிந்தனையிற்றோன்றியவா பேசியதுமாங்குவளர் சித்தரியாருஞ்
சொந்தநிலைதவறாராயிருந்ததுவுங் குறுமுனிமுற் றோற்றிநீறு
தந்ததுவும் * குருபாதத்துவமெனு நற்காவியத்திற் சாற்றினேனே. ()

குருந்தமராகுநிழலிற் சிவபெருமான்றனைத்தனது குருவாக்கண்டாங்
கிருந்தவனுதியர்தாமுங் காரிதவப்பயனுவந் தீன்றுள்பாலு
மருந்திலனேமுதலினரு மலைக்கடன்முற்றுண்டுவிடுத் தமரர்மூவா
மருந்துறழ்தீந்தமிழளித்த முனிவன்மலைத்தமிழ்கொடுசெய் வடிவத்தோரே. (௬௭)

பிற்பிறப்பிற்பாலையிடை முட்டையெனும்வேடுவனாற் பீதியெய்துங்
கற்பினனுங்கீரனரன் கனல்விழியைப்புனற்சடையைக் கண்டுமஞ்சா
வற்பிறந்துதெண்டனிட்டு வண்டமிழ்நூலிலக்கணத்தின் வகைகேட்டுய்ந்த
பொற்பிலங்குபுகழ்முனிவாழ் பொதியைவளமெவராலும் புகலொண்ணாதே. (௬௮)

கயிலையினைவைகுந்தத் தினைக்கந்தலோகமுதற் கீற்றோர்தொன்னூல்
பயில்பதங்கடமைக் கருதித்தவம்புரிவாரனைவோரும் பரவையுண்டு
வெயிலவன்போற்றிகழ்கும்ப மாமுனிவாழ்பொதியையிற்போம் வீறுவேட்டுக்
குயிலுறழ்வாலையைக்குகனைப்போற்றிவழிபடுஞ்சிலருட்குறிப்பில்லாரே.

வண்ணநிலையுணராராய் மாதவத்தின்முயலாராய் மற்றுமோர்தாய்
கிண்ணமுலைப்பாலருந்தற் கொல்காராய்ச்சமணர்முதற் கிளர்பொல்லார்
விண்ணளவும்பகையிலராய்த் திரிதருபுன்கவிஞர்மிகவியந்துநாளு [பால்
கண்ணல்குறிக்கலர்கும்பன் பொதியையின்முன்வளர்த்துளகாய் நலம்வேட்போரே.

நெல்லையினிற்றுவக்குமிது நெடுநாளென்மனக்கருவி னின்றுதுன்று
மெல்லையில்பாமாலையினம் பிறந்ததற்பின் † மாதைநக ரிடத்திந்நாளிற்
குல்லைமலர்க்குகன் கடவுநடைதருமெய்யுணருமவர் கும்பனுதித்
தொல்லைமுனிவரரெனலா லவன்சரிதமுதற்சிறிது சொல்கின்றேனே. ()

பொதியாசலப்படல முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - அ௩.

---

* குருபரதத்துவம் - இந்நூலாசிரியர் தமது சரித்திரத்தைப்பற்றி யியற்றிய காவியம். † மாதை - திருவாமாத்தூர்.

## முதலாவது
## அகத்தியமாமுனிவர் சருக்கம்.

பூரணப்பரம் பொருளின்முக்குணமெனப் பொலியுங்
காரணத்தினர் மூவரிலொருவனுங் கமல
ஞாரணத்தலை நிலையினின்றருண்முதற் புதல்வன்
சீரணப்படா வகத்தியமுனிப்பெயர்த் தெளிஞன். (க)

அவனுதித்தது மலைக்கடலுண்டதா தியவா
முவகையாடலா யிரங்களுங்கங்கைவா யோடத்
தெவளவோதவ முடித்துளாள் வயிற்றிடையிளமைச்
சிவனெனப் * பிறங் தவன்சொனூலினங்கள்செப் பிடுமே. (உ)

ஞானவான்கண்மெய்ப் பரத்தருட்சகளமா நவில்வ
ரீனமின்றிய யோகியர்தமதிறை யென்பர்
வானமேற்படர் சித்தர்தம்மினத்தனு வகுப்ப
ரானதாலனைத் தினும்வலானவனெனத் தகுமே. (௩)

அந்தமாதவர்க் கரசையிந்நூன்முறைக் கடுப்பச்
செந்தமிழ்ப்பெரும் புலவர்தங்கோனெனச் செப்பு
மெந்தமாட்சியு மெண்ணில்கண்ணுடைமைநேர் கல்வி
வந்தசீரியர் மதிப்பினுள்ளடங்கிடு வனவே. (௪)

முந்துநாளர னடஞ்செய்வானுடுக்கையை முழக்க
நந்துபேரொலித் துணைகொடுவிருத்திர னண்ணுஞ்
‡ சிந்துபானன்வண் டமிழிலக்கணமிகச் செப்பித்
தந்துலோகமுற் றுய்வுறச்செய்தன னம்மா. (௫)

பின்னிருந்துபா ணினிமுனிவடமொழிப் பெருக்க
மன்னிடும்படி வியாகரணத்தொகை வகுத்தா
னென்னின்முன்னெதோ வெங்ஙனமாயினு மீசன்
றென்னிலத்தைநா டுபுநடித்தலும்பிறழ்ந் திடுமோ. (௬)

பேரகத்தியஞ் சிற்றகத்தியமெனப் பிறங்குஞ்
சீரநூலிரண் டகத்தியமாமுனி செப்ப
லாரமூவகைச் சங்கமீண்டவிர்ந்தன வவைமுற்
றீரநீபமா லிகைக்குகனுடலிட் டனவே. (௭)

நாற்பத்தொன்பது நான்குநூறனைந்தொண் ணூறு
மேற்பத்தோடிவை பெருக்கியதொகையராய் விளங்கிச்
சூற்பட்டார்த்தெழு முகிலுறழ்சொற்றுணிப் புலவோ
ரேற்பட்டார்கண்முச் சங்கமுமென்னுமிவ் வுலகே. (௮)

---

* பிறந்தவன் - வியாதர். ‡ சிந்துபானன் - அகத்தியர்.

தேவரிற்றவ முனிவரின்மனிதரிற் றெருண்ட
பாவலர்தமுச் சங்கமுன்படைத்தபல் கதையுஞ்
சேவலாளனைக் கும்பமாமுனிவனைச் சேவித்
தாவதீர்ந்தவ ரறியலாமற்றையர்க் கரிதே. (கூ)

விடைவலான்றிரு மதுரையிற்செயும்விளை யாட
லடையவார்தரு நூலிடையவிர்கடைச் சங்க
முடையபாவலர் கதைசிறிதுரைத்தது மொள்வேற்
படையுளாற்றெழுங் குறுமுனியெனல் பழமையுதே. (க0)

மூன்றுசங்கமு மிருந்ததோர்பீடமாய் முழும்போற்
றோன்றுநூநிறப் பலகைதென்மதுரைவா யியினுள்
ளேன்றுமாதவஞ் செய்துதற்பெறவலாற் கேக்கற்
றூன்றுளார்சில ரறிதரக்கிடக்கைமெய் யாமே. (கக)

சொன்முடைந்திடுதொழிலு நன்கெய்துருத்தூர்த்தக்
கன்மநாவலர்கழகவான் பலகைமீதிருக்கு
நன்மைவேட்டவர்நவிலினு நக்குமிக்கிகழ்ந்திட்
டன்மகோததியனைய பொய்ச்செருக்கிலாழ்பவரோ. (கஉ)

எண்ணில்பல்பவத் தியற்றமிழ்க்குறுமுனிதன்னை
நண்ணிமாதவமுயன்றுள நாவலர்தமக்கே
விண்ணில்வாழ்கலைவாணிதன் மெய்யருள்விளங்கும்
புண்ணிலாமுதற்கதியினுட் புகுதலெய்திடுமே. (கங)

எட்டுவண்ணமும்பாடிடு மிருந்திறற்பெறினுங்
கிட்டுசொல்லொடுவாழ்த்து சொற்பலிதமெய்திலரோற்
சொட்டுவந்துறுமெனுநிசந் துலங்கிடுநிமித்தங்
கட்டுசெஞ்சடைக்குறுமுனி கவித்திறம்பகர்வாம். (கச)

வேறு.

ஈசனைத்துதித்தபண்பா லெனையறுணவனென்றன்றேன்
பேசமாண்புற்றவாறும் பிறைநுதற்கவுரிபொற்று
ணைசமிக்கிறைஞ்சுமாற்று னிமாநிமாசித்தர்போற்றத்
தேசவிர்மேனியெய்திச் சிகரிமீதமர்ந்தசீரும். (கரு)

மாயனைப்பழிச்சியன்றோர் வழுதியை * வழுவையாக்கி
யேயவாங்கவனுய்தற்கா மின்சொலுமிசைத்தபீடுந்
தூயகோடொன்றுள்ளான்மெய்த் தொழும்பர்தந்தலைக்குட்டேற்கு
நேயமுற்றருளற்கான நிசத்துதிநிகழ்த்தும்பாங்கும். (கசு)

பரிதிமண்டலத்திற்றெய்வம் பலவும்வாழ்வுறுமென்றோதும்
பெரியநான்மறையோர்முற்றும் பேணுசீர்பெற்றபின்னர்க்
கிரிதொளைறுநடிக்குஞ்செவ்வேள் கிளத்துசொற்கேட்டுப்போற்று
மரியசொற்புலமைதன்னு லடைந்தவாக்கமுமல்லாமல். (கஎ)

---

* வழுவை - யானை.

மாயவெற்பதுதூளாக வாக்கினாற்பொடித்ததாதி
யாயபல்வியனுமுன்னோ ரளவிலாரறைந்துள்ளாரா
லேயவன்னவற்றையானு மியம்பிடன்மிகைசொன்னாலும்
பேயனாரிகழாரங்ஙன் பேசலும்வழக்கமென்றே. (கஅ)

அன்றியும்பரிதிமுன்ன ரகலிலோர்தீபமேற்றி
நின்றிதுகாண்மினென்ன நிலத்தினர்க்குரைத்தல்போலும்
பொன்றிரள்கொடுப்பானார்வம் பொலிவுறவிரிக்கவேண்டு
மென்றிதுதுவக்கலின்றன் றென்சுதந்தரமுமின்றே. (கசு)

வன்சினத்துருவாசப்பேர் மாமுனிவரன்றன்சொல்லான்.
முன்சிவன்றிருமால்வேதன் முதலினர்படும்பாடோர்ந்தாற்
றன்சிரமவனுஞ்சூட்டுங் தாளுடைத்தலைவனாகித்
றென்சிகரியில்வாழ்கும்பன் றிறமைநன்கிலங்குமன்னோ. (உ0)

இல்வலன்வாதாவிப்பே ரிரண்டவுணருமுன்வேதன்
சொல்வலிமையினாற்செய்த தூர்த்தவெந்தொழிலுமெண்ணில்
பல்வரமுனிவர்சாவும் பரவையுண்டவன்வாய்ச்சொல்லா
லெல்வரிற்பனிமாய்ந்தாற்போன் றிரிந்தவாறெவர்சொல்லாரே. (உக)

காதிசேய்சிலையாற்சிந்துங் கணைவகைமுழுதுமுண்ட
தீதில்சீரியோகதண்டத் தெருண்முனிவனுக்குமுந்திப்
போதினான்றவத்தால்வந்த புனிதமாமுனிசொன்மாட்சி
யாதிசேடன்றானோர்சற் றறைந்திடலறையலாமே. (உஉ)

இரதமும்வாளுமீச னீந்திடப்பெற்றோனாகி
யரதனமுடிபத்தேந்து மரக்கர்கோனழியத்தாக்கும்
கரதலற்கொருவில்லீந்து கனத்தயூகமுமுன்சொன்ன
சரதமாமுனிவன்சொற்சீர் தமியனேன்சாற்றற்பாற்றோ. (உங)

மந்திரவேள்விநூறு வாம்பரித்துணைகொண்டாற்றி
யிந்திரனாற்பாம்பா கிடச்செய்தோரிளநர்ய்தன்னைத்
தந்திரமியாதுமின்றித் தவளவாரணத்துய்த்தான்றான்
சந்திரமோலியில்லாச் சங்கரனென்பார்தக்கோர். (உச)

காசிபன்சனகனாதிக் கடவுண்மாமுனிவர்பல்லோ
ராசிலருள்ளாரியாரு மரசெனும்பெயர்பெற்றில்லார்
வீசியதிரைநீருண்டு விடுத்தவன்றனைவிண்ணோரும்
பேசினரவர்குழாத்திற் பெருந்தகையிவனென்றென்றே. (உரு)

சிவன்முதற்பகர்பல்கோடி தேவருமுனிவரியாரு,
முவகையங்கணங்களியாவு முத்தரதிசையிற்சேர்நா
ளவரெலாங்கடலில்வீழா ததனெதிர்த்திசைபோயுற்ற
தவர்பிரான்மகிமைவேறு சாற்றவும்வேண்டுங்கொல்லோ. (உசு)

தென்னிலக்கயிலைபோலுஞ் சிகரியின்சிவன்போல்வான்றன்
பன்னிருமாணுக்கர்க்குட் பழுதிறுெல்காப்பியப்பேர்
துன்னினன்மிக்கோனென்னச் சொலுமொழிசிலராற்கேட்டே
னன்னியனயிந்திரந்தேர்ந் தவனெனச்சிலர்சொன்னரே. (உஎ)

சிலர்பின்னுள்குரவன்றன்பாற் சினங்கொடேபிரிந்தோனென்றார்
புலமையிற்சிறந்தோரன்னேன் புகலுநூல்புரையில்வண்ண
நலமிருபதுபாற்றென்கை நாடுநவிலக்கண்டே
யிலகுமுத்தமிழும்பாடார்க் கிலக்கணமிலைதோன்றதே. (உஅ)

ஆயுதவெழுத்தொன்றென்ன தவர்களுமையுமெளவுந்
தோயுமாத்திரையிரண்டாச் சொல்பவர்களும்போன்றுள்ள
பேயுணர்வினரெல்லோரும் பெரும்புகழ்க்கும்பநாத
ரையுமுன்றமிழ்ச்சீரோர்ந்து நவின்றமைவினவிலாரே. (உகூ)

இன்றுமாமுனிவர்கோமா னெண்ணின்மெய்யடியார்சிந்தை
யொன்றுறுங்கனவிற்பல்வா றுலவுதல்சரதமாகு
மன்றுளான்றிருமாலாதி வானவர்தம்மைக்கண்டா
னன்றுறுநனவிற்றேன்றி நான்மறைப்பயனீவானே. (௩௦)

கணபதிமுருகனாதிக் கடவுளர்தம்மைச்சேடன்
பணமிசைநிலவும்பாரோர் பற்பலர்கனவிற்காண்பார்
'தணவரும்பெருமைவாய்ந்த தமிழ்முனிவனைப்பார்க்கின்றோர்
பிணமெனவீழாதேகும் பெருங்கதியுறவேட்போரே. (௩க)

கண்ணிகர்மெய்யுஞ்சென்னிக் கணமுறமினத்தின்கூறுந்
திண்ணியபுயங்களேபோற் றிகழ்தருமுயிரும்வேறென்
றெண்ணிஉற்கரியதாகு *மெஃகமுமியலிற்காட்டும்
புண்ணியமுனிக்கோன்செவ்வேள் பொற்பதத்தடிமைதானே. (௩உ)

தேவரிற்சிறந்தோர்தாமுஞ் செழுந்தமிழ்க்கவிகள்பாடிப்
பாவலரானவாறு பாயிரத்தறைந்துள்ளோ
னியாவர்நங்கும்பநாத னிசைவேறுத்திகழ்ந்திட்டாலுந்
தீவழிநிரையந்துய்த்துச் சேரிநாயுருக்கொள்வாரே. (௩௩)

பத்தரிற்பலர்கும்பேசன் படிவமேகருதிப்போற்றிச்
சித்தராயவனேதானுத் திகழ்ந்தனரவர்தாஞ்செய்த
முத்தமிழ்ப்பாடல்கோடி மூதலகுரைப்பதுண்டுன்
டித்தகவுணரார்வெவ்வே றெண்ணிமிக்கிகழ்வாரன்றே. (௩௪)

ஓரகத்தியனோர்கோயி லுள்ளுறையிலிங்கமொன்றிற்
சீரகத்தியர்முக்கோடி திகழ்தரக்கண்டானென்று
லாரகத்தியனேவென்றீண் டலமர்வேண்டாமாதிப்
பேரகத்தியனைக்கண்டார் பிறப்பிறப்பிலராவாரே. (௩௫)

---

* எஃகம் - ஆயுதவெழுத்து.

தண்புனற்றெறிக்குங்கல்லாற் றருநிழற்குரவன்றானும்
விண்புரப்பவற்காமுந்நீர் வேலையுண்டவனுமொன்றெ
ஞெண்புகழ்த்தொனியொன்றுண்டுண் ணெர்ந்துளார்பலர்சொல்கின்றார்
திண்புவிமகளும்வானிற் றிகழ்கலைமகளுஞ்சான்றே. (கசு)

அருணையூர்க்கிளியின்காதை யவிர்தருகாவியத்திற்
பொருவில்சீர்க்கும்பநாதன் பொன்னடித்துணைக்கன்பான
வொருசிறுநாயின்மாட்சி யுரைத்துளேனந்தவண்ண
மிருநிலத்தவன்செயாட லெண்ணில்பல்கோடியாமே. (கஎ)

கன்னடவேதியற்கோர் காவியாற்கால்செய்திட்ட
தன்னசில்கதைசொன்னாலு மகிலமுற்றவர்கொள்வாரே
முன்னறைந்துள்ளவாய முறைகளிற்பெரிதன்றேயென்
றென்னகநகுமாலவ்வா றிசைத்திடற்கிசைகிலேனே. (கஅ)

நால்வகைக்கதிகடோறு நாடுபல்பதங்கடோறுஞ்
சால்வளப்பொதியையாதித் தடமலைக்குகைகடோறு
மேல்வழிச்செல்வார்சிந்தை விரைமலர்ப்பொருட்டுத்தோறு
மால்வயிற்குருவேபோலு மகத்தியமுனியுள்ளானே. (கசு)

அம்முனிக்கடுத்ததானத் தவிர்தாத்தக்கோனுரோ
வெம்முனிவனைச்சொன்னாலு மிகன்றுளமிசையார்சில்லோர்
நம்முளத்திருக்குந்தெய்வ நடத்துமாறிசைக்கின்றாமோர்
மெய்ம்முதல்சமயவாத விகற்பமுற்றிகந்ததாமே. (௨0)

வசிட்டனைச்சுகனையாதி மாமுனிவரானேகர்
விசித்திரத்தினருற்றாலும் வியன்றமிழ்ப்புலமைமேவி
நசித்திடாக்கதியிற்சேர்ந்த ஞானசம்பந்தமூர்த்தி
புசித்தஞானத்தாற்பெற்ற புகழெடுத்துரைக்கின்றேனே. (௨க)

அகத்தியமாமுனிவர் சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம், கஉ௪.

---

இரண்டாவது

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சருக்கம்.

---

வெள்ளிமலைச் சிவன்றலத்துண் மிக்கமது ராபுரியிற்
றெள்ளியசெந் தமிழ்வளர்க்குந் தென்னவர்தந் திருமரபி
லொள்ளியகூன் பாண்டியனென் றொருவன்வாழ் வுறுநாளிற்
கள்ளிவனம் போற்சமணக் களைமிகவுந் தழைத்ததுவே. (க)

ஆனைமலை முதற்றலந்தோ றம்மணமா முனிவரது
சேனைமலிந் ததனாற்பல் சிவதலமுஞ் சீரழிந்து
பூனைநிகர் வஞ்சகர்தம் பொய்வாதத் திறுக்கஞ்சி
யேனையராஞ் சைவரெலா மிகல்குன்றித் தளர்ந்தாரே. (உ)

அங்காளிற் செந்தமிழ்நாட் டமண்வாதை கெடுத்தருளுஞ்
செங்காவின் வலிசாலோர் சிசுவெனக்கீங் தருளென்னக்
தைங்காக மணிகாழிக் கவுணியவே தியனொருவன்
பைங்காகப் பணியாளைப் பணிந்துதவ முயன்றானே. (ரு)

அத்தவசு முற்றுதலு மவிர்கயிலை வரைமீது
சித்தர்களு மெச்சுநலந் திகழுமுரோ மசமுனிவ
னித்தனது சந்நிதி னின்றந்த வந்தணனை
யொத்தமண ரிறுமாப்பங் கொழிவதுவேட் டிரந்தானே. (௬)

எல்லாமுந் தானேசெய் தியாதொன்றுஞ் செய்யானும்
வல்லானம் முனிவரனை மலர்க்கணரு ளுறப்பார்த்துப்
பொல்லாங்கு தீர்தரவோர் புத்திரனு மீதானே
செல்லாங்கென் றுரைத்திடலுந் திடுக்கமுற்று நனிசோர்ந்து. (௭)

நாரதன்சொல் வழிதேறி நடனமயிற் பரியூரும்
வீரவடி வேற்குகன்றாண் மிகப்பணிந்திவ் விதஞ்சொன்னான்
பாரகத்து மன்னவனாற் பருவரற்பட் டாரவன்றன்
சீருமைப் புதல்வர்தமைச் சேர்ந்துசுக முறல்போன்றே. (௮)

வேறு.

கலசமாமுனி யனையரே யுணர்புகழ்க் கந்த
னலமிகுந்தவம் முனிவனை நோக்கிமெய் யருளாற்
குலவுகாழியிற் றவஞ்செயு மந்தணன் குருந்தா
யுலகவாசனை விளங்குமா றொருசிறி துழல்வாய். (௯)

அதற்பி னெந்தைகண் ணருள்வழி * யம்மைபா லருந்தி
முதற்க ணுயமெய்ஞ் ஞானமுஞ் சித்தியு மூர்க்கர்
குதர்க்க வாதம்வெல் லூகமும் புலமையுங் கொண்டென்
பதத்த னுகிமுத் தியிற்புகு வாயெனப் பகர்ந்தான். (௧௦)

அந்தவாறுதித் தாண்டொரு மூன்றுசென் றருமை
மைந்தன்றந்தைபின் போயவ்வூர்க் கோயிலுள் வாய்ந்த
பைந்தண்வாவியின் கரையினின் றழுந்தினம் பண்டு
கந்தனேறிய பால்குடித் தளவறக் களித்தான். (௧௧)

தண்டுசேயின்வாய்க் குறியினுற் றந்தைபால் கமழ்சோ
றுண்டுளானெனக் கருதியார் கொடுத்ததோ தென்ன
மண்டுகோபமுற் றுற்கின னுடனவன் மலர்வாய்
விண்டுகைக்கொடு சுட்டி † யோர் பதிகம் விண்டனனே. (௧௨)

* அம்மை - பார்வதி, † ஓர் பதிகம் - தோடுடையசெவி.

அன்றுதந்தையு மற்றைய வேதியராருந்
துன்றுசைவரு மெய்திய வுவகையுஞ் சொலற்யாற்
றென்றுநானுரைக் கேனவன் ருதைதோ ளேறிச்
சென்றுசில்சிவ தலங்களிற் றமிழ்த்துதி செய்தான். (௧௧)

அன்னதோளுமற் றதுபுண ராயிழை வயிறு
மென்னமாதவஞ் செய்தனவோவென வெண்ணிப்
பன்னவல்லவ ரியாவரோ வவனைநேர் பார்ப்பா
ரின்னலின்றிய சுகக்கட லிடத்தின்மூழ் குநரே. (௧௨)

திக்குமுற்றிலும் வதிதரு சைவசித் தாந்தர்
* சக்குநேர்சிவ பாதவி ருதையர்தந் தனயன்
கைக்குவேண்டுபொற் றாளமொன் றுதவினன் கவின்செய்
மைக்குழம்புறழ் களத்த † னூர் தலத்தினின் வலிதே. (௧௩)

முத்துப்பந்தருஞ் சிவிகையுஞ் சின்னமு முறையோ
டொத்துச்சூழ்தரு பரிசனங் களுமொவோர் தலத்தி
னத்துமுன்னமே கொடுத்தனன் ஞானிக ளுணருந்
தத்துவப்பொரு ளாகிகழ் சகளசங் கரனே. (௧௪)

அவ்வணந்திரு ஞானசம் பந்தனுக் களித்த
செவ்வணச்சிவன் வேறுபல் செழுந்தமிழ்ப் புலவோ
‡ ரெவ்வமெய்திமிக் கேத்தினும் வேண்ட லீகில்லா
னிவ்வனீதமென் னெனவவற் கேட்பவ ரிலையே. (௧௫)

மன்னுமுத்தமிழ் விரகனென் றார்சிலர் மகிமை
துன்னுபாலரு வாயனே யெனச்சிலர் சொன்னா
ரின்னுமெத்தனை யோபெயர் பற்பல ரிசைத்தார்
பன்னுமிப்புவி முழுதினும் புகழ்பரந் ததுவே. (௧௬)

பிஞ்சுவான்மதிச் சடைச்சிவ னருள்பெறும் பிள்ளைக்
கஞ்சுதான்வய தாகிய தந்தநா ளமணர்
நஞ்சுபோன்றடல் வழுதிதன் மனைவியா நங்கை
மிஞ்சவன்புகழ் பலர்சொலுந் தொறுந்தினம் வினவி. (௧௭)

அவனைக்கொண்டிடர் களைந்துத னரசனு தியைச்
சிவபதத்திறம்பெறச்செயல் சிந்தனை செய்தாள்
புவனிபோற்றிசை வளவன்மா தவந்தரு புதல்வி
தவளநீறுத னுச்சியின் மறைத்தணி தகையாள். (௧௮)

அப்படிக்குலச் சிறையெனு மமைச்சனு மணித
லெப்படித்தெரிந் தனள்கொலோ வெழில்வளை யலம்புங்
கைப்படோலையொன் றவன்வழிக் காழியர் பெருமான்
றப்படுத்த தண்டையம்பதத்திடச்செய்தாடு ணிந்தே. (௧௯)

---

* சக்கு - கண். † ஊர்தலம் - திருக்கோலக்கா. ‡ எவ்வம் - துன்பம்.

செந்தகைத்திரு மதுரையின் கோயிலிற் றிகழுஞ்
சுந்தரேசர்கண் ணருளினாற் சூதுசெய் திட்ட
வந்தமங்கையர்க் கரசியு மமைச்சனு மரசன்
வெந்தழற்சினத் தொறப் புற்றுய்ந்தமை மெய்யே. (உ௦)

ஓலைகாண்டலு மொருவர்பாற் கேட்டுணை ராதான்
சேலைவென்றகட் டிருவனாள் சீலமுந் தெளிவு
மாலையன்னமன் மருட்சியுங் குலச்சிறை மதியும்
பாலைநேர்வெணீற் றிகலவ ராக்கமும் பரப்பும். (உக)

தேறினானவன் செலும்படித் தரளவெண் சிவிகை
யேறினானுட னுவினுக்கரசனே முதலோ
ரூறிநாளெனத் தடுத்ததாற் பதிகமொன் றுரைத்தான்
மாறிலீசன்மெய் யருளினும் வலியதின் றென்றே (உஉ)

அங்குசாரண ராற்றுய ரடைந்துயு முனியு
மிங்குபோயவர்ச் செறல்குறித் தெழுமிளங் குருந்தைத்
தங்குமாறுரை சாற்றிய சரதநன் குணரார்
கங்குனேர்மனக் கசடுறு கடையவர் தாமே. (உ௩)

சூரனைக்கொலக் கந்தவேள் சென்றநா டுதிக்கை
வாரணத்தலைக் கணபதி துணைச்செலா வாறுஞ்
சாரணர்த்தெறத் தமிழ்விர கன்செனாள் சலதி
நீரதைக்கலாற் கடந்தவன் செலாமையு நேரே. (உ௪)

வளவனுமுழுந் திசுந்தடல் வழுதிநாட் டிடைப்புக்
களவில்கான்கடந் தணிகிளர் மதுரையை யடுத்துக்
களமதிற்கறை யுடையவர் கோயிலின் கண்ணீண்
டொளில்கோபுரங் கண்டுடன் றெண்டனிட் டுவந்தா. (உ௫)

மங்கையர்க்கர சியுங்குலச் சிறையுமே வணங்கி
யங்கைகூப்பிடு மாலவா யிதுவென வமலை
கொங்கையூறுபான் மணங்கமழ் தமிழ்க்கவி கொழித்தான்
சங்கைநீங்கிய புகழ்த்திரு ஞானசம் பந்தன். (உ௬)

வெண்ணிலாவுறழ் நீறணி வார்புடை யிடைய
வண்ணிலாவிய மதுரையூர் புகுதலும் வருந்தி
யெண்ணில்சாரண ருணவிலராயின ரிதன்றிக்
கண்ணிலானிக ரரசனுங் கேட்டுளங் கவன்றான். (உ௭)

நீதியஞ்சல னவரைமன் னீரிவண் வரவொண்
ணாதுபோமினென் றறைந்திலன் றென்றுதொட் டவ்வூர்
காதன்முக்கண னுதலி னவனரு ளுட்ட
வாதென்செய்வர்கொ லென்னவுஞ் சிறிதுளின் மதித்தான். (உ௮)

சைவராக்கமுஞ் சமணர்தங் தியக்கமுங் தனிவேற்
கைவலார்புகழ் வழுதிதன் கவலேயுங் கலிக்கும்
பெய்வளைக்கைமங் கையர்க்கரசியின்களிப் பெருக்கு
முய்வமேயெனுங் குலச்சிறை செருக்குமோங் கினவே. (உகூ)

பரிதியாங்கிய பண்டிதன் பாதலத் தரசற்
கரியகாவலன் பான்மதுராபுரி யதனிற்
பெரியவாதமுண் டாந்தகை நிகழ்ந்தமை பேசப்
பிரியமோடுறல் கடுப்பமேற் பெருங்கடல் புகுந்தான். (௩௦)

வேறு.

அன்றிராவிடைச் சமணரிற்சிலர்தா மாணவக்கசட் டரீலறம்பிழைத்து
மன்றிலாடின ரடியவர்வாழு மடத்திற்றீயைவைத் தாரதுபையச்
சென்றிவூரிறைக் காகுகவென்னச் செப்பினனுமை பாலுகர்சிறுசேய்
கன்றிநின்றிமெய்ம்மைகயர்க்கரசி கழுத்தின்மங்கலக் கவின்கெடாவணமே.

அக்கணங்கனற் சுரங்கொடுதவித்தா னருகுற்றுார்களு மாற்றலரா
னர், மைக்கண்மாமயிற் பீலிகைக்கொண்டார் மரபிற்சேர்த்தவர் தமைவர
வழைத்தா, னக்கனளர்செய் திங்கிதென்றேன்ற நலமெலாமிக நடத்தி
நெஞ்சயர்ந்தார், செக்கர்வானிறச் சூட்டுடைச்சேவற் றிரள்கூக்கூவெ
னச் சிறகடித்தனவே. (௩௨)

தன்னைத்தம்மிறை முதல்விழியென்றே சாற்றுமாண்புடைச் சைவர்
தந்தவமும், பொன்னைத்தாழ்த்தரும் பொருளெனக்கொடுதான் போய
பின்னொரு புசிப்புமுண்கலராய், மன்னைக்கைவசப் படுத்துசாரணர்தம்
வலியுங்காண்பதில் வாஞ்சையுற்றேன்போன், முன்னைத்தெய்வமென்
றுலகுணர்பானு மூர்த்திகீழ்க்கடன் முகட்டினிலுதித்தான். (௩௩)

விடியற்காண்டலும் வெந்துயர்கூகியா வேந்தன்மந்திரி தனைவிரைந்
தழைத்துப், பொடிகொள்சைவர்தந் தலைவனீண்டெய்தப் புரியென்று
னதி புாகமுற்றேகி, யடிகடம்மைமிக் குபசரித்தழைத்தாங் கமர்வித்
தானர சனுக்கிருபாலும், கொடியசாரணக் கூட்டமுஞ்சைவக் குழுவு
நேர்ந்தவண் குலவியவன்றே. (௩௪)

கண்டுமெய்ம்மைகயர்க் கரசிபேருவகைக் கடலுநேர்பொருங் கவலைவா
ரிதியும், கொண்டுநின்றனள் சிவனருள்பெறுமிக் குழந்தைசீர்பலர் கூறி
டக்கேட்டுப், பண்டுபோல்சுரந் தனளெனச்சிலசில் பாவலார்தமிழ்ப் பனு
வலும்பகர்வ, துண்டுதானெடுத் தணைத்துமோந்தார்வ முறுதற்காந்தவ
முஞற்றிலாண் முனமே. (௩௫)

பானிலாமதிக் குலத்தரசனையும் பகைசெய்சாரணர் பலரையுமதி
யா, தானினேற்றிளங் கன்றெனக்குலவு மந்தணச்சிசு வவனைநேர்நோ
க்கி, மானினேர்விழி மாதராய்வருந்தேன் மதுரைநாயக னருளெனக்குள
தால், யானிவீணருக் கெளியனல்லேனென் றினியபாடல்பத் திசையொ
டோதியதே. (௩௬)

வடிவநுட்பமு மிசைத்தொனிப்பெருக்கும் வாய்ந்தசொற்பொருள் வண்மையுமதித்துப், பிடியனுமேயர் தணிந்தனள்வேந்தன் பிணியற்றுய் வமென் பிரியமிக்கடைந்து, கொடியமாதவத் திருவரிலொருவர் நேரொர் பாதிவெங் நெருப்பினுஞ்சாலக், கொடியதாஞ்சுரந் தவிர்க்குதிரொன்னக் கும்பிட்டானபொதுக் குறிப்பிலங்கிடவே. (கஎ)

அவன்சொற்கேட்டலு மம்பிகைமூலைப்பா லருந்தும்வாய்மக வாந் தமிழ்விரகன், சிவன்றன்சேவடி கருதிவெண்ணீறு செங்கையிற்கொ டோர் பதிகமுஞ்செப்பி, யுவந்தன்னேனரு குற்றொருபாதி யுடலிற்பூ சின னுடனதுகுளிர்ந்து, பவந்தர்பாதியின் சூடுதானந்தப் பங்குஞ்சேர் ந்ததாப் பகரமிஞ்சியதே. (கஅ)

அந்தவாறர சுரைப்பவோர்ந்ததனு லமணரிற்சிறந் தார்சிலர்தங்கைப் பைந்தண் * பீலியினுன்மிகத்தடவிப்படித்தமந்திரம்பலவுருச்செபித்தார் வெந்தவாதனே குறையவுங்காணு வேந்தனத்தமிழ் விரகனேநாடி யிந்தப்பாதியு நம்மதேயென்று னிதுவினுவலு மிகன்றவர்புகல்வார். ()

கையிலுள்ளநீ றன்றிமற்றொன்றுற் கனற்சுரங்கெடக் காட்டினன் றென்றார், மையிலங்கிய கண்டர்தங்கோயின் மடைப்பளிக்கிடை வாய்ந் தநீறழைத்துப், பொய்யில்சீரருட் புகலியர்பெருமான் பூசினுன்சுரம் போயதுமன்றி, மெய்யிலொன்றிய கூனுநீங்கியதான் மிகவுநீண்டடல் விண்டுவொத்தானே. (௪0)

இன்னவற்புதங் கண்டுமோர்மதலைக் கிப்பெருந்திற மேய்ந்தமை யோர்ந்து, முன்னமாயிரம் விதங்கள்செய்துளதம் மூலமந்திர மோசம தாயு, மன்னன்முன்னவ மானமெய்தியுமிம் மட்டினம்முயிர் வாழ்துமெ ன்றகலா, தன்னசாரணர் கழுமரச்சவத மறைந்துதீயைநீ ரதைக்குறித் தாரே. (௪க)

இருவரேட்டையு நெருப்பினிலிடும்போ தினையனேமேட் டெரிந் திடாதெழுந்த, தருகனன்பரே டெரிந்துபாழாய தணிகொள்வையைநீ ரதிலிடும்போதுந், திருநிலாவிய சைவனேடெதிர்த்துச் சென்றதேனைய திருங்கடல்சேர்ந்த, துருவமாரனே நிகர்நெடுமாற னுருத்துச்சாரண ருரி மைமுற்றொழிந்தான். (௪உ)

அவரெண்ணயிரம் பேர்களுங்கழுவா லாவிவிட்டன ராமதைவிரி த்து, விவரமாச்சொல்வார் சிலரதுவினே வென்றிதோய்தமிழ் விரகனு ர்தமது, பவளவாய்கொடன் னவர்முனீரெம்மைப் பழித்திடாதுறும் பத த்தில்வாழ்மினெனு, வுவகையோேனாத் ததுமதற்கவர்தா மொப்பிடா மையு முலகமோதிடுமே. (௪௩)

* பீலி - மயிற்றோகை.

மடத்திற்றீயிடல் கழுமரச்சவதம் வலிதுதாம்வகுத் திடலெனுமிரண்டுந், திடத்தசாரணர்க் காவதன்றதனுற் றீங்கவ்வாறடைந் தாரென்பர்சிலர்முன், னடத்திற்சீர்த்ததான் கருதியோர்பதிக நன்குகாழியூர் நாதனேதுவனேல், * வடத்திலன்றுயு நால்வர்போன்றவரும் வாழ்வரென்னும் வல்வழக்கருமுளரே. (சச)

ஒறுத்தலாற்சிறி தின்பமேயெய்து மூறுசெய்தவ ருளமிகநாணப், பொறுத்தலேபெரும் புகழெனவுணர்ந்தும் புகலியூர்வரு புண்ணியன்றன்னை, வெறுத்தசாரண ருயும்படிபாடல் விளம்பச்செய்திலான் வெஞ்சுத்தபாற்கடலின், கறுத்தநஞ்சமுண் டுலகெலாமுய்யக் காத்துளான்செயல் காணரிதம்மா. (சரு)

யாவும்வல்லவ னெம்மதத்தினர்க்கு மிறைவனெங்கணு மென்றும் வாமொருமெய்த், தேவுளானவன் றன்மையாரறிவார் சிலரைவாழ்வித்துச் சிலர்தமைக்கெடுப்பான், காவுளார்தமைத் தகுவராற்கலக்கிக் கரியதானவர்க் கடவுளர்தம்மா, லேவுவானவன் பொதுவனேயன்றி யொருவர்பங்கினி லுற்றவனன்றே. (சசு)

அந்தமன்னவ னுயும்படிப்பதினு ருயிரந்தவத் தாரோமேதுனை, வந்தகாழிமன் வென்றதாற்சமண வாதைமுற்றிலுமாய்ந்ததந் நாட்டுச், சொந்தமாகிய சைவமேநிறைந்து சுந்தரேசரா லயமுதற்சொல்லு, மெந்தவாலயங் களுமுனுட்சிறப்பிற் கெண்மடங்குமே லெனக்குலாவினவே.

ஆதலான்மதக் குறும்பினர்தம்மை யடக்கல்வேட்டினீ ரருந்தவஞ்செய்து, நாதன்மெய்யருள் பெற்றிடநடமி னன்றுதீதென நவின்றுநாய்ச்சமர்போல், வாதமிட்டுழன் றரசனுணையினுன் மாழ்குறேன்மின்மெய் வத்துவுண்டெனற்கு, மேதமோருயிர்க் கியற்றொறுதெனற்கு மிசைபவாமத மியாவுநல்லனவே. (சஅ)

அலரியேமுதற் றிகழ்பலபொருளா லகிலஞ்செய்தளித் தழிக்குமோரமலன், குலவுதன்னருள் பெற்றவரளவிற் கூடிக்கொள்பவ னென்பதுகுறித்தே, வலவர்வாததுர்ப் பலமலாற்சிறிது மதத்தின்றூர்ப்பல மின்றெனவகுத்தார், புலமையென்றசொற் பொருளுமோர்கில்லாப் புல்லர்சொல்வழிப் போமவர்பலரே. (சகூ)

இந்தநீதிகள் சிலசொலுமாற்று லென்னைஞானசம் பந்தமூர்த்தியின்பா, லந்தரங்கநண் பில்லவனென்றே யறைகுவாரிளஞ் சைவர்களயில்வேற், கந்தனேயெனச் சொற்றுளன்முன்னுட் கழறிடுங்கவு மாரரும்பலரே, † சொந்தநூல்பகர்சேக்கிழார் முதலாந் தொண்டர்தாமுமத் துணிவடைந்திலரே. (ருo)

---

* வடம் - கல்லாலமரம். † சொந்தநூல் - திருத்தொண்டர்புராணம்.

குவியுங்கையிலர்ச் செறும்பரசமய கோளரிப்பெயர் குலவுறும்படி யே, சிவிகைமீதொருக் காலவர்தமையென் சிந்தையின்கன வூடேகண்டுள் ளே, னவிவுறுதருட் பேறுறினன்று மாகம்வீழ்வுறி னகிலமீதெவர்யாண், டெவிதஞ்சொல்லினு நிமித்தமின்றினியாம் இயன்றகாதைகளியம்புவன் ஜெருக்கதே. (௫௧)

வே று.

சிறிதுநா ளவ்வூர்வைகித் தெக்கணதிசைப்பாற் சென்று
மறிமழு வணிந்தார்கோவில் வயின்றொறும் பதிகம்பாடிச்
செறிதரு மூக்கிற்கீழ்வாழ் சிவன்றுதிசெய்த பின்னர்ப்
பறிதலைச் சமணர்க்கோறல் பாவமென் றிரங்கினுனல். (௫௨)

தாருகற் செகுத்தபாவந் தனைத்தொடா நிமித்தஞ்சோணுட்
டோருருச் சமைத்துச்செவ்வே ஞுஞற்றிய பூசையேபோற்
பாரும்விண் ணுலகும்போற்றப் பருஞ்சிவ லிங்கந்தாபித்
தாருநல் லிதழிவில்வ மாதியுமருச் சித்தானே. (௫௩)

தண்டமிழ் விரகன்பூசை தனிலரன் மகிழ்ந்தப்போதே
வெண்டகை யிடபமீது விளங்கிநின் வினையெல்லாமு
மெண்டரு மெனதென்றனவ் விலிங்கமூர்த்தியை யெல்லோருந்
தொண்டர்க ணயினுரென்னச் சொல்லுபு தொழுகின்றாரே. (௫௪)

அன்னவன் வடக்குநோக்கி யருட்டிரு வாலவாயின்
மன்னவன் றுனுமுண்கண் மங்கையர்க் கரசியாரு
நன்னலக் குலச்சிறைப்பேர் நம்பியும்பிறரும் போற்றப்
புன்னகை யொன்றுன்மூன்று புரமெரித்தானைப்போற்றி. (௫௫)

தன்னுரித்தாஞ் சோணுடு தனைவிழைந் தேகுமாற்றின்
மன்னுமாணவத் தோர்புத்தன் வலியவர் பலரோடெய்தி
முன்னுவல் சின்னத்தோர்கண் மூகைபோன் றிடவதட்டி
யென்னுடன் வாதுவென்றிட் டேகுதி யவனென்றனே. (௫௬)

அக்கணஞ் சிவிகைதொட்டே யருகினில் வருகின்றேனு
முக்கணற் றுதித்தபாடன் முழுமையு மெழுதுவோனு
மிக்கதா யுடன்வந்தோனும் வேதவேத்தி யனுமான
தக்கவ *னசனியன்னேன் றலைமிசை விழச்செய்தானே. (௫௭)

இரண்டொரு நாளிலந்நாட் டெய்தியே யளவிலாத
வரன்பதி துதித்துச்சூழ்ந்தா னக்கதை நிற்கபாண்டி
நிரந்தரம் புகலுஞ்சீர்த்தி நின்றசீர் நெடுமாறன்றுன்
வரம்பெறு தனதுநாட்டு வளமெலாம்பார்த்தான் மாதோ. (௫௮)

நெல்லையிற் சென்றுதன்னை நிருமல னடிமையாக்கு
நல்லையுன் வணங்குந்தொண்டர் நாதனைக் கண்டபோதே
யெல்லையில் பணியிவ்வூரில் யான்செய்வே னென்னச்சொல்லித்
தொல்லைமூம் மிவின்கீழுற்றார் தொண்டினிற் றுவக்கிக்கொண்டான். ()

* அசனி - இடி.

கோதில்கோ புரமுனாயிற் குலந்திகழ் மதிலுமாட
வீதிமண்டப முமூஞ்சல் வியன்கவி யாணமாட
லாதிசெய் வதற்கானான மனந்தமு மடைவேசெய்து
மீதினி னிவந்துதோன்றே ரிலிங்கமு முளைக்கவேண்டி. (சுo)

வருந்துற வளர்ந்தலிங்க மாலிங்க மாகுமென்னத்
திருந்திய பெயருஞ்சாற்றித் திருவிழா பலவுநாட்டி
மருந்தெனத் துவக்குமவ்வூர்ப் பதிகமே வழுத்தியார்த்துக்
கருந்தன முதலவேட்போர் களிப்பவே வழங்கியப்பால். (சுக)

தொண்டர்க ளயினருக்குஞ் சூழ்பணி பலவாச்செய்து
விண்டலர் புகழுமவ்வூர் மேற்கிலோர் வீதிதன்னிற்
றண்டமிழ்ப் புலவரேத்துஞ் சம்பந்தப் பெருமானுக்குங்
கண்டவர் வியக்குங்கோயில் கவின்பெற வமைத்திட்டானே. (சுஉ)

இந்தவான் கதையின்சார மிலங்கிழைப் பரவைகோனுஞ்
சுந்தரமூர்த்தி தொண்டத் தொகையிடைச் சிறிதுதோன்றும்
பிந்தவந்தவர் விரித்துப் பேசாமைக் கியானென்செய்வே
னந்தவூரினிற் சென்றோர்கண் டறிந்துகொண் டாடலாமே. (சுஈ)

பகருமிவ் வேந்தைப்பிள்ளைப் பாண்டிய னென்றுஞ்சில்லோ
ரகல்கடற் புவியிற்சொல்வா ரகங்கரப் புலவர்தம்மைக்
குகனயன் றனைச்செய்தாங்கு குட்டலுண் டென்னக்கம்ப
னிகழுமோர் விருத்தப்பாவி னிகழ்த்தினு னிசங்கண்டீரே. (சுச)

அவனுமன்னவன் றோள்சேரு மவளுநல் லமைச்சன்றானு
முவகையங் கடலின்மூழ்கி யுலகமுற் றண்டவாறுந்
தவபல மெனவேதோன்றுந் தனயனுங் கரசைநல்கிச்
சிவபத மடைந்தவாறுஞ் செப்புநூல் செகத்திலுண்டே. (சு௫)

அங்குபாடிய சம்பந்த னருமறைக் கதவுஞ்சாத்தக்
கொங்குநா டதனில்வந்த கொடுஞ்சுரம் பலர்தீர்ந்துய்ய
நொங்கு மாண்பனையிற்காய்ப்ப நாலிடை யொருத்திவெந்த
சங்குநே ரென்பிற்றோன்றத் தனக்கெனக் கிடைத்தகாசு. (சுசு)

வட்டம தொழியவன்னி மரங்கிணற் றொடுசான்றாக
நட்டயாழ்ப் பாணன்சிந்தை நடுத்திக ழுகந்தைதீர
விட்டமாம் படிவினேத மின்னமு மனந்தமாக
வட்டபாலொடு தேன்போலு மருந்தமிழ்க் கவியாற்செய்தான். (சுஎ)

மாதையி லிவனுக்காக வளைச்செவிப் பெருமான்செய்த
காதையப் புராணந்தன்னிற் கழறிடேந் தலங்கடோறே
தேதையோ சொல்கின்றார்க ளியாவையு முணைக்கவென்று
லூதைபாற் பொருததாம்பே ருரகமு மொல்குமன்றே? (சுஅ)

சென்றுபாடின வல்லாமற் செழித்தகே தாரமாதி
நின்றுடைத் தலங்கடம்மை நாடியும் பாடித்தீர்த்தான்
மன்றுளாடிய பொற்றாள்வாழ் மனத்தனுந் தாதைவேள்விக்
கென்றுகேட் டதற்குஞ்செம்பொ னீசனுற்பெற்றிட் டீந்தான். (௬௯)

எவ்வகைப் பயனுநல்கு மியற்சிசு வெய்தினுற்கு
மவ்வசடா யகன்மத் தாசைவங் துதித்ததானுற்
பௌவநீ ரனையமுன்னைப் பழவினையுடைய பார்ப்பார்
வெவ்வழல் வேள்விவேண்டல் வியப்பென விளம்பொணுதே. (௭0)

அந்நாள் வயதுபன்னு றமைந்ததா லமணர்கூற்று
மைந்தனுக் கென்றோர்பெண்ணை வான்முறை மணஞ்செய்வித்தார்
வந்தவ ரிருந்தார்சூழ மணவனை நீத்தப்போதே
பொந்தணி மாச்சூழாச்சா புரப்பெருங் கோயில்வாயில். (௭௧)

மேவினு னங்கோர்சோதி வெயிலவர் திரள்போற்றோன்றிற்
றுவிமற் றொருதாய்பண்டி யுதிப்புகா தயில்வதாகு
நீவிரெல் லோருமுட்போய் நிசபத மடைமினென்றான்
றுவில்சீர்ப் பரமனேபோற் றம்பதி யெய்தினின்றானே. (௭௨)

ஆங்குறு பலருமுட்போ யதிற்கலங் ததுவேயானுர்
வீங்குபூண் முலையாண்மாத விடாயின ளொருத்திவேட்கை
தாங்குறு திரங்கியன்னேன் சரண்பணிந்ததனைச் சொன்னு
ளேங்குறேல் பெருநெருப்பிற் கிரமின் றேகென்றேனே. (௭௩)

அன்னவள் புகுதத்தானு மனந்தமா தவமுன்செய்து
தன்னதங் கூரத்தாற்பற்றுந் தகைபெறுமவளோ டிற்றான்
பின்னரச் சோதியெங்கோ பெயர்த்தது பிறையும்பாம்பு
மின்னவிர் சடையிற்பூண்டோன் வியனருட் கயலதின்றே. (௭௪)

உலகினைப் பொருளாக்கொண்டோ ரொள்ளிழை யவடன்னேடு
சிலதின மின்பமார்ந்து சென்றில னென்னச்சொன்னுர்
நலனுயர் முத்திவேட்டோர் நாமுமக் குழுவிற்கூடி
நிலவில மென்னநாளு நினைத்துநெட் டுயிர்த்தாரன்றே (௭௫)

தமிழ்மதுரையின் முன்மாய்ந்த சமண்மதக் குறும்பர்தங்க
ளிமிழ்தொனிக் கடனேர்கூட்டத் திரட்டிமா தவர்மட்டென்று
லமிழ்துறழ் சொல்லாரீறு மவர்குழாத் தளவியாதோ
சிமிழ்முலை யிடப்பாற்காட்டுஞ் சிவன்றிருவடி சேர்ந்தோரே. (௭௬)

அன்னவர்க் கொன்றபாவ மதையெடுத் தறைவார்தம்மு
னின்னுவர்க் கதியிற்சேர்த்த விசையெடுத் திசைப்பார்சில்லோர்
சொன்னவவ் விரண்டுநெல்லைத் தொண்டர் கணயினர்சொல்லாற்
பன்னரும் புகழ்ச்சீகாழிப் பனவனுர் மதலைக்கின்றே. (௭௭)

கந்தநாண் மலர்வெண்பீடங் கவின்றரு கலைமினேக்கா
லிந்தமட்டினிற் சம்பந்த னிசையினை முடித்திட்டிப்பாற்
செந்தழல் புரையும் பொல்லாத் தீயமண்குழிநீத்தன்பா
லுய்ந்தநாவரசர் சீர்த்தி யுரைத்திடத் துணிந்தேன்மாதோ. (எஅ)

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ0உ.

மூன்றாவது
## திருநாவுக்கரசுநாயனார் சருக்கம்.

திருநாவுக் கரசர்புகழ் சேக்கிழார் மிகச்சொன்னார்
பெருமாண்பக் கதையினிடைப் பேசியதிற்சிறிதிந்நாள்
கருவூல மெனப்புலவர்காணிதினுங் கலைவாணி
தருமாறு சொல்கின்றேன் றவப்பயன்பெற் றுயவென்றே. (க)

கயிலைமலை யினைப்பெயர்த்த கடுங்கோபக் காரரக்க
னுயிருயநல் வரமெய்த வுபாயமுரைத் தமைநாடி
மயிலனையா ளிடப்பாகன் வாகீச முனிவனுக்கன்
றயிலவுரைத் துளசாப வநுக்கிரக முதிர்நாளில். (உ)

நோய்மூப்புத் தவிர்ந்தாரு நுவல்புகழ்சா னடுநாட்டு
வாய்மூரில் வேளாளன் மனையிலொரு மகவாகித்
தூய்மூர ளிளநகைமென் *றோகையின்பின் வளர்ந்துபசுங்
காய்மூத்துப் பழுத்தாங்குகருணைமலி வடைந்தானே. (ங)

வேள்விகொடி தென்றிகழு மிக்கசைவ நெறியோர்சொற்
கேள்வியின்றி யதுவுமொரு கிரியையெனு மிளஞ்சைவத்
தேள்வினைஞர் பகைமீறிச் சினன்சமயத் திடைப்புக்கு
வநள்விதிர்த்தாங் கவிர்கண்ணார் மயலறுமா முனியாகி. (ச)

தருமசே னப்பெயருந்தலைக்கொண்டச் சமயத்தோர்
குருவெனப்போற் றிசைத்துமகிழ் கொள்கையொடு குலவுற்றுத்
திருவெண்ணீ றணிவார்முற் றிகழ்தரினோர் மூன்றுதின
மொருபுசிப்பு மருந்தாம வுழலன்முத லவுந்தோய்ந்தான். (ரு)

செப்பிவன்முற் பிறந்தாளாந் திலகவதி தனைமணத்தற்
கொப்பியவ னிறந்தமையா லுலகவாழ் வினைவெறுத்திட்
டிப்பிறப்பின் முத்தியடைந் திடுவேனென் றியாதொன்றுந்
தப்பிலளாய்ச் சிவன்வாழுந் தலந்தோறும் போய்வணங்கி. (சு)

அதிகைநகர்ப் பெருமாற்கே யடிமையெனுந் துணிவெய்தி
மதிவளர்பொற் சடையாதி வனப்பெல்லா மிகநாடி
விதிமுறையைந் தெழுத்தோதி மெய்த்தொண்டு செயுநாளிற்
சதிசெயம ணரிற்கூடித் தம்பிகெடல் வினவுற்றாள். (எ)

* தோகை - திலகவதியார்.

இவ்விருமக் களுமிவ்வா றேகியதா லின்றோரா
மவ்விருவர் களுமேங்கி யவிர்கயிலைப் பதிசேர்ந்தார்
* கவ்விநிகர் விழித்தமக்கை நாடோறுந் தம்பியைத்தன்
செவ்வியதொன் னெறிசேர்ப்பான் சிவனருளைச் சிந்தித்தாள். (௮)

இவள்செய்தவ முதிர்தோறு மீனுதம் புக்குழலு
மவன்வயிற்றிற் சூலையெனு மருநோய்முற் றியதந்தோ
கவலைமலிந் துயிர்வெறுக்குங் கடுந்துயரக் கடலாழ்ந்து
குவடனைய நெஞ்சினிலை குலைந்தழகுங் குன்றினனே. (௯)

மானம்விட்டான் பிடிதீரு மருந்தின்வலிக் கடங்காத
வினைவன்னோய் கொடிதேயென் றியம்புமொழி நிசமாயிற்
றுனதினத் தகிகையிற்றன் னன்னையிற்சீர்த் துறுந்தமக்கை
தானமக்கோர் தஞ்சமெனத் தன்னகத்திற் றுணிந்தானே. (௧௦)

அத்தினத்தன் னவன்கனவி லதிகைநகர்ச் சிவபெருமான்
சத்தியுட னவற்குரிய தந்தையுந்தா யருமாகிப்
பத்திமலி திலகவதி பகர்நெறிச்செல் குவையாகிற்
சித்திமுத்தி யடைவையிது திண்ணமெனச் செப்பினனே. (௧௧)

அக்கணமே கைப்பீலி யணிபாய லுடனீத்து
மைக்கடுக்கு மிருட்போதே வழிக்கூடி நடந்தேகித்
திக்கறியப் புரமூன்றுஞ் செற்றபிரான் றிருவதிகை
புக்கருமைத் தமக்கையிரு பொன்னடிக்கீழ்ப் பணிந்தானே. (௧௨)

வேறு.

பணிந்ததம்பி யினைக்கையால் வாரித் தூக்கிப் பாசமிகை யாற்றழு
விப் பழுதில் வெண்ணீ, றணிந்துனையீண் டழைத்ததவப் பயனெந்நாளு
மழியாது வாழ்கவென்றென் றறைந்துள் ளன்பாற், றுணிந்தரனைத் துதி
செயெனச் சொன்னாள் போற்றிச் சூலைவியா தியுமனத்தின் றுயருந் தீர்
ந்தான், றணிந்தணிசெஞ் சடைக்காட்டெம் பெருமான் சிந்தை தனிற்
கிடக்கு நினைவறியத் தக்கதன்றே. (௧௩)

அன்றுதொட்டுப் பதிகங்க்ள் பலவாப் பாடி யானந்த பரவசனா யரு
ட்பே ராக்கந், துன்றுதலுற் றுஞ்சிறிது மாண்மை யின்றித் தோள்வருந்த
வுழவாரப் பணியுஞ் செய்தான், மன்றுணடிக் கும்பெருமான் வந்து
வந்து மன்வெளியில் விளையாடி மகிமையாய, நன்றுலக மறிந்துளைக்கு
நிமித்தம் பொல்லா நலிவனைய விதஞ்சிறிது நடத்துவானே. (௧௪)

அங்கமணர் தங்குழுவிற் றருமசேன னகன்றதுஞ்சென் றதுமுடன்
முற் † றடலைபூசுஞ், சங்கரற்கா ளானதும்பற் பலராற் கேட்டுத் தமதர
சற் குரைத்தாரத் தார்வேந்தோலை, செங்கரத்தால் வரைந்தொருதூ

* கவ்வி - மான். † அடலை - சாம்பல்.

தனைக்கொண் டேய்த்தான் றிலகவதி யார்க்கிளையான் றெரிந்துள்ளஞ்சிப், பொங்கரவம் பூண்டபிரா னருளாற் றேறிப் போயினனுங் கவன்கனற் கட் புலிபோற்சீறி. (கரு)

கல்வியறி வுடையாய்நீ யிந்தவாறு கலங்கியதே னீயிதனுற் கண்ட றியாது, சொல்லினைந்தென் றனதற்கம் முனிவன் பொல்லாச் சூலைநோ ய்த் துயர்முதலிற் றொலைத்தே னுண்மை, யல்லிரவுங் கண்டத்தான் றிறமும் பைந்த ணசோகடிப்புத் தேணிலையு மறிந்தே னீயு, நல்விதி யாற் றேறவல்லா யாகிற் றேர்தி நான்பொய்சொன்று லென்மனமே நகு மென்றானே. (கசு)

என்றமொழி வினவியுமச் சமண மன்ன னியாதொன்றுங் கொலல் கூடா தெனலெண் ணுனுய்க், குன்றதன்மேல் வைத்துருட்டல் விடப் பாம்புற்ற குடத்தினுட்கை விடச்செய்தல் கோபவேழ, மொன்றடரச் செலுத்திடல்கற் சுண்ணந் தன்னு டுறநீற்றன் முதலியபல் லொறுப்புச் செய்திட், டின்றமிழ்ப்பாட் டரன்மீது பாடி யன்று னின்புறக்கண் டினி ச்செயலென் னெனச்சோர்ந்தானே. (கஎ)

கற்றூணு டிவற்சேர்த்துக் கட்டி முந்நீர்க் கடலினிடைப் போடு மெனக் கழறி னுன்மெய்ச், சொற்றூய முனிவனிவன் றுெண்டு செய் தாற் சுகம்பெறலா மெனவுணர்ந்து துணிந்தா னில்லை, யற்றூர்த்த மதக் குறும்ப ரருள்கண் டாலு மவரவர்கொள் கையின்வழிச்சென் றழித றிண்ண, மற்றாம கேதனையா ரந்த வாறே வங்கமிசைக் கொண்டுதெளி வந்தா ரன்றே. (கஅ)

கடலிடைவீழ்த் தலுங்கருங்கன் மிதப்பக் கட்டுங் கயிறவிழ மிசை யிருந்து களித்துச் செங்க, ணடல்விடையாற் கருதியெழுத் தைந்தின் மாட்சி யவிர்தருசெந் தமிழ்ப்பதிக மறைந்தா னங்கீர், தொடர்திருப்பா திரிப்புலியூர்க் கரையிற் சேர்க்கச் சுகம்பெற்றான் றலந்தொறும்போய்த் துதித்தான் சோராத், திடமுறுமா தவத்தோரும் புலமையோருந் திரு நாவுக் கரசெனப்பேர் செப்பினுரே. (ககூ)

நடந்தகதை வினவியவன் றமக்கை யார்வ நனியடைந்து சிலநாளி னக்கன் பொற்று, ளிடந்திளைத்தா ளவன்முன்னுள் சமண்புக் கெய்து மிழுக்கொழிந்து புனிதமெய்த வீசன் றன்கைத், திடந்தருசூ லப்படை போல் விடைபோற் றூளிற் றிகழ்தருமுத் திரையமைக்குஞ் சீரும்பெ றுன், * வடந்தைதரு கயிலைமலைச் சிறப்பெல் லாமும் வளமலிந்த யாற் றில்வயங் கிடவுங் கண்டான். (உ0)

கவுரிமுலைப் பாலுகர்சம் பந்தப்பிள்ளை கலந்துசின்று ளுடன்வசிக் குங் களிப்பு முற்றுன், மவுனசிவயோகரும்வேட் புறத்தென் சொல்லான் மறைக்கதவந் திறந்தான்பொன் மன்றி லாடும், பவுரியிறை யவன்வரு

* வடந்தை - வடகாற்று.

கென் றுரைப்ப தோர்ந்தான் பழூதிலெண்ணு யிரமடியார் பரவ வாழ்ந் தான், வெவுரகந்தீண் டியமதலையுய்யச் செய்தான் வீழிநகர்ப்பொற்கா சான் மேன்மைதோய்ந்தான். (உக)

என்னப்ப னென்னேப்பா டுவனென்றீச னியம்பியதா லப்பனென் றே யீகழும்வாணும், பன்னப்பட் டானதன்றி யப்பூதிப்பேர்ப் பனவன்ம ட்டிற் பழிக்கருந்தொல் பரமேயானுன், பின்னப்பால் வளைதரும்பொற் கோயின்மேய பெரும்புகலூர் தனிலிறப்பும் பிறப்புந் தீர்ந்தான், முன் னப்பே றடையுமவன் கதையோர்சோழன் *முதலமைச்சன் விரித்து நன்று மொழிந்துள்ளானே. (உஉ)

ஒருவன்விரித்துள்ள தொரு பயனைமற்று மொருபுலவன் மொழி பெயர்த்தாங் குரைக்கைசாலு, மருவருப்பா மாதலினிக்கதையையிவ்வா றடக்கியுரைத்தே னினியன்னவன் பிற்றோன்றும், குருபரனுஞ் சுந்தர மூர்த்திப்பேராளன் கொற்றமுஞ் சற்றுரைக்கின்றேன் கூறுமஃதும், பொருவிலதாந் திருத்தொண்டர் புராணத்தூடு புகன்றுளதே யெனத் தேர்மின் புவனியோரே. (உ௩)

திருநாவுக்கரசுநாயனுர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உஉ௫.

நான்காவது
## சுந்தரமூர்த்திநாயனுர் சருக்கம்.

கயிலைமலைக்கட் சிவபெருமானேர் கண்ணுடி
வயினிலவுந்தன் சாயலைநேரே வருகென்று
னயிலுறழ்கண் மாதுமையுதிரண் டாலதுசெய்தாள்
பயிலவலார்மூ வருமவர்கோலப் படிவந்தார். (க)

அவரவர்தங்கட் குரியவர்தந்தொண் டதுசெய்யுந்
தவமுயலுற்றுச் சிற்சிலகாலந் தள்ளிப்பின்
னவமலிநந்தா வனமதிலோர்நா ணளிர்பூவேள்
கவலைவிளைக்கப் பட்டவர்தம்மிற் காமுற்றார். (உ)

அத்தகையோர்க்கிட் டரனுமையன்னேர் தமைநாடிச்
சித்தம்வெகுண்டார் போன்றுலகிடைநீர் சென்றும்முள்
வைத்தவிருப்பந் தீர்த்திவண்வருவீ ரெனவந்தப்
பத்தன்வலிந்தாண் டருளெனவீழ்ந்து பணிந்தானே. (௩)

அப்படியேசெய் குதுமெனவீச னறைந்திட்டா
ஞெப்பறுநாவ லூர்வளர்சிவனுக் குயர்பூசை
தப்பறவெப்போ துஞ்செயுமரபின் சடையன்பாற்
றுப்பவிர்மேனிச் சுந்தரநாமச் சுதனுனன். (௪)

* முதலமைச்சன் - சேக்கிழார்.

ஒருமகளாரூர்க் கணிகைதன்மகளா முருவுற்று
டிருங்கர்மற்றோர் வனிதைசினுள்போய்த் திருவொற்றி
யருகுறுமோரூர் தனில்வளர்வேளா ளன்பெண்ணு
வருமுருவுற்று ளிருவருமினிது வளர்ந்தாரே. (௫)

உரமிகுநரசிங் கமுனையனென்னு மொருவேந்தன்
பரவுமொழிச்சுந் தரனெனுநாமப் பனவச்சேய்க்
கரண்மனையிற்சேய் பெறுநலமெல்லா மமைவித்தான்
வரனருளுற்றுரெய்தரிதாய வாழ்வின்றே. (௬)

அம்மதலைக்கீ ரெண்வயதாயிற் றந்நாளின்
மைம்மலிகூந்தற் பெண்மயிலொன்றை வதுவைக்காச்
செம்மணவரைமீ தொக்கவிருத்தித் தீமுன்னர்
மெய்ம்மறைசொல்லும் விதிவழிகிரியை விளைத்தாரே. (௭)

வேறு.

அவ்வமயத்தி லொருபெருங்கிழவ னந்தணர் குலத்தவதரித்தோன் கைவ்வயிற்றடியும் பழயவேடொன்றுங் கவினுறக் கொண்டவண்கடிதுற் றிவ்வகைமணமீண் டிவன்செயன்முறையன் றெமதுடன் பாடுபெற்றில்லா னெவ்வநாமெது செய்யினுந்தரும்விலையேயிவன்மரபெமக்கெனவிசைத்தான்.

அம்மொழிவினவி மணமகனெழுந்தாங் கவன்கையேட் டினைக்கிழி த்தழித்து, வெம்மொழிப் பித்தனிவனெனவிகழ்ந்தான் வேறுளார் விடலையைநோக்கி, யெம்மொழிகுறியா திவ்வணஞ்செய்தா யிதுநின்மேற் குற்றமென்றிசைத்தார், மெய்ம்மொழிக்கிழவ னஃதலாவின்னும் வேறொரே ளதெனப்புகன்றுன். (௮)

அதனையுங்கிழியா தடக்கியச்சபையோ ரன்போடு பார்த்திவனவர் தம், பதமலர்க்கடிமை தானெனத்தீர்த்துப் பணிந்துபின் போம்படிவிடு த்தா, ரிதமொழிக்கிழவன் றருமுறியதனி லிவன்றன்மு தாதைகையெழு த்துஞ், சுதரெனத்தமைக் கொள்வார்கள் கைப்பொறியுந் தோய்தலின் மறுத்திலார்துணிந்தே. (௧0)

கிழவன்வாலிபன் றேன்மிசைத்தனதுடைமை கிளர்தரக்கொண்டு போய்க்கேடி, லழகுடைத்தானவெண் ணெய்நல்லூரி னுலையந்தனுட்பு குந்தப்பான், மழவிடைப்பரிமேலுமை யொடுபலபல்வானவர்சூழ்தரத் திகழ்ந்தான், பழமைநன்கிலங்கலான் மிகப்பணிந்து பணித்தவாபணி செய்வே னென்றுன். (௧௧)

சுந்தரன்பகர்சொற் கேட்டுளமகிழ்ந்து சுடர்மணிப் *பணிபுனைதோ ளான், செந்தமிழ்க்கவியாற்றுதி செயல்போலுஞ் சிறந்ததொண்டெமக் கிலையென்று, ணந்தவா்றியற்ற வறிகிலேனெனலு மாதியிற்பித்தனென்றி கழ்ந்தாய், வந்தவச்சொல்லே கொடுதுவக்கென்றுன் வயங்கொருபதிகம் வாய்த்ததுவே. (௧௨)

* பணி - பாம்பு.

அன்றுதொட்டுள்ளசிவதலந்தொறும்போ யருந்தமிழ்ப்பதிகமிக்கறைந்து
நன்றுளார்வியக்கப்பெரிதுசஞ்சரித்து நாள்சிலகழிந்தபின்னொருநாட்
கன்றுருவாகிநமன்வரச்சிவனோர் காலியாவருந்திருவாரூர்ச்
சென்றுபோற்றிசைத்தத்தலத்தின்மிக்காசை செறிதரவசித்தனன்றே. ()

இரவினிலவ்வூர்ச்சிவன்றனாலயத்துக் கியன்றதொல்பணிசெயப்பிறந்த
பரவையென்பாளன்னவன்மனையாகப் பற்பலர்கனவினும்பகர்ந்தான்
வரகுலமகளைமணஞ்செயற்றவிர்த்து வரைவின்மின்னாள்வயிற்றுதித்தாட்
டிரமுறக்கொடுத்தான்றிருவருட்குறிப்புத் தெரிந்துரைப்பவர்சக்தியிலையே. ()

அவண்மனையாய நாண்முதற்பொன்னே யரும்பொருளாய தன்னவனுக், கெவளவோதலத்தி லெத்தனைபொன்னை வெய்தியுந்திருத்தியுற்றில்லான், குவடுறழ்நெற்போர் குண்டையூர்ச்சிவனார் கொடுத்திடப்பெற்றதைக் கொணர்ந்தப், பவளவாயணங்கின் மனையிலுய்த்திடற்கும் பதிகமோதினன் மிகப்பரிந்தே. (கரு)

பொங்குதோரூர்ந்தை கூவுமென்றதற்காப் பூம்புகலூரர் பொற்செங்கற், றந்துவிட்டதுவும் பழமலைநாதர் தருந்தனத்தினை நதியினிலிட், டுங்குசீராரூர்க்குளத்தினி லெடுத்தவ் வொண்டொடிக் கொடிக்குதவியது, மைந்துறுதடந்தோட் சேரர்கோன்சிவன்சொல் வழிபொருண் மிகவழங்கியதும். (கசு)

சங்கிலியெனுமோர்தவப்பெண்ணனிகழ்ந்த சரித்திரவிசித்திரம்பலவுங்
கொங்கினின்முருகன்பூண்டியூர்ச்சிவனார் கொள்ளையிட்டதுமவிநாசி
தங்கியபனவமதலையைமுதலை தானுகர்ந்தாண்டுமூன்றாகி
மங்கியபின்னர்வளர்ச்சியோடுலகில் வரவழைத்ததுமுதற்பிறவும். (கஎ)

இந்திரன்வியப்பத்திகழநபாய னெனும்பெயர்ச்சோழனுக்கினிய
மந்திரியுரைத்தகாவியந்தன்னில் வகைபடவிளங்குமாறாலுஞ்
சந்திரமவுலிச்சிவபிரான் * மாதை தன்னிடைவன்னியின்காயே
யுந்தியமாற்றுப்பொன்னதாமாட லொப்பனசெப்பிடாதம்மா. (கஅ)

ஆதலாலவன்றன்சரிதமிவ்வள்வே யாமெனமுடிப்பவராரோ
வேதமின்றியவற்புதங்களெத்தனைதா னெவரெவரெடுத்திசைத்தாலுஞ்
சீதநீர்க்குளத்துமுதலையுண்டழிந்த சேயைமீட்டளித்ததற்கொப்பென்
றோதும்பற்றொன்றுமுளதெனவருமோ வுணர்வினிற்சிறந்தவுத்தமரே. ()

அன்றுசீகாழிக்கவுணியமதலை யழலினில்வெந்தவெள்ளென்பைத்
துன்றுபூணணிபெண்ணாக்கிடப்பதிகஞ் சொல்லியதருமையேயெனினு
மொன்றுமாதரவில்வெறுங்குளத்திடைப்போ யுதகமுமுதலையுமகவுந்
தன்றுதித்தழிமாற்றம்பிரான்றோழன் றருதல்சற்றுயர்வெனத்தகுமே. ()

* மாதை - திருவாமாத்தூர்.

காமவேள்கணையின்கத்துமைசற்றேனும் கதுவுறக்கவுணியமதலை
யாமவனருட்பேறடைந்ததுவியப்போ வணங்கனூரிருவர்தோளணைந்து
நேமமுந்தவறியதன்பொருட்டிரண்டு நேத்திரங்களுமிழந்தடைந்தோன்
சோமசேகரனையவர்கள்பாலிதச்சொல் சொலும்படிவிடல்பெருவியப்பே.()

கந்தனேயனையசுந்தரன்றவளக் களிற்றின்மேற்கயிலைவெற்படைநீதா
னந்தவேலையினிற்சேரமான்றூனு மருகொருபரியின்மேற்சென்று
னிந்தமட்டிவன்றன்சரிதையை முடித்திட்டினித்திருவாதவூரடிக
ணந்தலில்சரிதமுணர்ந்தமட்டன்பர் நலமுறும்படிநவின்றிடுவாம். (௨௨)

சுந்தரமூர்த்திநாயனார் சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௪௯.

ஐந்தாவது

## திருவாதவூரடிகள் சருக்கம்.

வாதவூரர் சரிதம்புவியில் வல்லோர்பலர் சொன்னூ
ரேதமெய்துந் தமியேன்றூனு மியம்புந்துணி வுற்றேன்
சீதமலிநீர்ச் சைவாசிரியத் திரளிற் றலையாய
நாதனென்னத் துதியார்பலரு நற்பாவல ரன்றே. (௧)

அட்டமூர்த்திநிலைமைசிறிது மறியாவிளஞ்சைவர்
சிட்டர்போற்றுந்திருவாசகத்தோன் சீலந்தெரிகில்லார்
நட்டநடுவேநிற்கும்பெரியோர் நன்கோர்ந்தளிகூர்வார்
வட்டநிலமின்முகநேர்பாண்டி வளநாடதனூடே. (௨)

வானோர்புகழ்சீருத்தரகோச மங்கைநகர்தன்னின்
மானேர்கையிற்கொள்ளாச்சிவனோர் வடிவத்தொருகுரவன்
மீனேறெழிற்கண்ணினர்மாலறவே வென்றபல்சீடரொடுந்
தானேர்துணையாவுற்றனனெனநோட் டவமுற்றியபின்னர். (௩)

முத்திக்கிடைபோ குவனினியென்றூர் மொழிகூறினனன்னோர்
பத்தித்துறையாற் கெஞ்சினரியாம்போம் பரிசோதுதியென்ன
வித்திக்கினிலிக் குளநடுவொளியொன் றெய்திடுமதுனேகிற்
சித்தித்திடுமெய்க் கதியெனவோதித் தேகமறைத்தானே. (௪)

ஓதுமவாறேசின்னுள்சென்றங் குற்றதுபுக்குய்ந்தார்
பாதுகையேந்துந்தொண்டனொருத்தன் பயமிக்கனுகிலனப்
போதுறுசோதிமறைந்ததுநொந்தே புண்பட்டனனுடல்போய்
மீதுயருலகிடைசாரூபப்பத மேவிவிளங்கினனே. (௫)

எய்தியபதமிக் கினிதெனமகிழா தீசன்சந்நிதியிற்
கைதினமுங்குவி யப்பிறவாமெய்க் கதிதருகென்றோதி
நெய்திகழ்கொன்றை மலர்த்திரளாதிய நிறையக்கொடுதோளிற்
பெய்திருகண்புனல் சொரியப்புரிவிற் பெரிதுழையன்றூனே. (௬)

அந்தகாளி லாமாத்தியரா மந்தணர்களின் மிக்கோன்
மைந்தன் வேண்டித் தவகனிசெய்தே வாதபுரிக் கிடைவேற்
கந்தன்றாதை யருளாலிவனைக் கான்முளையாப் பெற்றான்
வந்தன்னவனெண் ணென்கலைதேறி வாலிப திசையுற்றான். (எ)

வேறு.

அன்னவற்பிரமராய னுமெனப்பகர்ந்தார்சில்லோ
ருன்னரும்புகழ்சால்வாத வூரனென்றுரைத்தார்பல்லோர்
தென்னவனனையன்மாட்சி தேயமுற்றுரைப்பக்கேட்டுத்
தன்னமைச்சாதல்வேட்டத் தகைமையிலமையக்கொண்டான். (அ)

மந்திரித்தொழில்செய்போது மனத்திடைவயிரவேற்கை
யிந்திரன்வாழ்வுந்தாழ்வே யெனக்கருதிறுமாப்புந்தண்
சந்திரன்முடித்தவேணித் தலைவனேகுருவாக்கண்முன்
வந்தினிதருளவேண்டும் வாஞ்சையும்வளர்த்துற்றானே. (௯)

ஈடில்சீர்வசிட்டன்றன்னை யிராகவன்சபைவாழ்ந்தாற்போற்
கேடில்வேல்வழுதிமன்னன் கெழுவுமோலக்கம்பாண்டி
நாடியறவத்தான்முத்தி நலம்பெறவுதித்த *நாதன்
பீடியலமைச்சனாகப் பெற்றதாற்பிறங்கிற்றன்றே. (௧௦)

அத்தகையமைச்சன்றன்னை யளிமுரல்வேப்பந்தாரான்
புத்தநாட்டிவுளிகொள்ளப் போதியென்றனுப்பினானை
லெத்தனைநலனுற்றாலு மிராசனைச்சாருமீனம்
வித்தகர்க்காகாதென்ன வெறுப்பதேமுறையாமம்மா. (௧௧)

பொன்னுடைப்பொதிகள்வேண்டும் புறத்துணைப்பரிவாரங்க
டென்னுறக்கிழக்குநோக்கித் துரிதமாச்சென்றானங்கு
மன்னுமோர்காவிற்செம்பொன் மலர்சொரிகுருந்தின்பாங்கர்
மின்னுறழ்சடிலக்காட்டோர் வேதியக்குருவாயீசன். (௧௨)

பற்பன்மெய்யடியார்சூழப் பரிந்துவீற்றிருப்பக்கண்டான்
பொற்பணம்புரவிவேட்கை புரவலனாணையாதி
யற்பமுமதியானாகி யடிதொழுதிறைஞ்சிநின்றா
னிற்பவன்றன்னைநோக்கி நின்மலனிகழ்த்தலுற்றான். (௧௩)

யாவனீயீண்டேன்வந்தா யென்னைநீயிறைஞ்சலெனின்
னாவல்யாதெனலுமன்னோ னந்தணச்சிறுவன்யானோர்
காவலனாணையாலிக் கான்வழிவந் தேனின்னைத்
தேவதேவென்னநம்பித் தெண்டனிட்டிறைஞ்சிநின்றேன். (௧௪)

என்னைநீயாண்டுகொண்டியா னிறந்துபோயினுமற்றோ
ரன்னைதன்வயிற்றுண்மாழ்கா தருள்செயவேண்டுமென்றா
னின்னைநின்னுடலைநின்பா னிகழ்பலபொருளோடீந்தாற்
பின்னைநின்விருப்பமுற்றுப் பெறும்படிபுரிவேனென்ன. (௧௫)

* நாதன் - திருவாதவூரடிகள்.

சற்குருவுரைப்பக்கேட்டுத் தடையறக்கொடுத்தன்னேன்பா
னிற்குமெய்யடியார்பூண்டு நிலவுநல்வேடத்தோடு
சொற்குறியதுவும்பெற்றுத் துகளறுநிலையோனுறை
னெற்குமுன்பனிமாய்ந்தென்ன விகத்துமாவிரிந்ததன்றே. (௧௬)

அக்கணங்குரவன்கூட்டத் தவரொடுமறைந்ததாலே
முக்கணன்றானம்மெண்ண முற்றுறப்புரிவானீண்டுத்
தெக்கணமுகத்தனுகித் திகழ்ந்தனனென்னத்தேர்ந்திட்
டெக்கணங்கருதினேலு மிதயமூடிலங்கப்பெற்றான். (௧௭)

அவ்வனத்தரசன்றந்த வருந்தனமூலமாகச்
செவ்வனப்பமையுங்கோயிற் றிருப்பணிதுவக்கிச்செய்வித்
தொவ்வருங்களிப்பனுகி யுறையுநாளரையன்றூதன்
கைவ்வயினோலையேந்திக் கடுகிவந்ததனையீந்தான். (௧௮)

மந்திரிக்கெழுதுமோலை வாசகமுறையுமற்றோர்
தந்திரத்தொழுகுந்தன்மை சகஞ்சொலத்தெரிந்தவாறு
முந்தியபரிகடம்மோ டுருவிடிலொறுக்கும்பண்புஞ்
செந்திருமார்பன்போல்வான் றிருக்கையின்குறிப்போடோர்ந்தே. (௧௯)

முன்னமந்திரியாய்ப்பின்பு முனிவனுமூர்த்தியென்றுந்
தன்னகத்தொளிர்கின்றோனுஞ் சற்குருபரன்சொனம்பி
யன்னமார்வயல்கள்சூழு மணிகிளர்மதுரைக்கேகித்
தென்னவன்றன்னைக்கண்டு சினமுதற்செய்யேலென்றும். (௨0)

இன்னநாள்பரிகணின்பா லெய்திடுமென்றுமியானின்
றன்னதாளென்கைமாறிச் சங்கரனடியார்க்காளா
நன்னலம்பெற்றேனென்று நவின்றனனுகரிற்கண்டார்
பன்னலும்பிறவும்பாடிப் பாத்தொகைபெருக்கல்வீணே. (௨௧)

கடிமணஞ்செய்துற்றோ கருதியபயன்கைக்கொள்வா
னடிகடாமதுசெய்யாதுற் றனர்கொலோவீறிகின்றில்லே
னெடியபாரிருவாறுயு நிகழ்த்திடுநிறையப்போர்த்த
பொடியொடுகீளுங்காட்டும் புதுப்பிறப்பானதுண்டே. (௨௨)

ஈசனேவிழிமுற்றோற்றி யீந்தமெய்வேடமாற்றி
யாசதாமுதல்வேடந்தொட் டடைந்தனரெனவஞ்சாமற்
பேசவுந்துணிந்தார்சில்லோர் பெருஞ்சினமரசன்செய்தா
னுசமக்கணத்திலெய்து ஞாயநன்குணர்ந்திலாரே. (௨௩)

மன்னவன்சைவந்தாங்கு மரபனுயிருந்தும்வந்த
வன்னமாமுனிவற்போற்றி யடிபணிந்தில்லானுர்க்கும்
பொன்னவாவதுமேலிட்டாற் புந்தியுநிலையுமாறு
மென்னறுதுணர்ந்தோர்சொல்லற் கிஃதுமோர்சான்றாமீற்றே. (௨௪)

வேடமுந்தொழிலுமாறும் விதம்பலர்விளம்பக்கேட்டுக்
கூடலம்பதிவாழ்கோமான் குலேந்தமுற்கோலங்கண்டா
னூடறிதிருடனென்ன நவிலுமாறுணராரங்ஙன்
பாடலும்பலசெய்துள்ள பாவமென்னெனச்சொல்வேனே. (உ௫)

அன்னவூர்நாவின்மீதுற் றங்ஙனம்பகர்ந்தவாணி
யென்னதுநாவுற்றிங்கா ளிங்ஙனமிசைக்கின்றாளாற்
பின்னவட்காண்போரன்பாற் பெரிதுன்மங்கலஞ்சான்றச்சொ
லென்னநன்குறுத்திக்கேட்டா லிதனிசமறியலாமே. (உ௬)

பிரமனேசுமனேவேளைப் பெரும்பகையெனத்தேர்ந்தெள்ளும்
வரமுனியரசற்கஞ்சி மற்றொருவேடமிட்டா
லரனருள்வலிமைகுன்று மறங்லையனைத்தும்பேருங்
கரவினனெனவிப்பாரும் ககனமுமிகழுமன்றே. (உ௭)

வயிணவர்களிற்சில்லோரு மாசுணபதியேயென்னப்
பயில்பெருங்குருமீதின்ன பழிசுமத்திடலுண்டின்றே
ரயில்வலியினுமெங்கோன்மெய் யருள்வலியெளிதென்றெண்ணி
வெயிலினிற்புழுப்போற்சோர்ந்து வினைப்பயனுகர்கின்றாரே. (உ௮)

அறைந்தநாள்வருமட்டந்த வரசனம்முனிவன்றன்னை
மறைந்ததோரறையுள்வைத்து வலியரராற்காவல்செய்தா
னிறைந்தபேரறிவுள்ளாற்கு கிட்டைவாய்த்ததுமற்றோராற்
குறைந்திடச்செயும்விகாதக் குழுமுழுதொழிந்ததாலே. (உ௯)

தீர்த்தனுக்காலயஞ்செய் திருப்பெருந்துறையின்வாழ்விற்
சீர்த்ததம்முனிவற்கந்தச் சிறைத்தனிக்கூடந்திய
தூர்த்தமானிடரோரார்கள் சுருதிசொனிலையினின்றோர்
மூர்த்தமேகுறியாப்பற்றி முயல்பவருணர்தற்பாற்றே. (௩0)

வேறு.

குறித்தவாவணிமூ லத்திருநாளிற் குலநரிகளைப்பரி யாக்கி
மறித்தடங்கரத்தார் சேவகராகி வானவர்தமைத்துணை யாக்கொண்
டெறித்தபொன்மதிள்சூழ் மதுரையின்கீழ்பா லெய்தியவாரவா ரத்தால்
வெறித்தகைதவிர்ந்தாங் குவகைமேற்கொண் டவ்வியனகராளும்வேல்வேந்தன்.

சிறையிலுற்றுளவோர் முனிவரன்முதலாஞ் சீரியருடனவ ணேகித்
தறையின்வாம்பரிக ளன்றிவைவானந் தனிலுளவேயென வியந்து
பிறைமறைத்தொருபொற் கலேப்புனைதலையாற் பிரமையாற் கைகுவித்ததற்பின்
முறைபிறழ்ந்தனமென் றுளமிகநாணி முகமலர் குவியநின்றனனே. ()

இவ்வயிற்குதிரைக் குரத்துமென்றுகளி னெழுச்சியும்விலாழியின் பெருக்கும்
பௌவநீர்த்திரைநேர் பாய்ச்சலுந்தொனியும் பணிப்பொலி வாதியபிறவு
நவ்வலந்தீவிற் புலவர்பற்பலர்முன் னவின்றவா நாலுமோதிடினுஞ்
செவ்வறிவுமைபீ முதிர்வுறுக்கல்விச் சிறியவர்க் குவகையீந்திடுமே. ()

நின்றமன்னவன்முன் னிகமவாம்பரிமே னிலவியதலைவனின் னமைச்சன்
பொன்றரற்பொருட்டா லீங்கிவைகொணர்ந்தேம் போதமட்டிருதங்கோடி
யுன்றனக்குவைமுற் றொருபரிவிலைக்கு மொவ்வுறு நீயுநன்குணர்வா
யென்றனனவ்வா றீந்தனன்பிறவோ டேகினனெங்குமேயவனே. (௩௪)

அன்னவற்கொரு பீதாம்பரமளித்திட் டதைக்கசையாலவன் கொளலான்
மன்னவன்சினந்தான் வஞ்சகவேட மந்திரிவழக்கமென் றிசைத்தா
னென்னவும்புகல் வாரியானதற் கிசையேனிரவினிற் பரியெலாநரியாய்
முன்னம்வாழ்காட்டிற் கேகியதந்தோ முதல்வனுட் டுணர்வரியதுவே.

அரண்மனைக்குதிரைத் திரளினைக்கொலைசெய் தகன்றவென்பாரதவம்பே
யுரனுடைப்பரிக ளானவாநெடுநா ளூறும்படி செய்யவும்வல்ல
பரமர்தாந்தமது திருப்பணியினும்பல் பரிகொள னலமெனக்கருதும்
புரவலன்மடமை குறித்ததாற்பொய்மை பொய்மையாகிடப்புரிந்தனரே.

தந்திரக்கபட நரிகளைக்கூட்டித் தவளவா ரணப்பிடரேறு
மிந்திரன்றன்னூர்ப் பரியினுஞ் சிறப்ப விறைசெயற் கண்டுபோமிரவி
மந்திரமறைக்கு மமைவுறுவடிவில் வழுதிகைப் பிரம்படிதாக்கச்
சந்திரமோலி மறைத்துவந்தாடுந் தகுதிகாண்பதன்பொருட் டுதித்தான்.

விடிந்ததுமிரவி னிகழ்ந்தவாறுணர்ந்து விசயனேயனையவேல் வேந்தன், கடிந்தசொற்சொரிந்தம் முனிவனைப்பிறர்போய்க் கண்ணெதிர் கொடுவரக் கண்டு, படிந்தவிச்சாலமெங்கு கற்றனையோ பகர்தியென்றுறுக்குபுவையைப், பொடிந்தநுண்மணன்மே னிறுத்திமிக்கொறுத்துப் புண்படப் புரிமினென் றுரைத்தான். (௩அ)

அரையனதுறவு மகண்டபூரணமா வமைதருமாதிதன் னுறவுந், தரையினிற்சதமன் றெனுமொழிக்கீதோர் சான்றென நிகழ்ந்ததத்தவன்றன், றிரையறுகடனேர் சிந்தைதத்தளிப்பச் செழுந்தமிழ்த்துதி சிலசெய்தான், விரைவிலன்னவர்தாங் கொண்டுபோயாற்றின் வெம்மணற் குன்றின்மேல் விடுத்தார். (௩௯)

நெற்றியிற்கல்லு நெடுவிரற்கிட்டி நெருக்கமுமமைத்துநீ ணிலத்தின்
பற்றிலான்றன்னை யொறுப்பதுநினைத்தார் பரனருளாற்புனல் வெள்ள
முற்றிருகரையும் பிறழ்ந்ததுநீந்தி யுய்ந்தனரூர்நிலை பெறுஞ்சீர்
பெற்றிடக்கருதி யரசனும்பிறரும் பேதுறுபீடைமிஞ் சியதே. (௪௦)

தெய்வமேதுணையென் றுணர்ந்தொருமூர்த்தித் தியானமுஞ் செபமுநன் கியற்றி, யுய்வதுகுறிக்கு முறுதிபெற்றுள்ளீ ரும்மதுகனவினிற் பொறிக, ளைவகையொடுங்கு நிட்டையிற்றோற்று மவைகளாலாஞ்சுமை யெய்திடன்மின், சைவநாயகனைக் கண்டருள்பெற்றோன் றயங்குமாறுணர்ந்தடங்குமினே. (௪௧)

அக்கணம்ர்ச்சன் முனிவனைப்பண்டை யறையுளுய்த்திலங்தொருவ் வொன்று, மக்களைக்கூட்டி மண்சுமந்தாற்றின் வார்கரைதிரட்டலின் முயன்றான், றிக்கதொன்றில்லாள் பிட்டுவிற்றுண்பா டிரைநரைக் கூறு டலொருத்தி, சொக்கநாயகன்மு னெனக்கொராளமைத்துத் துயரொழி த்தருளெனத் தொழுதாள். (௪௨)

கொடியகோல்செங்கோ லெனுமிரண்டேந்துங் கொற்றவ ராணையாற்குலையு
மடியவர்க்கிறைவ னருளலாற்றுணையின் றுங்சமவிர்தரும் பொருட்டா
னெடியமாலறியாப் பதத்தவன்றானே நேரிலோ ராளெனநிலவிப்
பொடியதாம்பிட்டு முழுதுமாங்கூலி புகன்றவ ளிசைந்தபின்போனான்.

இன்னவனவர்தங் கூட்டமுட்புகலு மியாவருமிவன்வழித் திரும்பி
யன்னவேலையின்மிக் குழைப்பதுதவிர்ந்தா ரடிக்கடி கூலிபெற்றளித்துத்
தின்னலும்பிறவு மேகனிசெய்தான் சேவகர்தெரிந்து *வேத் திரக்கை
மன்னனுக்குரைத்தா ரவன்விரைந்தோடி வந்தடித்தனன்சின மலிந்தே.

அவ்வடியடித்தோன் முதற்பலர்மீது மவ்வயிற்றாக்கியதன்றி
யெவ்வகிலத்தும் யாவர்தம்மீது மேய்ந்ததுதேவராதியர்தாங்
தெவ்வறக்களையுங் கணைவிழைந்தான்கைச் சிலையடிபட்டவன்றன்னை
யிவ்வமையத்தில் யாவனோவடித்தா னெனத்தெளிந் தின்பமெய்தினரே. (௪௫)

அத்தகைக்கடவு ளியாவனோவவனே யகண்டபூரணப்பரப்பிரம
மெத்தகவினனென் றியாவரேத்தினுமாங் கிலங்குவோ னெண்ணில்பல்வேத
வித்தகச்சமய புறச்சமயங்கள் விரும்புவோன் விகற்பமுற்றொழிந்தோன்
சுத்தநிற்குணமுஞ் சகுணமுமாகுந் தொல்பொருளென்பதுதுணிவே. ()

அவனுருக்கரந்தவாறுமெல்லவர்க்கு மடித்துயர்மீறலுமறிந்து
தவளவாரணத்தோன்மணிமுடிகளைந்தான் றன்மரபினில்வருந்தனயன்
சிவனடிகருதிச்சிறையில்வாழ்முனிவற் றெண்டனிட்டேத்திநீசெய்யுந்
தவநிலையதன்மாண்பறிகிலேனிழைத்த தவறெலாம்பொறுத்தியென்றிரந்தே. ()

எப்பணிநின்வாயிடினுமாங்கியற்றற் கெட்டுணைதவறிடேனெனக்கின்
றிப்படியரசுங்கசந்ததுன்னருளா லிறைநிலையெளிதுணர்ந்துய்ந்தே
னப்பரன்றன்னையடித்தவெம்பாவ மகலுமாறறிகிலேனெனலு
முப்பழச்சாறேயனையசெந்தமிழ்தேர் முனிவரன்மகிழ்ந்திதுமொழிவான்.()

என்னைமுற்றிலுமேற்றுள்ளவனருளா லென்சுகதுக்கமுற்றியலு
முன்னைநான்சினவேனுனக்குமோர்செயலின் றன்பொருளாற்செய்புண்ணியமுன்
றன்னையேசாருமெனக்கிகபரத்தின் சார்பினியின்றிதுசரத
முன்னைநாட்டவமிக்கிழைத்துளாயதனான் †முதலிருக்கானின்முற்றிகழ்ந்தான்.(௪௯)

மற்றையவரசர்பேரன்மகபதியூர் வயிற்புகுந்தவுணரால்வருந்தாய்
பொற்றைவிற்சிவனூர்புகுவையான்றுவக்கும் புதுத்திருப்பணிக்குறைநீரு
முற்றைநீகண்டுன்மகன்றலைமிசைநின் முடிகவித்தருந்தவமுயலென்
மற்றையேமதுரைவிடுத்திபுவப்போ டருட்டிருப்பெருந்துறையடைந்தான். (௫௦)

* வேத்திரம் - பிரம்பு. † முதலிருக்கு - முதன்மையுள்ளவேதம்.

அன்னவாறரசன்சிறிதுநாளையிலாங் கப்பணிமுடிக்கைகண்டதற்பின்
வன்னமாளிகைசூழுத்தரகோச மங்கையுமருணையுங்கழுகே
யென்னமாதவர்வாழ்மலையுமாதியபார்த் தினியசொற்றொடைமிகவளைந்து
பொன்னதாற்சமைந்தவம்பலங்குலவும் புலிசையிற்சிவன்சொலாற்போனான். (௫௧)

அப்பதியினர்தன்பெருமையோர்சிறிது மறிந்திடாதன்னமேற்றருந்தி
வெப்பமார்தில்லைக்காட்டிடைவசித்தே மிகுதவம்விளைத்தனன்விரும்பிச்
செப்பகப்பொருட்கோவையும்பிறபனுவற் சீருமேற்றுவந்தருட்செழிப்பான்
மைப்படுகண்டரவற்குமாணிக்க வாசகனெனப்பெயர்வகுத்தார். (௫௨)

இட்டபேர்பெற்றோனொருவனேயறிவா னின்னணமிருக்குநாளெறிநீர்
வட்டவாரிதித்தீவினில்வளர்பவுத்த மதப்பெருங்குரவர்மூவெழுவர்
மட்டறுதிறற்றம்மன்னொடுமற்றவ்வூர் மறையவர்தமைச்சயித்தீச
னட்டமாடுங்கோயிலைத்தமதாக்க நண்ணுபுநவின்றுமார்த்தனரே. ()

அந்தணர்பலரிற்கருமமேதுணையென் றசக்கொலைவிழைவுறுதவராய்ச்
செந்தகைவடிவங்கருதியைந்தெழுத்துஞ் செபிப்பவராஞ்சிலர்கனவில்
வந்தரனிவ்வூர்த்தில்லைமாவனத்தின் மாணிக்கவாசகப்பெயரோ
னுய்ந்தருள்வலியோடுற்றுளானவனொ லொறுக்குநிரிவரையென்றுரைத்தான். (௫௪)

அம்மொழியுணர்ந்தங்கவர்புகுந்தப்பே ரறைந்தழைத்திடலுமம்முனிவ
னிம்மொழியுரைப்பாரியாவரென்றடுத்தா னீசனுத்தரமென்றுருடன்போய்
வெம்மொழிப்பவுத்தவாதிகட்சயித்து விளம்பருமூமைகளாக்கிச்
செம்மொழிவலத்தோடவிர்ந்தனனவர்க்காத் தேர்மிசைவந்தமன்செப்பும்.()

என்மகளொருத்திபிறந்தநாண் முதற்கொண்டியாதொருமொழியுமோதில்லாண்
மன்மதன்சேனைத்தலைவிபோன்றுள்ளாள் வாய்திறந்துரைசெயச்செய்தா
னின்மதமுயர்வென்றதிற்புகுந்தெனது நிலத்துளார்பலரையும்புகுப்பே
னுன்மகத்துவமூன்றுலகினுமொளிரு முண்மையீதெனத்துணிந்துரைத்தான். (௫௬)

அப்படிச்செயற்கோர்தடையுமின்றெனச்சொற் றம்முனியவளையாங்கழைப்பித்
தெய்ப்பறக்குருந்தினடியில்வந்தாண்டா ரிருபதங்கருதிநீறிட்டுக்
கைப்பவர்போன்றுசிவசரித்திரத்தின் காரணம்பலவினவினன்செந்
துப்பவிரதரமலர்தரத்தமிழாற் றுகளின்மாறுத்தரஞ்சொன்னாள். (௫௭)

இவ்வயினவடனெழிலுறுப்பமைதி யிணைகலைகலன்முதலியவு
மவ்வயினவடாய்கண்டநற்கனவே யாதியசகுனங்கள்பலவும்
வெவ்வழன்மெழுகொத்துருகியாடவர்தா மெலிந்துபேசியபலவிதமும்
* பௌவமொத்தகலப்புகலினுஞ்சலியாப் பண்பினர்படிமிசைப்பலரே.

மன்னவன்றானுங்குரவருமுதலின் மகளணிந்திட்டநீறணிந்து
பொன்னவிரக்கமாலையுந்தரித்துப் புனிதன்வாய்புகன்றவைந்தெழுத்துஞ்
சொன்னநாவினராய்த்தமதுநாட்டேகித் துகளுறுபுலைமதந்துறந்தா
ரின்னவாறுணர்ந்தும்பிறசிலகுரவோ ரெதிர்த்தவர்க்கொலைசெயலிழிவே. (௫௯)

---

* பௌவம் - கடல்.

செந்தமிழ்ப்பாண்டிநாட்டிறையாகித் திகழ்குலசேகரன்பின்னு
டந்தகாவியமொன்றினிவிவன்பவுத்தத் தலைவரைக்கொலைசெய்தானென்று
ணந்தாள்பிட்டுக்காகமண்சுமந்த வானைமன்னவன்றனதாளா
மைந்தரிலொருவ னடித்ததாத்துணிந்தோர் வண்டமிழ்க்கவிஞனோதினனே, (௬0)

வேறு.

புத்தர்களைவென்றுயர்மெய்ப் புகழ்முனிவர்மகிழாம
லத்தகையராகிகழ்ந்தே யறைந்தகவியாவையுமோர்
புத்தகத்தில்வரைவிப்பான் பொருவறுசெந்தமிழ்நாட்டு
வித்தகனீண்டொருவன்வர வேண்டுமெனவிழைவுற்றார். (௬௧)

காணுதபுத்துருவற் காண்டலுநின்காணியதா
மாணடியாதெனவினவும் வழக்கமொன்றும்வாய்ந்திட்டா
ராணுகிப்பெண்ணுகி யலியாகுமருட்பெருமான்
சேணடர்நனிவியப்பத் திருவுருவங்கொடுசென்றார். (௬௨)

கையதனில்வெள்ளேட்டுக் கனமுமெழுத்தாணியுங்கொண்
டுய்யவந்தவிரத்தன்போன் றொளிரொருவற்காண்டாலு
மையமின்றியிவனந்நாட் டவனேயென்றறிவுற்றும்
பையவினுயவனுவாற் பாண்டிநாடெனல்கேட்டார். (௬௩)

என்பாடலுள்ளனநன் கெழுதவல்லாயோவெனலு
மன்பாரவொருக்காற்கேட் டங்ஙனமேவரைகிற்பேன்
பின்பார்த்துக்களிகூர்வாய் பேசெனக்கைப்பிடித்துற்றே
யின்பாரப்படிப்பாருக் கிளையாராயெழுதினரால். (௬௪)

ஒருக்காற்கேட்டங்ஙனமே யூசிஞற்பொறித்தல்வியந்
திருக்கான்முக்காற்பார்த்து மியாதொன்றும்பிழைகாணுர்
திருக்காலொன்றெடுத்தபிரான் செயலிதெனத்தெளிந்தில்லா
ருருக்கார்வத்தமிழ்க்கவிதை யொருங்குறைத்துமுடித்தாரே. (௬௫)

சொல்லிடலோடெழுதினர்கைச் சுவடியொடுமெறைந்திமைய
வல்லியெதிர்நடமாடு மன்றகத்தில்வைத்திட்டா
ரெல்லிடையித்தகையினர்பா லின்னணஞ்சூதியற்றியவ
ரல்லிளம்பக்குவரை யயர்வித்தல்வியப்பன்றே. (௬௬)

கைத்துரிதங்கண்டுமிவர் கண்ணுதலென்றுணரரா
யத்துவிதசித்தாந்தத் தவருமருண்டனராஞற்
பித்துடையாரனையபிறர் பிரானெதிர்வந்துறறுலுஞ்
சித்துமிகச்செய்தாலுந் திருடனென்கைமுறைதானே. (௬௭)

எழுதியவர்மறைந்ததற்பி னியாக்கையொடுகதிசேரு
முழுவிதிபெற்றமைந்ததவ முனிவர்வியந்தளிகூர்ந்தார்
* தொழுகுலத்தாரவையிடையச் சுவடியைக்கண்டனைவோருங்
குழுமியவிழ்த்தாதியந்தங் குறிக்கொண்டுபோர்த்தனரால். (௬௮)

* தொழுகுலத்தார் - தில்லைமூவாயிரவர்.

வண்டமிழ்ச்சீர்மாணிக்க வாசகர்சொற்படிநீல
கண்டமுளானெட்டெழுத்தென் கைக்குறிப்போர்ந்தநிசயித்து
* விண்டவரைக்கண்டன்பான் மிகவுமுபசரித்தாங்குக்
கொண்டனைந்ததனைக்காட்டிக் கூறுமிதன்பொருளென்றார். (சுகூ)

அன்னவர்சொற்கேட்டவர்தா மளப்பருமார்வத்தினரா
யின்னதுதானிதன்பயனென் றியம்பியசொல்லுடனந்தப்
பொன்னவையினிடைப்புகுந்தார் போனவரைக்காண்கில்லா
ரென்னவிதமுத்தியினு மிதுமேலென்றுணர்ந்தாரே. (எ0)

அத்தகையமுத்திபெறு மருந்தவருமரன்றனது
கைத்தலத்தால்வரைந்தேற்குங் கவிபாடும்புலவர்களு
மித்தரையிலின்றுவரை யிலையினிமேலெப்படியோ
வெத்தகவுஞ்செயவல்லா னிதயமறிந்திடுமன்றே. (எக)

சத்துவசற்குணராகிச் சமரசநிச்சயஞான
தத்துவந்தோய்தருசைவத் தலைவராமவர்பெருமை
சித்துடையபெரியோரிற் சிலர்தாமேயறிவரென்றாற்
பைத்துறுபாம்புறழ்கோரப் பண்பினரோர்தரற்பாற்றே. (எஉ)

சீதளநீர்ச்சடையாடத் திருநடஞ்செய்வானருளால்
வாதவூரடிகள்புகழ் வாரியிற்சற்றுரைத்திட்டே
னேதமில்சீர்த்தில்லைநடத்திறை யருட்சீர்பெற்றுவந்த
மாதவத்துச்சேந்தனார் வண்மையெடுத்திசைப்பேனே. (எ௩)

திருவாதவூரடிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௩௨0.

## ஆறுவது
## சேந்தநாயனார் சருக்கம்.

திருவெண்காடர்தம்மனைக்கணக்கெழுதுமோர் செய்கையிற்சிறந்தன்னார்
மருவுமெய்த்துற வடைந்தநாளந்நகர் மன்னவன்றனைமேவி
யுருகுமன்புறு மனைவியாதியர்ப் பிரிந்துற்றிடுஞ்சேந்தன்றன்
னருமைமைந்தனவ் வடிகடம்மடிமிசை யஞ்சலியுடன்வீழ்ந்தான். (க)

அஞ்சுதன்மையெய் தாதொருமதலைவந் தடிபணிந்திடக்கண்டு
பிஞ்சுவாண்மதிச் சடிலர்தம்மடியவர் பிரியமிக்கருள்கூர்ந்து
நெஞ்சுளார்வமுற் றெடுத்தருகிருத்திவெண் ணீறணிந்தியார்நீநிற்
கெஞ்சுசொன்முறை யுளதெனில்விளம்புதி யெனவினவினரன்றே. (உ)

எந்தைநுங்கணக் கெழுதியசேந்தனு மியானவற்றெரிகில்லே
னிந்தையோரர சன்சிறைச்சாலையி னிகளம்வாய்ந்துளனென்பார்
கந்தைகட்டுமென் னன்னைநெற்குத்தலாற் காலம்யான்கழித்துள்ளேன்
சிந்தையஞ்சலென் றவளெனைத்தேற்றலாற் றிருமுன்வந்தனனென்றான்.

* விண்டவர் - சிவபிரானெழுதம்படி கவிசொல்லிவந்த திருவாதவூரடிகள்.

என்றவாசகங் கேட்டலுமவர்சிறி திருவிழிப்புனல்சிந்திக்
குன்றவார்சிலை யாரொனச்சினங்கொடு குழந்தையினுடனேகி
மன்றன்வாயிலி னின்றுமத்தனைதயி ரொனத்துவக்கியபாட
லொன்றறைந்தனர் சேந்தனுக்கரசனிட் டுளதனைகொறுங்கிற்றே. (ச)

அதுகண்டச்சமிக் கரசன்விட்டனனவ னடிகடம்மடியாய
பதுமமேல்விழுந் திறைஞ்சினனுடனவன் பாலகன்றனையேற்பித்
திதுமுனுள்வினைப் பயனநுபவித்தனை யெனத்தெளித்தினிவேட்கை
யெதுகொண்டாலுநல் குவமெனநீறளித் திட்டனரவன்சொல்வான்.(ரு)

மீதுலோகரும் வியந்தசெல்வத்தினை விட்டுமேதினிமாந்த
ரோதுநிந்தையேற் றியாதுகாரணத்தினு லுலவுகின்றீரோநீர்
தீதிலாவதை யானும்வேட்டனனெனச் செப்பலுமெழுத்தைந்து
மோதுகென்றுரைத் துளமொடுங்கிடத்தகு முபாயமுமுரைத்தானே. ()

வேறு.

சற்குரவன்பகர்கவியாற் றளர்நீங்கியரண்மனையின் றலைவாயிற்க
ணிற்குமவன்றனைத்தொழுது தன்மகவுமுத்திபெறு நெறியும்பெற்ற
பொற்குவடுபுரையுமனச் சேந்தனவன்மனைவியெதிர் போனன்கண்டா
டெற்குடையானூர்புகுந்தார் திரும்பிவரப்பெற்றுரிற் றிருத்தியுற்றாள்.()

கண்டவுடன் பலநாண்முன் பிரிந்துழன்ற கொடுமையெண்ணிக் கலுழவில்லை, தெண்டனிட்டுன் றனையிழந்து பின்காணத்தவமுமுன்செய் திருந்தேனென்றாள், விண்டமொழி வினவியதான் மனமொருகூறுருக லுற்று மெலிவுறுமற், றுண்டதிகத் தவம்புரியச் செல்கின்றேன் றுணையாநின் சுதற்கொளென்றான். (அ)

நின்றெய்வந்தனைநோக்கி நீதவஞ்செய்திடன்முறையே நின்னையன்றி, யென்றெய்வம்பிறிதிலையா லினிப்பிரிந்தாலிறந்தொழிவே னிதுமெய்யென்று, ளின்றென்பின்வருவாயே லேதேனும்பிழைசெயில்விட் டிரிவேனென்று, னன்றென்றுதொடராலுற்று ளொருமூவர்களுந்தில்லை நகரிற்சேர்ந்தார். (கூ)

சென்றவர்தாமிரந்தருந்த நாணமுற்று விறகெடுத்துத் தினமும்விற்றுக், குன்றலில்கேழ் வரகாதி யனவாங்கிப்பொதுத்தலத்திற் கூழே செய்து, மன்றகத்தினடிப்பானைக் கருதிநிவேதனம்புரிந்து மாந்திச்சற்றுங், கன்றலுறு மனத்தினரா யைந்தெழுத்தி னுருவேற்றிக் களித்து வாழ்ந்தார். (க0)

தன்குரவன்சொன்னபடி சேந்தனடந்தானவன்சொற் றவறிடாம, னன்குமனைவியுமகனு நடந்தார் மெய்த்தவம்பெருகி ஞானமீந்த, தென்குறைதீரென்றிரப்பார் தமக்குமருள் சிவபெருமா னிவர்தம்மாட்சி, வன்குணப் பொய்த்தவ ருணர்ந்து நாணமுறச் செயச்சிறிது மனங்கொண் டானே,. (கக)

அந்நாளிற்சோழனொரு நிமித்தத்தானூறுகல வரிசியன்னம்
பைந்நாகப்பணியணிவான் சந்நிதியிற்படைப்பித்தான் பனவர்கூடித்
தந்நாவான்மறைகூறித் தூபமிடத்துவக்குமுனச் சபையோர்கேட்கச்
செந்நாவாற்சேந்தன்கூ ழெதுக்களிக்கின்றதெனுமொழி செப்பினனே.()

அதுவினவிச்சிலநேரம் பொறுத்துநிவேதனம்புரிய லாமென்றாற்றார், மதுகையிடவரைத்தடிந்தா னிகர்சோழன்சேந்தனெங்கு வாழ்கின்றானோ, வெதுவனையன்னவற்காண திடைவேனோகாணும்விதி யில்லேன்றானோ, சதுமுகனந்தகையனையும் படைத்தானோவெனக்கவன்று தளர்ந்தானன்றே. (௧௩)

அப்பூசைமுடித்தமுது முழுமையும்பங்கிட்டதற்பி னரசன்சேந்தனிப்பூவிற்றலமெதனி லிருந்தாலுமவற்றெரிந்தென் னிடஞ்சொல்வார்க்கு, மெய்ப்பூணும்வியன்கலையு நிதிக்குவையு மளிப்பனென்றான் விருப்பாலன்னோன், செப்பூறுதவிர்மாற்ற மக்கணமூரவர்பலருந் தேர்ந்தாரம்மா. (௧௪)

யாவர்களு மூன்றுகட்டு விறகினனென் றாற்றெரிவா ரிப்போதேதார், தேவர்பிரா னெனமேலத் திசைச்சுங்கக் கணக்கினனுந் தெரிவானுளும், காவலனுணையின் வழிமுக் காசவன்பாற் பெற்றெழுதுங் கடமையொன்றான், ✻ மாவருளன்னவற் றொடர்ந்து விரைந்தோடி யறிவனெனமன்பாற்சொன்னான். (௧௫)

எப்பொழுதென் கண்காணச் செய்வாயென் றவனேவின விடலுநாளே, யிப்பொழுதி லெனவிவரத் துடன்மொழிந்தா னதுகுறித்தவ் விறைவந்துற்ற, வப்பொழுதவ் வாச்சரியஞ் சகியாராய்ப் பலர்கூண்டாரானையன்பான், முப்பொழுது முணர்சேந்தன் வழக்கம்போலே வரும்போது முன்னலானான். (௧௬)

எத்தனைநேரஞ் செலுமோ காசுபெற்று நமையனுப்ப விங்கோர்நாளு, மித்தனைபே ரிவணீண்டக் கண்டிலமே மனையவளு மிளந்தைச்சேயு, மத்தனைகூ முருந்தியவ ரெங்ஙனஞ்சோர் வடைவாரோ வந்தோவென்று, நித்தனை நாடியமனத்தோ டம்மூன்று சுமையினையு நிற்கவைத்தான். (௧௭)

அத்தருணத்தக்கணக்க னவற்காட்டலாற்றுணிவுற் றரசனோடி, யுத்தமசற்குருபரனைச் சேடர்தொழல்போற்பணிந்திட் டேய்ந்தேனென்றான், பித்தமிகுந்திட்டதுவோ வெனவாங்குளார்பலரும் பேசலுற்றார், பத்தசிகாமணியான சேந்தன் வெருண்டாய் கொதுங்கிப் பகர்வதானான். ()

அன்னையெனப் பல்லுயிருங் காத்தருளுந் திருமாலங் கிசத்தனநீ, யென்னை வணங்கிடத் தகுமோ யானெனநோ ணின்றனையி னிடைப்பட்

✻ மா - இலக்குமி.

டெய்த்தேன், பின்னையொரு பிழைப்பின்றி விறகெடுத்து விற்குமிடிப் பெருநோயுள்ளே, னுன்னையுல கெழுமன்றே வுசிதமிதன் றெனப்பலவா றுரைத்தானன்றே. (௧௯)

அவனுரை கேட்டச்சோழ னின்மகிமை யம்பலத்தி லாடல்செய் யுஞ், சிவனுரையாற் றெரிந்துள்ளேன் பலர்சாட்சி நின்னுமஞ் சேந்தனன் றோ, வுவகையுறத் தினந்தொறுங்கூ ழவற்குநிவேதிப்பதின்றே வுரை செயென்றான், றவறுரைக்க மாட்டாதா னென்செய்வா னருணடித் தறி போனின்றான். (௨௦)

இன்றுதொட்டெ னரண்மனையி னீங்கள்வசித்திடவேண்டு மின்றே லுங்கட், கென்றுறையு ளமைக்கின்றே னன்றியுநீர் விரும்புவன வெல் லாஞ் செய்வே, னன்றுரைத்தென் பணியினைக்கைக் கொளவேண்டு மென்னுமன்ன னுணமெய்த, வொன்றுமுனதுபகார மெமக்காகாதெனத் துணிவுற் றுரைத்தானன்றே (௨௧)

முன்னுளி லிருடியரு மரசருபகாரமிக முன்னிவாழ்ந்தார், பின்னு ளைத் தவசிகண்மன் னிடஞ் சேவிப்போர்களையும் பேணக்கண்டே, மன் னுனங்ஙனமுரைத்த வாச்சரியமாரறிவா ரரனேதேர்வான், பொன்னுசை யுள்ளமட்டும் புவியிலருட் பேராண்மை பொருந்திடாதே. (௨௨)

சேந்தனுரைத் திடுங்கொடுஞ்சொற் சகியாமற்செம்பியன்றன் சிந் தைநொந்து, போந்தவென்றெண்டத்தனைநீங் கினதாகிலினியரசு புரிய மாட்டே, னுந்தகத்தாலுயிர்விடுவே னென்றிடலுமதைமறுத்து நானுநா னிற், கிந்தசுங்கத்திருவைக்கா சொருமூன்றுநின்கொடையாக் கெனச் சொன்னானே. (௨௩)

அவ்வளவாயினுமிசைந்தா "னெனக்களிகூர்ந்தவ்வணமே யாக்கியப் பா, லெவ்வளவிவ்விறகுவிலை யெனவினவியுரைத்தாங்கே யீந்திட்டடில், செவ்வழற்குன் றெனநடிப்பான் றிருக்கோயின் மடைப்பளியிற் சேர்ப்பி த்தென்று, மிவ்வணஞ்செய்திடிற்றவறேன் மின்னெனவங்கிருப்பவருக் கிசைத்திட்டானே. (௨௪)

ஐதவன்விட்டரசாட்சி" மண்டபம்புக்கிருந்துமுர சறைவார்தம் மான், மெய்தழைக்குந் தவச்சேந்தன் மகிமையூர் முழுதறிய விளம்புவி த்தான், கைதவம்விட்டனைவோரு மவனுவகை குறித்தொழுகும் கட மைதோய்ந்தார், பொய்தவிர்பே றடைந்தோரொப் பதத்துறினுஞ் சுகத் தினொடு புகழ்கொள்வாரே. (௨௫)

அப்படிச்சின்னுள்கழிய லம்பலத்தினடம்புரிவா னருண்மேனீட்டா லெப்பரியதிருவுருவ முழுதினுங்கூழ்மிகைதோய்வுற் றௌிர்ந்ததோர்கள ளிப்பரிசீண்டியல்வதற்குக் காரணமச்சேந்தனென்றே யெண்ணியவ்வூர் மெய்ப்பனவர்ரசனிட மறிவித்தார்பலர்தாமும் வியந்துபார்த்தார். ()

மன்னனிதென் னரசியற்கைக் கடங்கியதன் றெனச்சொன்னான் மறையோர்கூடி, யன்னவனைவரவழைத்தில் வநாசாரநீவிளைக்க லாமோ வென்றூ, றென்னதுநெஞ்சகமறிய விதனிமித்தமியான்முயன்ற தில்லை யென்றூ, னின்னதருட்செயலாகி லினிக்குறிக்கும் விளையாட்டு மியற்று மென்று. (௨௭)

இம்மூர்த்திதனைத்தேரி லலங்கரித்துவைக்கின்றே மீர்ப்பாரின்றி
யெம்மூர்த்தியினுமேலென் றுலகறியத்தானேசூழ்ந் திடச்செய்வாயேன்
மெய்ம்மூர்த்தியாமறுபத் தொருமூவருடனுனையும் விளம்பச்செய்வேம்
பொய்ம்மூர்த்திபோன்றிருக்கிற் புன்மையுறத்தக்கதண்டம் புரிவேமென்றார்.

அதுவினவியம்பலவர் திருவுளப்பாங்கெத்தகைத்தோ வறியேனென்றான்
கதுமெனவாங்கதுசெய்திட்டார் கவித்தமிழாற்பல்லாண்டுகழறலுற்றான்
சதுமுகனேச்சிடமறைக ளாம்பரிகளீர்க்குமத்தேர் தானேபோன்று
பொதுநலந்தோய்புலியூரின் றெருநான்குஞ்சூழ்ந்துநிலை போந்ததம்மா.

அன்றுமுதற்பலருமவன் றனைச்சேந்தநாயனென்றே யறையலுற்றார்
குன்றுதொறுநடமாடுங் குகன்மீதுஞ்சிலகவிகள் கூறியப்பான்
மன்றுடையார்பதம்புகுந்தான் மலைமகடன்பதத்திலவன் மனையாள்சேர்ந்தா
ணன்றுணருமவர்புதல்வன் * ஞாங்கர்புனைவேள்பதத்தி னண்ணினானே.

செந்தமிழ்ப்பே ரிலக்கியமாந் திவாகரஞ்செய் ததுமிவனுச் சிலர் சொல்கின்றூ, ரந்தநூலுரைத்தவன்வே றொருவனெனச் சிற்சிலபே றைகின்றார்க, ளெந்தவிதமானாலும் பெயரொன்றே யெனற்கையமில்லை யில்லை, யிந்தவழக்கினதுண்மை யெழிற்றவள மலர்வாணியியம்புவாளே.

சீரியபட்டினத்தடிக ளுபதேசம் பற்றியுய்ந்த சேந்தநாயன்
பேரியற்கைச்சரிதமொரு வாறுரைத்திட்டேனினி யூர்ப்பெற்றமேய்க்குங்
காரியற்கைப்பொதுவனுடற் புகுந்தவற்றைப் புரந்துமுயர்கருணைநாட்டு
மேரியற்கைத்திருமூலர் சரிதமுணர்ந்தள விலுரைத்திடுவேன்மாதோ.

சேந்தநாயனார்சருக்க முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - ௩௬௨.

---

---

* ஞாங்கர் - வேல்.

ஏழாவது

## திருமூலநாயனார் சருக்கம்.

ஆதியாந்திரு மூலனே யவன்பெரு மரபி
னீதியால்வரு மொருவனே யறிகிலே னிலத்தி
லேதினும்முற் றெல்குறு மெழினலம் படைத்துத்
தீதில்சீர்பெறு சோழநா டதனிடைச் சென்றான். (௧)

சென்றவன்றிருவாவடு துறையினுக்கருகிற்
குன்றலில்லதாம்பசுத்திரண் மேய்க்குமோர்கோன்றன்
பொன்றலெய்தியோர் புதரிடைவீழ்ந்ததாலாக்கள்
கன்றலுற்றவற்சூழ்ந்திரங் கிடுவதைக்கண்டான். (௨)

தன்னுடம்பினையொருவயின் மறைத்ததனிடைப்புக்
கின்னுரைத்தொளியுடனெழுந் தவற்றினையீட்டித்
துன்னுமத்திரள்போம்வழி தொடர்ந்துபோய்நகரி
லுன்னுகன்றினமுறுமனை தொறும்புகவுய்த்து. (௩)

மாறித்தன்னுடல்குறித்தவண் போயினன்வைத்த
தூறிற்காண்கிலனென்செய்வான் மனமிகச்சோர்ந்தா
னூறில்சித்திகளியாவுமெய் தினர்களுமுலகொத்
தீறிலானருட்செயலினை வென்றிடலரிதே. (௪)

அந்தவூரினிற்போயறச் சாலையிலணையு
மைந்தர்தங்களிலொருவனு மெனும்படிவசித்தா
னந்தகோபனல் வினத்தராமவனுடனசையோர்
முந்தவந்தனரூரவர் களும்பலர்மொய்த்தார். (௫)

பெண்டுபிள்ளைகளாதிய சிலரையும்பிறராக்
கண்டுளன்பிலனுச்சில னகக்குறிகாட்டி
யண்டுறேன்மினென் றகற்றினன்பித்தமிஞ்சியதா
விண்டுபோயின ரென்செய்வார்முற்றிலும்வெறுத்தார். (௬)

திருவருட்பெருஞ் சிறப்புடைச்சித்தனுட்புகுந்த
பெருமையாலுடற்றளர்ச்சிபோய்த் தவத்தொளிபிறங்குந்
திருமையுங்குறித்துழைப்பவர் பலருமீண்டிவனே
யருமைமாதவனேயெனத் தொழுதலாயினரே. (௭)

சிகைவெண்கோவண நீறுகல்லாடையாதியவாம்
வகைமுற்றேய்தலி னன்றுதானிழந்தவாளுடலின்
றகைமைவாய்த்தது தவசிகாமணியெனத்தழைக்குந்
திகையிலுள்ளவ ரியாவரும்புகழ்தரத்திகழ்ந்தான். (௮)

விரசைமாநதிக்கப்புறத் * தயமுகன்விழையு
மரசையேமிகர்மாகிழ லொன்றிடையமர்ந்து
பரசைமானுடைபரித்தவன் றிருவடிப்பதுமஞ்
சிரசைக்கண்கனேச்சிந்தையைத் தொடத்தவஞ்செய்தான். (௯)

முந்துநாளிலெண்ணுயிர மாதியமுதுநூ
றந்துளானிவன்றனெனத் தமிழ்வலாருணர
† வந்துகாப்பவர்க்காத்திரு மந்திரமொவ்வொன்
றுந்துசீரினதாநுவன் றனெனுமூலகே. (௧௦)

வருடமொன்றினுக் கொருவிசைமலர்விழிதிறக்கும்
பொருவினிட்டைமூ வாயிரந்தரமவன்புரிந்து
தருவதாகுமத் தொகைக்கவியுளதனிப்பனுவ
லொருவொணுத்துணை யெனப்பெருஞ்சைவர்வைத்துள்ளார். (௧௧)

அந்தநூலிடை யருமறையாகமசாரப்
பந்தமுத்திமாத் திரஞ்சொலவில்லைபல்விதமா
மெந்தவித்தையுஞ் சித்தியும்புத்தியுமியம்பு
மந்தபக்குவத் தினர்க்கதன்மகிமைதோன்றுதே. (௧௨)

கௌவைவாரிதியேழுடுத் தவிர்தருகவின்றே
யிவ்வையத்திடை யெண்ணில்பன்னூலிருந்தாலுங்
கொவ்வைவாய்க்கலை மடந்தையங்கிசமெனக்குலவு
மௌவைபாடலிற் பகர்ந்தவாமவற்றுளஃதொன்றே. (௧௩)

எங்கணுயகனெனப்பல சித்தர்களியம்பச்
செங்கணுயகன்போற்புரந் தவிர்திருமூலற்
கொங்கணுதியகுரவர்தங் குரவர்தாங்கூடித்
தங்கணுதனென்றிறைஞ்சிடல் சத்தியந்தானே. (௧௪)

ஆலமுண்டவன்றனக்கிணை யெனுமகத்தியனைப்
போலமேம்படுபுனிதனு ரெனிற்பலபொருப்பிற்
சாலவுற்றுளசித்தரா தியபெருந்தவத்தோர்
மூலனேயெனப்பகர்தன்முக் காலுமெய்ம்மொழியே. (௧௫)

பரவைசூழ்தருபார்மிசை யருணெறிபற்றிக்
குரவனேதுணையென்னகன் குணர்தருகுழாத்தோர்
மரபிரண்டலாற்பிறிதிலை யவற்றுளோர்வகைபோற்
றரசன்மூலனேயென்னவன் னவர்முழுதறிவார். (௧௬)

நான்வணங்குதறகாதரை யாமெனநவின்றோன்
றன்வகுத்துளபாடலு மரபினைச்சாற்றும்
வான்வழிச்செலன் முதலியபயன்பெறவாஞ்சித்
தான்வரந்தெரிந்தடங்குந ரதனையெள்ளாரே (௧௭)

---

* அயமுகன் - அயக்கிரீவர் - அதாவது விட்டுணுவின் மூர்த்தபேதத் தொன்று.
† வந்து - பிராணவாயு.

அந்தமூலர்முன் றில்லையி லோருடலமைத்தார்
பைந்தண்டாருகாவனத்திலோர் மேனியைப்பதித்தார்
சொந்தவானினமுய்யவொன் றிகந்தனர்நவனு
மிந்தயாக்கையையென்செய்துள் ளார்கொலோவறியேன். (கஅ)

மலையில்வைத்தனரெனச்சிலர் சொல்லினர்வந்த
நிலையிற்சேர்த்தனரென்றனர் சிற்சிலர்நீங்கா
தலைவற்றுற்றதாம்பொதுத்தகைத் தெனச்சிலரறைந்தார்
கலைகற்றுன்றமெய்யருளடைந் தவரையார்கணிப்பார். (கசு)

புதரில்வைத்திழந்திட்டதோர் மேனியும்பொன்னூர்ச்
சதமகன்புரைவார்திரு வேடுகொளுந்தகைத்தே
யதனையம்முனியறிகிலா னென்னநானறையேன்
மதனற்போற்றுநருடலென மாய்வதன்றன்றே. (உ0)

ஈடில்சீர்த்திருமூலர்தஞ் சரித்திரமியாவும்
பாடுமந்திறமெனக்கிலை யிங்ஙனம்பகர்ந்தேன்
பீடிலங்கியகாரைக்கா லம்மையார்பெருஞ்சீர்
நாடியாய்ந்தளவுரைத்திடத் துணிந்தனனனியே. (உக)

திருமூலநாயனார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ஙளஙு.

---

# எட்டாவது
# காரைக்காலம்மையார்சருக்கம்.

சோழநாட்டிற் றுலங்கெழிற்காரைக்கால்
வாழவந்த வணிகர்பல்லோருளோர்
வேழமன்னவன் வேட்டதொர்மெல்லிய
லாழநெஞ்சின ளன்பின்மிக்காளரோ. (க)

கரவில்கற்பொடு காமருங்காமனால்
பரவத்தக்க பருவமுமெய்தியு
மரனடித்தொழும் பாளர்தந்தொண்டுசெய்
விரதமொன்று மிகமுயன்றுற்றனள். (உ)

அன்னள்கேள்வ னவளொடுதானுமே
யின்னல்வேட்டொர் தினத்திருமாங்கனி
தன்னதாள்வசந் தன்னிலனுப்பினன்
பின்னமில்லவள் பேணிவைத்திட்டபின். (ஙு)

அன்னமாதிய வட்டெதிர்நோக்கின
னென்னகாரண மோவவனெய்திலான்
பன்னகாபர ணன்பதம்பற்றுமோர்
நன்னர்யோகிவந் தார்நரைக்கோலமாய். (ச)

வந்தவர்க்கமு தோடொருமாங்கனி
யந்தவேளை யறந்தவருந்திட்டாண்
முந்தவுண்டு முனிவரர்போயபின்
பைந்தகைத்தண் பரிகலமானதை. (௬)

தெருவிலிட்டனள் செட்டிகண்ணுற்றுவந்
தொருவன்வேறுள னோவெனுமையமுற்
றருவருப்புட னன்னமுண்டானது
புருடரிற்பல பேர்கொளும்புன்மையே. (௭)

யாருக்கிட்டனை யென்றவன்கேட்டிலா
னேருமாற்றை யவளுநிகழ்த்திலா
ளாருமோர்கனி யன்றிமற்றொன்றின்போக்
கோருமாறு கொணர்கெனவோதினன். (௮)

அந்தவேளையி லாயினுமம்முனி
வந்தருந்திய வாற்றினைச்சொல்லாஞ்
சிந்தனைக்கலப் பில்லளிற்செப்பிலா
ளிந்தநீர்மைபல் லேந்திழையாரதே. (௯)

அத்தகைக்கனி யாமவ்விரண்டுமுன்
வைத்ததாகுமொர் மட்கலமுன்புபோய்
நித்தன்றன்னை நினைத்துக்கைநீட்டியுள்
ளுய்த்தபோதங் கொருகனியெய்திற்றே. (௧௦)

அதனையக்கண மந்தவணிகனு
மதனலீலை மணாளனுக்கிட்டனள்
புதமுதன்னவஃ துண்கையிற்பூவைபா
லிதன்மெய்சொல்லென் றிதமிகக்கூறினன். (௧௧)

நடந்தவண்ண நவின்றனளின்னுமக்
கடந்தனூடொர் கனிவரச்செய்கென்று
னிடந்தனிற்பெ ணிசைத்தவற்போற்றியாங்
குடன்பெற்றீந்தன ளச்சமிக்கோடினன். (௧௨)

வேறு.

ஓடியற்றையே சிலபொருட்கிழியுட னுததி *நாவாயேறிக்
கேடில்பாண்டிநாட் டிறங்கியாங்கினத்தொரு கிளிமொழிமடவாளைப்
பீடியன்றிட மணந்திருந்தெழின்மிகப் பிறங்கொர்பெண் மகவீன்று
நாடினும்பயந் தருமுதன்மனைவித னற்பெயரிட்டானே. (௧௩)

முந்துசீர்மனை யாம்புனிதவதியம் முறைமுழுமையுங்கேட்டு
கொந்துசிற்சிலர் தம்மொடாங்குற்றது நுவன்றனும்பினளன்னோன்
வந்துபின்மனை யொடுமெகவொடுமேவண் மலரடிபணிந்தேத்தி
யிந்துசேகர னருள்பெறுமுனையினி யான்றொடேனென்றனே. (௧௪)

* நாவாய் - மரக்கலம்.

என்றவாசகங் கேட்டலுநின்பொருட் டிவ்வுடற்கிக்கோலந்
துன்றவைத்திருந் தனனினித்தகாதெனச் சொல்லியன்னவன்காண
வன்றருட்கனி யிரண்டளித்தவர்திரு வருளோநாடினளாங்கே
வன்றகைப்பெரும் பேயுருவளித்தனர் மனிதரஞ்சினர்மன்னோ. (கச)

அக்கணத்தினி லருந்தமிழ்ப்புலமையு மருள்வழியளித்திட்டார்
மிக்கசீர்ப்பதி கங்களந்தாதிகள் வேண்டியபடிபாடித்
தக்ககாரைக்காற் பேயெனுமுத்திரை தானும்வைத்தனள்யார்க்கு
முக்கணுதனைக் கருதிலெய்தரும்பயன் மூவுலகினுமின்றே. (கரு)

பேயுருப்பெற லான்முதுகாட்டையே பெரிதுபோற்றினளம்மை
யாயுமுத்தமிழ்ப் புலவருமுலகரு மச்சமிக்குறலுன்னி
யேயுமித்தொழில் செயவலார்மூவர்பி னிலங்குவரிம்மட்டு
நீயுரைத்தது போதுமென்றரன்பத நீழலில்வைத்தானே. (கசா)

முந்திவந்தவ ரரன்கொலோவலதவர் முண்டகப்பதம்பேணி
யுந்தியும்பகற் பொழுதினும்வழிபடு மடியரோவறிகில்லே
னிந்திராதியர் தமக்குமெய்தருங்கனி யிரண்டவள்பெறுமாட்சி
தந்திசியம்வன் சரபநேர்புலமைதோய் தவத்தரோர்தரற்பாற்றே. (கஎ)

அம்மையென்றர னழைக்குமான் படைந்ததோ ரரிவைதன்சரிதத்திற்
செம்மையாவிறு வியவளவினிற்சொலித் தீர்த்தன னினித்தீரா
மெய்ம்மைஞானமெய் தியபுகழ்ச்சேரமான் வியனரு ட்சரிதத்தி
னிம்மையோர்பலர் சொல்லிடக்கேட்டமட் டிசைத்திட நினைத்தேனே.

காரைக்காலம்மையார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௩௧௧.

---

ஒன்பதாவது

## சேரமான்பெருமாணாயனார் சருக்கம்.

---

ஆதியும்பகவனு மளித்தமக்களி
னீதிவேந்தாகியே நிலவுஞ்சேரமான்
பாதிவான்மதிபுனை பவளவார்சடைச்
சோதிதன்னடியவர் தொழும்பிற்சோர்விலான். (க)

உவரின்மட்சுமையெடுத் துருமத்தேகலிற்
றவளநீற்றணிபெறு தனிவண்ணான்றனைச்
சிவனடியாரெனத் தெண்டனிட்டன
னிவனைப்பார்முழு தியம்பலுண்டரோ. (உ)

ஆவினன்குடிவள ரயிற்கைவானவன்
கோவிலுமதில்களுங் கோபுரங்களு
* மூவிதத்தியற்றுபு முற்றக்கண்டனன்
றுயில்சீர்க்கேரளத் தலைமையெய்தலால். (௩)

அன்னவன்சைவனென் றறைகுவார்பலர்
பன்னகாதிபப்பெரும் பாயலிற்றுயின்
றின்னறீர்ந்துலகமுற் றேத்தக்காப்பவன்
றன்னடியவனெனச் சாற்றுவார்சிலர். (௪)

நிசபரமாமொரு நிமலற்போற்றியெட்
பிசகுமுறுநெறி பேணிநான்முகக்
குசவனுர்சிருட்டியிற் குலவும்பல்லுயிர்
வசனமுந்தெரிதரு மாட்சிமேவினன். (௫)

மதுரையிற்பரமர்தம் மாட்டியாழ்பயில்
சதுரனும்பாணனுட் சலனந்தீர்தரக்
கதுமெனவரைதரு கவிதையொன்றுபெற்
றதுமுதலவன்கவி யனைத்துமோவினன். (௬)

அண்டர்நாயகன்றிரு வருளினாற்றிருத்
தொண்டர்தந்தொகைத்துதி சொன்னசுந்தரன்
றண்டமிழ்ச்சுவைதெரி தகவிற்றானுமோர்
வண்டமிழ்க்கவிஞனும் வாழ்வும்வாய்ந்தனன் (௭)

பரிப்பெருக்கினைப்புழைப் பாழியங்கைமால்
கரிக்குலத்தினைப்பல கவின்செய்தேர்களை
யரித்திரளினையகா லாளையீண்டியான்
விரிப்பினுங்கேட்பவர் மிகவுள்ளார்களே. (௮)

இராகவன்றருமனே ரியற்கையோனெனத்
தராதலம்போற்றிடத் தனிச்செங்கோலுகைத்
தராவணிவான்றிரு வருளைநாடிவார்
பராவுதற்கா† முலாப் பனுவல்பாடினன். (௯)

பாடியதமிழ்ப்பிர பந்தந்தன்னையிந்
நாடினிதுணர்ந்திட நவின்றிடாதுவிண்
ணூடிடபஞ்செல வுகைக்கின்றோன்மலை
மோடியலவையிடை மொழிதன்முன்னினன். (௧௦)

---

* மூவிதம் - சாமம், பேதம், தானம். ஆகிய மூன்று. நான்காவதாகிய தண்டம் வேண்டலில்லையாயிற் றென்றபடி.

† உலா - திருக்கைலாய ஞானவுலா.

முன்னியவாறருண் முடிக்கினன்றெனும்
வன்னிணைப்பேமிக மருவப்பெற்றனன்
பன்னிருசமயமும் பரவத்தக்கதாத்
தென்னிலத்தரசுசெய் சேரமானரோ. (கக)

இரவலர்க்கன்னையா யெதிர்த்துப்போர்பொருங்
கரவினர்க்கியமனுய்க் காணுங்காட்சியான்
றரமறிந்துரைசெயிற் சரதசைவசற்
குரவரிலொருவனுக் குலவத்தக்கவன். (கஉ)

விற்கொடிச்சேரலன் விரும்புநாட்டிடைப்
பொற்கொடியனையவர் போதவின்புறன்
முற்கொடிவ்வுலகினர் முழுதுந்தேர்தர
மற்கொடியானுவலினு மலியும்பாடலே. (கங)

தூயமால்களிற்றில்வன் ஞெண்டன்போம்பொழு
தேயவோரிவுளியிலிவனுஞ் சேர்ந்துடன்
போயரன்கயிலையிற் புதியபாடல்சொற்
றுயபின்சாத்தனு ரகிலத்துய்த்தனர். (கச)

அரியபொன்வண்ணத்தந் தாதியாதியாம்
பிரியநூலெத்தனை பேசினுன்கொலோ
தெரியகிற்கிலமவன் சிந்தைதன்னிடை
கரியதள்போர்த்துறுங் கடவுளோர்வனே. (கரு)

இவ்வுலகத்தினி லெடுத்தயாக்கையு
மவ்வுலகத்தின ரறிவுந்தோய்ந்தருட்
செவ்வுருவத்தரன் சிலம்பில்வாழ்கதி
யொவ்வுதலின்றியே யுயர்ச்சியுற்றதே. (கசு)

கொற்றவர்துணிந்துவெங் கோனடாத்திடு
மற்றமெய்திடுந்தொறு மறிஞராமவர்
நற்றகைச்சேரனை நாடிநீயிவ
னுற்றறம்புரத்தியென் றுரைதலுண்டரோ. (கஎ)

திருமலிகேரளத் தரசர்செல்லுநா
ளருகிருந்துரிமையேற் பவர்கடம்மிடம்
பொருவில்சீர்க்கயிலையிற் போனசேரமான்
வரும்வரையெனச்சொலும் வழக்கம்வாய்ந்ததே. (கஅ)

நல்வரத்தினர்புகழ் ஞானச்சேரமான்
செல்வதுகயிலையோ திருவைகுந்தமோ
வொல்வதெங்கடவுளூர்க் கென்றென்றுள்ளவாம்
பல்வகைச்சமயரும் பகர்கின்றார்களே. (கக)

சைவமும்வயிணவந் தானுமற்றுள
பொய்வழிமெய்வழிச் சமயப்பொங்கமுந்
தெய்வமொன்றினைத் தொழுமென்னுந்தெள்ளிமை
கைவலிச்சேரர்கோன் கதியுணர்த்துமே. (உ0)

சேரர்கோன்சரித்திரந் தெரிந்தமட்டினிற்
பாரகத்தொளிதரப் பகர்ந்திட்டேமினித்
தாரணிபோற்றிய தமிழ்நக்கீரர்தஞ்
சீரருட்பெருந்திறஞ் சிறிதுசெப்புவாம். (உக)

சேரமான்பெருமாணாயனார்சருக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - சகஉ.

## பத்தாவது.

## நக்கீரதேவர்சருக்கம்.

முத்தியடைந்திட்டானென் றுலகினிற்பற்பலர்தாமு மொழியவுண்மைப்
பத்திசெய்தோனொருவனலைப் பரவைசார்நெய்தலிலோர் பரவனில்லிற்
புத்தியுடைச்சேயானன் பாலப்பனெனநாமம் புனையப்பெற்றான்
சத்திநிபாதம்பதிந்த நிமித்தத்தாற்குலமுறையிற் றடைப்பட்டிலான்.

சங்கங்கையாலறுத்துச் சீர்படுத்திவிற்றுண்பான் றன்சேயாயு
மங்கந்தத்தொழின்முயலச் சம்மதியாதருந்தமிழ்தேர்ந் தறிஞனாகித்
துங்கஞ்சேர்துறவறமும் பூண்டுமெதுராபுரியிற் சொக்கரன்பாற்
சிங்கங்களெனக்குலவு கடைச்சங்கப்புலவர்நடுச் சேர்ந்தானன்றே. (உ)

தந்தைசெயுந் தொழிற்றுணையுந் தான்முயல்கைக் காந்துணையுஞ் சங்கமான, விந்தைபெறுவான் பெயர்முற் பொருள்பெறவே கீரனென விளம்பினார்பின், சிந்தைவலியுந்தெளிவுந் திகழ்தலினக் கீரனென்றுஞ் செப்பலுற்றார், நந்தையணி செவிப்பெருமான் றிருவுளப்பாங்கறிந் தொருவர் நவிலொண்ணாதே. (௩)

வல்லாண்மைபெறுங்கீர னொருபொருளையொப்புவனேல் வாழுஞ்சங்கத்
தெல்லாருமொப்பியது தானெனுமோர்பெரும்புகழு மிசையப்பெற்றான்
சொல்லாமலபிநயத்தாற் கலகந்தீர்த்திடும்வணிகச் சுதனுமன்னோற்
பொல்லானென்றிகழாமற் களிகூரத்தகுநலமே புரிந்தான்மன்னோ. (௪)

அவ்வணிகமகன்வரலா மரன்றருமிக்கருளியபாட் டதனையின்னோ
னிவ்வகிலமறியவிகழ்ந் தெதிரவன்றோற்றியுஞ்சிறிது மிசையாவாற்றா
லெவ்வமிகத்தளர்ந்ததுவுங் குறுமுனியாலிலக்கணந்தேர்ந் திலங்கும்வீறு
நௌவலந்திவதன்முகம்போன்றவிர்*மதுரைப்புராணநன்குநவிலுமாதோ.

---

* மதுரைப்புராணம் - திருவிளையாடற்புராணம்.

சிவன்கொடுத்தசாபத்தாற் கடைச்சங்கமிடைக்காட்டுச் சித்தனானு
மவந்தவிர்மாதவப்பயனே வடிவாகிவிளையாடு மௌவையாலு
நவம்பொலிதெய்வப்புலமை பெற்றதிருவள்ளுவப்பேர் நாயனாலு
நிவந்தபுகழிழந்தழிந்த பின்னந்தப்புலவரெலா நிலத்திற்சூழ்ந்தார். (௬)

ஆயவரிற்றலையாய நக்கீரன்றானுமவ்வா றலையலுற்றான்
றாயகயிலையுங்காளத் தியுங்கலந்தோர்துதிப்பனுவல் சொல்லிப்பின்னு
மேயதமிழ்ப்பிரபந்தம் பலபாடிச்சிவதலந்தோ றினிதுசூழ்ந்தான்
வேயனையதோளிபங்க னடியவர்க்கெங்கிருந்தாலு மேன்மைதானே. ()

அந்நாளிற்றமிழறியும் பெருமாளென்றொருமாதிவ் வகிலத்துண்டாய்ச்
செந்நாவலோர்பலரு நடுநடுங்கவிறுமாப்புச் செலுத்திவாழ்ந்தாள்
கைந்நாகம்புரைசங்கப் புலவர்முதலோரவளைக் கணிக்கவில்லை
மெய்ந்நாணந்தவிர்ந்தாள்போ னொருதினஞ்சின்மகளிரொடு வீதிவந்தாள். (௮)

அங்குவிறகுத்தலைய னொருவனதைச்சுவர்சார்த்தி யயர்ச்சிமீறிக்
கங்குல்பகன்மறந்துவா யியரிப்பக்கலைசோரக் கண்ணிற்பீளை
பொங்குறத்தூங்குபுவிழிக்கும் போதவடன்புறங்காலாற் புழுதிமேலிட்
டிங்குகிடந்திடுமிதுமோர் புருடசென்மமோவெனமிக்கிகழ்ந்துபோனாள்.

அக்கணமேயவனந்த விறகுமறந்தவனாகி யகிலத்தூடு
புக்கவடன்னிலைமைமுழு மையும்விசாரித்தறிந்து புலமைச்சீரின்
மிக்கவனக்கீரனெனும் விதமுமவ்வாறுணர்ந்தவன்பாற் மேவிக்கீழ்வீழ்ந்
திக்கடையேன்றனைப்புரப்ப துன்கடன்கைவிடினுயிர்விட் டிடுவேனென்றான். (௧0)

என்றபோதருட்கீர னேன்றநலஞ்செய்வனெழுந் திருவென்றோதிக்
குன்றவார்சிலையானை நினைந்துவெண்ணீ றளித்தவன்வாய்க் குறையெல்லாங்கேட்
டின்றனதாசைமுடி வுறச்செய்வேனெனத்தேற்றி யுலகிலியார்க்கு
நன்றதாம்விதியிவற்கு வந்ததுபோல்வரலரிதிந் நாளென்றெண்ணி. ()

வத்திராபரணமுத லியகோலநன்கமையும் வகைசெய்தப்பாற்
சத்தியோர்பாகமுளா னைந்தெழுத்துஞ்செவியினிடைச் சாற்றிக்கல்வி
யுத்தியாதியதோன்ற வுண்டபரிகலசேட முதவியாண்டு
பத்தியாலவன்செய்வழி பாடுமொருசிற்சிலநாள் பரிந்துகொண்டான். ()

ஒருதினத்திற்கீரனவன் றன்னுடனம்மகண்மனையி லுற்றானன்னா,
ளருமையுடனடிபணிந்து தேவரீர்வருநிமித்த மறிகின்றில்லேன், மருவ
வெனைவிரும்புமிளம் புலவரநேகரைச்சயித்து வயங்காநின்றேன், பொரு
விலுமைக்கண்டதனை யினிநீர்சொல்லிடுநெறியிற்புகுவேனென்றாள். ()

அன்னவர்தம்பெருமையறி யாதவர்தம்மொடும்வாதிட் டனளென்
றேசில், சின்னமதியோர்புகல்வார் தவவேடமிழந்துதனைச் சேர்வாரல்ல,
ரென்னவறிவாளதன்றி யாலவாய்ச்சிவன்சங்கத் தியம்போர்பாட்டான்,
முன்னட்டகதைமுழுதும் பலராலுங்கேட்டுமுளாண் மூடியன்றே. ()

அவனுரைத்தபாடல்களுஞ் சிற்சிலவிப்பூதலத்தி லவிர்வதுண்டுண்
டெவளவுபாவலர்களையோ வெதிர்த்தடக்கியவமதித்த வியற்பாவல்லி
தவமொடுகல்வியும்பொலியுங் கீரனைக்காண்டலும்வணங்கித் தாழ்ந்தமேன்மை
சிவனுணர்வான்முழுப்புலமை யினருணர்வார்சிறியவர்க டோரான்றே.

அந்தமட்டினக்கீர னளிகூர்ந்தக்கொடியிடைபா லம்மேயுன்றன்
செந்தகைமேனிப்பருவந் தனைவீணிற்கழியேனிற் செயிப்பார்வேறின்
றிந்தமகனென்சீட னிவன்றனையேற்றறந்தவறு திருந்துவாழ்தி
சிந்தனையிலையமுற்று லேதேனுமவனைவினுய்த் தெளிதியென்றான். (௧௬)

விண்டமொழிகுறித்தவனை நோக்கியெழிலிளமைகுன்று மேனிச்
சீரு, மொண்டகையவுடைநடையா தியுமியல்பாத்தோன்றுதலு முணர்ச்சியோர்வான், வெண்டளையில் வியப்பியாதென் றனளசைநான்கினைச் சிலகான் மேலோர்மூன்றாக், கொண்டறைதலெனச்சொன்னு னுடனிணங்கிச்சிறிதுமுகங் கோட்டிநின்றாள். (௧௭)

இளைத்தழகுகுன்றியவ ருணவுடையாற்சீர்பெறற்கு மியாதுந்தோா, துளைத்தமனச் சிறியவர்தாம் பெரியவைச்சேர்ந்திடின்முழுது முணர்ந்தோங் கற்குந், திளைத்தபுகழ்நக்கீரன் றன்சீடனொருசான்றாய்த் திகழ்வுற்றந்த, வளைத்தடங்கைத் தமிழறியும் பெருமாளாம் வனிதையினை மணந்தானன்றே. (௧௮)

அவ்விருவர்களுமுதனு ளமளிமிசையுறும்போதே யவனப்பெண்பா, லிவ்விதநீ செயத்தெருவிற் கிடந்தவிறகுத் தலைய னியானேயென்றான், மைவிழிப்பாவையயனையா ளருட்செயலை நினைத்துமனம் வருந்திநாணி, யெவ்விதக்குற் றஞ்செயினும் பொறுப்பதினி நின்கடனென்றிறைஞ்சித் தாழ்ந்தாள். (௧௯)

அத்தகைய பேருணர்ச்சி யறிந்தனங்க வேளனையா னணங்கன்னுள்பாற், சித்தம்வருந்தேலுனது சீறடிமென்றுகளெனது சிரத்தில்வாய்ந்திட், டெத்தனையோ விதத்துயரும் விலக்கியிகசாதனமுற் றீந்தியான்செய், மெய்த்தவப்பேறேநீயென் றுரைத்தவணைஞ்சுருகவின்பம் விளைத்திட்டானே. (௨௦)

அன்னவர்க்காசீர்வதித்திட் டவிர்புகழ்நக்கீரமுனி யகன்றுபோனான்
பின்னவர்தாங்கல்வியின்பங் கலவியின்பத்துடனயின்றார் பிச்சையேற்கு
நன்னலச்சீரௌவையொரு நாளவர்தம்மனையில்வந்தா ணன்குபோற்றிப்
பொன்னடியின்முடிபுனைந்திட் டுபசரித்தாரவளவர்பாற் புகல்வதானுள்.

ஓரரசன் மகன்கல்வி சிறிதுமிலான் யௌவனத்தோ டுடைபூண் வாய்ந்து, மாரனெனத் திகழ்கின்றான் கற்கினன்றி யரசுதவ மாட்டே னென்னுந், தீரகுணத் தந்தைசொல்லாற் றேசாந்தரம்போனான் செலுமோரூர்க்கோன், சீருமை மகள்குளிக்கு நீரோடு மோடையொன்று திகழக்கண்டான். (௨௨)

அப்புனலாற் புலர்வாசர் தம்முடற் கூட்டிடுதலும் பார்த் தாலோ 'சித்திட், டிப்புனலா ரோமுழுகி விட்டதென்ருேர்ந் ததைத்தாண்டி யேகலுற்ருன், மைப்புயல்போலுங் குழலவ் வனிதைதன்மா ளிகையிருந் தவ் வாற்றை நோக்கி, யிப்புருடன் றனேயின்றே யினிதணைய வேண்டு மெனு மெண்ணங் கொண்டு. (உ௩)

தோழிகையி லொருசீட்டுத் துணிந்தெழுதிக் கொடுத்துவிட்டா டொடர்ந்திங் திட்டாள்,பாழிமதக் களிறனையா னதைப்படிக்குந் திறமில தோர் பள்ளிக் கூடத், தாழிதயத் தொடுகெருங்குட் ட்முந்தோயு மொரு வனிட மளித்தா னன்னோன், வீழிதயத் தவள்விருப்போ டன்றிரவில் வருந்தலமும் விளங்கத் தேர்ந்து. (உ௪)

குற்றமெது செய்தனையோ விக்கணமே மற்ருேரூர் குறுகில் வாழ் வாய், நிற்றடிதற் குறித்துளதென் றலுமணநீர் தாண்டியதை நினைத்துப் போனு, னற்றமது தொட்டுமெற்ருேன் முழுகிமணத் திரவியத்தோ டா டைபூண்டு, கற்றனிமண் டபமாமத் தலத்திருளி லவள்வரவு கருதியுற் ருன். (உ௫)

அவ்வணமக் கொடியாங்குற் றனங்கவேள் சமர்க்காற்று தணைந்த பின்ன, ரெவ்வகையா லோவிவனப் புருடனல னெனத்தேறி யார்நீயென் ருள்,கைவ்வயிற்சீட் டெய்தன்முத னடந்தவித மத்தனையுங் கழறினுனப், "பெய்வளையக் கணமுயிர்விட் டத்தலத்தி லொருகொடும்பெண் பேயா னின்ருள். (உ௬)

அங்குவரு வார்பலரை யெற்றெற் றென்றப்பேய்தா னழித்த தியா ன் போய்த், தங்குமிரா வினிற்சாமந் தோறுமென்பால் வந்தொருநாற் றமிழ்ப்பாக் கேட்டுப், பொங்குதுயர் தீர்ந்துய்ந்த தவ்வுயிரும் வெருண் டோடிப் போனுன் ருனு, மிங்குறுநீ ரிருவருமாப் பிறந்துள்ளீர் பழ வினைதா னேய்ந்த தென்ருள். (உ௭)

அவ்வுரைகேட் டௌவையினைப் பணிந்துமிக வுபசரித்தா ரருள் செய்தன்னு, ளிவ்வுலகிற்பினும் விளையாட் டியற்றிடவேண்டியதலந்தோ றேகலுற்ருள், வெளவுமிரு வருமுதலிற் கொளும்விகற்ப சேடமும் போய் மகிழ்ந்து வாழ்ந்தார், நவ்வுடையான் மனையருள்சேர் நக்கீரன்றல ங்கடொறு நண்ணிச் சூழ்ந்தான். (உ௮)

வேறு.

சிவதலந்தொறுஞ் சென்றுதினந்தினந்
தவமுடிக்குந் தகவுடைக்கீரனுள்
ளுவகையாற்பல கனுவிலொளிர்ந்தனன்
குவடுதோறுங் குலாவுங்குமரனே. (உ௯)

வந்துவந்து வயங்கியற்பாக்கொடென்
னந்துசீர்த்தி யுரையெனக்கேட்டலு
மிந்துசேகர னைப்புகழியானுனை
மைந்துளாயென வாழ்த்தல்செய்யேனென்றான். (௩0)

அன்னகாலத் தரன்றிருப்பூசையிற்
பின்னநெஞ்சமுற் றோரையெல்லாம்பிடித்
தின்னலின்றிவைத் தாயிரராயபின்
றின்னல்லதொர் பூதந்திரிந்ததே. (௩௧)

அதனைச்சிற்சில ராணெனச்சொல்லுவார்
மதனைவென்றவர் வாமருணைக்கணோர்
புதனில்வாழ்ந்த புலவன்பெண்பேயென்று
மிதமின்மாமுக மேய்ந்ததென்றுஞ்சொனான். (௩௨)

பருவதம்புரை பாரவுடம்பினஃ
தொருவனத்தொகைக் கின்மையிலுள்ளுடைந்
திருநிலத்தினி லீசனைப்பூசிப்பார்
மருவுதானந் தொறுஞ்சென்றுமாழ்கிற்றே. (௩௩)

பூவில்வேதன் புகனெறியாறுந்தன்
னுவியென்னு மணிப்பரங்குன்றுசார்
வாவியொன்றிடை வண்டமிழ்க்கீரன்றான்
மேவியத்தனை வேட்டருச்சித்தனன். (௩௪)

அங்குதிர்ந்த வரசிலையொன்றுநீர்ப்
பங்குபாதி கரையினிற்பாதியா
யுங்குமீனுட னேர்ந்தியுமாகியே
யிங்குமங்கு மிழுக்கைகண்டானரோ. (௩௫)

மரத்தின்றன்மையென் பார்சிலர்வைகொள்வேற்
காத்தன்செய்த கபடமென்பார்சில
ருரத்தினீர்மைக் குவமையென்பாருமுண்
டரத்தநாட்டத் தலகைக்கதார்வமே. (௩௬)

கண்டுசிந்தை கலங்கலும்பேயவற்
கொண்டுசென்றக் குகையுளடைத்ததான்
மண்டுவார்பலர் தாமும்வருந்திநீ
தண்டடைச்சமன் றானெனத்திட்டினர். (௩௭)

இவன்வராவிடி லியாமிறவேமென
வவரெலோரு மழுங்கலறிந்தவன்
சிவனைநாடினன் சிந்தையிற்றோன்றியென்
றவமகன்றுகன் றன்றுதிசாற்றென்றான். (௩௮)

ஆயிரந்தவ ராகமுண்ணுங்கொடும்
பேயிங்கெய்துங் கொலெனனும்பெரும்பய
மேயியற்கவி யொன்றுவிண்போலவே
சேயின்வண்மை திகழ்தரச்செப்பினன். (௫௯)

மறியறுத்து வனசரமாந்தர்தாம்
வெறியயர்ந்திட லும்பல்விணைதமுஞ்
செறியும்பாடலிற் சிந்தைமகிழ்ந்தனன்
குறியுரைக்குங் குறக்கொடிகொண்கனே. (௬௦)

வேலையேவியவ் வெற்பிடித்தங்குளா
ரோலையாயிர மும்புரந்துனவா
வாலைநேரும்வாய்ப் பேயையடர்த்திட்டந்
நூலை யாரு நுவலச்செய்தானரோ. (௬௧)

வேள்வியின்கொலை தன்னையுமிக்கிகழ்
வாள்விளங்கிசை வண்ணப்பெருக்குமாத்
தாள்விடைக்குருதிப் புனற்சாற்றுமக்
காள்வியன்கவிக் கொல்கல்கண்டானரோ. (௬௨)

வலிதினேரெழின் மங்கையர்த்தாழ்த்திமால்
சொலினுஞ்சீறிடுந் தூர்த்தமின்னூர்கள்பால்
மலியுமன்புசெய் வார்களைப்போல்பவன்
குலிசர்போற்றுங் குமாரக்கடவுளே. (௬௩)

வீரவேற்கை விசாகன்விழைந்தபின் '
கீரனன்று கிளத்திய * பாடலைப்
பாரகத்திற் பலபலர்போற்றியே
சீரனந்தம் பெறுவதுதிண்ணமே. (௬௪)

ஒருவன்கீர னுரைத்தசொற்பாடலா
லிருநிலத்தி லெதோபயனெய்தினே
னுருவம்வெந்தவெண் ணீறூர்மயானத்தி
லருளின்வாச மணைந்துகிடந்ததே. (௬௫)

அங்குபேய்துரத் தப்பபொராடவன்
கங்குலூடு கலங்கியச்சாம்பர்மேற்
றங்கும்போதிலப் பேயதன்றன்மைசொற்
றிங்குவாசற் றெனக்கறுவிற்றரோ. (௬௬)

பேயும்பித்தரு மொன்றெனும்பெற்றியோர்ந்
தேயுமப்பொடி தன்னுடலெங்கணுந்
தோயுமாறணிந் தள்ளித்துரத்தினன்
வாயுவேகத்திலோடி மறைந்ததே. (௬௭)

* பாடல் - திருமுருகாற்றுப்படை.

இனையகாதைக ளெண்ணிலவாய்ந்ததா
மனையபாடலறைந்த நக்கீரன்றன்
வினையினல் வருமெய்க்குடினீங்கியே
முனைவனூர்ப்பத முத்திபெற்றனரோ. (சரு)

கீரன்கீர்த்திப் பெருக்கினிற்கேட்டமட்
டரவண்டமிழா விசைத்தேனினி
யாரருட்கொள்கல் லாடத்திருப்பெயர்த்
தீரன்மாட்சியிற் செப்புவன்சற்றரோ. (சசு)

நக்கீரதேவர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - சசுக.

## பதினொன்றாவது
## கல்லாடனார் சருக்கம்.

செல்வச்செருக்காற்கனகநகர்த் தேவேந்திரன்சீரழிந்ததெனக்
கல்விப்பெருக்கினிறுமாப்பாற் கடைச்சங்கத்தோர்கனங்குலைவான்
பல்வற்பருமைப்புலவர்பலர் பாவைப்பழித்தார்பரவெளியி
லொல்வித்தகனுந்திருவாத வூரன்கவிக்குமூறுரைத்தார். (க)

ஆறுபுனைந்தசடைப்பெருமா னருமைக்கரத்தால்வரைந்தபெரும்
பேறுமதியாராயவன்றான் பேசுங்கோவைப்பிரபந்தத்
தூறுபடுகின்றன்வேயென் றொருசின்னூலின்வழிமயங்கி
நூறுகவிகட்களைந்திட்டார் நுவலாணவப்பேய்வலிகொடிதே. (உ)

அவருளொருவன்றனுகி யமர்வுற்றிருந்தவொருபுலவ
னிவர்சொல்பிழைமுற்றறவொருவி யிவற்றைத்தாபித்திடுவலெனச்
சிவனைவெகுவாவுபாசித்துத் திகழாசிரியப்பெரும்பாவால்
விவரந்தெரியும்படியந்த வியனூர்துறைநூற்றையும்விளக்கி. (ங)

அந்நூற்றுணைக்கொண்டவரெதிர்நீ ரருள்சேர்வாதவூரடிக
டந்நூற்கூறுபகர்ந்ததுநுந் தவறேயாகுஞ்சரதமென
விந்நூல்விளக்குமதற்கிவ்வூ ரிலிங்கப்பெருமான்சாட்சியென்றன்
செந்நூற்புலவரனைவருமத் திருச்சந்நிதியிற்சென்றடைந்தார். (ச)

மன்னனமைச்சனுதியரும் வந்தங்கிருந்தார்வண்புலவ
னன்னசுவடிதனையவிழ்த்திட் டதனிலுள்ளபாட்டோவ்வொன்றுஞ்
சொன்னபொழுதிலவ்விலிங்கஞ் சோம்பலின்றித்தலையசைத்த
தின்னவியன்கண்டவர்பலரு மிறுமாப்பொழிந்தாங்கிதஞ்சொன்னார். (ரு)

மாமேருவையேநிகர்த்தபெரு மாட்சியடைந்தோர்தமைவெறுத்துப்
பூமேற்சிறியோரிகழ்வாரேற் பொருவிலருண்மற்றொருவரைவிட்
டாமேதகைகாட்டிடல்விளங்கிற் றரனுருவப்பாலவர்தலையைத்
தாமேயசைத்தாரொருநூறு தர்மென்றொருபாச்சமைந்ததுவே. (சு)

முன்னமவனுக்கியைந்தபெயர் முழுதுமறைந்துகல்லாட
னென்னப்புலவோர்களுமுலகு மியம்பும்புகழ்வாய்த்திடப்பெற்று
னன்னபெயரேயவனூற்கு மமைந்ததவன்றன்சரிதமிகப்
புன்னவிருப்புற்றுளனடந்த படிசொல்விடக்கேட்டிலன்மாதோ. (எ)

சங்கப்புலவரெனவாழ்ந்தோர் தசையென்புதிரமாதியவாற்
புங்கப்பஞ்சில்பாட்டுரைத்தார் பழுதில்கல்லாடத்திருப்பேர்ச்
சிங்கந்தசையுண்பவர்தவம்போற் றேய்ந்ததிடைசேயிழைக்கென்ன
வங்கப்பனுவலிடையுரைத்தா னறிஞர்தாந்தேர்ந்தறிவாரே. (அ)

மொழியுங்கவியொவ்வொன்றினுக்கு மூவாப்பரமன்முடியசைத்துக்
கழியின்புறுசீரியற்றமிழாற் கல்லாடஞ்சொல்கவின்புலவ
னழியுஞ்சடமும்பிறந்துழலு மான்மாவுந்தோய்ந்தவனென்னுர்
பழியும்பவமுமாணவமும் பறியுந்தவஞ்செய்பான்மையரே. (௯)

கல்லாடத்தின்பொருள்பலவுங் கருதித்தெளியுங்கருத்தினர்பான்
மல்லாடுதல்கூடாதெனவே வாரியுடைப்பார்வகுத்துரைக்குஞ்
சொல்லாடுதலேதொழிலாகிச் சுழல்புன்கவிஞர்சுவையறியார்
நல்லாடகத்தின்மாற்றுணரு நாட்டநிகர்ஞானமதறிதே. (௧0)

புன்னுமருமைத்தமிழ்ப்புலமைப் பயன்றேர்புலவர்பலருமுள
முன்னுஞ்சுவைசால்கல்லாட முரைத்தோன்றிருக்கண்ணப்பரிசை
துன்னுமறமாதியபனுவல் சொற்றுளென்பாரவைமுழுது
மென்னுள்விளக்கக்கலைமகளு மிறவாத்தவருமிசைந்திலரே. (௧௧)

கங்கையணிவானடியர்புகழ் கணியாதிகழ்வார்தமையொறுக்குஞ்
சங்கையறுசீர்க்கல்லாடன் றனதுபுலமைத்தகவுரைத்தேன்
மங்கைமயூலாதியமூன்று வல்லேடணையுமறத்துறந்து
செங்கையினிற்பேய்க்கரும்பேந்துந் திருவெண்காடர்செயலுரைப்பாம்.

கல்லாடனார்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௪௭௩.

## பன்னிரண்டாவது
## திருவெண்காடர் சருக்கம்.

இந்திரனேமுத லெண்டிசையாள்பவ ரெத்தனையோபலபேர்
வந்திகமீது பிறந்துதவஞ்செய்து மாசறும்வீடுற்று
ரந்திநிறச்சிவ னுக்குறவோனெனு மப்புகழொடுவேடபான்
முந்தியிருந்த * வொருத்தனவாழ்வற முத்தியின்விழைவானுன். (௧)

சிவனுலகிற்சில காலம்வதிந்து தியானசெபஞ்செயலாற்
புவனியினிற்றிகழ் † பொன்னிமகோததி புக்கபுகார்நகரிற்
குவையுநிதிசேர்தரு மொருவணிகன்றரு குழவியுருக்கொண்டு
நவமுறுபெட்பினமி யாவுமிணங்க நயந்துவளர்ந்தனனே. (௨)

* திருத்தன் - குபேரன். † பொன்னி - காவிரியாறு.

மரபினர்செய்திடு முறைவழியாய்மிகு வாணிபமேமுயலுற்
றாதனமாதிய வாறுவலும்பொரு ளளவறுதொகைபெற்றான்
பரவையின்மீது கலங்கள்விடுப்பவர் பற்பலருந்தமதோர்
புரவலனென்று மதிப்பவிளங்குபு பொற்பொடுவாழ்ந்தனனே. (ரு)

மருதனெனும்பெயர் வாய்ந்தனனென்றுசின் மானிடருரைசெய்வா
ரொருசிலர்வெண்கா டப்பெயருற்றன னென்னவுரைத்திடுவார்
தருமுயர்தாதைய வன்றனைவனம்வரு தற்குமுன்விண்புக்கா
னருள்வடிவாகிய வன்னையொருத்திய ருந்துணையாவுற்றாள். (சு)

உந்தியசெல்வ முளாரையயற்குல முற்றவருந்தமினத்
தந்தினராக வுரைப்பனொனுஞ்சொ லதற்கொருசான்றாகப்
பிந்தியொர்சிற்சிலர் தொழில்வழிவணிகர் பிரானெனவுஞ்சொற்றார்
செந்திருவனையதொர் மகளைமணந்து திருந்தியுமெய்தினனே. (ஏ)

பாணர்குலத்தொர் வயோதிகனூசி பரித்திடுகைத்தொழிலோன்
மாணவிர்ஞான மடைந்துமிலத்தொரு மனையொடுவாழ்தகவோ
ஞணமிகுத்தவ னண்ணனெனும்படி யநுதினமும்பழகுற்
றாணளவிற்கொள லுங்கடனேயென வொத்துநடந்தனனே. (அ)

அன்னவனுலர னுருபிராகிக முக்கரமைந்தும்விஞ
யுன்னருநல்லுணர் வெய்தியுநெஞ்சினு லோபமொழிக்கிலனாய்ப்
பொன்னதையேபொரு ளென்றுமதித்திவை போதுமெனக்களியா
தின்னமும்வேண்டு மெனப்பலவாமுய லின்னனுகர்ந்தனனே. (எ)

நத்தியசெல்வம் வளர்ந்திடல்கண்டு நராதிபரும்புகழ்சீர்
துய்த்திகமீது மகிழ்ந்தனன்வாழ்வு துலக்கும்விளக்கினைநேர்
புத்திரனில்குறை யாலொருவேளை புழுங்கலுமுண்டவனோர்
பத்தினிமட்டு நினைந்துபல்போது பதைத்துவருந்துவளே. (அ)

அத்தகவங்கு நிகழ்ந்திடுநாளையி லணிகிளரிடைமருதூர்
நித்தனருச்சனை செய்பவருட்டு நியமமுளார் *ஞொருவன்
சித்தமதூடுமெணஞ் செயுமாசைசெறிந்த வெபானிலனுகி
யித்தளர்வோவுதி யென்றுதினந்தன திறையெதிர்சொலிவந்தான். (கூ)

ஒருதினமன்னவன் மனையின்முகப்பினி லுற்றுவருந்துகையி
னிருமலனொருசிறு சேயுருவாகிமு னின்றமுதிடுகெனலு
மருமலியுங்குழல் வனிதையிலாவெறுமனையிதுமணமுயலப்
பொருளிலைமருத னிடந்தினமீது புகன்றுளனென்றனனே. (க0)

இச்சைமிகுந்தவர் கன்மரமாதியிடத்தினு மோதுவரா
லச்சைவனேரில் விளங்கியபாலனொ டதுசொலல்வியனன்றே
பிச்சையெடுப்பவர் கட்கரசாகிய பிள்ளையவன்றன்பாற்
செச்சைமலர்க்கிணை யதரமலர்ந்தொரு திறமுறைசெயுமினிதே. (கக)

---

* ஒருவன் - சிவசருமர்.

வேறு.

என்னைநீமகவுவேண்டு மிச்சையுள்ளவர்க்குவிற்றப்
பொன்னையேற்றினத்திலோர்நற் பூவையைமணத்தியென்ற
துன்னைநான்விற்றுற்பெற்று றுறுகணெய்தாரோவென்று
னன்னையைத்தந்தைதன்னை யறிகிலேனெனச்சொல்விற்றே. (கஉ)

ஆத்திரக்காரன்புத்தி யற்பமென்பதற்கோர்சான்றுச்
சாத்திரமனந்தத்துள்ள தத்துவமுறைப்பக்கேட்டு
நேத்திரமூன்றுவாய்ந்த நிமலனென்றுணராதேற்கும்
பாத்திரமறிந்தால்விற்றுப் பைம்பொனியான்பெறுவேனென்றான். (கங)

பூம்புகார்நகரிலிந்நாள் பொருட்பொலிவினர்மிக்குள்ளா
ராம்புகுந்தறிதியென்ற தக்கணமமுதுநெய்யும்
தீம்புளிக்கறியுஞ்சில்சிற் றுண்டியுந்திரிந்துவாங்கி
யோம்புதற்பொருட்டானல்கி யுவகைவாரிதியிலாழ்ந்தான். (கச)

அன்றிராவிடியுமுன்ன மதனுடனவ்வூர்விட்டுச்
சென்றிரண்டொருநாடங்கிச் செப்புபட்டினத்துட்புக்குப்
பொன்றிரண்மிகையுமின்சொற் புதல்வரின்மையுஞ்சேர்ந்துள்ள
தென்றியம்பினராற்றேறி யிசையுமம்மனையிற்புக்கான். (கரு)

வடதிசையரசுநீங்கி * மழைவிரும்புநரிற்றோன்றிக்
கடன்மிசைப்பொருட்காச்செல்வார் கைத்தொழிற்கொண்டுமேற்றோ
நுடல்பெறுவிதியோடுற்ற வொருவனப்பனவற்பார்த்தென்
னிடமிநாண்மகவோடுற்ற தென்னெனவினிதுகேட்டான். (கசு)

இம்மகன்றன்னைவிற்பா னீண்டுவந்துற்றேனுன்றன்
சம்மதமிருக்கில்வேண்டுந் தனந்தருகெனலுமன்னோ
னம்மகன்வயதைந்தாண்டி னளவினுங்குறைதலோர்ந்து
மெம்மனைக்குரியவேலை யாதுநீசெய்வாயென்றான். (கஎ)

அவன்வினுவிடலுமச்சே யக்கணமகிலத்துள்ளா
ரெவர்செயுந்தொழிலுஞ்செய்த லெனக்குமிக்கெளிதேயென்றுஞ்
சிவனெனவிருவர்தாமுந் தேர்ந்திலர்செட்டிற்சேர்த்தோ
னுவகையான்மணியொன்றீந்திஃ தறம்விலையுரையென்றானே. (கஅ)

அம்மணிநலமுந்தீது மமைதருவிலையுங்கூறி
யெம்மணித்திறமுந்தேறு மியல்புதோற்றிடவும்பேசிற்
றிம்மணிவிச்சேயார்க்கு மெய்தரிதென்றுளெண்ணிக்
கைம்மணிவாங்கிக்கொண்டக் களிப்பினைக்காட்டானுகி. (ககூ)

மனைவிதன்வயிற்கொண்டுய்த்து மாழைவேட்டளவிலீந்தித்
தனையனைக்கோடனிற்குஞ் சம்மதந்தானேவென்று
னினையசொல்லினவும்போதே யீன்றநாள்பிரிந்துகண்ட
வனையிவடானேயென்ன வார்வமுற்றணைத்துமோந்தாள். (உ0)

* மழைவிரும்புநர் - வேளாளர்.

ஆங்கதுகண்டும்பூரித் தந்தணன்விரும்புமாறே
தாங்கருஞ்சுமையதாகத் தனங்கொடுத்தனுப்பினால்
பூங்கணைமாரற்செற்ற புனிதனைமகவாப்பெற்றா
ரோங்கனேர்தவத்தின்மாட்சி யுணர்ந்துநானுரைப்பதன்றே. (௨௧)

அப்பிராமணன்றனின்ன லாழிமுற்றறவேநீங்கித்
திப்பியவுவகையாய திரையறுகடலின்மூழ்கிக்
கைப்பிடித்தவளோடீன்ற கான்முளைத்திரளுமாகி
யிப்பிறப்பினிதென்றெண்ணி யிடைமருதூரில்வாழ்ந்தான். (௨௨)

எவ்வுயிரையுமுன்னீன்ற விறைவனைமகவேயென்ன
வெளவுமவ்விருவர்தாமு மலடரியாமெனமுன்வாடு
மவ்வுளத்துயர்தீர்ந்தச்சே யாடலுந்திறலுநோக்கி
யொவ்வுவார்நமக்கின்றேயென் றுயர்புகார்நகரில்வாழ்ந்தார். (௨௩)

யாவையும்வல்லேனியானென் றியம்புமவ்வெழிற்சேயீன்ற
பாவைபாற்பிறந்தபாலர் பயில்வனமுழுதுஞ்செய்தான்
றேவைமுற்றடிமைசெய்வார் திரள்பெறவழங்குந்தெய்வக்
கோவையுமவ்வாறாட்டுங் கொடுவினையிருந்ததம்மா. (௨௪)

பன்னிரண்டாண்டின்மேலாம் பருவம்வந்துறலுந்தாதை
தன்னிடத்துரைபெற்றான்ற சலதிமேற்கலத்திற்போய்ப்போய்ப்
பொன்னினையீட்டியீட்டிப் பொருப்பெனக்குவித்தன்னானை
மன்னியகதியிற்சேர்க்கு மாறுமாறாடல்செய்வான். (௨௫)

ஒருதுறைமுகத்திற்றான்கொண் டுற்றகைப்பொருளுமாங்குப்
பெருகியுற்றனவும்போக்கிப் பிறர்கடன்வெகுவாக்கொண்டு
வெருளுநெஞ்சகத்தனேபோல் வேட்முங்காட்டிவந்தா
னருகுறுமகன்மேற்றாதை யழற்பிழம்பெனக்கோபித்து. (௨௬)

முன்னளவிறந்தபைம்பொன் முறைமுறைக்கொணர்தல்சற்று
முன்னலனாகித்தன்வீட் டுள்ளதோரறையுளுய்த்துக்
* கன்னலைந்தாறேழ்மட்டுங் காப்பொடுபூட்டுமிட்டா
னன்னபாங்கம்மைகேட்டங் கியாவருமறியாதேகி. (௨௭)

துயரமிக்கெய்திப்பூட்டைத் தொடுதலுந்திறந்ததாங்கு
நயனுறுபுதல்வற்காணா ணரைவிடைப்பரிமேலீசன்
புயலுறழுமையோர்பாகம் பொலிதரப்புயங்கணுன்கும்
வியன்மறிமழுவோடியாவும் விளங்கல்கண்டுவகைபூத்தே. (௨௮)

அக்கணங்கணவற்கூவி யாங்குவந்தனளன்னேனு
முக்கணற்கண்டான் காணுமுன்மறைந்ததுபோற்சென்றா
னெக்கணத்தினர்க்குந்தஞ்ச மெனவுளவிறைவற்கண்டுந்
தெக்கணம்புகாதுவீடு சேர்கைசிந்தித்திலானே. (௨௯)

---

* கன்னல் - நாழிகை.

அரன்மகவாகிநல்கு மார்வமுற்றிழந்தவம்மை
யிரவொடுபகலுமெண்ணி யெண்ணிமிக்கேங்கியேங்கிக்
கரவினெஞ்சகத்தினின்னற் கடலிடைப்படிந்தாளாகித்
திரமுறுகயிலைவெற்பிற் செவ்வையிற்சேர்ந்திட்டாளே. (௩0)

அத்தகைமனைவிதன்னை யருந்திறற்சேயைநீத்த
சித்தநோய்மலிந்துஞ்செம்பொற் றிரண்மயக்கொழியவில்லை
யித்தகையினற்பெற்றாளு மிவன்றன்முற்பிறந்துள்ளாளு
முத்தமபலன்பெற்றா வுள்ளுவப்புற்றான்றே. (௩௧)

அந்தமட்டினிலானாலு மரும்பொருள்வளர்க்குமாசைச்
சிந்தனைநீங்கிடாமற் றிரைகடற்கலமேற்சென்று
மைந்தனிற்றானும்போன வயினொருதியமுமின்றி
நொந்திநட்டமெய்தி நுடங்குபுமீண்டானன்றே. (௩௨)

அவனவூர்வயினில்லாநா ளருந்துணைப்பாணபத்தன்
சிவபதமடைதல்வேட்டான் றெரிந்தவன்மனைவிசெம்பொ
னெவளவோகடனீந்துள்ளாற் கென்சொலிப்போதியென்றாள்
கவலைநீயுறுதல்வேண்டா மெனுமொழிகழறித்தேற்றி. (௩௩)

பட்டினைப்பரப்பித்தன்கைப் பலபல்காதற்றவூசி
கொட்டியீங்கிவையும்போங்காற் கூடவாராதென்றோர்சீட்
டிட்டிறுக்குபுதைத்தன்னா ளிடங்கொடுத்திதனையீந்த
மட்டினின்றுயர்போமென்று மலர்க்கணோக்கழும்வைத்தப்பால். (௩௪)

அன்னவனகண்டமான வதனுடனதுவாய்ப்போனான்
மன்னவன்கோடிசெம்பொன் வைத்துளார்மனையின்மீதோர்
பொன்னணிக்கலசம்வைக்கும் பொருட்டொருத்தரவுசெய்தா
னின்னநாளையில்வெண்காட னிலங்குதன்மனைவாயேய்ந்தான். (௩௫)

முன்னைநாண்மகவாய்வந்த முதல்வனையடைத்தவாறு
தன்னையுமடைத்துவைக்கத் தகுந்தகுமெனநொந்துற்றா
னன்னையாதியராற்றேறி யகன்றபினூர்விசேட
மென்னையோவெனவினாவி யியன்றவாறிரண்டுமோர்ந்தான். (௩௬)

மற்றைநாளரையன்றன்பால் வயங்குமாமணிக்கூட்டத்தி
லொற்றையைக்கொடுபோய்க்காட்டி யுளம்பிரமிக்கச்செய்திட்
டிற்றையென்பொருளின்கோடி யித்தனையெனநான்றேறேன்
சொற்றையேலவ்வாறில்லிற் சூட்டுவேன்சிகரமென்றான். (௩௭)

அம்மொழிவினவிமன்ன னவமதிப்படைந்துநாணி
வெம்மொழிக்குறிப்புத்தோன்ற விளம்புதும்போதியென்றா
னிம்மொழிப்பயன்யாதென்றென் றெண்ணிவெண்காடனேகிச்
செம்மொழிப்பாணனான தேசிகன்மனையாட்கண்டு. (௩௮)

அன்னனென்சொல்லிப்போந்தா ரறைமினென்றிடலுமந்த
வெண்ணரைக்குழலாள்பெற்ற வியன்கிழியினையீந்திட்டாள்
கண்ணதாற்பார்த்துக்கையா லவிழ்த்ததுட்கவின்சீட்டோர்ந்தான்
மண்ணகத்தாசைநெஞ்ச மறந்துமேல்வழிநோக்கிற்றே. (௬௯)

ஈசனைவிடைமேற்கண்டு மெய்திடாஞானமங்கா
ளாசகல்குரவனுட்ட மமைந்ததோர்கிழிநல்கிற்றாற்
பாசநோய்தவிர்த்துமுத்திப் பயன்பெறமுயல்வார்மட்டிற்
றேசவிர்தெய்வந்தன்னிற் றேசிகன்சிறந்தோன்றானே (௭௦)

வேறு.

செம்புபொன்னுரு வாதலின்மயலறத் தெளிந்தசிந்தையனுகிப்
பம்புதன்மனைப் பொருளெலாமுலகில்வாழ் பலருமெய்திடச்சிந்திக்
* கம்புவார்செவிக் கணிந்தவனருள்வழிக் கதிபெறுந்துணிவெய்தி
நம்புமைந்தெழுத் தேதுணையெனக்கொடு நடுத்தெருவினிற்சென்றார்.

பித்தமிஞ்சிய தெனப்பலரிகழ்ந்தனர் பிறப்பறுத்திடுஞானஞ்
சித்தமூடுதித் திட்டதென்றன்பொடு சிற்சிலர்தொழுதிட்டா
ரத்தமேகல மெனச்சிலமனையிலேற் றமுதயின்றளிகூர்ந்து
சுத்தமாகில மேயணையெனக்கொடு துறவிகட்கரசானார். (௭௨)

அந்தவைபவம் வினவியசோழனங் கவரெதிர்போய்நின்றே
னிந்தவம்புசெய் தனையிதாலென்பய னெய்தினையெனக்கேட்ப
முந்தநீயிருந் திடினின்முனியானிற்கு முறைபிறழ்ந்திடக்கண்டேன்
பிந்தயாதுநல் கிடுங்கொலோபிறைச்சடைப் பிஞ்ஞகனெனச்சொற்றார்.

அதுவினவலு மரசனவ்வயின்விடுத் தவர்மனையிடமேகிக
கதுவுபொன்மணி யாடகமாதியாக் கழறுவமுழுதும்போய்ப்
பொதுமையார்தரு சத்திரம்போனிகழ் புதுமைகண்டுளநொந்து
விதுவிளம்பிறை யனையதாய்நெஞ்சினுள் வெதும்பிவாய்விடக்கேட்டு. ()

அவனுளார்தமக் காமளவினிற்பொரு ளட்க்கியவிதந்தேறித்
தவலரும்புகழ்ச் சேந்தனுங்கணக்கனைத் த[illegible]க்கொடுவரச்செய்தீண்
டெவளவாடக மாதியவிருந்தன வியம்புகென்றுறுத்தன்னோன்
விவரமோர்கில னென்றலுஞ்சிறைப்பட விரைந்துவல்விலங்கிட்டான்.()

அரசனவ்வள வினிலதைமறந்துதன் னரண்மனையிடைவாழ்ந்தான்
பரவுசீருடைப் பட்டினத்தடிகள்பஞ் சாக்கரசெபந்தானே
யிரவினும்பக லினும்புரிந்தருள்சிறி திதயசாட்சியதாப்பெற்
றாகபூடண மின்றியசிவனென வுருத்திகழ்தரச்சூழ்ந்தார். (௭௬)

அடிகண்மாட்சியித் தகையினதாகுமென் றறிகிலாரனைவோரும்
படியிலியாவரு மதிக்கவாழ்ந்திருந்தநீ பலர்மனைதொறுமேற்றுண்
டிடியையேர்வசை கேட்டிவணலைவதென் னெனவினவிடுந்தோறுங்,
குடியிருந்தவீட் டினிற்கொள்ளிவைப்பது குறித்துளேனென்றாரே. ()

* கம்பு - சங்கு.

சாதிமானம்விட் டிரந்துணுங்கொடிதவர் தமக்கைதான்சகியாளாய்க்
காதியின்புறல் விழைந்தடையிடைவிடங் கலந்தழைத்துபசார
மோதியிந்தனள் வாங்கினரொடித்தன ருண்ணுமுன்னதன்றீமை
யாதிரையக னருளுணர்த்தலிற்றெரிந் தக்கணமவள்பார்க்க. (சஅ)

தன்னைத்தன்வினை சுற்றிடும்பிறவினை தனதுகால்களைச்சுற்று
மென்னைக்கொல்லநீ யிட்டவோட்டப்பம்வீட் டினைச்சுடுமெனப்போட்
ரன்னைக்கன்றிட மளித்தவர்நகைப்பிலொன் ணூர்புரமெரிந்தாங்கே [டா
மின்னைப்போலிடை யவண்மனைபற்பலர் வியப்பவெந்ததுமன்னே. ()

அதுமுதற்றிரு வருட்செயலவரிடத் தமைந்தமைபலரோர்ந்தார்
மதுரவண்டமிழ்ப் பாடலும்பலபல வகைபடத்தினஞ்சொன்னார்
முதுமையார்தரு தாயிறந்தாரவர் முறைப்படிசுடுகோட்டிற்
கதுமென்றிட்டுமீண் டமைதெரிந்தழலுடற் கதுவுமுன்னணைந்தாரே. ()

அங்குசென்றழன் மூட்டியமூட்டம தனைப்பிரித்ததியாசை
தங்குமன்னைதன் னுடம்பினையெடுத்துளிற் றூபமிக்கழுதப்பாற்
பொங்குதீஞ்சுவைக் கவிகளுஞ்சிற்சில புகன்றுதீப்பகையென்ன
வெங்குளாருநன் கறிதரும்வாழையா மிந்தனமிசைவைத்து. (ருக)

முன்னையிட்டதீ முப்புரத்தெனுங்கவி மொழிந்துசொற்றீமூட்டி
யன்னைவெந்தபின் னறவினிற்கரைத்துமா டாடுமேய்ப்பவராகித்
தன்னைச்சூழ்ந்துநிற் பவர்களைநோக்கிநீர் சலிப்பின்றிச்சிலநேர
மென்னைப்போன்றுசெய் வீரெனிற்கூவியிங் கீகுவேனெனச்சொல்லி. ()

நின்றுமார்பினி லடிக்கடியடித்துவாய் நிறைநிறைதாயாரே
யென்றுசொல்லிடக் குதித்துவீழ்ந்தலறின ரேனையர்களுஞ்செய்தார்
துன்றுமீண்ணெரு முட்டையாதியவற்றைச் சுண்டலாதியவாக்கி
நன்றுநன்றெனுஞ் சுவையவாத்திறும்படி நல்கினரன்னூர்க்கே. (ருஉ)

அந்தநாண்முத லெவரையாரிழப்பினு மங்ஙனஞ்செயும்பான்மை
செந்தமிழ்க்கலை பயில்பவர்வழக்கமாத் திகழ்ந்ததுசிலநாட்போ
யிந்தமூர்த்திதான் சேந்தனுக்கரசனிட் டுளதனையிறப்பாடிச்
சொந்தமாமுப தேசமுஞ்செய்தருட் சுகமுறப்புரிந்தாரே. (ருச)

அதன்பினன்னவ னடந்தவாற்றினையிவ ணறைவதுவிரிவாகு
மதன்றனைப்பொடித் தாரருள்பெற்றவர் மன்னன்மேற்சினவாதே
யிதந்தரும்பெருங் கருணையாற்சென்றன ரொட்டுணைச்சினஞ்செய்தாற்
சுதந்தரத்தனி யாண்மையுமகுடமுந் தூலமும்பாழாமே. (ருரு)

பேறுபெற்றமட் டினிற்களித்தளப்பரும் பெருமைகொண்டாடாராய்
வேறுவேறுள சிவதலந்தொறுந்தினம் வியன்றமிழ்த்துதிபாடி
யீறுமாதியு மில்லதாங்கதிதர லெதுகொலோவெனநொந்தர
* ராறுசூடியோர் குரவனுப்பேய்க்கரும் பதனையங்கையினல்கி. (ருசு)

* ஆறுசூடி - கங்காநதியைச்சடையிற்றரித்த சிவபிரான்.

இதுதித்தித்திடுந் தலமெதோவதுவுனக் கிறப்பொடுபிறப்பில்லாப்
புதுமையார்கதி நல்குமென்றுரைத்துடன் பொருக்கெனமறைவுற்று
னதுசற்றேனும்வா டாதுபூமிசைநின்றுங் கவிர்ந்துநீடிடக்கண்டும்
பதுமனின்னமும் படைக்குமோவெனும்பெரும் பயங்கொடுதவித்தாரே.

அற்பநெஞ்சுடைத் தவசிகள்பேறுசற் றடையுமுன்னிறுமாந்து
தற்பரத்துவம் பெற்றதாநினைத்தெணில் சடமெடுத்துழல்வார்கள்
சிற்பரத்துடன் கலக்கவேபிறந்துள சீரியதவத்தோர்தா
முற்பரன்பல்காற் றிகழ்தரப்பெறினுநன் முயச்சியிற்றளராரே. (௫௮)

ஆதலாலவ ரொத்தலத்தினுங்கரும் பதன்சுவைத்துணைக்கொண்டே
யீதறிந்துகொள் வோமெனுந்துணிவுறு தேன்றமட்டுபாசித்துச்
சீதநாண்மலர்க் கொன்றையொப்பாந்துதிச் செழுந்தமிழ்க்கவிபாடி
யாதரத்தொடு பணிந்தெழுந்ததற்பினே யறிந்துநீங்குவதானார். (௫௬)

தில்லையாதிய தலங்களொவ்வொன்றினுஞ் சிற்சினாள்கழித்தப்பால்
வல்லைநேர்முலைப் பரவைகோன்வேட்டுள வாறெலாநனிகேட்ட
சொல்லைமாலிகை யாமெனப்பதங்களிற் றுதைந்தவர்வளர்நாகை
யெல்லைபுக்கிரந் தயிலுணவோர்தின மெய்திடாமையினொந்தே. (௬௦)

பசிக்குதையகோ நாயடியேனது பாழ்வயிற்றினைப்பற்றி
யிசிக்குதையகா ரோணரேயென்றோர்பாட் டிசைத்தொருவயிற்றுஞ்சு
நிசிக்கணாலயத் துள்ளபொற்பாத்திர நிவேதனத்தினைக்கொண்டாங்
கசிக்கணம்பிகை யருத்திடத்துய்த்தன ராங் * கதுற்றதுமாதோ. (௬௧)

விடியற்போதினி லாலயத்தினரது வெளிப்படல்புகன்றிட்டார்
கடியசேவகர் பாத்திரத்துடனவர்க் கண்டுமன்னெதிருய்த்தார்
நெடியமாலனை யானவர்தமைக்கொடு நிலைக்கழுவிடச்சொன்னான்
கொடியநீர்க்கொலை யாளர்தாமவ்வயிற் கொண்டுசென்றனரம்மா. (௬௨)

எதிரினிற்கழுக் காண்டலுமென்செயலி யாதுமில்லென்றேயோ
ரதிநயக்கவி தெய்வமேயெனவிளித் தறைந்தனரப்போதே
சதிசெய்வார்நடுங் கிடவருட்கனலதைத் தகித்ததுதரையாள்வோன்
மதியுணர்ந்திடப் பரைசெயலுணர்த்தினள் வணங்கிவாழ்த்தினனன்றே.

அன்றவூர்விடுத் தனந்தவூர்வழிநடந் தணிமலிமதுரைக்கட்
சென்றவண்சில நாள்வசித்தாரொரு சேயிழைதிருப்போல்வாள்
குன்றவில்லிதன் னடியரென்றுணர்ந்தவர் குறுகிடுந்தொறுமன்பா
னன்றவாமுண வேமிகச்சொரிந்தன ணசையொடுண்டனரன்றே. (௬௪)

ஒருதினத்தின்முன் னிரவினிற்பசியின்மை யொத்தபொய்ம்மந்தத்தோ
டிருளுங்கூடலா லிரந்திடச்சென்றில ரிருந்தனர்திருக்கோயி
லருகிலுள்ளமண் டபத்தினில்யாமமே லரும்பசிவரநொந்து
கருகிடுங்குடர் வாதனைமிகுதியாற் கனற்புழுவெனத்துள்ளி. (௬௫)

---

* அது - பொற்பாத்திரம்.

அங்கொர்காட்டினி லருந்துதற்கியாதுமற் றதிவெயிற்பொடிச்சூட்டா
லெங்கொழிந்தன ஞெசிவன்செத்தன னெனமிகச்சொலிப்போங்காற்
றங்கொரில்லமும் பந்தருமின்மொழித் தம்பதியொடுகண்டா
ரிங்கொர்நாளிரு மெனவவரன்புட னினியவூணிடவுண்டார். (அச)

அன்னம்பாற்குழம் பாதியவேண்டுமெட் டருந்தலுமதிசோகந்
துன்னலுற்றது மலயவெற்புயிர்த்தகாற் றுணைக்கொடுதுயில்கூர்ந்தே
யின்னல்வெய்யிலுந் துயிலுநீங்கவினெழுந் திருந்ததம்பதியோடு
கன்னரில்லமும் பந்தருங்காண்கிலர் நக்கனுட்டெனத்தேர்ந்தார். (அரு)

அன்புளார்தம தகத்தினிற்கட்டுணு மான்றிருவருடன்றுற்
றுன்புமின்பமா மெனற்கிதோர்சான்றெனத் துணிபவர்சிலர்தாமே
பின்புமன்னவர்க் கானிகழ்ந்தனவெலாம் பேசுமாறறிகில்லேன்
வன்புமாலயன் செயநடுங்கின்றதா மலையருகணைந்தாரே. (அசு)

அம்மலைப்பெருங் கோயிலிற்பணிசெயு மரிவையர்களிற்சேர்த்துச்
செம்மலர்த்திரு வனையளாமொருத்திமேற் சிவன்செயலான்மோகித்
திம்மயற்பிணி தீர்ந்துயவேண்டுமென் றியற்கவிமிகப்பாடி
மைம்மதப்பயல் வரிச்சிலைக்கிளைத்துமா மரங்கொள்கச்சியிலேகி. (அஎ)

அங்குவாழ்சிவ னையுமிகத்துதிசெய்திட் டதனிலுந்தீராமற்
பொங்குசீர்த்திரு வருணையின்மாறியும் போயவடனைக்கண்டு
நங்குபேசுவார்க் கொல்கிடாதீர்த்தவ ணடுங்கலில்விடுத்திட்டு
மங்குறுவருள் வளத்ததாஞ்சுக்கிலம் வழிந்ததைக்கரத்தேந்தி. (அஅ)

அரசினிற்பழுத் துதிர்ந்ததோரிலையில்வைத் தகமெலிவுறும்வேளை
கரவிறுய்மகட் கொண்டுவந்தவளொடு கான்மலர்மிசைவீழ்ந்து
விரகமுள்ளவா றுள்கவென்றிரந்தனள் விரும்பல்யானலனென்றோர்
சரதவாசகப் பாடல்சொற்றதனையே தன்கரங்கொடுசுட்டி. (அகூ)

இனிவிரும்பிடே னெனுங்குறிப்புணர்த்தலு மேந்திழைமகள்வாயிற்
கனியுமன்புட னுணும்படியருத்தினள் கண்டவர்சிவன்றன்னை
நனிநினைந்திதோர் நற்சிசுவாம்படி நல்கெனவிரந்தப்பாற்
றனிநடந்துகா ளத்தியாதியபல தலங்களிற்சரித்தாரே. (கூ0)

எத்தகைப்பெரு வல்லவமுடையவ ரியாவரேயானாலு
மத்தனாரரு ளாட்டியவண்ணமே யாடுவரெனுமுண்மைக்
கித்தனிச்சரித் திரமுதற்சாட்சிக ளின்னமெத்தனையோவாற்
பத்தர்சொற்படி தெய்வமேதுணையெனப் பற்றலிற்பழுதின்றே. (கூக)

வேறு.

நற்றிருநீற் றணிசால நான்றொளிர்கோவணஞ்சாத்திப்
பற்றியபேய்க் கரும்போடு பட்டினத்துப் பிள்ளையெனச்
சொற்றிடும்பேர் கொண்டிலவுந் துதித்தமிழ்வா ரிதியனையா
ரொற்றிநகர்த் தலத்தினிற்போ யுமைகணவற் பணிந்தப்பால். (கூஉ)

ஏன்றமட்டிற் றுதிபாடி யெத்தலத்தும் பார்த்தாற்போ
லான்றபுகழ்க் கரும்புருசி யதுபார்த்தா ரம்பகமோர்
மூன்றமைந்தான் றிருவருளான் முன்னிருந்த கைப்பொழிந்து
வான்றலத்துள் ளாரமுத மானுமினிப் பாகியதே. (௯௩)

உடலுருகத் தித்திக்கு மோங்குபுக ழொற்றிநகர்க்
கடலருகே நிற்கின்ற கரும்பென்றோர் கவிபாடிப்
படர்தெருவிற் றிரிகின்றார் பதங்களையு மவைதம்மைத்
தொடவணைந்தாங் குதிர்கின்ற துகளினையுந் துதித்தாரே. (௯௪)

நாடோர் களிற்சிலர்பா னன்மொழியும் பலர்தம்பாற்
கோடுமொற் றமும்பேசுங் குணத்தினைவிட் டொழியாரா
யீடுசா லவ்வூரி வினையில்களிப் பொடுவைகி
மாடுமேய்த் திடுஞ்சிறிய மக்களுட னுறவாடி. (௯௫)

கடற்கரையின் மணற்றோண்டிக் கண்ணுதலோ னருள்வடிவா
முடற்புதைக்கும் விளையாட லொவ்வொருக்காற் செய்தோர்நாண்
மிடற்றளவிற் புதைத்ததனை வேறொருவர் பாராமற்
றிடத்தமட்சால் கொடுமூடிச் சென்றுபின்னுள் வரச்சொன்னார். (௯௬)

அவ்வாறே யவர்செய்திட் டானினத்தி னுடனூர்புக்
கிவ்வாறு செய்துவந்தோ மெனப்பலருக் கிசைத்திடலாற்
செவ்வாக விடிந்திடலுந் திரண்டுசென்று பார்த்திடவே
தொவ்வாத சிவலிங்கத் திருவாகி யொளிர்ந்ததுவே. (௯௭)

அன்றமுத லுலகத்தி லரபத்தி குருபத்தி
துன்றுமவ ரனைவோருந் தொழுதுபயஞ் மிகப்பெற்று
ரின்றுகட லூடுமறைந் திருக்கின்ற தென்பார்மற்
றொன்றுபிர திட்டையுஞ்செய் துள்ளாரன் புடையோரே. (௯௮)

பட்டினத்துப் பிள்ளையெனப் பாருலகம் பகர்நாமந்
தொட்டிருந்த பெரும்புலமைத் துறவிசரித் திரஞ்சொன்னேன்
மட்டில்புகழ் நாரையூர் வாரணமா முகனருளிற்
பட்டிசைகொ ணம்பியாண் டார்நம்பி பரிசுரைப்பாம். (௯௯)

திருவெண்காடர்சருக்க முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - ளஎஉ.

---

## பதின்மூன்றாவது

## நம்பியாண்டார்நம்பிகள் சருக்கம்.

நறுமலர்ப் பொழிற்சோணாட்டு நாரையூர் தன்னில்வாழ்க்கை
யுறுமொரு சைவப்பார்ப்பா * னும்பன்மா முகனைப்போற்றல்
பெறுதொழி லாகக்கொண்டோன் பேதைமைப் பெருக்கத்தோடு
மறுவறு கற்பும்வாய்ந்த மனையொடு மகிழுநாளில். (க)

முக்கண்வெற் பனையவேழ முகப்பிரா னருளினாலே
தக்கதோர் புதல்வற்பெற்றுச் சடங்குகள் பலவுஞ்செய்து
நக்கனேர் பெரியோர்சொல்லா னம்பியாண் டாரென்றோர்பேர்
வைக்கவம் மகனோர்பத்து வயதுடை யவனானால். (உ)

அந்தநா ளவன்றன்றாதை யாங்கொர்சூத் திரப்பெண்மோகப்
பந்தமுற் றதனாற்கோயிற் படிநிவே தனங்களெல்லாஞ்
சொந்தமா யவளைபெற்றுச் சுகித்திடக் கொடுத்துவந்தான்
வந்தவன் வெறுமைநோக்கி மனையவள் வினவினாளால். (௩)

கேட்டிடு மவள்பாலாங்குக் கிளர்விநா யகப்பிரான்றா
னீட்டிய வருண்மேலீட்டா லெதிரினிற் படைப்பவெல்லாங்
கோட்டிடைத்திகழுங்கையாற் குழைவுற வாரிவாயிற்
போட்டினி துண்கின்றான்மெய் பொய்யெனக் கருதேலென்றான். (௪)

அம்மொழி வினவியந்த வருந்ததி யனையாண்முற்று
மெய்ம்மொழி யென்றேநம்பி வேண்டுவ மிகவேசெய்தாள்
பொய்ம்மொழிப் பனவனோர்நாட் புறத்தொர்கா ரியமாப்போனன்
கைம்மொழி யறியாடன்னோர் காள்முளைக் கிதுசொல்கின்றாள். (௫)

அப்பநின் னப்பன்வந்தீண் டடையவெந் நேரமாமோ
மெய்ப்பசிக் கடவுள்சற்று வெதும்பினுஞ் சகிக்கொண்ணாதா
லிப்பகன் முதற்காலத்தே யினிதுபூ சித்துவாவென்
றொப்பறு மமுதேயாதி யுபகர ணத்தோடீய்த்தாள் (௬)

சென்றவன் றெண்ணீராட்டித் திருவெண்ணீ றலங்கல்சாத்தித்
தென்றலங் குன்றின்சந்தத் திலகமுந் திருத்தியன்பாற்
றின்றல்யா வையுமுன்வைத்துத் தீபதூபங்கள் காட்டித்
தன்றகப் பன்பாற்கற்ற தாமருச் சனையுஞ்சாற்றி. (௭)

தெண்டனிட் டெழுந்துபார்த்தான் றிரள்பெருந் துதிக்கைதன்னாற்
பண்டமொன் றினையானாலும் பரிந்தெடுத் தருந்தக்காணா
னுண்டலுண் டென்னத்தன்றா யுரைத்தசொல் லுன்னியுன்னிக்
கண்புரு தாரைசோரக் கதறியக் கழுதிட்டானே. (அ)

---

* உம்பல் - யானை.

அழுதரு குண்மைநோக்கி யைங்கரத் தமலமூர்த்தி
பழுதில்சீர்க் கருணைபொங்கிப் படைத்தன முழுதுந்துய்த்தா
னெழுதுசில் பாடங்கற்பா னிளமகன் விரைந்துபோய்த்தான்
றொழுதகைத் தாய்பாலாங்கு நடந்தன சொற்றானன்றே. (கூ)

அவளுமவ் விடயங்கேட்டுள் ளதிசயித் தில்லாளான்ற
தவன்முயல் கிரியையாதோ தவறிய நிமித்தஞ்சற்றும்
கிவனுட னுடல்செய்தா னெனநினைத் தனளவ்வேளை
கவலுநெஞ் சினளாழ்ந்திக் கடுகியே கணவன்வந்து. (௧0)

பூசனைக் கானநேரம் போனதாற் பொருக்கென்றின்னே
வாசமா நிவேதனங்கள் வழங்கென்றான் மனைவிநந்தம்
பாசமார் மகன்போயின்றப் பணியினை முடித்துவந்தா
னீசன்மா மகனுமுண்டி யினிதயின் றனனுமென்றாள். (கக)

அச்சிவப் பனவன்றன்று ளதிசயித் தார்வவாரி
யுச்சிமேற் கொள்ளச்சேய்வா யுரைப்பவும் வினவிநீயே
நச்சியப் பணிசெய்கென்ன நவின்றுநன் காரப்புல்லி
யிச்சிசுப் பெறமுன்செய்த தென்றவ மெனவெண்ணுற்றான். (கஉ)

மற்றைநாண் மகனோடேகி வழுவற நெருனற்செய்தாங்
கிற்றையுஞ் செய்கென்றுற்று னிவன்விழிப் புலங்காணும
லற்றையு மந்தமூர்த்தி யமைத்துள நிவேதனத்து
ளொற்றையு மிகாதுதுய்த்தா னுலகமுற் றுணர்ந்ததச்சீர். (கங)

பற்பலர் தம்மாலேன்ற படிநிவே தனங்களாங்குய்த்
தற்பக லச்சேய்தன்னு லருத்திமிக் குவகையார்ந்தார்
சிற்பர்செய் மூர்த்தி *யிட்ட தின்றிடுந் தகைமைகேட்டு
மற்படு திண்டோட்சோழன் மனத்தின்மிக் கையமெய்தி. (கச)

இன்னநா ளுறையூர்வா †ழிபமுகற் குணவுநல்க
வென்னநாம் போதுநம்மா லேன்றன கொணர்மினென்னத்
தன்னது நாட்டிலுள்ள தகுதியோர் பலர்க்குஞ்சாற்றி
மன்னனந் நாளங்குற்றான் வந்தன ரவருமாதோ. (கரு)

பகடுடைச் சகடக்கூட்டிற் பருங்கரும் பிளநீர்தேங்காய்
திகழுமுக் கனிகளன்னந் தீஞ்சுவைப் பலபண்டங்க
ளகலமோர் காதஞ்சுற்ற வளவறப் பரப்பினாப்
புகர்முகத் திறைபாலந்தப் புண்ணியச் சிறுவன்சொல்வான். (கசு)

உன்னையு முன்னையேபூசித் துனதருட் செயலேநாடு
மென்னையுஞ் சோதித்தற்கா விம்மனுஞ் செயுமிந்நாட்டு
மன்னைநெஞ் சுவக்கச்செய்ய வல்லையோ வென்றானப்போ
தன்னையிற் சிறந்தமூர்த்தி யறிதியோர் கணத்திலென்னு. (கஎ)

---

* இட்ட-அஃறிணைப்பன்மை-அதாவது-இடப்பட்ட நிவேதனங்கள். † இபம்-யானை.

துதிக்கைபி னுனியெல்லோர்க்குந் தோற்றிடக் காட்டியாண்டு
மதிக்கரி யளவாவைத்த வான்சுவைப் பொருள்களியாவும்
பதிக்கண நாதனுண்டான் பரப்பவற் றொன்றுங்காணு
மதிக்குடைச் செல்வன்போல்வான் மனமிக வருந்தினாணி. (௧௭)

நந்தலி னம்பியாண்டார் நம்பியென் றவன்பேர்சாற்றி
யந்தவே தியகுமாரற் கடிமையே யாய்த்தனூர்போய்ச்
சொந்தமா முபகாரங்க டொகைபடச் செய்தானச்சேய்
தந்தமா முகன்கணேக்காற் றமிழ்ப்புல மையும்வாய்ந்தானே. (௧௯)

பெருமைசா லவன்சகாயம் பெற்றதாற் பிழைதீர் * சோழ
னிருமல னடியார்மூவர் நிகழ்த்துபல் பதிகத்தேடு
மருமலர்ப் பொழில்சூழ்தில்லை மன்றினி லெடுத்ததாலே
திருமுறை கண்டானென்னச் சிறந்தபே ரொன்றும்பெற்றான். (௨௦)

அன்னபல் பதிகச்சீரு மருணம்பி யாண்டானேக்கிப்
பொன்னணிப் பரவைகேள்வன் புகன்றுண்டத் தொகையின்சார
மின்னவென் றோரந்தாதி யியம்பினு னதுகொண்டன்றோ
பின்னர்சேக் கிழார்புராணம் பேசினூர் பெருக்கிமாதோ. (௨௧)

சம்பந்த ரங்கப்பண்பா னலங்கொளப் பனவப்பாலன்
சம்பந்தப் பிள்ளைமீது தமிழ்க்கவி வெகுவாச்சொற்று
னம்பந்த விழியார்மோகத் தழுந்தியில் லறஞ்செய்தானே
வெம்பந்த மிகழ்ந்துற்றானே விவரமாத் தெரிவதின்றே. (௨௨)

முப்படி யினிலுற்றுரு முதற்றொழும் புகழ்சேர்முன்னேன்
மெய்ப்படி வினையோாடி வியன்பணி மிகச்செய்கின்றோ
ரெப்படி யிருந்திட்டாலு மிகபரங் கடந்தவீட்டி
லப்படிப் புகுவாரென்கை யறிஞர்முற் றறிந்தவாறே. (௨௩)

முற்செய்மா தவத்தின்மாண்பான் முதிர்தராப் பருவத்தேயக்
கற்செய்விக் கிரகமான கணபதி யருள்பெற்றுய்ந்தான்
சொற்செய்நூ விளமைத்தன்று தொல்புவிப் புலவர்பல்லோர்
மற்செய்வான் படைகள்போலும் வண்ணமுங் கலந்ததாமே. (௨௪)

நல்லவர் பெரிதுபோற்று நம்பியாண்டார் நம்பிப்பேர்
வல்லவன்பகர்ந்த நூலின்வகை சொல்வார்சிலரோ யுள்ளார்
கல்லதுடருளின் றென்றுகடைப் படுமதத்தோர் தம்மை
வெல்ல வன்னவன்போல் வானைவிரும்புநர் பலருள்ளாரோ. (௨௫)

நாரையூர்ப் பிள்ளையாரானலம் பெறுபனவப் பாலன்
சீரையான் வினவுமட்டிற் செப்பினேன்றிகழ் சோணாட்டோ
ரானைவாழநபாயன்றா னமண்மதம் புகாமற்காத்த
காரைநேர் சேக்கிழார் தங்கதையினிக் கழறுவேனே. (௨௬)

நம்பியாண்டார்நம்பிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - இ௧௭.

---

* சோழன் - அபயகுலசேகரசோழன்.

பதினுன்காவது

# சேக்கிழார்நாயனுர் சருக்கம்.

தில்லை நகர்க்கிடை யானியிற் றிகழ்தர லாமொர் விழாவினிற்
றொல்லை நலம்பெறு தமிழ்வளந் தோய்தரு தேய மளிப்பதா
லெல்லையில் சீர்பெறு மன்னரீ ரிருவரு மேவின ரியாரொனில்
வில்லை யுயர்த்தவன் வழுதியார் வேய்ந்தவன் வேங்கட வெற்பனே. (க)

அன்னவர் நால்வரின் மூவர்மற் றங்கிய நாட்டின ராதலான்
மன்னந பாயனெ னும்பெயர் வளவ னவர்க்குப சாரமிக்
கின்னண மென்ன வியம்பொணு வியல்பினவாக வியற்றியே
தன்னர சாட்சிசெய் ம்மண்டபந் தன்னிலிருக்கைசெய் தானரோ. (உ)

அவர்களொ ருப்பட லான்மகிழ்ந் தங்கொருநாவல னௌவையா
லிவருறு நாடுகொண் மாண்புகூ றிடுமொருபாட லியம்பினுன்
கவளம தக்கரி வஞ்சியிற் காவிரிநாட்டிடைச் சோறுசெந்
துவர்புனையுந்தமிழ் பாண்டியிற் றொண்டைந ளுட்டில்வலோரென்றே.

அக்கவி கேட்டலுந் தொண்டைநா டாள்பவ னன்றிய மூவரு
மிக்கவ ரன்னவ ளுட்டிலே மேவின ரென்றசொ லால்வெள்கித்
திக்கறி யத்தகு சாட்சிநீ தேற்றுதி யென்றலு மென்செய்வான்
றக்கவு பாயம தாலுணர் தருகட னும்மதென் றுனரோ. (ச)

மலைகடன் ஞாலமென் மூன்றினும் வலியனநல்கவல் லான்றனைத்
தலைவர்க ளாயநால் வேந்தருஞ் சத்தியமா விழைந் தாரொரு
வுலைவறு மொற்றர்க ளுடெலா மோடியுரைத்து சாவச்செய்தார்
நிலைபயன் காலமென் முன்மொழி நிகழொலிப் பாடலோர் மூன்றினே. ()

வள்ளுவன் சொன்முனூ லிடையெடா வழுவுறு வண்ணமூன்றே ட்டமைத்
தொள்ளுடைப் பட்டினிற் கட்டிமிக் குபசரித் தரசர்பா லுய்த்தனன்
புள்ளுலாம் பொழிலுடைக் குன்றையூர்ப் புனிதவே ளாளநற் புத்திரன்
றெள்ளுமெய்யுணர்வுடைக் கல்விதோய் சேக்கிழா னென்பெயர்த்திரனே.

அதுவரக் கண்டுமிக் கின்புறீஇ யதிசயித் தவையினுக் கதுசொ லுஞ், சதுரரிற் சோழன்மற் றையர்கள்பாற் றுழ்தகைச் சொன்மிகச் சாற் றியீண், டிதுவிடுத் தவனைநீர் விழையொணு தென்றிரந் தவர்கடம் மிசை வெய்திக், கதுமெனச் சிவிகையுய்த் தவனைநேர் காணல்வேட் டமைசொ லிக் கண்டபின். (எ)

வந்தவற் கினியசொற் சொல்லியே வளவன்மற் றையருநன் கறியநீ
யிந்நாட் டின்றுதொட் டிற்றெனக் கினியமந் திரியெனக் குலவென்றுன்
கந்தமார் குவளையந் தாரினுன் கழறுமென் சொற்கொளிற் கடவதென்
பந்தமார் தருமுடன் பாறிறப் பண்ணியப் பாலியைந் தானரோ. (அ)

விழவு முடிந்தது வந்ததோர் வேந்தர்த நாட்டிடை மேவினர்
தழல்விழி கொண்டவ ராடுபொற் சபையத னிற்பணி செய்வதாற்
பழமை குறித்திடு சோழனும் பழுதி லுணர்ச்சி யமைச்சனு
நிழறரு வெண்குடைமத்தியி னீர்மலி நாடளித் தார்களே. (௯)

அவரவ ணம்புவி யாளுநா ளருக மதத்தவ ராஞ்சிலோ
ரிவரை வசஞ்செய வேண்டுமென் றேயவ ணெய்தி யிணங்கலாற்
சிவபர நிந்தனை கொஞ்சமுஞ் சீவகனுதியர் சீலமு
நவரச சாரம் விராவியே நன்குநவின்றனர் நாளுமே. (௧௦)

அத்தக வோர்ந்தரி மர்த்தனற் கரனெதி ரச்செ யமைச்சனோர்
* வித்தகன் வளவனெ டிவரைநீ விழைத லொழித்திடு கென்னவே
சித்த முறுத்துனை செய்தலுஞ் செம்பொன் வழங்கி யனுப்பிவிட்
டுத்தம மாதவர் சரிதமியா னுணர வுணர்த்துக வென்றனன். (௧௧)

பண்டுதென் மதுரையி லுற்றகூன் பாண்டிய னிக்கொடும் பாவிகள்
விண்டுள நூல்வழிச் சென்றதால் வேதனை யுற்றன வாயிர
முண்டு தவிர்ந்தனை யாலுனக் கொப்பல னன்னவ னென்றுசொற்
றொண்டவர் வாயுமை பங்கன்மாண் போதி யுணர்ந்தத னுலுய்ந்தோர்.

பற்பல ரன்னவர் சரிதமிப் பாரிலு ளார்கள் பகர்ந்திடல்
சொற்ப மவற்றை விரித்துநான் சொல்லிடு மாறு துணிந்துளேன்
சிற்பரன் மெய்யருள் வேண்டுமாற் றேட விடுக்குதி யென்றுபோய்ப்
பொற்பதி கங்கொள்பொ னம்பலம் போற்றினனேந்து பொறிக்கொடே.

மந்திரி வேடம் விடுத்துநன் மாதவ வேட மணிந்தெழிற்
செந்திரு நாயக னடருந் திருவடி யேநனி சிந்தித்தா
னிந்திர னேரந பாயனென் றென்றென வேயெதிர் நோக்கினன்
சந்திர சேகர புங்கவன் றண்ணருள் வாரி தழைத்ததே. (௧௪)

ஒருமொழி நீதரி னன்றியா னேதுகி லேனென வுன்னுமப்
பெருமதி யாளன்மு னுலகெலா மென்றோர்சொ லங்கு பிறந்ததா
லருளொலி யாமதை யேமுத லாவமைத் தம்பலத் தாடுவான்
றிருவடி வாழ்த்தி வணங்குவா மென்று முதற்கவி செப்பியே. (௧௫)

சீர்திக ழூந்திரு நாரையூர்ச் சிந்துர மாமுக னருளினுற்
பேர்திகழ் நம்பியாண் டாரெனும் பிள்ளையந் தாதித் துணைக்கொடு
வார்திகழ் மென்முலை வாணித்தாய் வாக்கருள் வண்ணம் வகுத்தன
னூர்திகழ் செஞ்சடை யண்ணலா ரடியார்புராண மவிர்ந்ததே. (௧௬)

சுந்தர னின்புறற் கீசனார் தூநகைப் பரவைதன் வாயிலுக்
கந்தணன் வேடநீத் தேகுமவ் வவசரத் திற்றலைக் கங்கைநீர்
சிந்தலு ரைக்குமவ் வேளையிற் சேக்கிழான் றன்செவி கேட்பநீ
யெந்தவி டத்திருந் தகைதுகண் டாயெனே ரொலியெழுந் திட்டதே. ()

---

* வித்தகன் - சேக்கிழார்நாயனார்.

ஒப்புறச் சிற்சிலோர் தாம்வரைந் துட்பொருட் கேட்டுணர்ந் திட்டபி
னப்புரா ணத்தினைத் தில்லையூ ராலயத் தேயரங் கேற்றினர்
பப்புகூட்டத்தரெல் லாங்கொளப்பலவயிற் சொல்வதற் காகவே
யிப்புகழ் பெற்றநூ லொன்றுமின் றீதுணைப் பார்ப்பலோ ரென்றுமே.

கன்னிமுன் விண்ணுளோர் காணுறக் காலெடுத் தாடுமக் கடவுளூர்
சந்நிதிக் கண்ணவூ ரந்தணர் தாமுமா முனிவருந் தகவுடைச்
சென்னியா மன்னனுங் கேட்பவே சேக்கிழார் வாக்கினாற் செப்பினர்
பின்னிவர்க்குருவெனப் புரவலன் பேணினா னென்பர்பல் பெரியரே. ()

அன்றுமு தற்பர சிவனிலா வாலய மெங்குமெ யடியர்தா
முன்றுதி செய்துபு மூவர்தம் முதிர்தமி ழோடிதுமோதினர்
பின்றுக டீருமு மாபதிப் பெயர்முனி யப்புகழ் பேசினு
னின்று தெரிந்தள விப்புரா ணத்திடை யோதினனி யானுமே. (உ0)

பாண்டிநா ணாட்டிடை முன்னுறும் பழுதது சோழநா ணாட்டினு
மீண்டிவ ராமுன மேதடுத் திட்டவராய்நிகழ் சேக்கிழார்
வேண்டிய முத்தி யடைந்தனர் வென்றிவை வேலநபாயனு
மேண்டிக ழிந்திரர் நாணும்வீ டெய்தின னீச னருட்கொடே. (உக)

ஒருவராயே நிகழ் சேக்கிழா ரோர்சினுள் மன்னமைச்சாகிப்பின்
றிருவருட்சீர்விழைதருதவச் செல்வரா வாழ்ந்தமைதிகழவே
மருவுமன் னவர்புகழ்ச் சொல்லுமிவ் வயினமைந்துள்ளவோர் வகையபா
விருவகைப்படு நடைகாட்டுமா றெளிதினிற் றேர்வொற்கினியரோ. ()

அண்டர்நாயகரொலும் பாமரமிட் டம்பலத்தாடுவாரருடருந்
தண்டமிழ்ப் புலமைசால் சேக்கிழார் தஞ்சரித்திரமிவண் சாற்றினேன்
கண்டகண்ணிருட் களையுமெய் கண்டதே சிகனருட்காதையும்,
புண்டரீகத்தயன் செய்தவிப் புவியுளார்மகிழ் வுறப்புகல்வனே. (உங)

சேக்கிழார்நாயனார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கூஉக.

---

பதினைந்தாவது.

## மெய்கண்டதேவநாயனார் சருக்கம்.

கச்சிநகர்தன்னிலுறை யொருவேளாளன்
 கான்முளையில்லாமையினாற் கலங்கிவாடி
நச்சிவெகுசோதிடர்பாற் கேட்டானங்கோ
 நலமொருவனுனுநவிலவில்லை
பச்செனுமேனிக்கவுரி பாலுண்டுய்ந்தோன்
 பகர்ந்ததிருவெண்காட்டுப் பதிகத்தீற்றின்
மெய்ச்சிசுவெய்திடுமாறு சொன்னதோர்ந்தவ்
 விதஞ்செயற்காமனைவியொடு விரைந்துபோனான். (க)

சென்றவனத்தலத்தினிடை யுள்ளவான
திருக்குளமூன்றிடத்தினிலுந் தினமுமூழ்கிக்
குன்றவில்லார்சந்நிதியி னின்றுபோற்றிக்
குறித்தபடியேகுழந்தை பெற்றுக்கொள்வ
தொன்றலதப்பதிகமொழி யினைப்பொய்யாக்க
லொன்றெனவேதுணிந்து பெரிதுபாசித்துற்றான்
மன்றன்மதிச்சடைப்பெருமா னுள்ளங்கொண்டு
மதித்திட்டானடவாத வாறென்றுண்டோ. (உ)

அப்புனிதற்கருமகவாய்க் கதிசேர்கென்ன
வரன்கயிலைக்கிரியினில்வா ழடிமையாமோர்
மெய்ப்புலவற்கருள்செய்திட்டா னவனவ்வாறே
மேதகுநாளையிற்பிறந்து விளங்கலுற்றான்
கைப்புதல்வனுடனவ ரவ்வூரில்வாழ்ந்து
களிகூர்ந்தார்கண்டவரு மதிசயித்தார்
தப்புரைத்தசோதிடர்பின் னுரியவைந்தாந்
தானத்தோன்றனைக்குருப்பார்த் தானென்றாரே. (ஈ)

அன்னதவச்சேய்பிறந்தோ ராண்டின்பின்ன
ரன்னையுடன்பிறந்தவனு மருமைமாமன்
றன்னதுபேரன்பதனு லழைத்துச்சென்று
தகைகொடிருவெண்ணெய்நல்லூர் சாரச்செய்து
பன்னரியபெருஞ்சிறப்பி லமைத்துமேலாம்
பரமானந்தக்கடலிற் படிந்துவாழ்ந்தான்
கன்னலெனக்குதலைமொழி பயின்றேயந்தக்
கான்முளைபற்பலர்மனமுங் கவர்ந்ததம்மா. (௪)

அக்குழந்தைவயதொருமூன் றாகிமூன்றி
லகத்தில்விளையாடும்போ தாகாயத்தின்
மெய்க்குளிகைவலிகொடுபோ மொருசித்தன்பான்
மேனாட்செய்தவத்தினழல் வீசக்கண்டு
பக்குவமுற்றமையுமுணர்ந் திறங்கியோர்சொற்
பகர்ந்தாங்கோர்கணபதிதன் பாலுய்த்தைய
மிக்குருவாற்றெளிதியென்றிட் டவற்குத்தேற்ற
லினியுனதுகடனெனச்சொற் றேகினானே. (௫)

அக்கணமச்சேய்விழிக்கம் மூர்த்திமெய்யா
மானைமுகமாதியசி ரவிரக்காட்டித்
தக்கமொழிபலபேசிற் றதனுலங்கே
சந்ததமும்வசித்தரிய தவமேசெய்தான்

மக்களினமிகவியந்தா ரவனைத்தேற்று
மாறுவெண்பாவெண்பதிற்றோர் நான்குபாடித்
தெக்கணமுஞ்சிவசொருப மாகப்பெற்று
னியாவருமெய்கண்டானென் றியம்பினரே. (சு)

சம்பந்தப்பிள்ளையன்றி மற்றோர்சேயுஞ்
சரிசொலற்கொவ்வாதெனவுஞ் சாற்றினர்கள்
கம்பந்தக்குழைச்செவியா தியசீர்தோற்றக்
கல்லாலின்கீழிருந்த கருணைமூர்த்தி
வெம்பந்தமறுத்தடியார்த் தேற்றக்கொள்ளும்
வீறார்ந்தசிவஞான போதநூலைக்
கும்பந்தன்னிடையுதித்தோன் றமிழாற்செய்து
குருத்துவம்பெற்றிரவியெனக் குலவினனே. (எ)

பின்னுமவனெத்தனைபாட் டோதிட்டானோ
பிரமன்மனையவளறிவாள் பெருமைசால
மன்னுதவமுஞ்செய்தார் பலர்வந்தன்னோன்
வழிபாட்டாற்சித்திமுத்தி வாய்ந்துய்ந்தார்கள்
பன்னுசகலாகமபண் டிதப்பேர்சூடும்
பனவகுருவவன்குலத்தோர் பலர்தம்பாலும்
பொன்னுரிமையாலடைந்தாங் கியன்றதாமப்
புதுமைவினுய்க்கண்டுசில போதுபோக்கி. (அ)

தாய்முலைப்பான்மணங்கமழ்பல் விழுந்துவேறு
தந்தமுளைப்பதன்முனச்சேய் சாற்றுகின்ற
வாய்மையுணர்ந்ததிசயிக்கும் போதோர்தொண்டன்
மனந்தேறவாணவமா மலத்தின்வெம்மை
வேய்முளைத்தோட்கவுரிபங்க னருளல்லாது
விலகிடாதெனலுமதை விளக்கிவெல்சீர்
தோய்மகிமைத்தாநெறியுங் காட்டுவாயோ
சொல்லுகவென்றப்பனவன் றுணிந்துகேட்டான். (கூ)

கேட்டலுமஃதிங்ஙனந்தா னிருக்குமென்றக்
கேடிலான்முகநோக்கிக் கிருபைசெய்தான்
வாட்டடங்கட்கவுரியையு நீத்துமேனுண்
மலரவனுன்முகத்துதித்தார் மகிழக்கல்லான்
மாட்டமர்ந்தான்றிருவுருவாய் வயங்கக்கண்டு
மனத்தகந்தீர்ந்தப்பனவன் வணங்கினனந்
நாட்டனதுநிலையவனுந் தோயச்செய்து
நாமமருணந்தியென நவின்றிட்டானே. (கo)

அப்பனவ னந்தமுறை யவ்வூர் நோக்கி
யவனூர்விட் டேகுகையி லடியார் சில்லோ
ரெப்பயனும் வல்லானென் றிடுஞ்சொல் லோசை
யினைவினவி யொருமடமா தெதிர்சென் றஞ்சா
திப்படியி லெம்மினர்நெற் புழுங்க லாலாட்
டிடும்பருவ மறிவானோ வென்னக் கேட்டுத்
தப்பறையேன் மின்னென்று ளன்பா ரஃதே
தடுத்தாள்வாற் காண்டாற்கோர் சகுனமாதோ. (கக)

தங்குரவன் மெய்கண்டா னென்னும் பாலன்
றனக்கடிமை யாதல்கண்டு தந்தைதாயு
மங்குளசுற் றத்தினரு மிவனே யன்று
னடிவணங்கத் தகுங்கொலென வயர்ச்சி கூர்ந்தார்
கங்குல்விடிந் தனையமனத் தந்த ருளன்
கருதுமவர் நினைவறிந்து கலங்க வேண்டா
மெங்குலதே வனையனவன் பெருமை நுந்த
மிதயத்தான் மதிப்பரிதென் றியம்பினனே. (கஉ)

ஆகமத்திற் சொன்னவிதிப் படியே யெல்லா
வபிடேகங் களும்வகிக்கு மாதி சைவர்க்
கேகமணி விளக்கனையா னருணந்திப்பே
ரேய்ந்ததினந் தொட்டவர்தம் மினஞ்சே ராமல்
யோகசமா தித்துறவோர் நிலைமை யெய்தி
யுலப்பருஞ்சீர்த் தன்குரவ னுரைத்த நூலைப்
பாகமுறச் சிவஞான சித்தி யென்னப்
பாடியர னடியருய்யப் பரப்பி னனே. (கங)

மெய்கண்ட தேசிகனுரூர னுய்ந்த
வெண்ணெய்நல்லூ ரிடத்திலிச்சை மிகக்கொண்டுற்றான்
கைகண்ட சித்தியுட னவனு மன்னோன்
கண்ணருளா லுய்ந்தோனுங் கவினு நாளின்
மைகண்ட மிடற்றிறையென் றவனைப் போற்று
மறைஞான சம்பந்தன் மாயை யென்னும்
பொய்கண்ட கண்டபரம் பொருளுங் கண்டு
புகார்நகர்வெண் காடனெனப் பொலிவுற் றனே. (கச)

திருமலிமெய்கண்டபிரான் வெண்ணெய் நல்லூர்ச்
சிந்துரமாமுகப் பெருமான் றிருக்கண்ணோக்காற்
பொருவரிய சிவஞானச் செல்வத்தூடு
பொருந்தியடிய வரிதயப் பொக்கமாற்றிக்

கருவடையாக்கதியினிடை யேகமாகக்
கலந்தனனன்னவன் வடிவங்கவினுமாறு
பெருகியவாலயமமைத்து வணங்கிப் பல்லோர்
பிழையறுபேரின்ப நலம்பெறுகின்றாரே. (கரு)

சூரியனுண் மற்றிரண்டு சுடருந்தோய்ந்து
துலங்குதல்போன் மெய்கண்டான் சொருபந் தன்னிற்
சீரியன மருணந்தி தேவன் றானுந்
தெருளுமறை ஞானசம்பந் தப்பேரோனுங்
காரியமா யவன்றனைக்கா ரணமாக் கொண்டு
கவின்றதனாற் பிரித்தவரைக் கழற வில்லை
நீரியல்வா ரிதியுடைக்கு முலகிரின்னு
நிலத்திவர்கதை பலவாநிகழ்த்து வாரே. (கசு)

மெய்கண்ட தேசிகனுடைவன் கணைக்கம்
விரவுமருணந்திப்பேர் மிக்கோன்றானுங்
கைகண்டபேறவனு லடைந்து வாழ்ந்த
கடந்தைமறை ஞானசம்பந்தனு மாமின்னோர்
மைகண்டமிடற்றிறை வனருளாலுய்ந்த
வகையொருவாறுரைத்தேன் பின்மாயாபந்தப்
பொய்கண்டமனந் தெளிந்தவுமாபதிப்பேர்ப்
புனிதனநுபவத்திறமும் புகலுவேனே. (கஎ)

மெய்கண்டதேவநாயனார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - சுஙஅ.

---

பதினருவது

## உமாபதிதேவநாயனார் சருக்கம்.

தில்லையினடிக்குஞ் சிவனொடுசேர்த்துச் செப்புமூ வாயிரர்தம்மி, லெல்லையிலுணர்ச்சி பெறுமுமாபதிப்பே ரேய்ந்தவ னொருவன்வந்துதித்துத், தொல்லைவல்வினையைத் தொலைத்துமெய்யருட்சீர் தோயுமாறே மிகக்கருதி, வல்லையாண்டருளத் தக்கசற்குரவன் வரவுபார்த்திருந்தனன்மன்னோ. (க)

பக்குவமுதிர்ந்துங் கருமநூற்சடங்காற் பரதவிப் பாரொடுபழகித், திக்குமுற்றுணரு மாலயபூசைத் திருப்பணி யாதியுஞ்செய்து, விக்குதொண்டையன்போற் பிறருடனிந்த விதமெடுத் துரைக்குமாறின்றி, யக்கும்வெண்ணீறு மிகைபடப்புனைந்தே யைந்தெழுத் துருச்செபித்தயர்ந்தான். (உ)

அந்நாளதிவ னாச்சிரமத்தோர் னாமறை ஞானசம்பந்தன்
செந்தழன்மேனிச் சிவபிரானுரையாற் றில்லையம் பதியினிற்சென்று
பைந்தமிழ்க்கவிக்காத் தேர்நடைதருசீர் பதிதரு தெருவினோர்பாங்க
ரிந்தமாதவவே தியன்வருமாறே யெண்ணுபு படுத்திருந்தனனே. (௩)

அன்றுதான்பூசை செயுமுறைவரலா லவனொரு சிவிகையிலருகு
துன்றுதீவட்டி முதலியசிறப்புத் துலங்கவந் தனன்பகற்குருடா
மொன்றுபட்டமரத் தேகுகின்றதென வுரைத்தனன் முனியவனுருவ
மன்றுளாடினராத் தோற்றலினிறங்கி மலரடி மிசைவிழுந்தனனே. (௪)

தொழுமிவனெழுமுன் னவனெழுந்தோடித் தொடர்ந்திவ னோடினன்சூழக்
குழுமினர்பலரீ தென்னெனவியந்தார் கூடவுஞ் சிற்சிலர்போனார்
பழுதிலம்முனிவன் சென்றுசெங்குந்தர் பாவடிக் கூழ்கையேற்றருந்த
கழுவுதன்முழங்கை வழியிவனயின்று னாட்டினர் நக்கிகழ்ந்தனரே. (௫)

அற்றைநாட்பூசை யடுத்தநாண்முறையோ னாற்றின னவ்விருவோரு
மொற்றைபட்டொழுகிச் சிறிதுநாளையிற்றம் முளத்தநு பூதியிலொத்தார்
மற்றையசரித மொன்றுமக்குரவன் மாட்சியென் றியான்வினவில்லேன்
பொற்றைவிற்பரமன் றிருவடிமலரிற் புகுந்ததற் கையமின்றம்மா. (௬)

குரவனீங்கியபி னவனருட்டிறந்தோய் கோளரி யேறனான்கோதி
விரவலனாகி முறைப்படிதவமே யிழைத்தன னவனுடலினத்தார்
பரவுபண்பினறக்கித் தீங்கியன்றிடலென் பாவமென் றிரங்கினர்பணங்காட்
டரவுலாஞ்சடையார் விடைக்கொடித்திருநா ளானிமா தத்தணுகியதே.

அத்திருநாளின் முன்னைநாளிரவே யாங்குளார் பலர்கனவினும்போய்ச்
சத்திமுன்னடிப்பா ரியாந்திருக்கோயி றனிலிலே முமாபதிமுனிவ
னத்தியபூசைப் பெட்டகக்கோயி னண்ணுபு வசித்துளேமென்றா
ரித்திறமுணர்ந்துங் கொடியுயர்த்தினராங் கேறிடா திற்றுவீழ்ந்ததுவே.

அவ்வதிசயங்கண் டரசனும்பிறரு மம்முனி யிருந்துழியடைந்து
செவ்வனக்கமலத் திருவடிபணிந்து சிவன்செய லனைத்தையுஞ்செப்பித்
தவ்வருங்கருணை யுறுமவனுடன்போய்த் தன்மனைப்பெட்டகந்தருவித்
தெவ்வமில்கோயிற் கொடிமரத்தருகி லியாவருங்காணுறத்திறந்தான். ()

முன்றனோர்குருப்பின் போனநாட்டரித்த முகுளநாண் மலர்த்திரண்முழுது, மன்றணிந்தனபோன் றிருக்கைகண்டியாரு மதிவியப்பொடு மிகமதித்தார், குன்றவிற்பெருமான் கொடியுமேறியது குலத்தினர் களு மிகமகிழ்ந்தார், மன்றலந்தடந்தோண் மன்னவன்பலகால் வணங்கியோர் வேண்டுகோள்வகுப்பான். (௧௦)

உன்றவத்தருமை யுலகமுற்றுணர்ந்த தென்னினு மொருமடாலயத் துற்; றின்றமிழ்ப்புலவோர் களுந்தவத்தினரு மிறைஞ்சுமா றியற்றிட வேண்டு, மென்றனனிசைவு கண்டுதான் கொற்றங்குடியிலஃ தியற்றியீந் இட்டான், மன்றகத்திறைவ ரருடரும்பயனை மாற்றிட யாவரோவல்லார்.

அம்மடத்தவன்போய்ப் புகுந்தினத்தரிதன் னரிவையுமயன்மனை யாளுந்
தம்மலர்ப்பீட மாமெனவிழைந்து தாங்களு முடன்புகுந்தனராற்
செம்மணிக்கவினார் தானைமாதவரும் புலவரா தியர்களுஞ் செறிந்தார்
கைம்மணிப்புலமைக் காழியூர்ப்புதல்வன் கழகமே யெனக்கவின்றதுவே.

கோயின்மான்மியமுஞ் சேக்கிழார்புகழுங் குளிர்திரு முளைபெறுங் கதையும், பாயிரத்தெழில்சேர் புராணமாச்செய்து பழுதில்சித்தாந்த நூல்பதினான், காயினவவற்றுட் சிவப்பிரகாச மருட்பயன்முதலிரு நான்கு, வாயினாலியற்றிச் சைவதேசிகனா மாட்சியும் பெற்றனன்மன்னோ.

குலையொடுபழுத்தாங் கனைவரும்வேள்விக் கொலைசெயுங் குலத்தினிற்பிறந்தோ, னிலையிடுவார்க்குங் கதியைநல்கிடுந்தன் னிணையடிப்பெருமைதேர்ந்தெனைத்தும், புலையுருச்சைவா சிரியனாகிடவும் புரிந்தருள் புராணபுங்கவன்றான், மலையணுவாக வணுமலையாகச் செய்யவும் வல்லவன்றானே. (௧௪)

மைந்தருந்தேவர் தாமுமிக்குவப்ப வயங்குகொற் றங்குடிமடத்தி, லந்தமாமுனிவன் வாழுநாள்கனக வம்பலத் தாடல்கூரமலன், முந்தவீடடைந்தோ ரொருவருஞ்செய்யா முறையவன் றனைக்கொடுமுடிப்பான், கந்தனைப்பயந்த திருவுளந்தன்னிற் கருணையாற் கருதினானன்றே.

அத்தினமெந்த வூரினிலிருந்தோ வநந்தமுற் பிறப்பினிலரன்பாற்
பத்திசெய்ததன்பின் பிறந்தவனோர் பஞ்சமன் பன்னிதன்னோடு
முத்திதானடையுநிமித்தமோர்மனத்தின் முதிர்புகழ்த்தில்லையிற்சேர்ந்தா
னத்தியமனைவி யபக்குவியானா னயகன் பின்வராளம்மா. (௧௬)

அவன்பெத்தான்சாம்பா னெனச்சொல்வாரவள்பே ரறைபவர்க் காண்கிலனன்னோன், சிவன்பதங்கருதா மாறவனு[illegible]ருவ சிந்தனை யேயவள்செய்தா, ளுவந்தசில்பணியா லுடல்புரந்தற்பி னும்பரு முனிவரு முலவுந், தவந்தழைத் திடுமெவ் வூர்த்தெருவிளக்கித் தகைமலிசிகரிகை தொழுதார். (௧௭)

இன்னணஞ்சிலநா ளியற்றலுமரிவாட் டாயனார் கழுத்தரிந்திடுமட், டின்னல்செய்தவர்தங் திருவுளமிரங்கி யிரவெலா மவன்மனக்கனவிற், பொன்னதாற்சமைந்த வம்பலமுதலாம் பொற்பெலாம் பொலிவுறக்காட்டிப், பின்னரோர்தினத்திற் பிறைச்சடைமுதலா முறுப்பெலாம் பிறங்கநேர்வந்தார். (௧௮)

அங்கியில்விழுந்தார் கழுத்தறுத்திட்டா ரசலமேற் போய்நிலத்துருண்டார், பொங்கியகடனீ ரிடைப்புகுந்திறந்தார் பொறியடக் குபுதவஞ்செய்தார், தங்கிளைதுறந்தார் தமிழ்த்துதிசெய்தார் தாங்களுங் காண்பரிதாய, செங்கிரியனையாற் றில்லையிற்பெத்தான் சேவைசெய் திட்லருமையதே. (௧௯)

காண்டலுமுருகிக் கண்கணீர்சொரியக் கரங்குவித் திறைஞ்சியேவி ழுந்தா, னீண்டவனறியாத் துணைப்பதத்தொருவ னின்விருப் பியாதென வினவ, வீண்டயன்படையாப் பெருங்கதியன்றி யாதும்வேட் டிலனெ னவிசைத்தா, னுண்டவனிரக்குந் தகைமையோரான்மா வடைகுவதரி தரிதரிதே. (உ0)

தலைகளையுடலைக்கனலிடையெரித்துந்தவளமால்விடைமிசைத்தகைசான் மலைமகண்முருகோ னுடனுறச்சகலவானவரிடையரற்கண்டு நிலைபெறுபயன்வேண் டாதழிந்திட்ட வுயிர்களு நிலத்திருந்தனவாற் புலையரிற்பிறந்த வுயிரிதுகேட்ட புதுமையென் னெனப்புகல்வேனே. ()

தேவர்தானவர்மா முனிவரர் மனிதர் திரள்களிற் றவஞ்செய் தோர்க்கெல்லாஞ், சேவதன்முதுகிற் பலர்தனைச்சூழச் சேணிடைத் திகழ்தருமீச, னுவலந்தீவிற் றில்லையிற்பெத்தா னவனிற் றனிவரு மாட்சி, யாவரேயறிவா ரவன்செயுந்தவத்தை யென்னென வியந்துரைப் பதுவே. (உஉ)

அவ்விதவரங்கேட் டலுமிகமகிழ்வுற் றரனிடக் கையினருக்கோலை, செவ்விதிற்பிடித்து வலக்கையினெழுத்தா ணியையதிற்சேர்த்துமெய்ய டியார்க், கெவ்விதத்தினுமிக் கெளியவன்சிற்றம் பலவன்கொற் றங்குடி யாற்கு, வெளவியேயெழுது நீட்டிதென்னென்னின் மண்மிசை வருபெத் தான்சாம்பான். (உங)

தனக்குநீபேத மறும்படிதீக்கை செய்துமுத் தியிற்றனிசேர்க்கை, யெனக்குநல்லுவகை தருமுறையென்றோர் வெண்கவி யெழுதியன்னவற் கீந், தனக்குவீடவனே தருவனங்கேகென் றுரைத்துருக் கரந்தனனவன் போ, யினக்குழாம்வருந்தி யழைப்பினும்போகா தியன்மனை யொடுபணி செய்தான். (உச)

என்பணிசெய்தா ரெஞ்ஞான்றோறு மிந்தனக் கட்டிரண்டெடுத் துப், பொன்பரிந்தளிப்பார்க் கொன்றுவிற்றுதர போசனஞ் செய்துமற் றொன்றை, மின்படுஞ்சடையா னடியர்வாழ்மடத்தின் மெல்லெனப் பிற் புறத்திட்டா, ரன்பராயாங்குற் றவரதையெடுத்தே யடுவன முழுதுமாற் றினரால். (உரு)

ஒருதலைச்சுமையாம் விறகதன்விலையா லுண்பன முழுதுதவின னும், பெருமடத்தடுவ யாவுமற்றென்றூற் பிழையற நடக்கைகண்டவ னு, * மிருவர்கைக்காசொவ் வொன்றுபெற்றெண்ணு யிரருமற்றவர்க்கி ரட்டியருந், திருவொடுபொலியச் செய்தருள்சிவனுஞ் செட்டியென் றுணர்பவர்சிலரே. (உசா)

---

* இருவர் - திருநாவுக்கரசுநாயனாரும், திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரும்.

மதுரையூர்மறுகில் விறகொடுபோயவ் வருத்தமுற் றுணர்தரும் வள்ள, லதுசகியாராய்த் தமதுகைத்திருச்சீட் டருமைகுன் றுபுகுமாட தன்கீழ்ச், சிதறும்வேர்வையினாற் றினாஙனோந்துலருஞ் சீர்த்தியுங் கருதுபு பேராற், றெதுவுமோர்நிமித்த மின்றியே வெள்ள மிருகரைப் பிறழல் செய்தனரே. (உள)

அந்நாளினிலவ் விருவருமுணவே யயின்றிலர் மடத்தமுதவோ ரிந்தனமிலதாற் பொழுதுபோக்கினர்வே றியாவனெங் கோபுகுந்திரந்து வந்தபின்பூசை நடந்ததாற் றினமும் வரும்விதமி யாதெனவினவி [றூர். லெந்தனுயத்தோ வீங்கொருபெருங்கட் டிருக்குமின் றின்றெனப்புகன்

அத்திறங்கருதி நாளையங்கதுவீ ழமையமா ரெனவினுவுதிரென் றுத்திசொற்றிருந்த வுமாபதிமுனிவ னுளத்தரன் சிலகுறிப்புணர்த்த நத்திநெஞ்சழிந்தா னங்ஙனநேர்கா னல்லவர் வியப்புறநழுவாப் பத்திஞானத்தோ ரின்புறவிரித்துப் படிப்படி யுரைத்தனன்சாம்பான்.

அவ்வுரைபெற்றூர் நிற்கவென்றவன்பா லறைந்துபோ யருண்முனிக் குரைத்தா, ரிவ்வழிக்கொணர்மி னெனக்குலமுறைமுற்றிகந்தழைத் தன னவனேகிச், செவ்வுருச்சிவனே யிவனெனக்கருதித் தெண்டனிட் டளித் தனன்சீட்டை, யெவ்வுலகத்தியார் பெற்றனரிப்பே றெனக்களித் திரு கரத்தேந்தி. (௬0)

கவுரிதன்வளைக்கை பற்றியதிருக்கைக் கவினெழுத் துணர்ந்துகண் சாத்தி, மவுனயோகியரும் பெறலரும்பேறு வழங்குவான் றன்னெதிர் வைத்துத், தவுதலிலுணர்ச்சி பெற்றவர்சிலருந் தன்னரு கிருந்துபார்த் துவக்க, நவுமுதலெழுத்தோ ரைந்துளானருளை நாடியன் னவன்றலை தொட்டான். (௬க)

தொடுதலுமவன்றன் னுடனொடிப்பொழுதிற் சோதியாய் வெளியி னிற்கலந்த, தடுதொழிற்கூற்றை யடர்கழற்பெருமா னருட்டிற மாரறி கிற்பார், நடுநடுங்கினரா யங்குளார்பலரு நன்கவன் பெருமையோர்ந்த மைந்தார், விடுபடும்வினையாற் கக்குலத்துடலம் வேதிய னமைத்தோர் வியனே. (௬உ)

அன்றிலின்பேடொத் தவன்மனைவெகுவா யலமரற் றெரிந்துசிற் சிலர்போய், நின்றிருக்கணவன் முத்திபெற்றுய்ந்தா னீயுமேன் றனசெய் தீண்டிருந்தாற், றென்றிசைச்சமன்றா துவர்தொடாநெறியிற் செல்லலா மென்றலுந்திருத்தி, யின்றியமனத்தாளாகியக்காட்டி னிறையெதிர்போய் முறையிட்டாள். (௬௩)

வெள்ளநீர்த்தடையா லொருதினங்கட்டு விறகிடாநிமித்தமென் கணவற், கொள்ளருமுறையான் மடத்தினுட்கொடுபோய்க் கொன்றன ரென்றவள்கூற, வள்ளனீர்ப்புவியி லப்பெருநிந்தை யதிகரித் திடுதலி னரசன், வள்ளலந்தகைசா லம்முனிவசிக்கும் வயினடைந் தன்பொடு [ப]ணங்கி. (௬௪)

தினந்தினம்பணிதாஞ் செய்ததுமொருநாட் செய்திடப் பெற்றிலா மையுஞ்சேர்த், தனந்தலற்றவடான் முறையிடுமோசை யளவறப்பரந்த தாலடிக, ளினந்தனைப்புரைவார் களும்புறச்சமயத் தீனரு நன்குணர்ந் தஞ்ச, முனந்தருமுத்தி மற்றுமோருயிர்க்கும் வழங்கலே கடனென மொழிந்தான். (கரு)

இதுவுநம்பெருமான் றிருவருட்குறிப்பே யிசைபெருக் கிடும்பொரு ட்டென்றவ், வதுலமாமுனியோர்ந் ததுபெறத்தக்க வாருயி ரின்மையா லவற்கே, மதுரமார்தருகாய் தினந்தருமுள்ளி வண்செடி யொன்றிருப்ப துகண், டுதுபெறக்கொடுக்கின் றுமுறுட்கருத்தின் படியென வுரைத்த னன்மன்னோ. (கசு)

மன்னனக்கணமே பறையறைவித்து வரத்தக்கார் பலரையும்வருவித்
தன்னமாமுனிவ னடிதொழுவவன்போ யச்செடியருகில்வீற்றிருந்து
பொன்னதாற்சமைந்த வம்பலமுடையார் பூங்கழல் கருதியேபுரைதீர்
தன்னதுகரத்தாற் றொட்டனனொளியாய்த் தனிவெளி யிடைக்கலந்ததுவே.

கண்டவர்பலரு மெய்ம்மையாமுத்திக் காரணந் தெரிந்துளங்களித்தா
ரண்டரூர்வரையே யவனிசைபரந்த தாருயி ரனையனையிழந்தாள் [ண்டு
விண்டசொன்மறந்து முன்னெனத்தொண்டு விரைந்துசெய் திடுமுணவு
சண்டவாதனைதீர்ந் திந்திரனுலகோர் தமரெனத் தழுவவேகினளே. ()

அந்தமாமுனியு மன்னனுமனையா ரகிலமீ தவிர்தருநாளிற்
கந்தநாண்மலரோன் வேதமுநுதற்கட் கடவுளா கமப்பெருங்கடலுஞ்
செந்தமிழ்ப்புலவோர் கழகமுமடவார் திரளுநூங் கற்புமானினமு
மெந்தஞரயமுமோ ரிடருமெய்தாதே யிலங்குறு மென்கைசத்தியமே.

கற்றைவார்சடையார் கைத்திருச்சீட்டுக் காண்டலுங் காட்டினன்கருத்தொத்
தற்றையேமுத்தி யளித்தவன்றனிவீ டடைந்தது மறையவேண்டுவதோ
மற்றையோரறியா தடைபவர்தாமு மாநிலத் திற்பலராமா
லெற்றையுமழியாப் புகழ்நிறீஇக்கதிபெற் றிடுதலே யேற்றமாமம்மா.

முள்ளியின்செடியு மடைந்ததேயாமான் முத்திமாத் திரம்பெறலரிதன்
றெள்ளிடுங்கொடியோர்க் கிடர்மிகவிளைத்திட் டேத்துநர்க் கின்பமீந்தருளி
வள்ளிநாயகனே மாயனேயெனப்பார் மதிப்பவாழ்ந் ததன்பின்வீடடைத
றெள்ளிமையாமென் றுணர்ந்துழைக்குநருந் திரைகடற் புவியிலுள்ளாரோ.

இண்புவித்தவரி லுயர்ச்சி மிக்கடைந்து செழுந்தமிழ்ப் புலமையுஞ்செய்த
வண்புகழ்க்கட ரேயுமாபதிமுனிவன் வான்கதை யுணர்ந்தவாவகுத்தேன்
பண்புணர்தமிழான் மாயவன்புகழேபாடியு மாடியும்பணிந்து
தண்புவிமகளை மகவெனப்பயந்தான் சரிதமுஞ்சற்றுரைப்பேனே. ()

உமாபதிதேவநாயனார்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅ௦.

# பதினேழாவது

## பெரியாழ்வார் சருக்கம்.

பாண்டிநாட் டினிற்சதுர கிரியருகில் வில்லிபுத்தூர்ப் பதியென் றொன்றுண், டேண்டிகழ்வே தியர்வசிக்கு மாண்பதுநா ராயணன்வா ழில்லம்வாய்ந்த, தாண்டிகலோ கஞ்செய்தவப் பயனேபோன் றொருபெ ரியோ னவதாரஞ்செய், தீண்டியநான் மறைச்சடங்கொவ் வொன்றாக நடப்பவளர்ந் திலங்கினனே. (க)

பத்தியுளா னமுந்தவமும் பட்டர்பிரா னெனும்பெயரும் படைத் துநல்ல, சித்திமுத்தி தருந்துணையாந் திருவெழுத்தோ ரெட்டுநெனி செபி ப்போனாகி, மத்தியிற்றன் மரபினரால் வடமீனேர் மனையவளும் வாய்க் கப்பெற்றிட், டித்திறமாங் குறுநாளிற் பாமாலைபூமாலையிரண்டுஞ்செய்து.

கரும்பாந்தண் மிசைநடிக்கும் கமலமலர்ச் சேவடிக்கே கனிந்துசாத்தித்
திரும்பாத வீடுபெறச் சிந்தித்து வருநாளாந் திருநாளொன்றிற்
பெரும்பார்மின் னொருசிறிய மகவாய்நந் தாவனத்தோர் பிருந்தைமீது
வரும்பானு வெனக்கிடந்து வாய்விடக்கண் டெடுத்துவந்து மனைபாலீந்தான்.

அம்மகளை யவள்கரத்தில் வாங்குதலு மிமயமலை யரசன்றேவி, மைம்மலைநேர் கவுரியினைப் பெறுநாளின் மகிழ்ந்தாங்கு மகிழ்ந்தாள் கொங்கைச், செம்மணிக்குன் றருவியெனப் பால்சொரிந்த தருத்தியணை சேர்த்துப்போற்றி, யெம்மதுமா தவப்பயனே யிறும்பூதே யெனத்தா லாட் டிசைத்தாளன்றே. (ச)

பொற்றாம நாபியினன் புணர்மனையாய் நான்முகவன் புதல்வியாய்ப் பொன், விற்றங்கு புயத்தொருவன் விடுந்தோரா யெண்டிசையின் மேவி யாளப், பெற்றாரை முனிவரரை மானிடரைச் சராசரத்தின் பெருக்கந் தன்னை, நற்றாயாய்ப் பெற்றவளை மகவெனக்கொண் டார்பெருமை நவில் வாரியாரே. (ரு)

ஆண்டாளென் றொருபெயரு மணிந்துவளர்த் தார்வயதைந் தாறே ழெட்டாய்த், துண்டாத மணிவிளக்கொத் தவிர்வுற்றா ளருந்தமிழ்த்தீஞ் சுவைநன்கோர்ந்தா, ணீண்டானுள் ளுரிமைமனை யாட்டியெனல் விளங் குமுன்பே நிறையுமன்பு, பூண்டாராய்த் தந்தையுந்தா யருமகிழ்ந்தா ரறி ஞரெலாம் புகழ்ந்தார்மன்னே. (சு)

அன்னணமாங் கியனுளி லணிக்கூட லம்பதிவா ழரசர்கோமான், பொன்னமைந்த பெருங்கிழியொன் றினைத்தனரண் மனைவாயிற் புறத்திற் றாக்கி,யின்னதறச் சொலவல்லான் றொழுந்தேவே யென்றேவென் றிசை த்திட்டந்த, நன்னலமிவ் வுலகமுழு தொலிதரத்தோற் பறைச்சாற்று நடப்பித்தானல். (எ)

அந்தவொலி யுணர்ந்தரிய தமிழ்ப்புலமைப் பட்டர்பிரா னுங்குற் றெண்ணின், மைந்தருமன் னனும்பார்க்க வக்கிழியைச் சொற்கவியாம் வாளாற்கொய்து, செந்தகைப்புட் பரிமிசைமால் பலதேவ சொடுவானிற் றிகழக்காட்டிப், பந்தமற்றோர்க் கேயினிதாம் பல்லாண்டுத் துதியுமன் பிற் பாடினனே. (அ)

மன்னனுட னெட்டெழுத்துந் திருமண்ணு தியசீரும் வாய்க்கப்பெற் றுத், தன்னகரத் தழகனுக்கா லயச்சிறப்பு மேன்மேலுந் தழையச் செய்து, பொன்னணியா டைகண்முதலா வனபிறவு மவனடியார் போ தும்போது, மென்னவளித் தான்கிழிகொய் தலிற்பெரியாழ்வானெனப்பா ரிசைத்ததன்றே. (கூ)

தக்கபெரி யோர்பலரு மிவன்றிருப்பேர் விட்டுணுசித் தன்றுனென்றார் மிக்கசிறப் பொடுபோயவ் வேதியன்றன் வில்லிபுத்தூர் மேவிவாழ்ந்தா னக்கனத்திற் றுழ்ச்சியென மறவாமற் றினந்தோறு மலர்பூமாலை மைக்கருமா முகிலனைய மாயனுக்கு வனைந்தணிந்து வழிபட்டானே. ()

பாமாலை யினுமன்பி னெடுவெகுவாக் கண்ணனிசை பயின்றான் கேட்டுப், பூமாதி னங்கிசமாம் புத்திரியு மவன்மோகம் பொலியக்கொ ண்டா, டாமாவங் தெவரேனும் விழைந்தாலு மவர்வெறுக்கத் தகுஞ் சொற்சொன்னு, ளாமாறு தானுமவன் வைபவமா தியகவியி லமைத்திட் டாளே. (கக)

அந்தமுள கூறையும்பொற் பணிமுதலா வனவுமெடுத் தணிந்துதன் முன், வந்தநெடு மாயனுக்கு மணஞ்சூட்டன் முதற்கனவு மவியக்கண் டாள், சந்ததம்வந் தவன்றனைத்தொட் டணையுமின்பச் சுவைதெவிட்டித் தளர்ச்சிதீர்ந்தாண், முந்தவனைந் துய்ந்தவிடைச் சியருடல்வா சமும் விழைந்து முதிரப்பெற்றாள். (கஉ)

அப்பருவந் தனிற்றனது தாதைநெடு மாற்கெனச்செய் யலங்கலியா வுந், தப்பறத்தான் சூடியெழிற் றருப்பணத்திற் பார்த்தொருவர் தாமும் பாரா, தொப்பறுஞ்சீர்க் குடலையினுண் முன்னிருந்த வாறுதின முய்த் துவந்தா, ளெப்பரிசா லோவொருநா ளிதுசெயச்சோம் பினளவற்றை யிவன் கொண்டுய்த்தான். (கங)

அந்நாளின் மால்பலரு மறியவொரு மானிடன்மே லாவேசித்திட், டிந்நாளிம் மாலைகளி லொன்றுமுவந் திலனின்மக ளெனும்பூங்கோ தை, யெந்நாளும் போற்சூடிக் கொடுத்திலளா லெனச்சொன்னு னிது தேர்ந்தந்த, மின்னுள்சூ டியமலர்மா லிகைகளைநா ரணன்முடிமேல் வேய்ந்துவந்தான். (கச)

அன்றுதொட்டிங் நாளுமினி மேலுமெழில் வில்லிபுத்தூ ராண்டாள் பூண்ட, மென்றுணர்மா லிகையினைக்கொளுண் டியாவனெவ்விட் டுணுதலத் தின் மேவினலு, நன்றுணர்பாகவதர்சூழா நாண்மலரிற் சேர்த்தனென நண்ணியேற்றுப், பொன்றுலங்கு மார்புடையான் புயகிறையின் மணிமு டியிற் புனையுமம்மா. (கரு)

உத்தமதேவரிற்பெரிய மாயனிவணிமித்தமெண்ணி லுருவமெய்தி யத்தமிசையம்படைகொண் டமரும்வெகு வாவிலைக்கை யருமையன்றன் றெத்தகவோர்களுமிறிய முடித்துதவுதார்புனைத லேற்றமாகு நெய்த்தமலராளிதனை னெட்டுயிர்த்துப் பலவாறு நினைக்கின்றுளே. ()

அன்னநடைப் பூங்கோதை யாருமவர் தந்தையுந்தா யாருமாகு மின்னவர்தஞ் சரித்திரங்க ளின்னம்வெகு வாநிகழ்வுற் றிருக்கலாகு மென்னது காதுலகினர்பாற்கேட்டள விற்பகர்ந்துள்ளேனிவர்பின்னுளிற் பன்னகத்திற் றுயில்கூரும் பகவனருட் பெருங்கடலிற் படிந்திட்டாரே.

விட்டுணுசித் தன்புகழ்க்கு மேதினிமின் மகளாகி மேயதொன்று, மட்டுறுவேப்பங்தொடையன் மன்னெதிர்பொற் கிழியறுத்த மாட்சி யொன்று, நெட்டுருவ மாலருளால் விழிகளெனக் குலவுகின்ற நிசந்தேர் ந்துள்ளீ,ரொட்டுமறிவளவுகுல சேகரப்பேராழ்வான்சீ ரிசைக்கின்றேனே.

பெரியாழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கககஅ.

---

பதினேட்டாவது

குலசேகராழ்வார். சருக்கம்·

---

பூமகட்கொரு முகமெனத்திகழ்தரு புகழ்தோய்
மாமகத்துவ மிகுந்தமிழ்த்தேயத்தில் வன்பாங்
தாமதக்குணத் தினரணுகரியது தகைசா
லுமை நீர்க்குட கடலது கேரள நாடு. (க)

அத்தகைத்திரு நாட்டிடையவிர்பதி யனந்தத்
துத்தமச்சொலிப் புறமரண்வலைவதா யுவகைப்
பத்தர்தாம்வரின் மகிழ்வதாய்ச்சதமகன் பரிவா
னத்துபேரெழி லுடையதுகொல்லிமா நகரம். (உ)

ஆயநன்னக ரதனிடைவேதிய ரணிசா
ன்றாயமாமறைத் தழனியுமகத்தின்வெண் மே
மேயமூவழற் சாலையுந்தருப்பையும் விளங்கிச்
சேயநான்முக னூரெனச்சிறந்துள தம்மா. (ங)

தேவர்தந்திகைப் பாற்றுவான்றினமும்வந் துள்ளத்
தாவலோடுறு மணிப்பசும்பொதும்பரு டலரும்
பூவழிந்ததே னாறுகள்பாளையம் பூகக்
காவழிக்கொடு நடந்துபோய்ப்பணைதொறுங் கலக்கும். (௪)

மழைவளத்தினுன் மாதவர்முழக்கினால் வண்பூங்
குழையுடைச்செவி மடந்தையர்நடம்புரி கோல
முழவினோசையார் முன்கொடிமாளிகை முதலாத்
தழைவளங்களாற் றலைமையதாகுமத் தனியூர். (௫)

உரத்தமாதவ ரிடைமதிக்குலத்தர சொருவன்
சிரத்தையோடுசெ யருந்தவப்பயனதாய்த் திருமால்
வரத்தினோருயி ரவன்மனைவயிற்றிடை வாய்ந்தே
தரத்தின்மேம்படு கும்பபூர்வத்துவா தசியில். (௬)

புகரின்வாரநற் புனர்வசுநாளினிற் புரைதீ
ரகலமீதுநா ரணன்புனைகவுத்துபா மிசனுச்
சகமதுதுதித் திட்டனனுதலிற் றவத்தோர்
நிகரில்சேய்குல சேகரனெனப்பெயர் நிகழ்த்த. (௭)

செயுஞ்சடங்குக ளியாவையுமியற்றினர் சீரோ
டியுந்திறம்பெறு சேய்வளர்ந்தருங்கலை யுணர்ந்தே
வயம்பொருந்துநல் யௌவனப்பருவம்வந் துறலும்
பயந்ததந்தைதாய் களிப்பெருவாரியிற் படிந்தார். (௮)

அவர்தமாற்புவி யரசுபெற்றறநெறி வழுவா
துவகையோகொத் திகலவர்புறங்கொடுத் தோடக்
கவளமால்களி றுதிநாற்படைகொடு கடிந்தே
நவமதாஞ்செருக் கொடுகளித்திருந்திடு நாளில். (௯)

பசுவும்வேங்கையு மொருதுறைப்பாங்கர்நீர் பருகி
விசுவமீதுவாழ்ந் துவந்திடும்பருந்துகண் மேலாம்
பசுநிறக்கிளிக் குழாத்தொடுகூடியே பழகு
மசுரர்வானவர் தாமுமுள்விகற்பமற் றமைவார். (௧௦)

யாவும்வல்லவ னாகியெங்கணுநிறைந் திருந்துந்
தேவராதியோர்க் கறிவரும்பொருளதாந் திருமா
லாவலோடவன் மனத்தவிர்ந்தருணிலை யறிவித்
தோவலற்றமெய்ஞ் ஞானமுமளித்துவிட் டொளித்தான். (௧௧)

வேறு.

மாயனருட்சேவையினை வழங்கியருளீந்திடலுந்
தூயகுலசேகரப்பேர் தோய்ந்தவடியேறனையா
னேயவரசாட்சியின்மீ தெள்ளளவுமாசையிலா
தாயுவனாயன்போ டருந்தமிழாற்போற்றினன். (௧௨)

கம்பமதயானைக் கழுத்தகத்தின்மேலிருந்தே
யின்பமருஞ்செல்வமுட னியலரசும்வேண்டானு
யெம்பெருமான்வேங்கடத்தி லீடார்கற்றாணுகுஞ்
செம்பெருமைமுதலாகச் சிந்தையிற்றோற்றியவாறே. (கங)

ஆர்த்தியொடம்மலைக்குவடா யதனெறியாய்ப்படியாய்க்கோன்
றீர்த்தமதிற்புள்ளாகித் திகழ்மீனாய்ச்செண்பகமா
யார்த்தபுனற்கான்யாறு யன்பின்வட்டிற்கொடுசெல்லுஞ்
சீர்த்தபணியினனாகிச் செறியுநிலையுறவேட்டான். (கச)

பூவுலகத்தரசாட்சிப் புகழனைத்தும்விண்ணுலகத்
தேவிளங்குசீரும்வெறுத் தெழின்மிகுமெய்யன்பினனு
யேவுடையசிலைக்கரத்தெம் மிராகவன்றன்புகழ்பலவு
மோவருஞ்சொற்சுவைத்தமிழா லொருபதிகத்திடையமைத்தான். ()

அன்னகதையினைப்பலப லறிவுடையோராற்சொலவைத்
தின்னலறவொருமனத்தோ டிருந்திவன்கேட்டுவந்தனனு
லின்னபொழுதவர்வாயா லிராகவன்றன்னிளையோனைப்
பொன்னுறழ்சானகிக்கருகு புறத்துணையாவுறவைத்தே. (கசு)

திரிசிரன்றூடணன்கரன்முற் றிகழீரேழ்சகத்திரரா
விரியுமிராக்கதருடன்போர் விளைப்பவெழுந்தனனென்னு
மருமொழிகாதுறக்கேட்ட வளவிலதிதுயரெய்துற்
றொருவர்துணையிலராலியா னுடன்செல்லக்கடவனென. (கஎ)

வில்லொடுவாள்பலகைகதை மிக்ககணைத்தூணியெடுத்
தெல்லொளிவீசியகழல்பூண் டடார்நாற்படைகளுடன்
பல்லியங்களார்ப்பவெளிப் படர்ந்தமைகண்டமைச்சரெலா
நல்லியற்பேரன்பனிவ னலந்தெரிந்தோர்விதஞ்செய்வார். (கஅ)

இகற்சிலைவீரருக்கரசா மிராகவன்றன்புயபலத்தா
லகப்பொலிவாரரக்கர்களை யழித்ததிகசயங்கொண்டு
செகத்தினரின்புறுமாறு திரும்பினனென்றுரைத்திட்டார்
நிகழ்த்தரும்பேரின்பமுறு நெஞ்சினனாயுடன்மீண்டான். (ககூ)

அவ்வமைச்சர்தாங்குழுமி யரியடியருறவாலே
யிவ்வகையவுணர்ச்சிக்கே டெய்தினனாலிவனுடைய
ரெவ்வகைக்காரணத்தாலு மிணங்காமலறுமாறு
செவ்வறிவாற்செயவேண்டு மெனநினைத்தார்தீவினையார். (உ0)

அவன்றினமும்பூசைசெயு மரிபூசைப்பெட்டகத்தி'
னிவந்தமணிப்பணியொன்றை நெஞ்சிலுறும்வஞ்சகத்தாற்
கவர்ந்துமறைத்திறையெதிர்போய்க் கரியனடியவரிவ்வா
றுவந்துபுரிந்துள்ளாரென் றுரைத்தாரவ்விதகாடி. (உக)

காரணனைவேண்டியங்கு நடந்தசிசத்தினைத்தேறி
யீரமிகுமனத்தினனு மின்னலுறவவர்த்தடியா
தோரரவக்குடத்தினுட்கை யுய்த்தருளின்றிறங்காட்டி
மாரனைப்பெற்றோனடியார் மகிமையினைத்துலக்குதலும். (உஉ)

பாகவதர்பெருமையினைப் பாவியேமறியாது
சோகமுறுதீநெறியிற் சுழன்றேமென்றுள்ளதுசொற்
றுகம்வெயர்த்தவர்பணிந்தா ரப்பிழைக்குமவன்சினவாப்
பாகமுற்றதெண்ணிலருட் பரந்தாமனருளன்றே. (உக)

தெய்வநிலைதவத்தினிலை தெரியாவிச்சிதடருட
னைவதினித்தகுதியல நமக்கென்னுந்துணிவெய்தி
மெய்வழித்தன்றனையன்மிசை மேதினியின்சுமைசார்த்தி
யுய்வழிச்செல்குவனியானென் றுதித்தமனத்துறவோடே. (உச)

திருநாமமெட்டெழுத்துந் தினஞ்செபிக்குஞ்சீரினரு
மொருபோதுந்தீநெறிப்பா லொழுகாநல்லுத்தமருங்
கருவூலத்தமிழ்ச்சுவைதேர் கவிஞர்களும்போற்றிசைப்பத்
தெருவூடேபுறஞ்சென்றான் செங்கெறியின்றலைநின்றான். (உரு)

சென்றவன்பல்பதிவணங்கித் திருவரங்கப்பெருநகரிற்
பொன்றயங்குமரவணைமேற் பூங்கொடியாரடிவருட
மன்றலம்பைந்துளவணிமைம் மலைபோல்வான்றுயில்கூருந்
தென்றயங்குமியோகநிலை தெரிசித்தான்றிருவுழ்ற்றான். (உசு)

செங்கைதலைமேற்குவியத் தேகமுரோமஞ்சிலிர்ப்ப
வங்கநெகிழ்ப்புறவிழிநீ ரருவியெனப்பொழியமுதிர்
கங்கைதருதாண்மலர்மேற் கனிதமிழ்வாய்கொடுபாடிச்
சங்கையில்பேரானந்தச் சலதியிடைப்படிந்தானல். (உஎ)

அன்றுகுலசேகரப்பே ராழ்வானைப்பேழ்வாய்ப்பாம்
பொன்றணையாக்கொளும்பகவா னுரத்திலணிகவுத்துபமா
யொன்றவமைத்தானவனன் குறைத்ததிருமொழியனைத்து
மின்றமிழ்மாமறைநாலா யிரத்தினிடையமைந்தனவே. (உஅ)

அருண்மிகப்பெற்றுயர்பதவி யடைந்தகுலசேகரப்பேர்ப்
பெருமிதத்தோன்சரிதமிதிற் பேசினேன்சிறிதிப்பாற்
குருமொழிமெய்யெனமனத்திற் கொண்டசிவவாக்கியப்பேர்த்
திருமழிசையாழ்வான்றன் சீர்த்தியுஞ்சற்றிசைப்பேனே. (உகூ)

குலசேகராழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - எஉஎ.

---

பத்தோன்பதாவது

## திருமழிசையாழ்வார் சருக்கம்.

முற்பிறப்பின்ஞானசாத னந்துவக்கிமுற்றுறு
வெற்பிணைக்கருத்தனுமொர் மெய்யனிந்தமேதினி
நற்பிராமணக்குலத்தி னிற்பிறந்துநான்முகன்
பிற்பிறந்தவேளெனப் பிறங்கலுற்றுலாவினன். (க)

காசியாத்திரைக்கண்மிஞ்சு காதலாகியேகினு
னுசில்சீடன்வேண்டுமென் றவாவுஞானியானதோர்
தேசிகன்கடைக்குலத்தி னிற்பிறந்ததேகன்மிக்
கேசினுர்க்குமேத்தினுர்க்கு மின்சொலோதுகின்றவன். (உ)

செருப்பனந்தமாயவாறு செல்லுவார்தமக்கெலாம்
விருப்பமோடுநல்குவோனவ் வேதியன்றனைத்தெரிந்
திருப்பளித்தெனுதுதங்கை யிடில்கங்கையென்றல்கேட்
டருப்பணீடுபெருவமுற்று மதைமறுத்தறைந்திலான். (ங)

ஒப்புநீர்மைகண்டுதோல்கொ டுங்குசெய்சில்காசளித்
தப்புருபமாமவட்கு னண்ணனல்கலென்றுநேர்
செப்புசொல்லொடீதிபின்பு தின்னெறுததானபாழ்ங்
கைப்புநீடுபேய்ச்சுரைக் கனத்தகாயிதாடவே. (ச)

ஆட்டிநீயுமாடியஃதொ டைதிலிங்கணெய்தென்றுன்
கேட்டியைந்துமற்றொர்சொற் கிளத்திடாமலேகுமத்
தாட்டிகப்பிராமணன் றடங்கைநல்கல்கொள்ளநீர்
மாட்டிரண்டுமெஞ்சளங்கை வளைகளோடவிர்ந்தவே. (ரு)

அதுகுறித்துமொருவியப் படைந்திலானவண்ணமே
சுதுமெனக்கையிற்பிடித்த காயொடேங்குமேவினு
னிதுசெயும்பொருட்டுமுன் னியம்பியேவுஞானிதன்
பொதுநிலைக்கியைந்ததாமொர் புதியசொற்சொல்வானரோ. (சு)

தோற்குழித்தணீருமாங்கு தோன்றுகங்கைதானதன்
பாற்கொடுத்தகாசைநீ பரிந்துகேளெனச்சொனு
னேற்குமோவெனத்தளா திரந்துபெற்றுநல்கலு
மாற்குளானெனர்நால்வருக் கறைந்தவொன்றையருளினன். (எ)

கல்விசெல்வஞானமென்று கழறநின்றமூன்றுமுன்
னல்வினைப்பயன்கொடெய்தன் ஞாயமன்றினாலமேற்
பல்விதப்படச்சொன்மேன்மை பற்றியன்றுகற்றுளார்
சொல்விதிக்கடங்கிடாது சுத்தமானசோதியே. (அ)

கங்கையென்றனுதங்கை காணெனப்பகர்ந்தவ
ளங்கையாலுணர்த்தினே யாயனென்றுரைக்கலாஞ்
சங்கையற்றஞானிகட்கொர் சாதிபேதமோதிடார்
மங்கைபங்கனுதியோரை மானுமோனயோகரே. (கூ)

வே று.

சீரியகுரவனக்கவேதியற்குத் திகழருட்பொலிவுறத்திருத்திப்
பேரினமகந்தங்கொடுவளர்தெய்வப் பெரும்பொருளொன்றெனத்தேற்றி
நாரியோடிருக்கவேண்டுகின்றனேயோ நரரொலாந்தொழுந்தவமுனியா
யூரிடந்தோறுமமுதிரந்தருந்தி யுறுகதிவிழைதியோவென்றான். (க0)

குருமொழிவினவிச் சிறிதுநாணின்றிக் கொவ்வைவா யிதழுணக் கொடுக்குந், திருவனர்கலவி யினிதெனக்கருதுஞ் சிறுமதிதீர்ந்திலேனெ னலும், பருமணவிருநா ழியுமவன்கொணரப் படுசுரைக்காயுமீந் திவற் றை, யருமையாற்சமைத்திட் டிடுமவடனைச்சேர்ந் தநுபவியெனவனுப் பினனல். (கக)

தன்குலத்துயர்வுமவன்குலத்திழிவுந் தவிடளவேனுமெண்ணும
னன்குதாழ்ந்திறைஞ்சிப்போயினன்கருத்தி னுட்டமிஞ்சிடுதலினவைதீ
ரின்குளம்போலுந்தமிழ்த்திருவாக்கு மெழுந்ததாலீசனேமாலே
வன்குணச்சமயமுறைப்படிபோற்றி வத்துவொன்றென்பதோர்ந்தமைந்தான். (கஉ)

சைவர்தாஞ்சிவவாக்கியனெனப்பகர்ந்தார் தருக்குறும்வயிணவர்ப லரு, மெய்வருமுறையான்மழிசையாழ்வானென் வியன்பெயருரைத்த னர்வெகுநாள், கைவயிற்காயுமணலரிசியும்பல் கன்னியர்தம்மிடங்காட் டிச், செய்வதோர்கேலிக்கிலக்கெனப்புவியிற் றிரிந்தனன்சிந்தைதான்றி கைத்தே (கந)

கரும்பருந்திடுவோன்வேம்பின்மீதாசை கடுகளவெய்தினுமதனைப்
பெரும்பயனுகக்கருதலுமனம்போற் பெற்றலதமைவுறுவாறும்
பொரும்பனித்திரைநீர்க்கடல்சுலாவுலகிற் புலவர்பற்பலர்புகன்றுளரா
விரும்பதுபுரையுமின்பம்வேட்டம்பொ னேயுறழ்தவத்திவனிளைத்தான்.

நால்வகைக்குலத்துச்சிறுமியர்பாலு நாட்டினிற்கேட்டலுத்தப் பால், வேல்வலிக்குறவரினத்தொருபிரிவாய் வேய்பலவெட்டிநாருரித் துச், சேல்வரிவிழியார்பெறுமுறஞ்சமைப்பார் சேரியுட்சென்றொருகுடி லுட், பால்வழிந்தனையமொழியுநீடெழிலும் படைத்தொர்பெண்டனித் துறப்பார்த்தான். (கரு)

அங்கவடனித்துவசிக்கைகண்டுவந்து னன்னையெங்கப்பனெங்கெ ன்று, னெங்கசன்றனரோவென்றனளரிசி யிதுசுரைக்காயிதுசமைத்தென், பொங்கழற்பசிதீர்ந்திடும்படிபடைக்கிற் புண்ணியமுண்டெனப்புகன்று ன், கிங்கரேரிடையாண்மற்றமங்கையர்போற் சிரித்திகழாதுகைக்கொண் டாள். (கசு)

அவடனெஞ்சகத்திலிதுவுமோர்தேசத் தரிசியென்றேற்றனளதுகல்
கிவனுளந்தனிலிப்பண்பினோர்மகளு மிகத்துதித்தனளெனவியந்தான்
றவபலமனையவமுதொடெருழம்புஞ் சமைத்தொருகணத்தினிற்படைத்தா
ளுவகையோடுண்டாங்கிருந்தனனப்போ துற்றனரவளையின்றுள்ளார். ()

இம்மகடன்னைநாங்கொளவிவளை யின்றுளாரீகுவார்கொல்லோ
வெம்மதுமரபிற்கேற்றிடாதென்பா ரோவெனவெண்ணியேயிருந்தா
னம்மகட்பயந்தாரணுகிமுன்கண்ணுற் றச்சமுற்றடிகடாமீண்டு
சம்மதப்பட்டுவெருத்லியாமுணரச் சாற்றுவீரெனச்சரண்பணிந்தார். ()

பணிந்தவர்தமைப்பார்த் தஞ்சன்மினென்பாற் பரிவொடுவம்மினெ
ன்றழைத்துத், துணிந்துநும்மினத்திற் சேர்ந்தனன்கண்டீர் சோறுநும்
மனையிடைத்துய்த்தே, னிணங்கசைதின்பா ராயினுநல்ல நெறியுளார்தம்
மையேமதிப்பேன், றணிந்தணிசடையான் மாலெனுமிருவர் தமையு
மொன் றெனத்தெளிதகவேன். (கக)

என்றவருமது தயையினுற்பெரிதீ டேறிட வேண்டுமென்றிரந்தா
னன்றதெத்தகைத்தே யாயினுஞ்செய்வோ நாமெனவவரிசைந்ததற்பின்
மின்றனைப்புரையும் வடிவொடெம்மனையின் மேவியமகளைநான்வேட்டே
னின்றளித்திடவே வேண்டுமென்றிட்டா னீவதிற்றடையிலையெனினும்.

எம்மதுசேரிக் குடியிலெம்மினத்தோ டிசைந்துவாழ்வதுகடனென்றூர்
சம்மதமெனலு மக்கணங்கலத்தைத் தட்டியேமணம்புரிவித்துத்
தம்மதுதொழிற்செய் கருவியுமளித்தார் தவப்பிராமணன்மிகமகிழ்ந்தான்
மெய்ம்மதாதீத முணர்ந்துமோரிச்சை மேயதால்விளைந்ததிவ்வினையே.

நச்சுவார்க்கரிய சற்குருவலிதி னண்ணலுங்கங்கைசெய்கலமு
மச்சுளைக்காய்பச் சௌநெடுநாளா யவிர்ந்ததுமணலரிசியினுன் •
மெய்ச்சுவைரமுத மனையவெண்சோறு விளைந்ததும்விளம்புவாரில்லை
பொய்ச்சுகம்விழைந்தோரந்தணன்குறவர் புன்குடிற்புகல்சொனுர்பலரே.

ஆதலின்மடவார் நலகினைத்திடினு மகத்தினிலருவருப்புண்டா
மாதவர்தாமே தனித்துறற்குரியார் வனப்புருவாதியகருதிப்
போதநோமனத்தா ரவரொடுகலந்தே புனிதமாதவஞ்செயலாகு
மீதளவறுநூற் சம்மதமெனினு மில்லறந்தவத்தினுக்கிடரே. (உ௩)

அன்றியோர்சரத மரனரிமுதற்றே வநந்தமுமாகுமதறிய
நின்றிசத்தொளிர்வதென்னெனின்மடவார் நேயம்விட்டருந்தவமுயன்று
பொன்றிடாமுத்தி புகுந்தவர்பலரே புகன்றசொற்றவறிடாமனையோ
டொன்றிமாதவஞ்செய் துய்ந்தவர்சிலரே யுடல்வராக்கதிகுறியெனலே.

அத்தவப்பனவ னுங்குறுகுறவ ரறிதொழிற்கற்றதின்முயன்றிட்
டுத்தனனெடுநா ளொருதினங்கானத் தொருபெருமூங்கிலைத்தறிக்கப்
பத்தரைமாற்றுப் பொன்கொடுசெய்த பணமிகச்சொரிந்திடப்பயந்து
மத்தகமுரித்தோற் கருதியோர்தமிழ்ப்பா மதிமயக்கேலெனவகுத்தான்.

'சொன்னவன்சிறிது நிலைபெறுதோடித் தூரநின்றுற்றுநோக்கிடலு
மென்னவென்றங்கு வருமொருநால்வ ரிவன்றனைவினவினரியான்வெட்
டன்னமூங்கிலிலாட் கொல்லிதோன்றியதாலஞ்சினேனென்றலுமவர்தாம்
பொன்னதென்றுணர்ந்து நீயிவணில்லேல்போவெனவனுப்பிவிட்டப்பால்.

இத்தனைபித்தன் றானுமிவ்வுலகத் திருப்பதென்னெனவியந்தருகுற்
றத்தமத்தனையு மொருமுடிப்பாக்கி யாதவன்மறைந்தபின்கொடுபோஞ்
சித்தமுற்றவரா யிருவரையாங்கத் திரவியங்காப்பவைத்திருவர்
நத்தமுற்றமுதுண் டவர்க்கதுகொணரு நலங்குறித்தேகினரன்றே. ()

போயினர்தாமு மிருந்தவர்தாமும் பொருக்கெனவிருபிரிவினரே
யாயினரவரையிவர்கொலல்குறித்தா ரவரிவர்தமைக்கொலல்விழைந்தார்
பேயினுங்கற்போரணுத்துணையேனும் பிடித்திடாப்பெண்ணினும்பெருங்கான்
றீயினும்பொல்லாப் பொன்னிதுதீங்கே செயல்பெருவழக்கமாந்தினமே.

அன்னமுன்னயின்றார் பின்னருந்துநருக் காலமுங்கலந்துகொண்டணைந்தா
ரின்னவரவரைக் காண்டலும்பசியா விளைத்துளேமிக்கிணற்றிறங்கி
முன்னர்நீர்கொணர்மி னென்றனரவரம் மொழிவழியிறங்கலுமுன்னுங்
கன்னடுத்தலைமேற் போட்டிருவரையுங் காலனூர்க்கனுப்பினர்கடிதே. ()

அவரவூரிடம்போய்ச் சேரலுமிவரு மவ்வமுதயின்றவணடைந்தார்
தவசிகாமணியா மந்தவேதியன்சொற் சரதமாயிற்றெனத்தருவாழ்
சுவணபூமியினர் முதலினர்சொன்னார் சுமைக்கிடைக்காடுவேறென்றும்
பவமிலப்பனவன்மற்றைநாளவண்போய்ப் பார்த்துளம்பதைத்தனனென்றும்.

சிற்சிலர்சொலவுங் கேட்டுளேனதனாற் றிருவருட்செயலையார்தணப்பார்
பிற்சிலநாட்போ யொருதினமவன்றான் பிடுங்குளேரையைக்கையாற்பிடித்தோர்
நற்சிலையுருப்போற் றன்னிலைகூடி நளிர்பெருங்கானிடைநின்றான்
பொற்சிலைக்கரத்தா னனையகொங்கணன்விட் புலவழிபோயினனன்றே.

சூடவணெழுந்த தாற்கடிதிறங்கிச் சொக்கியமனநிலைதிரும்ப
நாடலுற்றிருவர் தாமுமிக்குறவாய் நன்மொழிசிற்சிலபேசி
யேடலர்மலர்ப்பைங்குழன்மினாளொருத்தி யின்பம்வேட்டக்குறச்சேரிக்
காடதில்வசிப்ப துணர்ந்துரைபெற்றுக் ககனமேற்சென்றனன்களித்தே.

அத்தகைப்பெரியோன் றன்னையுமயக்கு மாசையாம்பேயினை வெல்வா, ரெத்தகைத்தவரோ வவர்திறந்தெரிவா ரியாவரோ வன்றுதொட்டொவொர்நாள், சித்தர்சேகரனு மவனிவன்வசிக்குஞ் சிறுகுடிற்சேரலுண்டிவர்தாங், துய்த்தலுந்துண்ணியும் பெறும்பொருட்டியற்றுந் தொழிற்றுயர் சகித்திடாதந்தோ. (௧௧)

ஒருதினமணற்சோ றட்டவட்டணிக்கண் டுற்றவக்கொங்கண னம்மே, கருவிகளிரும்பாற் சமைந்தனவுதவாக் கழிவெலாங்கொடுவருகென்றான்; றிருவனுள்கொணர்ந்தா ளுடனவையனைத்துஞ் செம்பொனாச்செய்தளித்தகன்றான், வருதனுயகன்பா லவற்றினைக்காட்டி வகைபடச்சொற்றனண்மன்னே. (௧௨)

உடலவனவற்றை யக்கணங்கொடுபோ யூர்ப்புறத்துள்ளபாழ்ங்கிணற்றி
லிடவுரைத்திட்டான் விரைந்தவாறியற்றி யின்முகத்தோடுவந்திருந்தான்
கடலுடைப்புவியி லத்தகைமடவாட் காதலியாப்பெறுமவர்தாந்
திடமனத்துறவாற் பலபலபிறப்பிற் செய்தவச்செறிவினராமால். (கசு)

சாத்திரந்தகுதி பெரியவர்முறைமை சற்றுமோர்கிலாவன்றனது
மூத்திரப்புனலாற் பொன்செய்தானென்று மொழிகுவாரம்மொழிக்சமே
லாத்திரமவளுக் குதித்திடாவண்ண மடக்கலாமறிவுளாரறிமின்
பாத்திரமறியா ரெங்ஙனஞ்சொலினும் பழங்கதையெனவினுவுவரே. ()

அவ்விருபெரியர் தங்களிலொருவற் காடகவேடணையில்லை
செவ்விதழ்மடவா ரோடணையொருவன் சிந்தையிலில்லையித்திறத்தான்
மூவ்விதவேட ணையுந்தவிர்ந்துயர்ந்த முனிவருஞ்சிற்சிலரிருப்பா
ரெவ்விதப்பயனு மிறையருட்டிருநோக் கின்றெனிலெய்திடாததுவே. ()

ஆனைதான்படுக்கிற் குதிரையினுயர மாமெனும்பழமொழிப்படியே
யேனையவுணவுந் தினத்தகுகுறவ ரினஞ்செறிசேரியினிடையோர்
மானைவேட்டதனு லவனிலைதவறி மாழ்கிலன்மற்றையர்சிலரு
மூனை நீத்தேன்ற வளவினன்னடைதொட் டொழுகிடத்திருத்தினனுரைத்தே.(கஅ)

அப்படியிருந்துங் கருமமேபரமென் றலமருமந்தணர்பலரு
மிப்படித்தாழ்ச்சி யடைந்தனரெனமிக் கிகழ்ந்ததாலிவன்பலகவியுரன்
முப்படியினரு மறிதரவவர்தம் முறைமைமுற்றிகழ்ந்தனனவைதாஞ்
செப்படிவித்தை யனையபொய்ச்சமயத் தினர்க்குவப்பளிப்பவாயினவே.

அம்மகளுடலின் பருவமோரேழு மகலுமட்டின்பமார்ந்ததற்பின்
செம்மலர்த்தவிசின் றிருவுடனெழிலுஞ் சிவையுடன்கருணையுந்திறம்பா
மெய்ம்மறைத்தலையின்பொருளுடனுயிரும்விரவிடவிடுத்தகத்துறவோர்
தம்மதாசாரந் தலைக்கொடுசகத்திற் றனியனுய்ச்சஞ்சரித்தனனே. (உ0)

வேறு.

வெண்ணீறு மிகப்பூசி வேணியரன் றுதிசெய்வான்
மண்ணீடச் சாத்திநெடு மாலையொருக் காற்புகழ்வான்
றண்ணீருந் தீயுமவர் தஞ்சொருப மெனத்தேறுர்
கண்ணீர்விட் டழவிரண்டுங் கலந்தணிந்துங் களிகூர்வான். (உக)

மன்னர்முதற் சீரியர்தம் மனைதொறும்போய்ப் புகுந்தவருக்
கின்னலுநல் லின்பமுமிக் கீவதுவே தொழிலானுன்
றன்னகத்தி லிச்சையொரு தவிடளவு மில்லானை
யின்னவித மியக்குவது மிறைவனருள் விளையாட்டே. (உஉ)

காமருபூம் பொழிற்கச்சிக் கணிவண்ண னுமொருவன்
பூமடந்தை களிகூரப் பொருவருசெங் கோலோச்சு
சேமமுளா னெனக்கேட்டு நிகழ்சிவவாக் கியனென்னு
மாமழிசை யாழ்வானம் மன்னனரண் மனைப்புக்கான். (உங)

முந்தியொரு நாளமரர் முதுகுரவன் வரும்போதாங்
கிந்திரனுக் கிடையூறு யியைந்தாற்போ லிவன்சபையிற்
செந்திருவன் னூர்நடிக்குஞ் சிராட்டுத் திகழ்ந்ததனாற்
புந்திமருண் டிவன்றன்னைப் போவென்னப் புகன்றானே. (சச)

போவென்ற மொழியினவிப் பொருவரிய சினங்கொண்டு
கூவென்ற மனைவியுறு கோவிந்தன் றனைக்கண்டு
வாவென்ற வுடனுன்றன் மாசுணப்பாய் சுருட்டென்றோர்
பாவென்று முலகுணர்ந்து பகர்தரத்திற் பகர்ந்தானே. (சரு)

அப்பாடல் பகர்ந்தேகு மவனுடனத் திருமாலும்
பைப்பாயு மனைவியரும் பறிந்ததனாற் பணிசெய்யு
மெய்ப்பார்ப்பா ரனைவருமவ் வேந்திடம்போய் நடந்தவிதந்
தப்பாமற் புகன்றினிய தமிழ்ப்புலவன் றயைவழியே. (சசு)

மாயவனை மீட்டுமுன்போல் வயங்குறக்காட் டுதியின்றே
னீயறிய விக்கணமே நிரைபடமாய் குவமென்று
ராயமொழி வினவுதலு மவனடுங்கி யப்புலவன்
போயவழி விரைந்தோடிப் புதைபொருட்காண் டலிற்கண்டான். (சஎ)

கண்டவன்றாண் மலர்மீது கனகமணி முடிதோயத்
தெண்டனிட்டென் குற்றமுற்றுந் திருவுளத்திற் பொறுத்தருள்செய்
மண்டலத்தென் னனையார்க்கிம் மடமையுநின் னனையவருட்
டொண்டர்கட்குப் பொறுமையதுஞ் சுயகுணமன் றோவென்றும்.(சஅ)

கோயிலின்மால் வாராமற் குலத்தொடுவே தியரென்முன்
மாயினுநா னுடலோடு வாழ்ந்திருக்கத் துணிவேனோ
வாயிரம்வாய்ப் பாம்பணையா னுளனிற் றெரியாதுஞ்
சேயிழையார் மயலாலுஞ் செறிந்ததிப்பொல் லாங்கென்றும். (சகூ)

இத்தனைக்குங் காரணநின் னியற்றமிழ்ப்பாட் டொன்றென்று
மத்தனையு நீசகித்திட் டாலுமிந்த வகிலமவன்
சித்தமெனு முனதுபுகழ்ச் சிறப்பழியா தென்றுமிவ்வா
றுத்தமப்பண் பாயமொழி யுணர்ந்தழுது பலசொன்னான். (ருo)

சீர்கிளர்செந் நாப்புலவ னெனச்சிலமா னிடருரைக்கும்
பேர்கிளரத் தவமுனிவன் பெருமனத்தி னிடையங்கா
ணீர்கிழிந்த வடுவேபோ னில்வுசினத் தகையாறிப்
பார்கிழிக்கு மருப்பேனப் படிவமுங்கொள் பவற்பார்த்து. (ருக)

கணிவண்ணன் வாவென்றான் காமருபூங் கச்சிநகர்
மணிவண்ணா நீபோக வாண்டாமுன் மன்னுமிடந்
துணிவுடனே சேர்குதியான் றுணைவருகின் றேனெனமுன்
னெணியிண்டு பாடலத னேனைபுட விசைத்தானே, (ருஉ)

கச்சிவிட்டு வரும்போது கவிஞன்பின் செலுமாய
னிச்சிறுபாக் கேட்டிடலு மியாவருக்கு முன்போனு
னச்சிறுவிக் கிரகப்பி னருந்தவன்போ யினனவன்பி
னச்சியமைத் தவனுன நரபதியா தியர்போனர். (௩௩)

அவ்வண்ணந் திருக்கோயி லணைதலுமாங் குள்ளவெலாஞ்
செவ்வண்ண மாயினவாற் றோர்வேந்தன் றவற்பணிந்திட்
டிவ்வண்ண மியற்றினையா லியான்செயுமா றென்னுளனீ
யெவ்வண்ணஞ் செய்தாலு மிகபரத்திற் றருமென்றே. (௩௪)

செயத்தகுநல் லுபசாரத் திரளனைத்துஞ் செய்ததற்பி
னுயத்தகுமா றுரையெனலு மொண்டமிழ்ப்பா வல்லார்க்கு
நயத்தகுணத் தவத்தோர்க்கு நல்லவனு நடந்தென்றும்
வயத்தகுவ ரனையார்க்கோர் மறலியா கெனச்சொல்லி. (௩௫)

அப்பதிவிட் டனையபதி யநந்தங்க டொறுமேகி
மெய்ப்பதிக முதற்பாடல் விளம்பிமிக விளையாடி
யெப்பரமெய்ப் பரமோயா தின்னுமொரு தாய்வயிற்றி
லுய்ப்பதற்கொப் பாததுவோ வதனிடைப்புக் குறைந்தானே. (௩௬)

* முப்பெயரு மொருபெயரா மொழிகுவா ரெதிர்முரணி
யப்பெயரோவ் வொன்றினரு மயலெனச்சொல் வாருமுளா
ரெப்பெயரு மெவ்வுருவு மேகனதா மெனுமறைகள்
பொய்ப்பெயர்ப்புன் மதக்குறும்பர் போராட்டம் பொல்லாதே. (௩௭)

சைவவயி ணவப்பொதுவாஞ் சமயாதீ தப்புலவ
னுய்வடைந்த சரித்திரமீண் டுணர்ந்தளவி லுரைத்திட்டேன்
மெய்வழியின் றுறைநின்று விண்டுவின்மா யைத்திறத்தாற்
பொய்வழிச்சென் றதின்மீண்ட புண்ணியன்சீர் புகல்வேனே. (௩௮)

திருமழிசையாழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - எ௮௫.

---

* முப்பெயர் - சிவவாக்கியர் - திருமழிசையாழ்வார் - செக்காப்புலவர் - என்பவை.

## இருபதாவது
## தொண்டரடிப்பொடியாழ்வார் சருக்கம்.

மெய்ப்பிரகாசம டைந்தவரேயுணர் விண்டுவைவெகுசென்மத்
தப்பிரமேயனெ னக்கருதித்தொழு மன்புடையோனொருவ
னெப்பிரமாவுமி னிப்படையாகல மெய்துநிமித்தத்தால்
விப்பிரநாரா யணனெனுநாமம் விளங்கொருமகவாகி. (௧)

பாரில்வளர்ந்தந லெவ்வனமென்றுசொல் பக்குவமெய்திடலுஞ்
சீரியகந்தா வனமதுசெய்து செறிந்தபெருந்தைமுதற்
கூரியநல்பக ரப்படுபுட்ப குலங்களெலாமிகவைத்
தாரியனைத்தரு நாரணனன்ப ரவாவுறநல்கினனே. (௨)

அன்னவரன்புமி கக்கொடுதொண்ட ரடிப்பொடியென்றொருபேர்
பன்னவிளங்கினன் மங்கையர்மீதுறு பற்றணுவளவுமிலா
னின்னவிதந்தெரி வுற்றரிதன்னெடி லக்குமிதேவியினா
லுன்னதுமாயைவி னோதமொர்சற்றிவ னொன்றல்செயென்றனளால். ()

அன்னமுயர்த்தவ னைத்தருநாரண னங்ஙனமேசெயுமா
றுன்னலுமங்கக ரிக்கணிகைத்திர ளூடொருமேதகையா
ளின்னவனைப்புண ராதுயிர்வாழ்கல னென்றொருதுணிவெய்தித்
தன்னதுகோலமெ லாமும்விடுத்தொரு தாதியுருக்கொண்டாள். (௪)

பொன்மணிபட்டுடை யாதியிகழ்ந்து புனத்துளவின்குறடா
நன்மணியுங்கம லத்துறுகொட்டையு நன்குதரித்துமினு
ரின்மணிடத்திவ ளொப்பவரின்றென வேகுலவிக் * குளமீ
தொன்மணிரந்தர மாகவிரந்தமு துண்டுமுலாவினளே. (௫)

கண்டவர்சிந்தைக ளியாவுநெகிழ்ந்து கரைந்தனகாசறுமெய்த்
தொண்டரடிப்பொடி நெஞ்சினுமன்பு சுரந்ததுணர்ந்தினிமால்
கொண்டணைவானென நம்பியமாது குலாவவனந்தனின்மேய்த்
தெண்டனிழைத்தித னிற்பணிசெய்திடு சீர்தருகென்றிடலும். (௬)

இப்பணியென்னது சொந்தமதேமு னெவர்க்குமளித்திலனீ
செப்பணிநேர்முலை மாதிதில்ஈசை செலுத்தறகாதென்றான்
றப்பணிடாவழி யேன்றனசெய்குவ றந்தருளேயவெனத்
துப்பணிவாய்குழ றிக்கணினீர்சொரி யும்படிகெஞ்சினளே. (௭)

பெண்ணினலார்கய மோதிடில்வன்புறு பேயுமிரங்குமெனிற்
றண்ணியபேரரு ளாரணன்னன்பர் தமதுளமென்படுமோ
நண்ணியவாறுசெ யென்றனனம்மொழி நல்வரமென்றளிகூர்ந்
தெண்ணில்பணிப்பொலி விற்சிலநாளு மியற்றினளின்புறவே. (அ)

எத்தனைவிரவை ராகமடைந்தவ ரென்னினுநாரணனூர்
சித்தமயக்கநி னைத்திடின்மையல் செறிந்துழல்வாரெனலா
லத்தனியன்பனு மம்மகளும்பழ கார்வமலிந்திடலு
மெய்த்தமலர்க்கணை யங்கசன்வந்து நெடுஞ்சமர்செய்தனனே. (௯)

* குளம் - நெற்றி.

அங்குறுமாதைவி ஞூர்நசைவிட்டிவ ளுல்வருவாளெனவே
யிங்குசொல்வாருமு ளாரவரோர்குடி விற்புகவேயொருநாள்
கங்குலுநீர்பொழி மங்குலும்வந்தன காமமயின்றிட்டார்
பைங்குதிரைச்சக டோன்வரல்கண்டு பதைத்துவருந்தினரே. (கo)

அன்றமுதற்பக னந்தனவேலை யருக்கன்மறைந்திடலுங்
குன்றுதலின்றிய காமநல்வாரி குளித்திடும்வேலைசெய்தார்
மின்றுணையன்னவ ளன்னவனெஞ்சம் விலைப்படுமாறுதெரிந்
தின்றுமணைத்தலை போகுவனென்ன வியம்பியகன்றனளே. (கக)

மின்னனையாளவள் வீடுபுகுந்து வெறுத்தனவெஃகியணிந்
தின்னவடன்றலை யேறியபித்த மிறங்கியதென்றுறவோர்
பன்னவிருந்தன ளப்பனவன்பரி தாபமலிந்தினிநா
மென்னசெய்வோமென வன்றுபகற்பணி யாவுமியற்றிலனே. (கஉ)

அப்பகலோருக மாகிநிகழ்ந்த தருக்கன்மறைந்திடலுந்
துப்பவிர்வாயவ டன்னெதிர்சென்றுயர் தொண்டரடிப்பொடிதா
னிப்படியென்னை வெறுத்தனையேயென வேங்கினனுங்கவளோர்ந்
தொப்பறுநல்லுரை யோதியணைந்தது யோகைவிளைத்தாளே. (கஙு)

இன்னவிதத்திரு வோருநடந்திட வியாவருமோர்ந்திகழ்சொற்
பன்னல்விளைத்தன ரங்கவரஞ்சிலர் பைங்கிளிவாகனனுன்
மன்னரையும்பொரு ளாமதியாதுயர் மாதவருங்கெடுவா
ரென்னலுமாதர்செயுந்துபடங்கொடி தென்னலுமன்னினவே. (கச)

தன்குலமாதை மணந்திடலுந்தவ சிற்கிடரென்றுதணந்
தின்குணனுகி மலர்த்திரண்மாயவ னீரிருதோளொடுதா
ணன்குபுனைந்திட வேமுயலந்தண னஞ்சுறழ்வஞ்சகமார்
புன்குலமாது முயக்கமயக்கிடை புக்கதொரற்புதமே. (கரு)

வேசியெனத்தெரி வித்துமிடுந்தவ வேடம்விடுத்துமிகப்
பேசியுமன்புட னுசைவிடாதுபி ராமணன்வந்துபுணர்ந்
தாசியுரைப்பத றிந்தவள்பொன்றரி னன்றியிணங்குகிலே
னேசியடிப்பவர் சிற்சிலருற்றன ரென்றுமியம்பினளே. (கசு)

முன்னுரிமைத்திற மெய்தவணங்கி முயங்கிமுதிர்ந்தமயற்
றன்னுறல்கண்டு வெறுத்தழலேநிகர் சொற்களுரைத்தவளைத்
தன்னுயிரென்றுணர் தொண்டரடிப்பொடி சாமவர்நேர்தளர்வுற்
றின்னுயிருய்வகை யின்றியொர்தன்குடி லேகிவிழுந்தனனே. (கஎ)

அன்றிரவிற்றிகழ் திங்களின்வெய்யி லழற்றலுமாரமலைத்
தென்றிசைவாயு வடர்த்தலும்வேள்கணை சிந்தலுமாதியவா
முன்றிகழ்காமவி காதநினைந்துமு டைந்தபல்பாடல்களியாருன்
சொன்றிடினுஞ்சில ரெள்ளுநர்நன்கு துதிப்பவர்பற்பலரே. (கஅ)

எத்தனைதூரம் வெறுப்பினுமாத ரிடத்தநுராகமுறுஞ்
சித்தமமாதவ னுக்குமளித்த திருட்டரியோர்முதுமைப்
பத்தனிலம்மகள் கண்ணெதிரேகியோர் பைம்பொற்கலமதனை
யத்தவனல்கின னிற்கெனவன்பொ டளித்துமறைந்தனனே. (கக)

அக்கலமீங்கக ரத்துறுகோயில கத்தினதாதலினுன்
மிக்கவருச்சக னுதுகளவிலும் விண்டுவதின்னதலம்
புக்கதெனச்சொலி யேகினனவ்வழி புரவலனேவலர்போய்க்
கைக்களவோடுகொ ணர்ந்தனரம்மகள் காவலனெதிரஞ்சி. (உ0)

தொண்டரடிப்பொடி நல்கியதாவொரு தூயவயோதிகர்கைக்
கொண்டடியாளிட நல்கினனென்னமெய் கூறினளங்கவனைக்
கண்டதனுண்மைவி னவினனியானது காரணமோதறியேன்
புண்டரிகக்கண் முராரிதனணைமெய் பொய்யலவென்றனனே. (உக)

அனகனிதோதலு மாடகவட்டி லடைந்ததலந்தெரியுங்
கனவுபெறும்பன வன்றலையிற்கரி யோனுவேசமதா
யெனதருளாடலி தென்றனனங்குள ரியாவருமவ்விருவர்ப்
பனகவணைப்பர னடியவனென்று பணிந்துபராவினரே. (உஉ)

வஞ்சகவேசியெ னும்பெருநிந்தை மறைந்துயர்மாண்பினளா
யெஞ்சலில்சீர்கொள்வை குந்தமடைந்தன ளேழையரிற்கொடிதா
நஞ்சனையாரெனி னுந்தவசீலர் நயந்தணையப்பெறினோர்
கொஞ்சமுமேம பயந்தொடராநெறி கூடுதறிண்ணமதே. (உங)

அத்தவவேதிய னகியதொண்ட ரடிப்பொடிமீதிரிதான்
வைத்தபொய்மாயையை நீக்கியருட்பெரு வாழ்வுறநோக்கினனு
லுத்தமயோகியர் தம்மநுபூதியொ ருங்குபொறுத்துலவா
முத்தமிழ்மாலைக ளுந்துளவோடவன் மொய்ம்பிலணிந்தனனே. (உச)

தூயவனைச்சில நாள்விலைமாது தொடர்ச்சியின்மாழ்கவிடுத்
தேயநலஞ்செ யெனத்திருமங்கை யியம்பியவண்ணமநாண்
மாயனியற்றலை யெண்ணிலவன்பெரு மாயையுமன்னவள்பாற்
பாயதிறத்துள டக்கமெனச்சில பக்குவர்செப்புவரோ. (உரு)

ஆசறுசில மிகப்பெறுதொண்ட ரடிப்பொடியாழ்வான்முன்
வாசமலர்ப்பிர மாவருளாயுள் வகுப்பினுமிஞ்சியநா
ணேசரனேக ருவப்புறுமாறு நிலத்திலிருந்தரிதாட்
பூசனையன்பர் மலிந்தவைகுந்த புரத்திலடைந்தனனே. (உசு)

ஆன்றுள தொண்டரடிப்பொடி நாமமணிந்ததொரந்தணன்முன்
னேன்றுதவம் பலநாள்செய்து மாயனெழிற்பதமேவல்சொனேன்
றேன்றுளிமல்கு மலர்ப்பொழில்சூழ்தரு சீரங்கத்திடையோர்
பான்றுதிகூறுபு பாணுழ்வானுறு பரிசதுபகர்வேனே. (உஎ)

தொண்டரடிப்பொடியாழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - அகஉ.

---

## இருபத்தோன்றுவது
## திருப்பாணாழ்வார் சருக்கம்.

எண்ணில்பல பிறவிகளி லெட்டெழுத்து மிகவோதும்
புண்ணியத்தோ டேதோவோர் புரையுமியற் றியவொருவன்
றிண்ணியநாற் குலத்தோருந் தீண்டாவைந் தாங்குலத்தின்
மண்ணிலுயர் சோணாட்டோர் மகவாகி வளர்ந்தானே. (க)

அம்மகனைப் பெற்றார்த மருந்தவமும் பெருந்தகவு
மிம்மனுல கிடத்தியாரு மியம்பிடக்கேட் டிலனியானென்
சம்மதத்தாற் சிலபுலவர் தமைப்போற்சொல் லவுமாட்டேன்
மைம்மலைநேர் நெடுமேனி மாயனறிந் தனவாமே. (உ)

மேற்குலத்திற் சிலர்நரக வேதனைப்பட் டிடல்போற்கீழ்ப்
பாற்குலத்திற் கதிபெறுஞ்சில் பக்குவரி லிவனொருவன்
மாற்குரிமை மிகவெய்தி மாமிசங்கள் ளருந்தானாய்
நோற்குநரி லொருவனென நுவனடைதொட் டொழுகினனே. (௩)

இளமையினிற் புனிதமிக வெய்தினனாய்த் தினந்தினமுந்
துளசிமுத லியவெடுத்துத் தூயபுனற் காவேரிக்
கிளர்மணலிற் கோயில்செய்து கிடந்தருள்வாற் பூசித்துத்
தளர்வொழிய முதற்கதியே தருகெனநன் கிரந்தானே. (ச)

அதுமுதிர வவனினத்தா ரனுகுதற்கு மச்சமுற்றார்
சதுவகைய குலத்தோரிற் றக்கவர்மிக் குபசரித்தா
ரிதுதுணையாற் பிறமுயற்சி யாதொன்று மிலனானன்
பதுமன்முதற் றேவர்களும் பார்த்துமிக வியந்தாரே. (௫)

அந்நாளைப் பலகனவி லரங்கநகர்ப் பெருங்கோயிற்
பைந்நாகத் தூவணையிற் படுத்திருக்கும் பரந்தாமன்
மைந்நாகக் கிரிபோலும் வடிவுமிரு மடவாருஞ்
செந்நாவாற் றுதித்துய்ந்தார் திரள்களும்பார்த் துவந்தானே. (௬)

அன்னதவத் தருட்பாண னங்கொருநாள் வழக்கம்போற்
றன்னதுகை யாற்பூசைச் சடங்கியற்றி யுறும்போது
பொன்னரங்கக் கோயிலுக்குப் புனல்கொணரப் போந்தவர்தா
மின்னல்விளைத் திகழ்ந்துகல்லா லெறிந்துதுரத் தினரன்றே. (எ)

அஞ்சியவ னேடுதலு மவர்புனற்கொண் டங்குற்றார்
கஞ்சியல்பாம் பணைக்கிடந்தா னற்கோயிற் கதவவர்தா
மிஞ்சியபல் பாடுபட்டும் விடுபட்டுத் திறக்கவில்லை
கெஞ்சிமிகத் தொழுதெழுந்து கெட்டேமென் றிரங்கினரே. (அ)

நம்முரிமைத் தொழும்பனுக்கு நலிவுசெய்தீ ராதலினிவ்
விம்முதுய ருறப்பெற்றீர் விரைந்தவனைத் தொழுதழைத்தின்
றிம்முறைசெ யருச்சகன்மீ தேற்றிவரு வீரென்ன
மெய்ம்முதலா மரங்கேசன் விளம்பொலியொன் றெழுந்ததுவே. (௯)

அக்கணமே யுற்சவச்சீ ரவிர்தரவன் னவர்போயம்
மிக்கவனைத் தேடினரவ் வேளையவன் வெருவாய
துக்கமொழிந் திவர்வாராத் தூரத்தே கோயிலமைத்
திக்கனைப்பெற் றான்பூசை யினிதியற்றி யிருந்தானே. (௧௦)

தேடியவர் காணாமற் றியக்கமுற்றுச் சிறப்பனைத்துங்
கூடியவர் பலர்களுமக் குளிர்துறையி லுறநிறுவிப்
பீடியன்மெய் யறிஞர்சிலர் பெயர்ந்தவன்போம் வழியேபோய்
நாடியவ னோடாம னலம்புகன்று பணிந்தாரே. (௧௧)

பணிந்தவர்க டமைப்பார்த்துப் பாணாழ்வா னெனைக்கொல்லத்
துணிந்தடித்துத் துரத்தியநீர் தொடர்ந்துதொழ லேனென்றா
னணிந்தபடைச் சங்காழி யரங்கனுனை யழைக்கின்றான்
விணிந்திரா தியர்மதிக்கு மேதகவெய் தினையென்றார். (௧௨)

என்னைநீர் தொழத்தகுமோ யானங்கும் வரலாமோ
முன்னைநா ளயன்விதித்த முறைபிறழ்ந்த தோவென்னத்
தன்னையே தாழ்த்திடுமத் தவன்றனையன் னவர்தொட்டீர்த்
துன்னைநேர் வார்சகத்தி லொருவருமின் றெனக்கொணர்ந்தே. (௧௩)

ஆழியுளான் சொற்படியே யருச்சகன்றன் பிடரேற்றி
யேழிசையாழ் முதற்கருவி யெல்லாமு மினிதொலிப்பப்
பாழிமதக் களிற்றினநேர் பாகவதர் துதிபாட
வாழியதென் னரங்கநகர் மறுகினிடை வரலுற்றார். (௧௪)

அருச்சகன்செஞ் சிறைப்புள்ளா வவன்மேற்கொள் பாணாழ்வான்
மருச்செறிபைந் துளவணியு மாயவனைத் திகழ்வுறலும்
விருச்சிகநேர் கொடியோரு மிகவெருண்டு கரங்கூப்பிக்
கருச்சளந்தீர்த் தருள்சேவை கண்டனமென் றாடினரே. (௧௫)

பூவிலெவ னோவொருவன் பொருவில்பெருந் தவஞ்செய்திட்
டாவியுடைக் கலுழன்மிசை யனையமுகுந் தனைக்காண்பான்
பாவிகளு மதுபெறலாம் பரமபத மரங்கமென்றுங்
காவிரியே விரசையென்றுங் கணித்தறிந்தோர் சிலர்தாமே. (௧௬)

அவ்வண்ண மங்குள்ளவணி கிளர்சந் நதிச்செல்காற்
செவ்வண்ணக் கதவங்க டிறந்திடலாற் சேவித்தா
ருய்வண்ணப் பாணாழ்வா ரொருபதுபாட் டுரைத்திடலு
மைவண்ண மாலவனை வாய்மலரா லுட்கொண்டான். (௧௭)

விழுங்கிடனு மவன்காலின் விரலிரண்டுங் கடைவாயி
லொழுங்குபடத் திகழ்ந்ததனு லுருத்திராங் கிசம்போன்று
னழுங்குமனத் தினராகி யடியர்பல ரலமந்தார்
செழுங்கருணைக் கடற்பெருமான் றிருவுளப்பாங் குணராதே. (௧௮)

போதநெடு நாட்சென்றிப் பூதலத்திற் புகழ்வாய்ந்த
நாதமுனி யென்றொருவர் நலந்திகழ்வை ணவசமயத்
தாதரமாய் விளங்குற்று ரவரரங்கந் தொழுநாளி
லீதழகன் றனக்கெனநன் கிறைஞ்சியபின் மறைத்தானே. (௧௯)

அண்டமுழு துண்டுமிழ்ந்த வலர்கமலத் திருவாயாற்
பிண்டமொன்றை முற்றயின்றும் பெருவிரலோ ரிரண்டுமெட்டுங்
கண்டவர்தா மிகழவெள்ளிக் காட்டியுற்ற கருங்கள்வன்
கொண்டவெண்ண மெவராலுங் குறித்துணரக் கூடாதே. (௨௦)

துன்றடியார் களைத்தனது சொருபத்தே கலந்துகொள்பண்
பின்றரிக்கென் றேகருது மிளம்பருவ வயிணவர்க்குத்
தென்றமிழ்ப்பாட் டொருபத்தாற் றிருப்பாணாழ் வானவனூ
டொன்றலுற்ற கதிசொன்னு லொருசிறிது மினியாதே. (௨௧)

பத்துப்பாட் டுரைத்ததிருப் பாணனைத்தன் கனிவாயாற்
றுய்த்துக்காட் டியவரங்கன் றுதிக்கவியா யிரங்கேட்டு
மெய்த்துப்பா ருலகினிஉத் திடையவனை விடுங்கொடுமை
முத்துப்போன் றேதிகழு மூதறிஞ ருணர்வாரோ. (௨௨)

சேணுடை ருணர்வினுக்குந் தெரிவருஞ்சீர் வாய்ந்ததிருப்
பாணாழ்வான் சரித்திரமிப்படி சொலக்கேட் டளவுரைத்தே
னீணுகப் பாயலுளா னிசநெறியே கடைப்பிடித்த
மாணார்ந்த பரகாலன் மாட்சியுஞ்சற் றுரைப்பேனே. (௨௩)

திருப்பாணாழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ- திருவிருத்தம் - அ௧௫.

---

## இருபத்திரண்டாவது
## திருமங்கையாழ்வார் சருக்கம்.

கள்ளரியாமெனக் காசினியோரிடம்
விள்ளநாணமு ருவியனுர்குலத்
துள்ளமாதவ மோருருக்கொண்டென
மள்ளர்கூற்றுறழ் மங்கைமன்ருேன்றினன். (க)

பிறந்தவூருமப் பிள்ளையைப்பெற்றிடச்
சிறந்தமாதவஞ் செய்தவர்பேர்களு
மறந்தழைக்குமுற் சென்மமுமாதிய
பறந்தசெம்புட் பரியினன்றேர்வனே. (உ)

விண்டுபத்தி ரண்டொருமெய்யுருக்
கொண்டுவந்த குணங்கொடுநீடியே
தண்டுசக்கரம் வாள்விற்றரித்துநற்
ருெண்டுகோயி ருேறுஞ்செய்தெய்த் தானரோ. (௩)

கற்றிடாது வருங்களவுத்தொழில்
பற்றிநாளும் பயின்றுபொன்றேடியே
நெற்றியிற்றிரு மண்ணிடுநேயர்பா
லுற்றிறைஞ்சி யுதவுதலாற்றினன். (ச)

ஒருமனேப்பி னிராவிலொருத்திகை
திருகியேகலங் கொண்டனன்சேவைநே
ரிருகட்கொண்கனங் கியானெனக்கேட்டலுங்
கருணைநாரண னென்னக்கழறினள். (ரு)

அச்சொற்கஞ்சி யவள்கையிற்கொண்டதும்
வைச்சிருந்தசில் பண்டமுமற்றவர்
துச்சுவக்கச் சொரிந்துவிட்டோடினு
னிச்சலிக்கதை நீணிலஞ்சொல்வதே. (சு)

சக்கரத்தினைத் தந்துறழ்நாரினன்
மிக்கதாங்கத வித்தண்டினல்வென்றே
புக்கவண்செறி பொற்றிரள்கொண்டுபின்
பொக்கமின்றிய புண்ணியச்சிந்தையால். (எ)

சீரங்கப்பணி செய்ததுஞ்சிற்சில
பேரங்கத்தைப் பெருநதியூடுதாழ்த்
தோரங்கக்கதி யீந்ததுமெண்ணில்பல்
லோரங்கன்குனைக் கின்றதுண்டேரோ. (அ)

முட்டுப்பட்டறி யாவிவன்மூர்க்கத்தால்
வெட்டுப்பட்டவ ரெத்தனையோவியன்
கட்டுப்பட்டவ ரெத்தனையோகையின்
குட்டுப்பட்டவ ரெத்தனைகோடியோ. (கூ)

அன்னவண்ண மடற்பரகாலன்று
மின்னன்மாநிலத் திற்பலர்க்கீந்தவர்
பொன்னனைத்துங் கவர்ந்துசில்புண்ணிய
முன்னவின்ற முறையின்முயன்றனன். (கO)

வே று.

வாட்கலிய னெனவுலகோ ரச்சத்தா லிடும்பெயரும் வகித்துக்கொண்டான், கோட்கலுழப் பரியுகைப்போ னடியரலார்க் கெமன்போலுங் கொடுமைசெய்வான், வேட்கடுக்கும் பேரழகும் விசயனையே நிகராகும் வென்றிப்பேருந், தோட்கமைந்த பலபடையுஞ் சுமந்துள்ளான் * முதனுமஞ் சொலச்சோம்பானே. (கக)

மன்னர்மன்ன னெதிர்த்தாலு மவன்படையோ டறத்தடியும் வலிமைவாய்ந்து, மின்னவய வீரனர சாட்சியினை யணுத்துணையு மிச்சித்தில்லான், பொன்னருமை யெனச்சேர்ப்பார்க் கிடர்விளைத்து நாரணனைப் போற்றுமன்ப, ரென்னவெளி வேடமட்டிற் றிகழ்வார்க்கு முவகைமிக வியற்றினனே. (கஉ)

எந்தவிதச் செயல்களுந்தன் னருள்வழியே செயுந்திருட னெனப்பன்னாலுஞ், சந்ததமும் புகல்பகவன் றிருவுளத்திற் கருணையொரு சற்றேதோன்றிற், றிந்தநிலத் தொருகளவு மிவன்றனக்கன் றெய்தாம லேக்கற்றேகி, வெந்தநெருப் புறழ்கானில் வழிப்பறிவேட் டொருசெடிக்கீழ் வேங்கைபோன்றான். (கஙு)

உச்சியிற்சூ ரியன்குலவு முருமத்தே தனிப்பரியூர்ந் தும்பர்தாமு, நச்சிடற்காம் பணிபலபூண் டாடையும்பொன் னுலணிந்தோர் நரனங்குற்று, னச்சிறுவன் றனைக்கண்டாற் பரியிரிய வுகைப்பானென் றடுத்தபோது, பச்சிறகார் சிறுபுட்போற் பாய்ந்துகடி வாளமதைப் பற்றினனே. ()

பற்றிடலு நடுநடுங்கி மணஞ்செயப்போ மெனைக்கொல்லேல் பாவம் வேண்டல், பெற்றிவுளி யுடன்செலவிட் டிடிற்போது மெனக்குழறிப் பேசலுற்று, னெற்றியினீற் றணியவிர்ந்த தன்றிமண்பூ சியதழும்புநிலவி னுலும், வெற்றிமலி சக்கரத்தா னடிமையெனத் தொழுதுதுணை மிகச்செல்வானே. (கரு)

---

* முதனுமம் - அட்டாக்கரம்.

துணைச்செலுங்கா ரணமென்றோ வெனவினவிற் சொலக்கேண் மின் றுணிந்துவெளவு, மிணைக்கையராந் தன்னினத்தா ரியாவருஞ்செவ் வேளடிமை யேகதேசங், கணைக்கலந்த விசயனிடங் கலகமிட்ட வேடுவ னைக் கருதுவாருண், டணைக்கடன்மேற் றுயின்றவன்ற னடிமையில னெனத்துயர்மிக் களிப்பாரென்றே. (௧௬)

அன்றுகன காசுரன்செந் நீர்குடித்த வாயிரம்வாய் களுமொன்று கிக், குன்றுறழ்தோ ணிரைக்கணியாக் குடர்கவர்கை களுமிரண்டாக் குறுகிக்கோபந், தன்றாக நுகர்பரியும் பிடிபடமேர்ச் சரியமென்வாய் சொல்லற்பாற்றே, மன்றுடையா னயன்மகவான் முதலியதேவரும்விய ந்து மதித்திட்டாரே. (௧௭)

வேடமல்வா றிடலருமை யன்றன்று நடுநடுங்கி வெயர்த் தென்னுவி யோடனுப்ப வேண்டுமெனக் கெஞ்சியதே மிகவருமை யொருகணவிற் பாடல்விழைந் தென்னிடத்துந் திருவல்லிக் கேணியிலப் பாசாங்கிட்டா னுடறிய விளையாடச் சோம்புகின்று னவன்மனமே நகைக்கு மன்றே. ()

மாவில்வந்து தன்கைவசப் பட்டமண மகனையந்த மறவர்கோமா, னீவிசனப் படவேண்டா மாயுதங்கொண் டமர்செயினே நின்னைக்கொல் வேன், பாவியலேன் பகவனடி யவர்தொழும்பிற் காத்திருடும் பண்பி னேன்கா, ணுவியம்போன் றிருத்தியெனத் தேற்றியவன் பணிகழற்ற லுற்றானன்றே. (௧௯)

துப்பனைய திருவடியின் விரலணியைக் குறிப்பாகச் சூ*ழொன்றன்றி யெப்பணியு மொவ்வொன்றாக் கழற்றியவ னுத்தரியத்தினிற்சேர்த்திட்டு மப்பணியை விடமனமில் லாதவனுக் கடித்துநெகிழ்த் தானப்போதே மெய்ப்பகவ னிவனெனவே முதலாய ஞானமெலாம் விளங்கிற்றம்மா. ()

காரணனென் றிவனறிந்த வுடனவன்புள் ளரசின்மிசை நளினைபாகஞ் சேரமணி முகிலேபோற் சிவனயனிந்திரன்முதலோர்செறிந்துபோற்றப் பாரணங்கிற் காச்சுமக்கும் புடையைந்துந்தோனுன்கும்பதுமச்செங்கட் சீரவிர்மா முகமுமெழிற் றிருவடியா தியுந்தெரியத் திகழ்ந்தானன்றே. ()

புறவெளியிற் கண்டபடி யகவெளியி னிலும்பெரிது பொலியப்பெ ற்றான், மறமுழுதுந் தவிர்ந்தறமே வடிவானன் பழவடியார் மரபிற்சேர் ந்தான், றிறமலிசெந் தமிழ்ப்பாடல் பலபலவந் துதித்தொலிக்குஞ் சிறப் புந்தோய்ந்தான், றுறவினரா சாரமொடு திருப்பதிதோ றேகியன்பிற் றுதிசெய்தானே. (௨௨)

அலந்தருபோர்ப் புலவருய வகப்பொருளா தியுவிளக்கி யவர்தம்வாயா னலந்திகழ்நாற் கவிராச நம்பியென்றோர் திருப்பெயருநவிலப்பெற்றான் சிலந்தியுனுங்குரங்கினமாந்தேவருக்குத்துணையானேன்றிருக்கனேக்கங் கலந்தமனத் தினர்க்கரிய காரியமொன் றுள்ளதெனக் கழறுண்ணுதே.

* ஒன்று - கால் விரலிலுள்ள மோதிரம்.

அவன்பிறந்த தலமெனவுஞ் சிலர்பகர்சீ காழியிற்போ யமரரேத்த
நிவந்தபுகழ்த் தாடாளன் சந்நிதியே தஞ்சமென நெடுமோளுற்றுன்
சிவன்றனருட் பெற்றதிரு ஞானசம்பந் தனுமாங்கு திகழ்ந்தானங்கா
ருவந்திருவர் களுமொவ்வோர் காற்பரிதி மதிகலந்தாங்குறுவதுண்டே.

இத்தனைபா லப்பருவத் தீசனருள் பெற்றனனென் றிவன்வேட்டாங்கே
யத்தனைகோ ரந்தவிர்வுற் றரியருள்பெற் றமைகருதி யவனும்வேட்டான்
பித்தனெனத்திருடனெனப்பேசினுங்காத்தருள்வதொருபெருந்தேவென்னச்
சித்தர்முத லோர்பகர்தல் சரதமெனி லவருரிமைத் திறமெய்யாமே.()

சிவனையிழி தேவதையாச் செப்புசிறு வயிணவருஞ் செங்கட்கார்போல்
பவனையொரு பசுவென்றே பகருமிளஞ் சைவர்களும் பழுதில்காழித்
தவரிருவர் களுமுறவாய் நிகழ்ந்தனரென் றுற்சகியார் சண்டையிட்டுக்
கவலைமிகவொருவனைமற்றொருவன்வென்றானெனப்பகர்ந்துகளிப்பாரன்றே

சதுர்வேத சித்தாந்தந் தனிற்குலவு சட்சமயத் தலைவர்தம்மு
ளிதுகாறுமொருவரைமற் றொருவர்பொரு தழித்தகதை யில்லையில்லை
பொதுவாயபரஞான முதியாமு னிளம்பருவப் புதல்வர்போல்வா
ரதுதாழ்வென் றிதுமேலென் றறிந்தளவிற் புகன்றசின்ன ளயர்வதுண்டே. (உஎ)

மழவிடைமேற் சிவனெதிரில் வரமுயலுஞ் சைவனுக்கும் வயினதேய
னழகியபொற் பிடரிலரி யவிர்தரவே கருதும்வயி ணவர்க்குந்தாங்கள்
பழகுதவ முதிர்தரலுந் தெய்வமொன்றே யெனுஞான பலமுண்டாமேற்
கழல்கடித்தும் பால்குடித்து முய்ந்தவருட் பகைவருமோ கருதுவீரே.()

என்றெய்வம் பெரிதென்போன் கன்னியொப்பான் றெய்வமொன்றேயெனத்தேர்ந்துள்ளோன், குன்றென்ன முலைபருத்துக் கொண்கனுக்காம்பருவமுறுங் குமரிபோல்வா,னன்றென்ன லழிந்திடவு மாமெனலுன்டாகவுஞ்செ யருள்வாய்ந்துள்ளோ, னென்றென்ன வுலகுபுகழ் மதலையயந்துளவனிதை யொப்பானன்றே. (உகூ)

தெய்வமிரண் டென்னுமவர் பிறவாத முத்தியினிற் சேர்வதின்றாற்
சைவகுரு வாயகவு ணியன்மனத்திற் சிவன்வடிவே சங்கமூது
மைவனநா ரணன்வடிவும் வாட்கலியன் மனத்திலரி வடிவந்தானே
செய்வழிகு லப்படையோன் வடிவுமெனல் குருவாணை நிசங்கண்டீரே.()

நான்முகனு மகத்தியனே முதலாய முனிவருநகுவெண்டிங்கள், போன்முகங்காட் டிடுமெளவை வள்ளுவனு தியாஞ்சில் புலவர்தாமு, நான்முகத்துந் தெய்வமொன்றே யெனநுவன்றா ரொருசமய நோக்கத்தின்னோர், மேன்முகப்பே றடைந்துமுதற் பிடித்தபிடி கடைப்பிடியாய் விளம்பினரே. (௩௧)

அருட்பேறு பெற்றவரைச் செயல்செயினு மழகேயா மஃதெய்தார், பொருட்பேதஞ் சொற்பேத மிகவுணர்ந்தா பிரம்பனுவல் புகன்

றிட்டாலு, மிருட்பேயன் ஞரிகழ்ச்சிக் கடல்கடக்க மாட்டாம லினைவா ரந்தோ, தெருட்பேற்றிவ் விருவர்களுஞ் சீகாழிப் பதிவிழிபோற் சிறக் குநாளில். (கஉ)

தாடாளன் கோயிலிற்சில் பொருள்களைமூ துணர்விளிஞ் சைவர் வௌவிக், காடாய வயிற்புதைப்பக் கண்டுபேர காலனவர்க் கட்டிக் கொண் டாங், கேடாம தனைக்கனவி லிட்டெடுத்தான் முன்னருய்த்தா னிவன் கைதன்னில், வாடாங்கி யிருந்துமவர்க் கொன்றில்லான் கருணைமிக வள ர்ந்ததாலே. (கக)

மெய்ப்பிரம குலமங்கைவாழ் குரவனவன் கருணையினை வியந்தங்காளி லப்பிழைசெய் தாரொதிர்நும் முயிர்பிழைத்த தாச்சரிய மாமென்றோதி யொப்பில்சிவன் றிருவடிவி லவன்பாதியானவித முணரக்காட்டித் திப்பியநா ரணன்பணியத் திருக்கோயி லிடஞ்செய்துயச் செய்வித்தானே.

அன்புமவன் பெருந்தகவு மறிந்துபர காலன்வியந் தார்வமெய்தி, யென்புபெண்ணு கிடப்படித்த நின்வாயா லொருகவியெம் மிறைமேற் பாடிப், பின்புனடி யவரறியும் படிசெயெனப் பெரிதிரந்தான் பேணுந் தொண்டர், மன்புனைவார் சம்மதத்தா லெம்மதமு நிலைபெறுஞ்சீர் வயங் குமாறே. (கரு)

இடங்கொண்ட நெஞ்சகத்துக் கிணங்குவன பள்ளிகொண்டா னிரு தாளென்னத், தடங்கொண்ட தாமரைசூழ் தருகுடந்தைத் தலங்குறித் துச் சாற்றலுற்று, னடங்கொண்டான் றிருவடியைப் புகழெனச்சொற் றிலனவனு நவிலவில்லை, கடங்கொண்ட கரப்பிரமன் மனைவியுளக் குறிப் புணர்தல் கடினமாதோ. (கசு)

எத்தலையோ நாரணர்மான் மழுவணிந்தான் றனைத்தொழலு மெழிற்சங்காழி வைத்தகரத் தானையுமவ் வாறுபல வுருத்திரர்கள் வணங்குமாறுஞ் சித்தமறி தரக்குரவன் றிருவடிசான் றுகவொவ்வுந் தெருட்சிவாய்ந்த வித்தகரோ நான்முகனை வியாதன்முத லினையுறழ் விரகுள்ளோரோ. ()

வெண்ணீறிட் டோர்பலருஞ் சிவனென்றுந் திருமணிட்டு விளங்கு வோராம், வண்ணீர்மை யோர்பலரு மாலென்றும் பெரியோர்சொல் வகை நன்கோரார், புண்ணீடுமனத்தினராய்ப் புலர்வதன்றி யின்பமொருபோது மெய்தார், தண்ணீரு நெருப்புமவர் தங்கிடமென் றுணர்ந்தரிய தவஞ் செய்யாரோ. (கஅ)

அந்தவண்ண மங்கைமன்னன் சரிதமுழுதறிந் துரைத்தற் கருகனல்லேன் கந்தரநேர் நெடுமேனிக் காருத்தன்றிரு வடியிற் கலந்தேபோனு னிந்தமட்டி லிதைமுடித்துப் பொய்கையார் பூதத்தாரொழிற் பேயாரென் செந்தமிழ்ப் பாவலர்மூவர் சீதரனுலுய்ந்த கதை செப்புவேனே. (கக)

திருமங்கையாழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - அஎச.

# இருபத்துமூன்றாவது

# மூன்றாழ்வார் சருக்கம்.

பொய்கையார்பூதத்தார் பேயாரென்னப்
புகலுமொருமூன்றுதமிழ்ப் புலவரன்னோர்
செய்கையாவனவநந்த மிருக்கலாகுந்
தெளிந்துலகிலுள்ளவர்கள் செப்பவில்லை
யுய்கைமாத்திரம்பலமா வுரைக்கின்றார்க
ளொவ்வொருவர்தாமுமொரு நூறுபாட
லைகைதீர்ந்துயற்பொருட்டு முய்ந்தவாறு
நாரணனைத்துணைக்கொண்டே நவின்றுள்ளாரே. (க)

மன்னுதுவாபரயுகத்திற் பிறந்துவாழ்ந்த
மனிதர்களிற்சேர்ந்தவரா வருக்கின்றார்கண்
முன்னும்வயிணவர்துதிக்கும் பதின்மர்தம்மின்
மூத்தவர்களிவர்களென்றே மொழியவேண்டும்
பொன்னுமடவாருமண்ணும் வெறுத்துநெஞ்சம்
புனிதமுறுந்துறவிகளே போதஞான
மென்னுமொருகடலினுக்கு வரம்பேயானு
ரிகபரசாதனங்குறித்த வீடுற்றாரே (உ)

மெல்லியலார்வயிற்றகத்திற் புகுந்திடாமல்
வேறுதலங்களிலுடல்கொண் மேலோரானார்
கல்லிடத்தும்விண்ணிடத்து மலையுஞ்சித்தக்
கணங்களையோர்பொருளாகக் கருதிடாதார்
வல்லிருப்புத்தடிச்சமணு வுருக்கொண்டோனு
மாயவனேயெனுந்துணிவின் மயக்குறாதார்
நல்லிதயத்தடியவருக் கடிமையாகி
நாட்டிலமுதிரந்தருந்து நசைவாய்ந்தோரே. (ந)

சோமசூரியருடனக் கினியுமான
சுடர்மூன்றுமனையவவர் சூடிக்கொண்ட
நாமநலத்தாற்பேயார் சாத்தனுனை
நற்பூதத்தார்கயிலை நாதனுனைக்
காமர்மலிபொய்கையார் கமலனுனைக்
கடப்பரெனக்கழறவல்லார் கழறலாகு
மாமவருக்கத்தகைவாய்ந் துள்ளவாறு
மறியாதாரிளம்புலமை யாளர்தாமே. (ச)

பேயனைத்துமையனூர் சேனையென்றும்
பெரும்பூதமத்தனையும் பிநாகபாணித்
தூயனதுசொந்தமென்றும் பொய்கையெல்லாந்
தொல்பிரமதேவன்மனைத் துணையேயென்று
ஞாயமெடுத்துரைத்தாலு மவர்க்கொப்பாக
நவிலல்பிழையென்றிகலு நரரெல்லோருந்
தீயவரேயவர்திருமா லகண்டனென்னத்
தெளியாரேகண்டனெனச் செப்புவாரே. (௫)

அத்தகவோர்மூவர்களு முறவோரல்ல
ரவரவருந்தனித்தனியே யகிலஞ்சூழ்ந்து
சித்தமதிற்றோற்றியவா றுடல்செய்து
சீதரனாலயந்தோறுந் திருப்பாட்டோதிக்
கைத்தலங்கள்கூப்பியன்பிற் றெண்டனிட்டுக்
களிகூருந்தகவோரே கரியமாய
னுத்தமசூத்திரதாரி யென்கைதோன்ற
வொருதினத்திற்றிருக்கோவ லூர்சேர்ந்தாரே. (௬)

அன்றிரவிற்காற்றுமழை யிருளுங்கூடி
யதனாலவ்வூராரு மலமந்திட்டார்
சென்றிடுமூவரிலொருவ ரங்கோர்சின்னத்
திண்ணையிற்போய்ப்படுத்தார்பின் சென்றோர்தொண்ட
ரென்றியக்கந்தீர்தரச்சற் றிடநல்கென்று
ரிருவருமுட்கார்தலுமற் றிவர்போல்வாரு
நின்றிடமொறங்கணைந்தார் மூவர்தாமு
நெடியபிரானருள்கருதி நிலைபெற்றாரே. (௭)

ஒருவர்படுத்திடற்காகு மிருவரானு
லுட்காரத்தகுமூவ ருறலானின்றே
திருநெடுமாலருட்டீப மேற்றுமாறு
செப்பினார்தனித்தனியத் திருடன்றானு
மருவுமவரிடம்வினவா தவர்கள்போலும்
வடிவெடுத்தங்குடன்கலந்தான் வருத்தமிஞ்சிற்
றருவொருநான்காயதென்னென் றுசாவும்போதி
லுங்களைச்சேர்ந்தவன்றானென் றொளித்திட்டானே. (அ)

அக்கணமம்மூவர்களுந் தம்மைத்தேறி
யடிபணிந்துவந்தொளித்தோ னரியென்றோர்ந்து
முக்கனியுங்கலந்தாற்போற் கசிந்துகொந்தார்
முகுந்தனுளத்தருள்சுரந்து முனைசான்மூக்குஞ்

செக்கர்நிறச்சிறைத்துணையுங் கொள்ளும்புள்ளிற்
றிருமகளுந்தறைமகளுஞ் சேரச்சேவை
மைக்கடுக்குமிருளொளியா மாறுநல்கி
மனக்கவலையத்தனையு மாற்றினனே (௯)

ஒருவரிருவரைவணங்குந் தன்மையாங்குற்
றுள்ளவராமூவர்களு முற்றபின்னர்
வருநெடுமாலவராடிப் பாடிவீழ்ந்து
வசமிழப்பக்கண்டுமலர் வனசம்போலுந்
திருவிழியாற்றேற்றிநுந்தம் வேட்கையாது
செப்புமென்றனவரினியோர் தேகம்வாராப்
பெருநெறியேயெனச்சொன்ன ருடன்றன்றுளிற்
பேதமறக்கலந்துகொண்டு பெயர்ந்தானன்றே. (௧0)

அன்னவர்தஞ்சரிதமளப் பிலவேயாகு
மச்சாவதாரமென வரிதன்கோயிற்
றன்னலுறுமாழ்வாரின் மூவராகித்
துலங்குகின்றரதீதநிலை தோய்ந்துய்ந்தோரா
லின்னம்வெகுவாயவர்தம் பெருமைசொல்ல
வெனக்காசைவிவரமொன்று மெய்தவில்லை
யென்னதுகற்பனையாச்சில்புலவரோபோன்
றியம்பிடுதலென்றருதிக் கேற்றதன்றே. (௧௧)

மருக்கோகனகமலர்ச்செந் திருவைமார்பில்
வைத்தபிரானுலகளந்த வடிவங்காட்டுந்
திருக்கோவலூரதனி லாழ்வார்மூவர்
திரும்பாதபரமபதஞ் சேர்கைசொன்னேன்
பெருக்கோதக்கடல்புடைசூ ழுலகமேத்தும்
பெருமைமிகுவானுமா மலையிற்றோன்றித்
தெருக்கோலத்திருக்குருகூர்ப் புளிக்கீழ்ப்புக்க
செய்யசடகோபனிசை செப்புவேனே. (௧௨)

மூன்றுழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - அஅ௬.

---

## இருபத்துநான்காவது

## சடகோபாழ்வார் சருக்கம்.



பாண்டிநாட்டிடைப் பைந்தமிழ்க்குன்றினீ
ரீண்டியோடு மெழிற்பொருநாநதி
தாண்டித்தென்றிசை யிற்றனிக்காரிமன்
னூண்டிருந்த வணிநகரொன்றரோ. (௧)

* மேழியங்கொடி மேயதுவெண்டிரை
யாழியிற்றுயில் வான்றலத்தான்றது
தாழிபோலும் தயிலக்கிணற்றது
கீழினத்தர் கெழுவரித்தாயது. (௨)

† வாணுமாமலைப் பேர்கொளம்மாநகர்ப்
பூணுறழ்ந்து பொலியும்புரவலன்
மாணுறுங்கொடை வள்ளன்மைவாய்ந்துளான்
றூணுமாலயன் றுடொழுந்தன்மையான். (௩)

நங்கைதன்னொடு நன்மகப்பேறுவேட்
டங்கைகூப்பி யருந்தவஞ்செய்ததாற்
கங்கைதோன்றிய காலுடைக்கார்முகில்
சங்கையின்றிய தண்ணருட்பெய்ததே. (௪)

அன்னவன்மனை யாள்வயிற்றுருவ
னென்னமேம்படொ ராருயிரேய்ந்தது
மன்னர்மாட்சித் துவாபரமாயுகத்
தின்னதீற்றுறு மாண்டிடையென்பரால். (௫)

பத்துமாதமப் பாவைநல்லாள்வயிற்
றத்தவிக்கிர கத்துருவாயபின்
னித்தனைக்கண் வரத்துணிந்திட்டபோ
துத்தமிட்ட தொருசடமாயையே. (௬)

சுகனுமஞ்சுமத் தொல்பகையைத்தனுண்
மிகநிறைந்து விளங்குமெஞ்ஞானத்தா
லகலநோக்கி யழன்றனனக்கணங்
ககனவாழ்க்கைக் கடவுளராதியோர். (௭)

கூறினர்சட கோபனென்றோர்பெயர்
பேறிதென்னப் பெருந்தகையன்னையு
மீறில்கீர்த்திகொ ளப்பனுமின்புற
மாறில்சீர்கொடு வந்தனன்மண்மிசை. (௮)

* அக்கரராசன் வேளாளனாதலின் - மேழியங்கொடி மேயதாயிற்று.
† வாணுமாமலை - என்பது நாங்கூனேரியென வழங்குவது.

அந்தநாள்கலி யார்
ணிந்துமுற்றி விசாகத்திலேய்ந்ததாற்
செந்தகைச்சிவன் நீக்கட் * புலிங்கமாக்
கந்தவேள்வரு காலமுமாயதே. (கூ)

மற்றமைந்தரில் வாய்விடுத்தேங்கிலான்
பெற்றதாய்முலைப் பாலுணவும்பெறான்
வற்றலாகி மடிந்திலனட்குநாண்
முற்றலெய்தி முகமலர்ந்தானரோ. (க0)

கண்டுதாய்முத லோரரிகண்ணரு
ளுண்டுநீடுறு முண்மையுணர்ந்திலார்
மண்டுதங்குல மக்கள்பண்பெய்துவான்
றெண்டுகோயி றெருறுஞ்செய்தெய்த்தார்களே. (கக)

தவமுழம்பக்குவ மெய்தியுந்தவர்
கவலையெய்தன்முன் கண்ணனைப்பெற்றவ
ரவளவற்புதங் கண்டுமெவுணரா
லிவனிறுங்கொலென் றேங்கியதொத்ததே. (கஉ)

வேறு.

விரசைபோலவட கரையிலோரவைகுந்த மேவியபொருநைத்தென்
கரையிலுள்ளது கழனியுஞ்சோலையுங் காமரும்பொலிவுற்ற
தரசனுகிரம் மாதிநாதப்பிரா னுள்வதுபணிக்கோமான்
புரையில்பூம்புளி யாயுறங்காதுறும் புகழதுகுருகூரோ. (கஙு)

நெடியமாயவ னேபரமென்பவர் நிறைவதுநிகமாந்த
மடியரெய்திடக் கொடுப்பதுசித்தர்வந் தாடிடச்சலியாத
திடிவினுவுபாம் பினமெனப்புறநெறி யினாநடுங்கிடுமாண்ப
தொடிவில்சித்திய முத்தியும்வேட்பவர்க் குதவுதென்குருகூரே. (கச)

நான்மறைப்பொருட் பதரலாதனவெலா நறுந்தமிழிடைப்புக்க
தான்மகோடிக ளேபரமென்பவ ரனுகரியதுபைங்கண்
வான்மயூரமுங் கிள்ளையுங்குயிலுநேர் வனதருதொனிசால்வ
தூன்மகஞ்செயற் கிசைவுறுவேதிய ருறைதிருக்குருகூரோ. (கரு)

அத்தகைத்திரு நகர்ப்பெருங்கோயிலி லணிமுகிலெனவாழும்
வித்தகத்திரு மால்செயுமாடலின் வியன்பலர்சொலக்கேட்டு
நெய்த்தபூங் † குவ ளைத்தொடைக்காரிமன் னேரிழையொடுஞ்சாலு
மெய்த்தவச்சிசு வொடும்பலர்தம்மொடும் விரைந்தவணடைந்தானே. ()

சென்றநாளில்வை கானசவாகமஞ் செப்பியமுறைசற்றுங்
குன்றலின்றிய வாறபிடேகமுங் குலவுதீபமுமேலோர்
தின்றலேயெனத் தகுநிவேதனங்களுஞ் சிறப்புமிக்குறச்செய்து
தன்றவப்பய னுமகற்கருள்செயத் ததியிதென்றிரந்தானே. (கஎ)

* புலிங்கம்-தீப்பொரி. † குவளைத்தொடை-நீலோற்பலமாலை-வேளாளர்க்குரியது.

அக்கணத்திலக் குழந்தைபோ *யரவா சாம்புளியதன்பொந்திற்
புக்கதோர்ந்திலர் கண்டனரியாவரும் பூரணமதியொன்று
தெக்கணத்திசை நோக்கமும்வலக்கையிற் றிகழ்சின்முத்திரையுங்கீழ்க்
கைக்கவானுமே தகுபதுமாதனக் கவினுமுற்றதுபோன்றே. (௧௮)

தந்தைதாயெனு மிருவருமீதுநந் தனயனன்றொருதெய்வம்
விந்தையாதுசெய் வதன்பொருட்டோவிவண் மேயதென்றார்சென்றார்
பந்தைநேர்முலைப் பாலுணுமதலைபின் பயந்தனரோவின்றே
நிந்தைதீர்ந்துமுக் காலமுமறிந்தவர் நிகழ்த்திடத்தகுமன்றே. (௧௯)

ஆனைமாமுக மைந்துகைத்தலங்களோ டமைந்துபல்வயின்மேவிச்
சேனைமாமுத லியெனவைகுந்தம்வாழ் சிறப்புடைப்பெருந்தேவன்
வானைவையகத் துடனளந்தவன் சொலால் வகுளமாலிகைசூட்டி
யேனையோருண ராவொருமந்தன மிசைத்துருக்கரந்தானே. (௨௰)

கண்டபேர்சில ரவனிவனென்றனர் காமனென்றனர்சில்லோர்
புண்டரீகனென் றனர்சிலர்மாலெனப் புகன்றனர்சிலராற்கீழ்த்
தொண்டர்சூழ்குரு வென்றனர்சிலர்சிலர் தோகைவாகனனென்றார்
விண்டபேருமற் றையருமீங்கிவனென விழைந்தனர்சிலர்மாதோ. (௨௧)

முன்னினைப்பவ ரிடர்கெடுத்தலிற்கரி மொய்த்தொடையலின்மாரன்
பன்னிடுஞ்சொலிற் பிரமன்வாழ்தலத்தின்மால் பழுதில்கைக்குறிதன்னால்
வன்னிநேத்திரச் சிவன்பிறந்திட்டநாள் வாய்ப்பினில்வடிவேலா
னென்னியற்கைகொள் குழந்தைமாமுனிவனெற்கியாவுமாங்குரவோனே.

அந்தவாறவ னசைவறவிருப்பதோர்ந் தகிலமீதினில்வாழு
மைந்தரிற்பலர் வந்துவந்திறைஞ்சுபு மனத்தினண்ணியவாழ்வுற்
றிந்தமாதவ னிதயமேமாயன்வா ழிடமெனுந்தெளிவுற்ற
சந்தவான்கதை பற்பலவவற்றினுட் டலைமையாயதுசொல்வாம். (௨௩)

வேறு.

இமையமலை யடிவாரத் தியற்றமிழ்வா சனைசிறிது
மமைவுரிய தாங்குலத்தோ ரந்தணன்மெய் யறிவுள்ளோன்
சிமையநெடுங் குடையானைத் தேசிகனா வருகென்று
கமைமுதற்சொல் குணங்கள்கொடு கடினவுபா சனைசெய்தான். (௨௪)

தமோரு நிலைநின்று தவஞ்செயுமத் தக்கோற்கு
நெடுநாட்சென் றொருகனவி னீண்டபிரா னெதிர்தோன்றித்
தொடுநீர்ப்பா ரினருணராச் சோதியொன்று காணுமத
னுடுபோதி நின்குறைமுற் றொழியுமென வுரைசெய்தான். (௨௫)

* அரவாசாம்புளி - ஆதிசேடனாகிய புளியமரம், அது திருக்குருகூர்க் கோயிலிலுள்ள தலவிருட்சம்.

அக்கனவு கண்டுவிழித் தலுமொளிதோற் றியதுமகிழ்ந்
தொக்கடங் தனைதுபோ யுயர்புகழ்த்தென் குருகூரிற்
சக்கரத்தோ னருட்கடலின் றண்ணமுதத் திரளனையான்
புக்கவுறங் காப்புளியின் பொந்தகத்திற் புகுந்ததுவே. (உகூ)

அங்குபோய்க் குருபரன்ற னணிவதனங் காண்டரலும்
பொங்குதமிழ்ச் சுவையமுதப் புணரிநிலே விளங்கியது
பைங்குவளைத் தார்க்காரி பாலனென வருமவனு
மிங்குவரு கென்பான்போ லிருவிழியுங் கொடுபார்த்தான். (உஎ)

மெய்த்திருநோக் கிருள்கெடுக்கும் வீறுணர்ந்தும் வேதியன்றான்
சித்தினது வயிற்றகத்திற் சிறிதுபிறந் திடுமாகி
லெத்தினைத்தின் றெங்குகிடந் திடுமென்று னதற்குவிடை
யத்தினைத்தின் றங்குகிடந் திடுமென்ன வறைந்தானே. (உஅ)

அம்மொழிகேட் டடிபணிந்தா னுயிரம்பாட் டந்தாதிச்
செம்மொழிப்பா மாலையொன்றுஞ் செப்பிடக்கேட் டெழுதிவைத்தான்
மெய்ம்மொழிப்பா வலர்தன்சீர் மிக்குணர்வார் வெள்ளறிவாற்
கைம்மொழியென் றிகழ்கின்றோர் கடையர்களிற் கடையோரே. (உகூ)

மாலடிமை யெனுந்தகவு * மாறநன்னாட் டிவன்போலுஞ்
சீலரிலா மாட்சிமையுந் தெரிந்துசிலர் மாறனென்றார்
சாலவிகற் பித்திகலுஞ் சமயவாயு மீர்த்துத்தன்
பாலடக்கும் பண்புணர்ந்தோர் பராங்குசனென் றுரைத்தாரே. (௩0)

அப்படிச்சின் னுள்கழித்திட் டடிமைபுகு மந்தணன்று
னிப்பரம குருவன்றி யினியொருதே வறியனெனு
மெய்ப்பதிகஞ் சூட்டியதால் வியன்மதுர கவியெனும்பேர்
தப்பறமா நிலமுழுதுஞ் சாற்றுதல்கேட் டுவப்பெய்தி. (௩௧)

தன்னுருவங் கரப்பதெண்ணுந் தகியினிற்று மோதரன்றான்
மன்னுதிரு வைகுந்தம் வாழ்வுறுமோர் வயிணவனாய்
முன்னுதித்தெம் பெருமான்றன் மூதுலகில் வருகென்று
னென்னுமொழி வினவுதலு மெழிற்றிருவாய் மொழிமாறன். (௩உ)

வைகுந்த மன்றியொரு வயினறியேன் வான்பரமும்
பொய்குன்று மாயையுமாம் பூரணன்மா லெனத்தேர்ந்தேன்
மெய்குன்றப் பகர்ந்தனையே வேறோநீ யெனலுமவ
னுய்கும்ப லுன்னுயர்ச்சி யுணர்வுறச்செய் தேனென்றான். (௩௩)

என்றலுமாங் கொருசோதி யிலங்கியதஃ தோடதுவா
யொன்றலுற்று னிவற்கந்த வுணர்ச்சியுற்ற தருமையல
கொன்றருந்தும் வல்லவுணக் குலக்கனகன் மகற்குமன்றே
துன்றலுற்ற தருட்பெருமை சொல்லிலடங் குவதன்றே. (௩௪)

* மாறநன்னாடு - பாண்டிநாடு.

அப்பாலம் மதுரகவி யாழ்வானம் மாழ்வானென்
றிப்பாரின் மிகப்பேசி யெம்மதமுந் தம்மதமா
மொப்பாரி லிறுவினன்முன் னேரைந்து சமயிகளுங்
கைப்பாமென் வயிணவமோர் கதிரவன்போற் பிறங்கியதே. (௧௫)

களம்படுநெஞ்சினன் முதலாங் கடவுளரைப் பழித்தோது
மிளம்பருவ வயிணவருக்கியற் றமிழ்ச்சீர்க் குருகூரான்
விளம்புமொழி யினியாது விண்டுவையோர் கண்டமெனச்
சளம்படுவா ரித்தகைய சாதமளப் பிலவாமே. (௧௬)

இந்தமட்டிற் சடகோப னெழிற்சரித முடித்திட்டுப்
பிந்தவருந் தேசிகனும் பெருமணவா ளனுமாகு
மந்தவயி ணவக்குரவ ரதுபெருமை தெரிந்தளவிற்
செந்தமிழாற் சொல்கின்றேன் றெளிஞருவப் புறுமாறே. (௧௭)

சடகோபாழ்வார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௨௩.

---

## இருபத்தைந்தாவது
## இரட்டைக்குரவர் சருக்கம்

அண்டகோடிகளையெல்லா மலர்ந்தசெங்குமுதவாயா
லுண்டளித்தருளுமாய னுந்தியாங்கமலப்போதிற்
பண்டளவிறந்தவாய படைப்பினுமழியாவேதங்
கொண்டயனெனுநாற்சென்னிக் குரவன்வந்துதித்தான்மாதோ. (௧)

அவனுவன்மறைகளுன்கா லறுவகைநெறியுண்டாகிச்
சிவனுமைபரிதியானைச் சென்னியோன்செவ்வேளென்றிட்
டுவகைகூர்சமயமைந்து மொன்றுபட்டொழுகவோது
மிவனைநல்கரியென்றேத்து மேகமுந்தனித்ததம்மா. (௨)

பிரணவங்கருணைசுத்தம் பெற்றத்தாற்செய்யும்பெற்றி
யரணமாக்கொள்ளுமேன்மை யாறுமுள்ளனவானுலுஞ்
சரணடைந்தவரைத்தெய்வந் தனுட்கொளுமெனுமவ்வைந்துங்
கரணவாதனைதீர்த்தாண்டு காக்குமென்றிடுமற்றென்றே. (௩)

ஐந்துடனெறியொன்றேனு மணுகுருதவற்றினூடு
நொந்துறுபலருமற்று நுவல்பலசமயத்தோரு
மிந்துதவிதயத்தண்ண லியற்றுநற்றிதியேவேட்டுப்
பைந்துணராதியிட்டுப் பல்விதத்திறைஞ்சுவாரே. (௪)

பொய்வழிச்சூனியச்சொற் புல்லராதியசில்லோருந்
தெய்வமேயானென்றோதச் சிறிதுநாணுருமல்லா
ரெவ்வகைச்சமயத்தோர்க ளென்னினுமிலங்குமாழிக்
கைவல்லான்கருணைவேட்டுக் கசிதருகருத்தினோரே. (௫)

மூவலில்பரத்தின்செய்கை மூன்றினுள்ளினியதான
காவலேவடிவமான கமலநாண்மலர்க்கண்மூர்த்தி
யாவலேக்குறிக்கொண்டேய்ந்தோ ராடகன்மகன்முன்னகப்
பாவலர்பனுவல்கூறப் படுமவர்பலபல்லோரே. (கூ)

நாரணன்பரமென்றோர்ந்து நாடொறும்வணங்கிப்போற்றி
யாரணம்பகர்ந்தமுத்தி யடைந்தவர்பலராலும்
பாரணங்கறியப்பொல்லாப் பறிதலேயினரோடுள்ளார்
போரணங்கொழியவென்ற புகழ்க்குருவொருவன்றனே. (எ)

அக்குருப்பெருமைகோடி யறைபவரறைவாரன்னேன்
றிக்குமுற்றுணர்வியாசன் செய்தசூத்திரங்களெல்லா
மைக்குழம்பனையமேனி மாயன்மாட்சிமையேயென்னப்
பக்குவமுள்ளார்தேறப் பரிந்துதாபித்தானம்மா. (அ)

வடமொழிப்புலமைவாய்ந்தும் வயிறுநொந்தீன்றவன்னே
குடமுலேப்பாலுமுண்ணக் குருபரன்முதலோர்கூறுந்
திடமுறுதென்சொற்பாடற் சிறிதுமெள்ளாதசிந்தை
யுடனவிர்ந்தவனேமுற்று முடையவனெனும்பேருற்றன். (கூ)

ஆதலாலவன்றன்சீட ராகியக்கரமோரெட்டான்
மாதவன்றன்னேநாடும் வயிணவப்பெருங்குழாத்தோர்
வேதநூல்கற்கின்றாரும் வியன்றமிழ்த்துதிகற்பாரும்
பேதமொன்றின்றியொன்றாக் கூடிபுபிறங்கினரே. (க0)

வடகலேபயில்கின்றாரும் வயங்குதென்கலேகற்பாரு
மிடம்வலமாகநம்மாட் டிருமினென்றொருக்காற்சொன்ன
னடன்மிகும்வயிரச்சிந்தை யவர்களாலந்நாட்டொட்டுப்
புடவியிற்றுயத்தாரே போன்றிருபகுப்பானரே. (கக)

ஒவ்வொருவருமற்றொன்றி னுரிமைசற்றுறவேவேண்டு
மிவ்வொருகலேயேகற்பே மெனச்சொலற்கிடமேயில்லே
யௌவொருகலேமேலென்னும் வழக்கிருவருங்கைக்கொண்டார்
தெவ்வொருங்கடிமான்மூர்த்தத் திரள்களேப்பிரித்திலாரே. (கஉ)

பெண்கொளல்கொடுத்தல்செய்தும் பேச்சிகல்விளேத்தார்சின்ன
ளுண்கையுங்கலப்பிலாரா யுயர்பகையுற்றார்பின்ன
ளெண்கும்வன்குரங்குந்தன்றெண் டியற்றவுந்திருத்துமம்மான்
கண்களேயனையாரன்றே ரெனச்சொல்வார்கறையற்றோரே. (கஙா)

வடகலேக்குரவனுகி வந்ததேசிகனுமற்றோர்
இடகலேக்குரவனென்னத் திகழ்மணவாளன்றானும்
புடவியில்லறமுநீத்துப் போந்துறவறமுங்காட்டி
யிடரின்மெய்யருட்பேறெய்தி யெம்பிரானடிசேர்ந்தோரே. (கச)

ஒருவர்தம்மரபினோர்மற் றொருவரையிகழ்ந்தால்லோ
ரருவருத்திடத்தாழ்கின்ற ரவருளார்சிறியரேனுங்
கருமுகிலனையகோலங் கனவினுங்காணமாட்டா
திருள்படுமனத்தோராகு மிவரினுமிழிந்தோரன்றே. (கரு)

அவர்கட்ம்பகையாற்செய்த வநீதிகளநந்தமாகும்
விவரமாச்சொலின்முற்றாவே மீனுகேமடமாகி
யுவரியிற்புகுந்தும்விண்ணோர்க் குதவிசெய்தவனன்பற்றோ
ரெவர்களானலுமன்னோர்க் கெளியராய்வணங்களன்றே. (கசு)

தண்டமிழ்க்குருகூரண்ணல் சாதிநான்கினுங்கீழாகக்
கண்டசண்டாளரேனுங் கருமணிவண்ணன்றொண்டர்
தொண்டர்தந்தொண்டரேலியாந் தொழத்தகுகடவுளென்ன
விண்டசொற்கருதத்தக்கார் மெய்யடியவராவாரே. (கஎ)

இருகலைக்குரவர்தாமு மேற்றமுற்றவரேயென்னத்
திருவருளறியமெய்யாச் சிந்தனைசெயவல்லாரைக்
கருமுகிலனையமேனிக் காகுத்தனறிவானன்னோர்க்
கொருகனவினிலானலு முறுதிசொற்றருள்வானம்மா. (கஅ)

இருகலைப்பாடலன்றே யிருவருமிசைத்துள்ளாரா
லொருகலைக்குரவரேயென் றுரைக்கையெங்ஙனமெய்யாமோ
மருமலிதுளவத்திண்டோண் மாயனேகுருவாத்தோன்றும்
பெருமைநன்குணரமாட்டாப் பேயரைத்திருத்தொண்ணுதே. (கக)

தேசிகனென்னுமாசான் றெளிவொடுபொறுமைச்சீரும்
வீசியகடனீர்ப்பாரில் விளைத்தபல்வினைதக்கூட்டும்
பேசிடவல்லாராரோ பெருந்தகையயக்கிரீவன்
மாசின்மெய்யருட்பேறெய்தி வடகலைபுரந்தான்மன்னே. (உ0)

மாமுனியென்னுந்தன்மை வாய்ந்தவிர்மணவாளன்றான்
காமுறுசிந்தைமுற்றுங் கரியவன்கழற்கேயாக்கிப்
பாமுதிர்சுவையவாகப் பலபலவிதத்திற்பாடித்
தீமுகக்கருமம்வேண்டாத் தென்கலைபுரந்தானன்றே. (உக)

தென்கலைக்குரவனென்றே செகத்தினிற்பலருஞ்சொல்சீர்
நன்கமைதரப்பெற்றோனு நான்மறைபிறந்ததாய
வின்கலைப்பனுவற்கூட்டு மியம்பினனென்றேசொல்வார்
வன்கணர்க்கென்சொன்னலு மகிழ்சமரசம்வாராதே. (உஉ)

இருகலைக்குரவர்தாமு மியற்றமிழ்ப்பனுவரில்லி
னருமகவாய்வந்தோரோ யவருபநயனத்தோதும்
பெருமறைதானும்பின்னர்ப் பெறுமட்டாக்காமும்பேசிற்
றிருமலிவடநூற்சொல்லே யெனுமிசந்தெரிந்துய்வீரோ. (உங)

நாரணற்கடிமையானே னளிர்வடகலைசெய்திட்டான்
சீரவிரரிக்கன்புள்ளான் றென்கலைசெய்தானென்கை
பாரவர்பலருந்தேர்வார் பகரிவற்றெதுமேல்கீழோ
வாரம்வைத்தளிக்கும்வெள்ளை மலர்மகளறிவாளன்றே. (உச)
அணிகுறிப்பேதமாதி யாயசம்பிரதாயங்க
ளெணியவைகலையின்பேத மென்பவரிளமையோரே
கணிசமாமுகினேர்வண்ணக் கண்ணனேபரமென்றோதுந்
துணிவினர்செய்கையாவுந் தூயவேயாகுமாதோ. (உரு)
இத்தனைவிதத்திலியானீண் டிருகலைக்குரவர்மாட்சி
வித்தகரினங்கொண்டாட விளம்பிடல்விபுதர்நாணு
மத்தகையவனைவீணே யயலெனமதித்தெள்ளாமன்
மெய்த்தவத்தரிதன்றொண்டர் விகற்பமற்றிறைஞ்சுமாறே. (உசா)
அவர்பிறந்ததுவுங்கல்வி யறிவடைந்ததுவுமப்பாற்
சிவனயன்முதலோராயுந் திகழ்தருசெங்கண்மாய
னுவமையிலருள்பெற்றொன்ற ரொருங்கறச்செகுத்தவாறு
மிவரிவர்பெரியராமென் றிகல்பவரிசைக்கின்றாரே. (உஎ)
ஒருகுருமரபினோர்மற் றொருவனுமுலப்பில்சீர்ச்சற்
குருவெனவிடினுந்தம்போல் பவனெனக்கொளினுநன்றே
பெருமைசாலடியார்பல்லோர் பேணிடவறிந்தும்வீணே
யருவருத்திகழுந்தீமை யளப்பரும்வியப்பாமந்தோ. (உஅ)
இருகலைப்பகுப்புமொப்பி யிவையுண்டாவதன்முனுள்ள
வொருகலைத்தகையுங்கைக்கொண் டொழுகுதொண்டனைக்கண்டாலு
மருவருத்தொருதன்கூட்டத் தவனையேமதிக்குமந்தப்
பருவமுற்றவரோயிந்தப் பார்மிசைப்பலருள்ளாரே. (உகூ)
தன்னுடைக்கடவுட்குண்டு தனிப்பரத்துவமென்கின்றோ
னென்னுடையவனுனலு மினமெனத்தழுவும்பெற்றி
மன்னுமெய்ஞ்ஞானயோகி மனிதனேயெனினுமன்னோ
னன்னுதற்றிருமணாள னல்குநான்முகனன்றனே. (௩௦)
ஆதியிற்கவுமாரத்தி லழுந்துபுகிடந்துபின்னர்
வேதியன்விதித்தவாறு விதநெறிப்பொதுவனுகி
யேதில்புன்னெறியோரேனு மிரங்குநெஞ்சினரோலன்னோ
ரோதிடுந்தேவுநந்தே வுருவெனவுணர்ந்திட்டேனே. (௩க)
குருபதத்தருமைதேறிக் கொண்டன்மேனியன்றாள்போலு
மிருகலைக்குரவர்தாமு மியற்றமிழ்ப்புலமைவாய்ந்த
பெருமைநன்கிலங்கச் சொன்னேன்பீடியலெளவையார்த
மருமையாஞ்சரிதந்தன்னு ளறிந்தனசிலசொல்வேனே. (௩உ)

இரட்டைக்குரவர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கூ௬௭.

## இருபத்தாறுவது

## ஔவையார் சருக்கம்.

முற்படப் பிறந்த வௌவை முதுகதை யினைச் சேரற்குப்
பிற்படப் பகரு மென்மேற் பிழைவகுத் திகழ வேண்டா
மற்படு களத்தான் வெற்பிற் கவனெடா ருரன் முற்போஞ்
சொற்படர் வதனு லன்னோர் தோல்வி நன்கிலங்கு மாறே (க)

பிரமனங் கிசத்தோ னான பிராமணப் பகவன் றானுங்
காவிற்சீ ராதி யென்னுங் கலைமினங் கிசத்தி னாரு
மிரவொடு பகலு மோடி யினிதுசேர்ந் திடமொவ் வொன்றிற்
றரவரு மகவோ ரேழிற் றலைமக ளௌவை தானே. (உ)

ஆண்மகார் மூவர் பெண்மை யடைந்தவர் நால்வ ரந்த
மாண்மக வேழும் பாரில் வரலும்வெண் டனைப்பாட் டொவ்வொன்
றேண்மலி யீசன் றன்மை யிலங்கிடப் பகர்ந்த வேயாம்
பாண்மக ளெனப்போ மௌவை பண்படைந் தவர்வே றின்றே. (ங)

வள்ளுவன் கபிலன் சேர மானெனு மூவர் தாமு
மொள்ளுடைப் புலமைத் தன்மை யுலகினில் விளங்கச் செய்தார்
விள்ளுமற் றையரா மூன்று மெல்லிய லாரு மப்பண்
பெள்ளுரு வனைத்துங் காட்டா திருந்துபோ யினரொன்பாரோ. (ச)

பாணரு ளொருவன் கையிற் பழம்பொரு ளெனச்சே ரௌவை
யாணவா வுருவ மெய்தி யவிர்ந்தவா றென்றுங் கேளேன்
வேணபே றனைத்து நல்கும் விநாயக மூர்த்தி பொற்றாட்
பேணலுற் றுய்ந்தா ளென்கை பெரிதுகேட் டுள்ளே னம்மா. (ரு)

அங்கையி னெல்லி யேபோ லருட்பிர சாதம் பெற்று
நங்கையர் குலதே வாகு நல்ந்திக மௌவை தன்னைச்
செங்கையாற் றொட்டுப் புல்வான் செகத்திருந் திருப்பானுகிற்
கங்கையு மதியுஞ் சூடுங் கவின்சடைச் சிவன்போல் வானே. (சு)

ஔவையை மணஞ்செய் தார்வ மடைந்துநல் லின்ப மார்ந்தன்
றிவ்வையந் தனிலுற் றோன்முன் னிறந்துபேர் மறைந்தா னென்னிற்
செவ்வையா முணர்வுற் றோர்கள் சிறிதுமொப் பார்கள் செம்பொற்
கொவ்வைவா யுமை மணாளன் கொடுத்தபே றதும்பொய் யாமே. (எ)

காயும்வல் லிரும்பு நாணக் கவின்றரு சிவன்பா லோர்பெண்
பேயுருப் பெற்றாங் கிந்தப் பெருந்தகை யௌவை தானு
மேயுமுன் னவனைப் போற்றி யிளமையிற் றானே மூப்புத்
தோயுருப் பெற்றா ளென்னச் சொல்வது துணிவா மன்றே. (அ)

ஆதலி னன்றோ வென்று மவடனைக் கிழவி யென்றிப்
பூதலத் துள்ளோ ரெல்லாம் புகன்றிடற் கிசைவுற் றூர்கள்
காதலோர் சிறிது மின்றிக் கவித்தமிழ் கொடுசெத் தாடி
யேதமெண் ணிலர்க்குத் தீர்த்திட் டிரந்தயின் றுலவி னாளே. (கூ)

ஒவ்வொரு தினத்து மிந்த வுலகினை ருய்ய வேண்டி
யௌவைசெய் திட்ட வாட லனைத்துமோர்ந் தறைவா னோரோ
பௌவநீர்த் திரைகள் போலும் பலபல பலவே யாமாற்
செவ்விதா வினவு மட்டிற் சிலவிதஞ் செப்பு வேனே. (க0)

பாண்டியன் சேரன் சோழன் பழுதிலா தொண்டை மன்ன
னுண்டிடும் பாகநான்கா யமைதரு தமிழ்த்தே யத்தி
னீண்டிய தவமே போல்வா ளியம்பிடு மிவற்றொவ் வொன்றைத்
தாண்டியே போய்வந் தெண்ணில் சரித்திர நடவி னாளே. (கக)

சதுமுகப் பிரமன் றானுந் தவளவா ணியுநன் கோர்ந்து
கதுமென வியந்து பேசக் கனிதமிழ்ச் சுருக்கச் சொல்லாற்
பொதுவெனச் சிறப்பென் றுள்ள புண்ணிய முதலா நான்கு
மதுலமூ தறிஞர் கண்ணென் றகிலமீ தமைத்தா ளம்மா (கஉ)

பாரியென் றொருபேர் தாங்கிப் பாண்டிநாட் டிறைக்கீழ் வாழுஞ்
சீரியல் சிறிய வேந்தன் றிருக்கிள ரௌவை யார்தன்
னூரினில் வருந்தோ றன்பா லுபசரித் தொண்பொன் னாதி
வாரிமிக் குதவி வன்னச் சிவிகைமேல் வயங்க வைப்பான். (கங)

மூன்றிலி னின்று கண்டு முழுமதி தன்னை யாண்டுஞ்
சென்றிடே லென்று வேண்டுஞ் சிறுமதிச் சிறூர்போ லென்றுந்
தன்றிரு நகரில் வைகித் தமிழ்மழை பொழியென் றேத்திக்
கன்றின்மிக் குரிமை யெய்திக் கழறொழச் சிறிதுஞ் சோம்பான். (கச)

அவனகர் விடுத்து மற்றோ ரணிநகர்க் கேகு நாளி
லிவளிடங் கொடுத்த வெல்லா மேவலாற் பறித்துக் கொள்வா
னவநவ மாயவ் வாறு நடந்தமைக் களவின் றேனு
முவகையோ டாங்குப் போத லொழித்திலா ளுணர்வின் மிக்காள். ()

அண்டமுற் றம்பொ னுக வவளொரு கவிசொன் னாலும்
விண்டபோ தாமாற் சற்றும் வெதும்புறு மனத்தோ டேகித்
தொண்டவன் செயலுந் தன்னூர்த் துணையென விரும்ப வாவுங்
கண்டபோ தளிகூர் பண்புங் கருதியே வருவாண் மாதோ. (கசு)

பழையனூர் தன்னிற் புன்செய்ப் பயிரிடுங் குடிவே ளாளன்
* கழைதரு சாறு போற்சொற் கழறிடுங் காரி யென்பா
னுழையிவ ளிரந்த நாளி லொருகலைக் கோலை நல்கித்
தழைபுலா தியகீப்பித்துத் தானுகர் கூழ்வார்த் தானல். (கஎ)

* கழை - கரும்பு.

இந்திரற் குறித்தோர் பாட லியம்பிடி லமுத மீண்டுத்
தந்தினி துபச ரிக்கத் தகுபெரு வாழ்வுற் றுளுஞ்
சிந்திய வேர்வை யாளாச் சிறியவர் பணிசெய் தப்பா
லுந்திடும் கூழன் றுண்கை நுண்ணிய ருணர்தற் பாற்றே. (கஅ)

வல்லிடைப் புரையுஞ் சாயன் மடந்தைய ரினத்து ளான்ற
நல்லிய லௌவை யிந்த நானிலத் தினர்க்கும் வானிற்
புல்லினர் தமக்கு மெய்தாப் புதுமைதோய்ந் துள்ள தாய
நெல்லியங் கனியொன் றுண்ட தாச்சிலர் நிகழ்த்துவாரே. (கசு)

அக்கனி யெய்து மாறு மயின்றதா லடைந்த தாய
மிக்கசீர்ப் பயனும் பற்பல் விதம்பட வுலகோர் சொல்வார்
முக்கண்வெற் பனைய வேழ முகப்பிரா னருட்பே றென்றே
இக்கறி தருபே ராண்மைச் சீரியர் சிலர்சொல் வாரே. (உ0)

அன்னவன் றனைநேர் கண்ணுற் றளவில்பே ரார்வ மெய்தற்
கென்னமா தவஞ்செய் தாளோ வெனப்பல ரேங்கி வாடி
யின்னம்வெந் துயர வாரி யிடைக்கிடந் துழைக்கின் றார்கண்
முன்னவ னருள்சற் றில்லார் முயலினும் பயனெய் தாரோ. (உக)

சேரர்கோ னவையி லௌவை செலுந்தொறுஞ் சிறிது நெஞ்சில்
வாரமில் லவன்போ லோர்சொல் வாவென்று மழைத்தி டாமற்
றூரணி வியக்குஞ் சிங்கா தனத்தைவிட் டிறங்கித் தன்னேர்
மாரத னைய மெய்த மகளிர்வாழ் வயிற்செல் வானே. (உஉ)

இவளொடு முபச ரித்தற் கேற்றபாத் திரமன் றென்ன
வவனுள நாணிப் போமா றவையினி லறிவா ரில்லை
தவசிகா மணியா மம்மை தனையவ மதித்தா னென்னக்
கவலுநெஞ் சினராத் தம்முட் கசுகிசென் றுரைசெய் வாரே. (உங)

முன்னையாய்ப் புலமைச் சீரின் முதல்வியா யுலகோர்க் கெல்லா
மன்னையாய்த் திகழ்வா டன்னை யடிபணிந் தன்பாற் போற்றி
யென்னையான் செயற்பாற் றென்ன விதமொழி பகர லாகுந்
தன்னைநேர் பரம னன்னோன் றனையவா றசைத்தி லானே. (உ௪)

மின்பிறங் கியவே லேந்தி விற்கொடி புரக்கும் வேந்த
னன்பிலா னன்றே பாண னுதிய ரளவி லார்க்கு
வன்பிணித் திரளிற் பொல்லா வறுமைநோய் தவிர்த்தோ னேனோ
முன்பிறந் தாட்கிவ் வாறு முறைப்பிழை செய்திட் டானே. (உரு)

மன்மன மதிக்கு மாற்றான் மனையினி லுளபல் லோரு
நன்மனத் துபசா ரங்க ணடவல்கண் டுவகை பூத்தா
னென்மனக் குறிப்பி தென்றங் கியாரொடு மிசைத்தி லானுற்
கன்மனக் கொடியோ னென்னக் கருதலுஞ் சிலர்செய்தாரே. (உசு)

கரிமலி தானைச் சேரன் கருத்தினுண் மதிப்ப தாய
வரிசையும் விழைவா ளாங்கு வந்துபின் னுளுற் றன்னோற்
குரியகே ரளத்தை நீங்கி யொண்டமிழ்ப் பாண்டி நாட்டின்
பிரியமுற் றேகுங் காளிற் பெருமழை நனைப்புற் றாளே. (உஎ)

நனைதலு மவளே யாங்கோர் நல்லிடைச் சிறுமி யப்ப
னனையிலா ளண்ணன் பன்னி யாணையாற் றுயர்மிக்கார் வாண்
மனையில்வா ழிபர்கள் காணின் மதிமருள் வனப்பு வாய்ந்தா
டினை * யிறுங் கிட்ட புன்செய்ச் சிறுபரண் வசிப்பாள் கண்டாள். (உஅ)

கண்டவ்ழைத் துபச ரித்துன் காழக முலர்த்திக் கட்டிக்
கொண்டல தேகொ ணுதிக் குடிலிடை மறைந்தென் றானை
விண்டளித் திடுவே னென்றாள் வெயிலுமக் கணந்தோன் றிற்றுத்
தண்டமிழ்க் கிழவி யப்பெண் டருங்கலை யினைக்கை தாங்கி (உகூ)

பாரிதன் பறியு மன்று பழையனூர்க் காரி தந்த
கூரிய களைக்கோ லொன்றுங் குடகுநா டளிக்குஞ் சேர
னேரிலென் றனைவா வென்று நிகழ்த்திடா வரிசை தானுங்
காரியல் புறமித் தானை கடுக்குமென் றுருபாச் சொன்னாள். (கூ0)

சொன்னபின் னவ்வா றுற்றித் தூநகைக் குமரி தானை
யன்னவட் குதவி யம்மை யளவில்பே ருவகை யெய்தி
யின்னவட் கினிய வாழ்வீண் டியற்றியே போதல் வேண்டு
மென்னவுட் கருதி யாங்குற் றினிதுசெய் தமைசொல் வேனே. (கூக)

வே று.

எழுத்தாணி யெடுத்தொருமுச் சீட்டெழுதி யக்கானத் தியல்வோர் கூடி, வழுத்தார்வத் தேவதைகைக் கொடுத்திடலு மதுகொடு போய் வழுதி பாலு, மழுத்தாங்கு வானணிதார் புனைவளவன் றன்பாலு மயினேர் மாதர், குழுத்தான்மே லெனத்திகழ்நாட் டிறைபாலு மதிவி னைவிற் கொடுத்ததம்மா. (கூஉ)

அவர்மூவர் களுமதுபெற் றம்மைகைச்சீட் டெனத்தெரிந்தக் கணமே தம்மூர், விவகா ரநீத்தொருநாற் படைகளுஞ்சூழ் தரத்தேரின் மிசையங் குற்றுப், பவவேலைப் புணையாய பதம்பணிந்தா ரவளவரைப் பார்த்திம் மங்கைக், கிவணேயென் விழிகாண மணஞ்செய்விக்க வேண்டுமென வியம்பினளே. (கூகூ)

மூவர்களுந் தனித்தனியே முழுப்பனையா தியவான்முப் பந்த ரிட்டுத், தேவர்களும் வியந்தோதச் சிங்காரம் பெரிதமைத்தச் சிறுமி கொண்க, னுவதற்காந் தவமுடையான் றனைக்கொணர்ந்தம் மரபினருக்கார்வம் பொங்கத், தாவறுநூல் விதியுணர்ந்த வேதியர்முன் மங்கல்நா றரிப்பித் தாரே. (கூச)

* இறுங்கு - ஒருவகைச்சோளம்.

அப்பந்தர் நடுவேயக் குலமுறையிற் பசுவாடா தியவு மன்றி
யொப்பந்தம்பொன்வெள்ளிவெண்கலத்தாற்செய்தனவுமுதவித்தீர்ந்தார்
முப்பந்த ரெனும்பெயரக் காட்டினுக்கிந் நாளுமிக மொழிவா ராங்குச்
செப்பந்த முலையுடைப்பெண்டேவதையொன்றும்பெரிதுதிகழுமாதோ.

அனையமண முடிந்ததற்பி னரசரொரு மூவர்களு மௌவை பொற்றாள், புனைமகுடத் தினராகித் தொழுதெழுந்து விடைகேட்கும் பொழுதங்குள்ள, பனையினொரு சிறுதுண்டைப் பார்த்தொருசெந் தமிழ்ப்பாடல் பகர்ந்தாளஃதோர், தினையளவு பொழுதின்முழுப் பனையாய்முப் பழமுதிர்த்துத் திகழ்ந்த தம்மா. (ருசு)

அப்பாட லிந்தடியென் றுரைப்பர்சிலர் நான்கடியென் றறைவர் சில்லோ, ரெப்பான்மைத் தாயினுநன் றிவர்க்கொவொரு பழங்கொடுத்திட் டேகச் சொன்னு, ளிப்பாரும் வானகமும் பாதலமும் பெற்றிடலு மெளிதே யாகு, மெய்ப்பாரந் திருவருளால் விளைதருமக் கனிப்பெருமை விளம்பொ ணுதே. (ருஎ)

அளக்காத பெரும்புகழ்ச்சீ ரௌவையார் திருவாக்கி னடலு மான்ற
வளக்கானிற் கவணேந்திப் பயிர்காத்த சிறுமிதவ வலியு மாசி
லுளக்கார ராம்வழுதி வளவனெனு மிருவேந்த ருதாரப் பண்பும்
விளக்காது வைத்திருந்த சேரர்பிரா னுள்ளன்பு மிளிர்ந்த வன்றே. ()

மூந்தவருள் பெற்றசில பெரும்புலவர் தங்கருத்து முற்றுவிப்பான்
றந்தமது கடவுளைத் துதித்ததுவு மௌவையொரு தாலத் துண்டு
கந்தமலி தருகனியீந் திடற்கதையே கேட்டதுவுங் கருத்தா னுடி
யிந்தநிலை யந்தநிலை யிரண்டுமெதித் தறிதகைமை யெளிதன் றம்மா. ()

அனுத்திரண காட்டமுதற் றெய்வவடி வாவிளங்கி யதனாலன்றோ, கனுப்பொலிவார் பனந்துண்டைப் பழந்தருகென் றௌவையங்நாள் கழறிப்பெற்று, டினுக்கமுறும் வன்னெஞ்சச் சிறுவருமிப் பெருந்தகைமை தெரிதற்பாற்றோ, நுணுக்கமுறு பேரறிஞ ருணர்வரவர் பலபிறப்பி னேற்றுள்ளோரே. (சு0)

தொண்டைநாட் டினிலொருபெண் வதுவைமுடிந் திடுங்கிமித்தந் துணிவுற் றௌவை, பண்டைநாள் பெண்ணைநன்னீர் பாறயிர்நெய் யாமாறும் பகர்ந்தா ளென்பார், மண்டையோட் டரனிரந்த வாறுமரி காடுறைந்த வாறுங் கூறுங், கண்டைவா யுறுமவளியாண் டெதுசொலினு நடக்கு மென்கை கடமைதானே. (சுக)

பாண்டிநாட் டினைவிடுத்து மலைநாட்டைக் குறித்தேகும் பாதையொன்றி, லீண்டியவா ரியன்காவி னருகிலிரண் டெயினர்குடி விட்டுவாழ்ந்தா, ரேண்டிகழ்வா ருடன்பிறந்தோர் மூத்தவன்பெண் டேயுடையோ னிளையோ னேழெட், டேண்டிறற்சேய் களுமுடையான் பொதுவினிற்பல் கனிகாய்நல் கொருபலாவும். (சுஉ)

சிறுபுன்செ யொன்றுமுளா ரம்மரத்தி லுள்ளவற்றைத் தினம்பங் கிட்டுப், பெறுபண்பா ரொருநாண்முன் னவனிடம்பின் னேன்றுணிந்து பிள்ளைகட்கா, வுறுமுன்பங் கினிற்சிறிது வழங்கிடிற் றகாதோபின் னுன க்குஞ் சால, மறுகுந்துன் புடைத்தளர்ச்சி வரினுதவ லவையன்றோ மதி யென் றுனே. (சங)

என்றமொழி வினவலுந்தான் மகப்பேறெய் தாமைகுறித் திகழ்ந் தா னென்னக், குன்றனைய சினங்கொண்டன் னவன்பாகத் தையுமறந்து கொடுவா ளேந்தி, நின்றமரத் தினைவெட்டி நிலமிசைவீழ்த் தினனுல கோர் நெடுநா ளாக, வின்றகைப்பண் பொருக்காலு மலடுருறு ரெனுஞ் சரத மிலங்கிற் றன்றே. (சச)

எவ்வுயிருந் தன்னுயிர்க்கொப் பாகுமெனு ஞானமிலா ரெவரா னாலு மிவ்வுலகின் மகப்பேறு மெய்திலரே விரக்கமுறு ரென்கை திண்ணம் வெவ்வுரக நிகர்சினத்தவ் வேடுவன்றன் றம்பியினு மெலிந்தா னன்னேன் வெளவுகிழங் காதியிற்சற் றுெவ்வொருக்கா லண்ணனுண வழங்கினுனே.

தம்பிமனத் துயர்ச்சியுந்தன் மனத்திழிவு முணர்ந்ததனுற் றுனே தன்னுள், வெம்பியழும் வேடன்முத லங்குள்ளா ரனைவோரும் வியன்ப லாப்போம், வம்பினையே நினைத்துநினைத் தலமருநா ளையிலொருநாள் வானே ரேத்துந், தும்பிமுகப் பெருமான்ற னருள்வடிவா மௌவையங் குத் தோன்றி னுளே. (சரு)

வந்தகிழ வியைவணங்கி நீயாரிங் கேன்வந்தாய் வாஞ்சை யாதென், றந்தவன சரர்வினவ வருட்புலமைத் திறத்தினளியா னயில்வேற் சேர ன், செந்தகைநா டதுகுறித்திவ் வழிவந்தே னென்விருப்பஞ் சிறிதா ணெ ன்று, ளிந்தமரந் தழைவுறப்பா டிடிலியாம்வைத் துளதினைவித் திவோ மென்றுர். (சஎ)

கூரியவா ளாற்குறைத்த கூன்பலா வெனத்துவக்கிக் குலவு முன் னைச், சீரினிற்க வெனமுடித்தோர் கவிசொன்னு ளக்கணமே திகழ்ந்த தாங்கே, தூரினுங்கொம் பினும்பலபல் கனிகாய்பிஞ் சுறக்கண்டார் சொன்ன வாறே, பாரில்விதைத் திடத்தாம்வைத் திருந்ததினை விதை முழுதும் பரிந்தீந் தாரே. (சஅ)

அத்தினைமூ வுழக்காழாக் கையும்பானை நிலையுரலி லானைக் கொம் பாற், குத்தியட்டுண் டாளவட்கே னந்தவிதி நான்முகத்தோன் குறித் திட் டானே, வித்திறமுள் ளார்க்கிதுதா னெழுதுவா னவனெனும்பாங் கில்லை யில்லை, சித்தி *முத்தி யடைந்தாலும் விதிவழியே மதிபோத றிண்ணந் தானே. (சகூ)

---

* முத்தி - பதமுத்தி, ஐக்க முத்தியன்று; அஃதடையின் விதியு மதியுமின்றுதலின்.

தினையளவுந் தழைத்தபலாக் கூழையெனும் விவரமுஞ்சிற் சிலசிற் றாரிற், றனையறியா ரிடம்போயப் பினைப்புளியை விரும்பியுஞ்செந் தமிழ்ப்பாட் டோதும், வினைவலியுந் திகழ்தரவோர் கவிசோழன் செவிகேட்ப விளம்பி னளவ், வனைபெருமை யாரறிவா ரருட்பேறு விழைந்துழைப்போ ரறிய லாமே. (௫0)

ஒருமனைமுன் றிலிற்போமுன் னதற்குரியாள் சினந்திகழ்ந்திட்டோடிவந்தான், வெருவினள்போல் வெளிப்பட்டா ளவன்றெருழின்மேற்போயதற்பின் விரும்பி யன்னோன், மருவுமனை யாளிவளைக் கண்டுதொழுதுபசரித்து மாறில் லாத, வருமைமொழி பலகூறி யன்னமுத லாமுணவுமளித்திட் டாளால். (௫க)

வற்றன்மர மனையாற்கிம் மானைவகுத் திட்டதனுன் மலரோற் கந்நா
ளற்றதலை போகவமைந் துள்ளதலை நான்கினையு மலறப் பேர்த்துச்
செற்றமொழிப் பேனவனைக் காணுறிலென் றெருருகவிதை செப்பி னளக்
கொற்றமுடை யாளையுமோர் கிழவியென வுலகுரைக்கைகொடுமையம்மா.

ஒருசிறிய வீட்டின்முற்போ யமுதெனக்கேட் டாளுடனங் கொருத்தி கும்பிட், டருமைமொழி பலபேசி வஞ்சமின்றி யுள்ள * புற்கை யருத்தி யென்முன், வருமுன்னமா னிடவடிவென் றெண்ணுறுகிலேன் றெய்வமென்றே மதிக்கின் றேனென், பெருமிடிதீர்ந் தேற்பவர்க்கிட் டுணும்பயனல் கொருவிரதம் பேசென்றுளே. (௫௨)

அம்மொழிகேட் டதிவியப்போ டுவகையுமுற் றெளவையென்பாளவளை நோக்கி, யிம்மொழிசொல் லிடுமுணர்ச்சி யுனக்களித்த விதிப்பயன்மிக் கேற்ற மேயாம், பொய்ம்மொழிவஞ் சனைமுதலாந் தீயகுண மத்தனையும் போக்கி யன்பாற், செம்மொழிப்பா வலர்பரவுஞ் சிந்துரமாமுகத்தானைச் செவ்வாய் நாளில். (௫௪)

ஆடவர்சம் பந்தமொரு சிறிதுமுறு வண்ணமின்ன வடையா ளங்கள்
கூடகிவே தனங்களுமிவ் வாறமைத்துப் பூசைசெய்தாற் குறித்த செல்வ
நாடறிய விம்மையிற்று னேகிடைக்கு மெனவிரித்து நவின்று போனு
ளேடலர்பூங் குழற்பாவை யங்ஙனஞ்செய் துன்னியபே றெய்தி னளே.

அன்றுதொட்டிந் நாளுமினி வருநாளுஞ் சிலநாட்டி லௌவைபூசை, யென்றுசின்னுட் டினிற்செவ்வாய்ப் பிள்ளையார் பூசையென வியங்கு மந்நோன், பொன்றுமெளி தன்றன்று சிலபுருட ரதற்கிடையூறுனூற்றிக் கண்போய்த், துன்றுமிடி யொடுநோயுந் துய்த்துநர கடைவதுவுந் தொன்மைதானே. (௫௬)

* புற்கை - கூழ்.

எங்கெங்கே நடத்திடுமோ விருத்திடுமோ கிடத்திடுமோ வீசனுர் தந், துங்கஞ்சே ரருளெனுமோர் கவிவகுத்தன் முதற்கதைக டிலங்க வில்லை, யங்கந்தோய் படைவேந்த ரொருநான்கு நாட்டுயர்ச்சி யனைத் துந் தேறிப், பொங்கஞ்சால் பொழிற்பொதியைத் தமிழ்க்கவியான்மிகப் பாடிப் பொறித்திட்டாளே. (ருஎ)

உருவம்விழைந் துணர்வுவெறுத் துயிர்விடுத்தோர் பெண்பேயா யொருகாட்டுள்ள, விருண்மடத்திற் றங்குநரைக் கொன்றிடுந்தீங் கறும் படியீ ரிரண்டு பாட்ற், றருகதையா தியவுலகிற் பலருணர்வார் விரித்தா லுந் தாலத் துண்டாங், கொருகணத்திற் கனிமூன்றன் றுதவுதலிற் பெரி தாகா துணர்வுள்ளோர்க்கே. (ருஅ)

வேறு.

வேழ முள்ளது கேரள மிக்கசோ றுளது
சோழ நாடுசெந் தமிழது பாண்டியன் றென்னு
டாழ நெஞ்சின ரதுதொண்டை மண்டல மெனும்பாட்
டூழ ருய்ந்தலூர் மதிட்புறத் தெழுதின ளிவளே. (ருகூ)

அன்ன வாறுபல் கோடிசித் தாடிய வௌவை
முன்ன வன்றனைப் பூசைசெய் திருக்கையின் முருகோ
னென்ன வாழுமா ரூரனுஞ் சேரனு மீசன்
றன்ன தாந்திருக் கயிலைவேட் டேகலோர்ந் தனளால். (கூ0)

விரைந்து பச்சிலை யாதியிட் டனளோர்தாம் வேதம்
வரைந்த கைப்பிரான் மெல்லெனச் செய்தியவ் வரைமேற்
றிரைந்த மேல்கொணீ முந்துறச் சேர்க்குது மெனலும்
கரைந்த நெஞ்சொடோ ரகவலுங் கழறினள் களித்தே. (கூக)

அக்க ணத்திலச் சிகரிமேற் றுதிக்கையா லமைத்தான்
முக்க ணுயகன் சந்நிதிச் சென்றுபன் முனிவோர்
தொக்க பேரவை வியப்பமுன் னீட்டின டுணைத்தாண்
மைக்கண் மானிக ருமையவண் மனம்வருந் தியதே. (கூஉ)

அதனை நன்குணர்ந் தரனுமை யவளைநேர் நோக்கி
யெதனைச் செய்யினு மவளொடு வாய்க்கொடே லென்று
மதன வேட்குவில் லொடுகணை யளித்தவள் வாய்விண்
டிதனை நீசெயன் முறைமைகொ லெனவினி தின்சைத்தாள். (கூ௩)

பொங்கு பேரருட் சிவைமொழி வினவிமெய்ப் புலமை
தங்கு மௌவைதா னெழுந்துபன் முறைமிகத் தாழ்ந்து
கங்கு லும்பகற் பொழுதுமென் கண்முனிக் காட்சி
யெங்குங் காண்டலி னிப்பிழை விளைந்ததின் டென்றாள். (கூச)

அதுவி ளுவலு முமைசிறி தொல்கின ளகத்தா
விதுசெய் திலலளிக் கிழவியென் றியாவரு முணர்ந்தார்
மதுர வாணிதன் ளங்கிச மாமவள் வசிப்ப
விதுவு லாஞ்சடைப் பிஞ்ஞகன் வேறிடம் வகுத்தான். (௬௫)

அந்த வேளையி லணிதிகழ் நாவலூ ரானுங்
குந்த வேற்கரத் தினர்புகழ் கேரளக் கோவுங்
கந்த மாமதக் களிற்றினிற் கந்துகந் தன்னில்
வந்தங் குற்றவட் கண்டுள நாணுபு மதித்தார். (௬௬)

அவர்க டன்னைநத் தாதுபோ யதில்வருஞ் சலிப்பும்
பவள யானைதான் முந்துறச் செய்ததாற் படரு
முவகை வாரியுஞ் சிவனிலு மவள்மகா ருயருந்
தவவி சேடமுந் தோற்றவோர் கவிதைசாற் றினளால். (௬எ)

மதுர வாசகத் துமையவ ளுதவிய மகன்றன்
பதும நாண்மலர்ப் பதங்கினை பவர்க்குமொன் றரிதோ
கதுமெனர் றேகிடுங் குதிரைக்குங் கிழவிக்குங் காத
மிதுநன் கோர்திமன் னேயெனு மஃதிகத் துளதே. (௬அ)

இந்த மட்டினி லௌவைதன் சரிதமுற் றியது
பிந்த வோர்மக ளவளருட் பேறுபெற் றதனு
லந்த வௌவையே யிவளென வுலகமுற் றறையச்
செந்த மிழ்க்கவி யாற்பல சித்தியற் றினளால். (௬௯)

வாணி யக்குல மகளடல் வளவனுட் டினிலோ
ராணி முத்தெனப் பிறந்தவள் பாலியத் தௌவை
தாணி னைந்துமுத் தமிழ்ச்சுவை முதற்பயன் பெற்று
வாணி லாங்கிழத் தனம்வரும் வரைமறைந் திருந்தாள். (எ0)

தக்க சீர்ப்புக ழேந்தியு மொட்டக்கூத் தனுநே
ரொக்க வந்திடி லொருபத மடக்கிமுன் னுரைத்தான்
பக்க லெய்திடி லிரண்டையு மடக்கிப்பின் பகர்ந்தாற்
கெக்க ணத்தினு மிரண்டுநீட் டியமக ளிவளே. (எக)

அவடன் மேனியின் பருவமே ழுங்கடந் தளகந்
தவள மாயபின் கம்பனென் பவன்றலை யெடுத்தா
னிவனெ ராயிரம் பொன்பெறிற் பாடலொன் றிசைத்துக்
கவள வேழமூர் சோழனேர் கண்ணெனக் கவின்றான். (எ௨)

அந்த நாளிலங் கட்டிடை வைகுமோ ரரிவை
யெந்த ஞாயத்தி னுற்றனித் தனள்கொலோ வறியேன்
சொந்த மாயதோர் பெயர்கிலை நிறுவிடத் துணிவுற்
றிந்த வீரஞ்சைமுற் றுறலெவா றெனவிசா ரித்தாள். (எ௩)

புவியி லியார்பெறுங் கீர்த்தியுஞ் செந்தமிழ்ப் புலவர்
கவிகொள் வார்புகழ்க் கொவ்வுரு தெனவலோர் கழறு
மவிர்சொற் கொண்டுளங் தேறியக் கம்பன்முன் னணுகி
யிவித நீசெய வேண்டு மென்றிரந்தன ளினிதே. (எச)

குறித்த பொன்றரிற் பாடுவே னென்றனன் குடிலிற்
செறித்த சொத்தெலாந் திரட்டினள் பாதியே தேறிற்
றெறித்த பாடலு மவ்வள வினில்வரைந் தீந்தான்
வெறித்த நெஞ்சொடு கொட்டைநூற் றனள்பொருள் விழைந்தே.(எரு)

அங்கு ளாளது முயல்கையி லௌவையென் றகில
மெங்கு மோதிசைக் கிழவியூர் தொறுமிரந் தருந்திப்
பொங்கும் வெந்துயர்ச் சிலம்பியா மவண்மனை புகுந்து
பங்குன் பானையின் கூழிலெற் குதவெனப் பகர்ந்தாள். (எசு)

ஏற்கு மன்னவட் பார்த்தவ ளீகுவே னிந்நா
ளூற்கு மாத்திர மிதுவென வகைபட நுவன்றாள்
பாற்கு நேரரைக் கவியினைக் கிழவிதான் பார்த்துக்
கோற்கு நீர்க்குமண் ணினுக்குமோ தினைப்பொருள் கொடுத்தும். (எஎ)

உனக்கென் றோர்சொலு முரைத்தில னின்பெய ரோங்கக்
கனக்கும் கீர்த்திநாட் டிடவலே னியானென்றாள் கம்பன்
றனக்குஞ் சம்மத மாய்கொலோ வென்றனள் சலிக்கு
மனக்கொம் பேங்கிச் சிலம்பியன் னவட்கிது வகுப்பாள். (எஅ)

அவனென் பாடலை யொப்புமு னின்மனை யகலே
னுவகை கூர்தியென் றுளுட னிராட்டினத் துறுக
ணிவள வேயென விடுத்தவ ளெழுந்துபோ யின்சொற்
பவள வாயுப சாரமொ டுணவுணப் படைத்தாள். (எகூ)

உண்ட பாட்டியக் கணத்தரைப் பாட்டின்வெள் ளோலைத்
துண்ட திற்பெணே கேளம்பொற் சிலம்பிழுந் துணைத்தாள்
கொண்ட பொற்சிலம் பேசிலம் பென்றரை கூட்டி
யண்ட ராதியர் வியப்புற வரைந்துரைத் தளித்தாள். (அ0)

அதுபெற் றுளுட னருந்தமிழ்க் கம்பன்மாட் டணுகி
யிதுநின் பாட்டின்முற் றுணர்ந்துசொல் லென்றுகைக் கொடுத்தாண்
மதுர மிக்கதே யாவர்சொற் றுறொன வான்வாழ்
விதுவின் கன்றெனக் கூறுமோர் விருத்தையென் றனளால். (அக)

அன்ன வட்குமென் றனக்குமோர் வழக்கிதுண் டாக்கிற்
றுன்ன தாவன்முற் றியதென்றான் சிலம்பிசற் றுறுத்தென்
பொன்ன டைந்துநீ யெனைப்புகன் றிலையவள் புற்கைக்
கென்ன தாம்பெயர் மூவிசை யுரைத்தனை யென்றாள். (அஉ)

சொல்லின் சாரமு மறிகிலாட் கிப்பெருந் துணிவு
புல்லி டும்படி கொடுத்ததோர் தெய்வமே புவிமுற்
றொல்லி டுந்தனி யரசுசெய் பவர்சிலர்க் குதவாக்
கல்வி ரும்புநேர் மனக்கய மையும்வழங் கிடுமே. (அங)

சிலம்பி யென்பவ ளக்கவி பெற்றபின் செல்வர்
நலம்பி றங்கிடச் சமைத்தகோ புரமுத னவில்வ
நிலம்பி ளந்ததாற் குலுங்கலா னெருப்பொடோ துவவாற்
றலம்பி ரித்துரைத் திடற்குமில் லாதொழிந் தனவே. (அச)

அச்சி லம்பிதன் மனையிலுற் றௌவையா மவளை
மெச்சி யன்பொடு தெண்டனிட் டியன்றன விளம்பி
நச்சி னாடனே டுறும்படி பாரிமன் னனைப்போற்
சிச்சி யோர்வயிற் குடியிரே னென்றவள் சென்றாள். (அரு)

பூண மங்கலம் பூட்டினன் புகன்றசொற் பொருட்டா
லாண மின்றியோ ரரிவைதா னசனமிட் டதனைக்
காணக் கண்கள்கூ சியதுமள் ளிடவுணக் கைவாய்
நாண முற்றதுந் துலங்கவோர் கவிநவின் றனளே. (அசு)

கான்செய் நாண்மலர்த் தார்புனை வளவனைக் காண்பான்
றேன்செய் பாடலாள் செலும்வழி யினிற்சில தீயோர்
யான்செய் தேனெனுஞ் சீட்டொடு மலமுமிட் டிருந்தா
ரோன்செய் தாரெனிற் கம்பனா லெனப்பல ரிசைப்பார். (அஎ)

சீட்டி னைக்கையா லெடுத்தனள் படித்தனள் சிலர்போய்ப்
பாட்டி நீசெயி லெடுத்தியென் றனருடன் படலுந்
தாட்டி கச்சில ரொடுத்திட விடுத்திலர் தடுத்தார்
நாட்டி னல்லவர்க் கிடர்வரி லிவணழு விடுமே. (அஅ)

கண்ண கன்றபார் மிசைப்பல புருடர்கண் டொல்க
வெண்ண றும்படி கற்றெழுத் தறப்படித் திடினும்
பெண்ண தாப்பிறந் தவர்மதி பீயினைத் தூக்குந்
திண்ண மென்றோர்சொற் செப்புபு சென்றன ளன்றே. (அகூ)

கற்றைத் தாழ்குழ லௌவையைக் கண்டொர்நாள் கம்ப
னொற்றைக் காலினா லிலைப்பந்த லடியென வுரைத்தான்
பற்றைப் போக்கினா ருறுங்கதி பெறுந்திறம் படைத்து
மற்றைத் தீயரி லவமிருத் தடையவந் தவனால். (கூ0)

அதுவி னாவலு மாரைய டாசொனா யடடா
விதுசொ னீயவ லட்சண மெருமையா னாழுகி
மதுர மற்றமான் காயிடி சுவர்மனை மூத்தான்
சுழும் வாகன் லெம்மொரு கவிகடி துரைத்தான். (கூக)

அந்தப் பாடல்கேட் டஞ்சின னினியொருக் காலு
மிந்தப் பாட்டியோ டிகலொணு தென்றெணிப் போனுன்
பிந்தப் பார்புரப் பவற்பெருங் காட்டினிற் பிரிய
முந்தப் பாவல ஞமவ னுடனுறு மொருநாள். (கூஉ)

சொல்லி டாவணந் தொடர்ந்துபோ யிலையுதிர்ந் தவஞேர்
னெல்லி நிற்பதே னெனவினு வனைக்கவி நிகழ்த்திப்
புல்லி டும்பொருள் கொடுப்பவர் பொய்வழக் கோங்க
வெல்லி யற்கையோர் கிளைக்கிணை யெனுமனை விடையாய். (கூஙு)

பெற்று நின்கவி யனையையோர் பெண்மக ணிமித்த
முற்று றச்செய்தே னெனமுனி வுறலொழிக் குதியான்
கற்று ளார்தமை வினவுனைக் கவியைநீ முடியச்
சொற்று ளாயித ஞலெனத் துணிந்துசொல் லினளால். (கூச)

மன்னன் மந்திரி யாதியர் வியந்துள மகிழ்ந்தா
ரன்ன கம்பனு நாணமுற் றின்சொன்மிக் கறைந்தா
னின்ன பாட்டிசெய் திருவிளை யாடலெத் தனையோ
பன்ன ரும்பல வுணர்ந்தமட் டிகபரஞ் சொலுமே. (கூரு)

கம்ப னும்பினுள் கனிந்துரை கூறலிற் கடல்சூ
ழிம்ப ரார்பல ரிவளொரு தெய்வமே யென்ருர்
நம்ப வல்லநன் னரர்துயர் கெடுப்பதே தொழிலாக்
கும்பன் மெய்த்தவப் பயனதாந் தமிழ்க்கவி கொழித்தாள். (கூசு)

ஒருதி னத்தடல் வளவனே ரும்பன்மேற் கொண்டு
தெருவி லெண்ணிலா டம்பரப் பொலிவொடு திகழ்ந்தா
னருகு சென்றுபார்த் தவர்பலர் தம்முளோ ரரிவை
பொருவில் பாழ்மிடிக் கனற்பெருஞ் சூட்டிடைப் புலர்வாள். (கூஎ)

உலக்கை யேதுணை யெனக்கொடு முயன்றுயி ருய்வாள்
குலக்கொ ழுந்துறழ் மதலையொன் றிடுப்பினிற் கொண்டா
ளலக்க ணேர்வரு மச்சிசு வரசன்மேற் போர்த்த
விலக்கம் பொன்பெறு தானைவேட் டிரங்கிய தன்றே. (கூஅ)

அந்த வேளையி லெளவையங் கவளைநேர் கண்டுன்
சொந்த மாமக வெனின்முலை யருத்துதிசூழு
மைந்தர் தம்மையெண் ணுபுமன நாணிடேன் மகப்பே
றெந்த மாதடை யினுமிது சகசமென் றிசைத்தாள். (கூகூ)

அன்ன வாசகங் கேட்டவ ளம்மைபா லன்போ
டின்ன வாஞ்சைமிக் கீதமு கின்றதென் ருழ்வு
மன்னன் மாட்சியுமீ வகுத்துனைக் கினுந்தெரி யாதா
லென்ன காரணத் தாலினித் தேற்றலா மென்ருள். *(கOO)

எனது மௌவைதன் றிருவுளத் தருள்சுரந் தியானை
யினது மேல்வரு மன்னனை நிற்றியென் றிசைத்துத்
தனது கைக்குறி காட்டின டொனியறத் தயிர்த்து
மனாக டுங்கின னுவப்புறும் படியிது வகுப்பாள். (கம0க)

அம்பொ ணூற்றுப்பத் தாயிரம் பெறினுநூ லாடை
வம்பொன் றேபல கீற்றெனக் கிழியுமென் வாய்ப்பாட்
டெம்பொ னும்பொனென் றிகலபவர் பற்பல ரிறந்துஞ்
செம்பொன் மேருவிற் பொறியெனத் திகழுறுங் கண்டாய். (கம0உ)

அகளங் காவெனும் பொருளுறு பாடலொன் றறைந்தா
ணிகள நீப்பவ ளெனமகிழ்ந் திட்டன னோர்ந்த
மகளங் கைச்சிறு மகற்களித் துவகையை வளர்ந்தாள்
சகள சித்தியில் லார்க்கிது செயலருந் தகைத்தே. (கம0ந)

இந்த மட்டினிற் போயதென் றிறைமன மகிழ்ந்தா
னந்த மாதுதன் மிடிக்கன லவிந்துயப் பெற்றாள்
வந்த மானிடக் குழுமுழு மையும்பல வாறுந்
தந்தம் புந்தியி னிகழ்ந்தமை பேசினர் தாமே. (கம0ச)

சோர நாயகன் விருப்பினுஞ் சொர்ந்தநா யகனை
யீரம் போற்பலுக கிதந்தரு கலலும்வெற் பினைந்தி
ஞூர லர்த்தொகை யொவ்வொன்றின் முப்பது மளித்தி
வீர னீயெனி லென்றொரு மெல்லியல் விடுத்தாள். (கம0ரு)

அவன்செ லத்தின மௌவையைக் கண்டவா னம்மே
யிவன் சொனுண்மனை யாண்டவை யெய்துமோ தென்று
னுவந்தென் சொற்படி கேட்டியென் றவனையாங் குடனேர்
நிவந்த கூடையின் மறைத்தெடுத் தவன்வரு நெறியே. (கம0சு)

கொண்டு போயிருள் செறியிராப் பொழுதிலக் கொடியா
ளுண்டு சற்றிட மென்றிட வயமொழி யுரைத்திட்
டண்டு கூடையொ டடிமனைத் திண்ணையி லமர்ந்தாள்
வண்டு லாங்குழ லவளினி யவனொடு மகிழ்ந்து. (கம0எ)

தெய்வ மொன்றினுக் கேன்றநி வேதனஞ் செறித்து
மெய்வ ரன்செல வுடனவன் மரணமும் விரும்பும்
பொய்வ ழிப்புரு டன்றனை டுவப்பதும் புகன்று
கைவ லிக்கொடு கும்மியு மடித்தனள் களித்தே. (கம0அ)

பாட்டுக் கூறிய பயன்வெளி ருதலிற் பாட்டி
சாட்டுக் கூடையை விளித்தொரு கரத்தினுந் தட்டிக்
கேட்டுக் கொள்ளென விருவிசை களத்தினள் கேட்டு
மாட்டுப் புத்திபோய் மனிதர்த முணர்ச்சிவாய்ந் தனனால். (கம0கூ)

கொன்றி டாதுதற் றுறந்தமை நினைத்தவட் கொல்லா
தன்றி முந்துரித் தின்னொடு போம்படி யகற்றித்
தன்றி யக்கறத் தேற்றிய தாய்பதம் பணிந்து
நன்றி கத்தொடு பரத்தினு மடைந்தன னனியே. (கக0)

கிழவி யன்னவற் கூடையிற் கொடுவரல் கேட்டி
தழகெ வாறவள் சுமப்பளென் றையுறு மஞர்காள்
கழகர் கைதொழுங் கடவுளா மவனுளிற் கருதின்
மழவி டைச்சிவன் மேலகொடு வரவும்வல் லவளே. (கக௧)

பருப்ப தத்தலை கணபதி விடச்செலும் பழையாள்
விருப்ப முற்றலி னவனுரு வாயவள் வியன்சால்
செருப்பை யூரிலோர் சிற்றர சனையனிற் சென்று
ளிருப்ப ளித்துப சரித்தவன் மனைவிதன் னிடம்போய். (கக௨)

தானி ருந்தவ ளளகம தனைநனி திருத்திப்
பேனி னங்களங் தொருவிருந் தென்னுமுன் பேய்போன்
றேனி தென்னொடு பகர்ந்தனை யெனமுற மெடுத்து
மேனிந் தித்தடித் தோட்டினள் மனமிக வெறுத்தே. (கக௩)

முன்னும் பின்னுமத் தகையபெண் கொண்டவர் முந்நீர்
மன்னும் பாரிலி ராரெனச் சொலத்தரு மதுரந்
துன்னு பாப்பொழி கிழவியு மதிசயந் துளும்பப்
பன்னு வார்மலி வீதியிற் கடுக்கெனப் பறிந்தாள். (கக௪)

அங்கு போயவன் மயக்கமுந் தியக்கமு மழியப்
பொங்கு பேரருட் கண்கொடு பார்த்திரு புதுப்பாட்
டெங்கு ளார்களுந் தினந்தினஞ் சொலும்படி யிசைத்தா
ளிங்கு நீநெருப் பினையள்ளிக் கட்டிக்கொள் ளெனவே. (ககரு)

அக்க வித்தொனி முற்றலு மவனுளந் துணிந்து
மிக்க மாதவ வேடமிட் டரன்றிரு வேணி
புக்க நீர்வரு கங்கையாற் றருகினிற் போயுற்
றிக்கன் கூற்றயன் வழக்கிலா ரினத்திலேய்ந் தனனே. (ககசா)

தாட கைக்குஞ்சூர்ப் பநகிக்கு மிணையெனத் தமிழாற்
பாட வெளவைமுற் பதியினை யொறுத்தவப் பாவி
நாட றிந்திட வுடனிறை புழுச்சொரி நவைதோய்ந்
தீட றைந்திடற் கரியதீ நரகிலெய் தினளே. (ககஎ)

வே று.

தென்பாண்டி நாட்டினிடைத் திகழ்முல்லை நிலக்கானி
லன்பாளர்க் கொருதுணையா மௌவையா ரொருநாட்போய்
வன்பார்வன் பசிக்கொடுமை மாற்றிடவோ ராட்டிடையன்
றன்பானின் னுணவுண்ணத் தருகெனநன் கிரந்தாளே. (ககஅ)

அவ்விடைய ஞட்டுப்பா லதுகலந்த கூழருத்திச்
செவ்வியதா முபசாரந் தெரிந்தளவிற் சிலசெய்தா
னிவ்விதமாங் கியன்றிடலு மீடிலருட் பீடுடையாள்
வெளவிநிலத் தினர்பேசு மாட்சிநல்க மனங்கொண்டு. (கக௯)

நின்பெயரியா தெனக்கேட்டா ணெடுநானை யயதியென்று
னுன்பிறப்பிற் கிடமாய வூர்ப்பெயரென் னெனக்கேட்டா
டன்பெயரை மறந்திட்டோன் றலத்தின்பே ரறிவானோ
வன்பியன்முள் ளுடைக்கருவேன் மரமைந்து வாய்ந்ததென்றான். ()

அயதியெனும் பெயர்மறதிக் கறைந்ததனு லவன்றன்னை
வயமலிபாண் டியனுட்டு மனிதனெனத் தெரிந்துரைத்தே
னியலிசைநா டகப்புலவீ ரீனமதென் றெள்ளேன்மி
னயமதுரச் சொற்பலவந் நாட்டுவழக் கினிலுளவே. (கஉக)

அவன்றனடை யாளமைவே லயதியெனக் குறிக்கொண்டு
சிவந்தசொலா லகப்பொருட்சீர் திகழ்கோவை செப்பியப்பாற்
றவந்தழைக்குந் தென்புலியூர்ச் சபையினிடை யரங்கேற்றி
யுவந்தபள்ளிக் கூடமுறு மூர்தோறும் பரப்பினளால். (கஉஉ)

அவ்வுயிர்தா னென்னபய னந்தரத்தி லடைந்ததுவோ
விவ்வுலக முழுதுமிநா ளியம்புதல்கேட் டிருக்கின்றோம்
வெளவுமழ கியவேலால் வயங்குமைகா ரத்ததிதே
வெவ்வுமெனக் கவுமார ரொருசிலரீண் டுன்னுவரே. (கஉ௩)

ஐந்துபடைக் கலமேந்தி யழகதிகம் பெறுமாலென்
றுந்துமறி வுடைச்சில்லோ ருரைப்பதற்கு ஞாயமுண்டுண்
டிந்துமுடித் தவன்முதலோர்க் கியம்புநரு மிருப்பாரே
தந்துணர்வா ரமைத்துரைக்கத் தக்கபொரு டணவரிதே. (கஉ௪)

பந்தனுக்கோ ரந்தாதி பகரன்முந் தியசரித
மிந்தவுல கினிற்பல்லோ ரியம்புவா ரியானறியே
னந்தவெளவை யிந்தவெளவை யாமிருவ ரென்றுதை
மைந்தரனே வருங்கால மதிப்பறியா மனத்தினரே. (கஉ௫)

முன்னெளவை கலிவருட மூன்றுவ தாயிரத்தாள்
பின்னெளவை நாலாவ தாயிரத்திற் பிறந்திட்டா
ளன்னவடன் றிருவடியி லடுத்தவள்போய்க் கலந்ததனு
லின்னவளைப் பிரிக்காம லேகமென்றார் பலர்தாமே. (கஉ௬)

விக்கிரமார்க் கன்புவியின் மேவுமுன்னு ளொருத்தியுற்று
ளுக்கிரனு மவற்கொன்று னுற்றவெண்ணூற் றேழாண்டின்
மிக்கிகலுங் கம்பனிடம் வேதனைப்பட் டாளொருத்தி
யக்கிரமாம் புத்தியுள்ள ரறிந்துகொளத் தக்கதம்மா. (கஉ௭)

இவ்வையத் தொடுவானு மியற்றுதவப் பயன்போலு
மௌவைசரித் திரப் பெருக்கூ டறிந்தளவிற் பகர்ந்திட்டேன்
கவ்வைதீர்ந் துலகுய்யக் கவிபகரு மிடைக்காடர்
செவ்வையுறு சரித்திரத்திற் சிறிதுரைக்கத் துணிந்தேனே. (கஉஅ)

ஔவையார்சருக்க முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - கoஅரு.

---

## இருபத்தேழாவது
## இடைக்காடர் சருக்கம்.

---

தென்பாண்டிநாட்டிலுயர் திருமதுரைப்பதிக்கீழ்பா
லின்பார்செந்திருவாழு மிடைக்காடென்றிலங்கூரின்
முன்பாயர்மனையினிடை முகுந்தனுதித்திடுமாறே
வன்பார்முற்றவத்தினொரு மகனுதித்துவளர்ந்தானே. (க)

வளர்ந்தவனற்றந்தையொடு மாதாவுங்களித்தினத்திற்
கிளர்ந்தமுறைப்படியாட்டுக் கிடைபுரக்கவிடுத்திட்டா
ரிளந்தையெனும்பருவம்போ யெவ்வனந்தோன்றியநாளிற்
களந்தறுகுநஞ்சுடையான் கடுக்குமொர்சித்தனைக்கண்டான். (உ)

அக்காட்டிலவற்கண்ணுற் றன்றவிதிப்பயன்வலியான்
மிக்காட்டுப்பாலருத்தி வேண்டியவாறேவலுஞ்செய்
தெக்காட்டுக்குங்கடவு ளனுநெடுமாலங்கிசனாத்
திக்காட்சியினர்தாமுஞ் செப்புசித்தனைத்திகழ்ந்தான். (௩)

அத்தனைபேறடைந்திருந்து மகங்கரத்தின்முழுகாமற்
பித்தனெனத்தன்றொழிலிற் பெரிதுமுயன்றளிகூர்ந்தான்
சித்தர்குழாத்திடையங்கா டிருநெடுமால்செய்துள்ள
பத்தவதாரத்துளெது பலத்ததென்வாதுதித்ததுவே. (௪)

அவ்வழக்குத்தீராம லநந்தமலைதொறும்போய்ப்போ
யொவ்வரியபலத்ததென வொவ்வொன்றுந்திகழ்தரவே
பௌவங்கரவர்பேசிப் பலநாட்சென்றதன்பின்னர்த்
தவ்வருஞ்சீர்ப்பொதியவரைத் தவராசற்கறிவித்தார். (௫)

அன்றுமுறைப்படிவணங்கு மவரைப்பார்த்தம்முனிவ
னின்றுபாண்டியனாட்டி லிடைக்காடனெனுஞ்சித்தன்
றன்றுபலவாட்டினொடு சூழ்கானிற்றிரிகின்றான்
குன்றுகுடையெனவெடுத்த கோவலவனேயனையான். (௬)

அன்னவன்பாற்போய்க்கேண்மி னக்கணமேயவன்சொல்வான்
சொன்னமொழியினைநம்பிச் சூழ்கலகமறத்தீர்மி
னென்னதுசம்மதமும்மதே யானுரைக்கொண்ணுதவனைச்
சின்னவனென்றெண்ணேன்மின் றெளிஞர்சிகாமணியென்றான். (எ)

வாழையடியெனத்தொடர்ந்து வருகுரவர்மரபினரா
யூழைவென்றோராமவர்தா மொருங்குபோயவற்கேட்டா
ரேழையேயிடையனே யிளிச்சவாயினனேயிக்
கோழைமதியேனெனல்போன் றதனுறுதிகூறினனே. (௮)

ஈடிலன்போன்றிரங்கியதா லேழையிராகவனென்றுங்
காடியைந்துவாழ்ந்ததனுற் கண்ணனேயிடையனென்றும்
பீடியலாடகற்கின்றோன் பிறங்கிளிச்சவாயனென்று
நாடியுணர்ந்தவரொல்லா நகந்தொறும்போயமர்ந்தார். (௯)

மன்னியசீரிடைக்காடன் மாநிலத்திற்பாவத்தாற்
பன்னிரண்டாண்டளவிலொரு பஞ்சம்வரும்விதந்தேறித்
தன்னிடத்தாட்டினங்களுக்குச் சமுத்திரத்தின்றண்ணீரு
முன்னிவளருமுரியிலை யுணவுமுணும்படிபழக்கி. (௧௦)

வரகொடுமெண்கலந்துசுவர் வைத்தொருகோட்டையுஞ்சமைத்திட்
டிரமொடுவாழ்ந்தாட்டினங்க ளுனைந்துனைந்துசுவரடியிற்
றரவருநல்லரிசியினைத் தனிப்பாலிலட்டருந்திக்
கரவில்சிவயோகத்தாற் கண்டுயின்றுங்களிகூர்ந்தான். (௧௧)

பொறிபுலன்களாதியவாப் புகல்பலபல்பொருள்களையுஞ்
செறிதருமாட்டினமாகச் செய்தனனென்பார்சிலபே
ரறிவரியதத்துவமா மகண்டபரத்தருள்பெற்றோர்
குறிவழிமுற்றுறுதபயன் குவலயத்துளொன்றுமின்றே. (௧௨)

அப்படியப்பஞ்சமதி லளவிறந்தகோடியுயிர்
துய்ப்பதற்காதாரமின்றிச் சோர்ந்திறந்துசிற்சிலுயி
ரொப்படியோவுய்ந்துறுநா ளிரவியாதியகோட்கண்
மெய்ப்பரதேசிகள்வடிவா மேதினியினிடைவந்து. (௧௩)

பார்த்திடைக்காடன்சிறிதும் பதையாதுகளிகூர்ந்து
சீர்த்திருக்கும்விதந்தேர்ந்து சென்றிரந்தாரவன்றேறி
யார்த்தியுடனமுதருத்தி யவ்ரவர்க்கொவ்வொருகட்டில்
சேர்த்திவற்றிற்றுயின்மினெனச் செப்பிமிகவுபசரித்தான். (௧௪)

வைத்துளவாங்கட்டில்களை வானினிலைப்படியமைத்துப்
பொய்த்துயில்கூர்ந்தனரவர்க்காப் புரதகனனருளுடி
மெய்த்துயில்வந்திடுமாறு வேண்டினனவ்வாறே
யத்துயில்வந்தவர்கிடந்தா ரவற்றைநேர்படச்சேர்த்தான். (௧௫)

சேர்தலும்பூதலமுழுதுந் திருமலியமழைபெய்து
நீர்தழைத்ததெவ்வுயிர்க்கு நிரப்பெனுநோய்நீங்கியது
நேர்தவிரன்னவரொழுந்து நின்னருட்பேறுயர்வென்று
* சார்தாநுந்தடையின்றி யருண்மினெனவடிபணிந்து. (௧௬)

---

* ஆர்தாள் - பொருந்தியதாத்தின் றாகிய விடைக்காடர்.

விடம்போலுமக்கொடுமை மேதினியிற்பின்வாரா
வுடன்பாடுபெற்றவர்த முறைப்படியொவ்வோராண்டின்
றிடந்தானுமுலகறியச் சீரியவெண்பாவறுப
திடம்பாடிவிரித்திட்டா னின்றுமந்நூலுளதம்மா. (கஎ)

முன்னிவிதப்பஞ்சமது மூதுலகிற்படராமற்
றன்னிகர்வெஞ்சனிக்கோள்பாற் றயரதன்போய்ச்சமரிட்டான்
பின்னிடைக்காடன்கிரகப் பிணக்கமுற்றுநேர்செய்தா
னென்னிலெவனுயர்ந்தோனே யினிதுணர்வார்சொலற்பாற்றே. (கஅ)

தெக்கணநாட்டியல்வழுதி செயும்பிழைக்காத்திருமதுரை
முக்கணன்றன்கோயில்விட்டு முனிவொடுபோம்படிபாடி
யக்கணமேயவன்றொழும்பா லகமிளகியாங்குறவோர்
வக்கணைப்பாட்டிடைக்காடன் வகுத்தகதைமறைவன்றே. (கக)

அக்கதையின்விரிவதனை யாலவாய்ப்புராணந்தான்
றிக்கறியநாடோறுஞ் செப்பிடலுண்டல்லாமற்
றக்கபுகழ்வள்ளுவன்றன் றமிழ்வேதந்தாபிப்பப்
புக்கதினந்துணையாகிப் போங்கதையுமொன்றுண்டே. (உ0)

இன்னமிடைக்காடன்ற னியற்சரிதமெத்தனையோ
பன்னவலார்பன்னிடுவார் பரகதியிற்புகலுண்மை
யென்னநவின்றிடலாகு மியாக்கையொடுமேலைக்குகையி
லன்னவர்வாழ்ந்துள்ளாரொன் றறைவாரும்பலர்தாமே. (உக)

சித்தர்களிற்சொற்சுவைதேர் தேரையார்முதலாகு
மெத்தனையோபேர்கவிக ளிசைத்துள்ளாரானுலு
மித்தரையோர்கண்காண வியற்புலமைநடத்திலா
லத்தகவோர்களையிந்நூ லறைந்திடுதல்வழக்கன்றே. (உஉ)

புள்ளுகைத்தாருயிர்முழுதும் புரந்தருண்மாலங்கிசமா
யிள்ளுமிடைக்காடன்றன் வியன்சரிதஞ்சிறிதுரைத்தேன்
றெள்ளுதமிழ்த்திருவாக்குத் திகழ்தெய்வப்புலமைபெறும்
வள்ளுவனார்சரித்திரமும் வந்தமட்டில்வகுப்பேனே. (உங)

இடைக்காடர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கக0க.

---

## இருபத்தேட்டாவது

# திருவள்ளுவநாயனார் சருக்கம்.

மன்னுபேரருட்சீரெய்தி வாழ்ந்தவள்ளுவரும்பத்தி
முன்னுதித்துய்ந்தவௌவை முதுசரித்திரத்திற்றோற்றும்
பின்னுதித்திட்டவேழாம் பிள்ளையையொருவேளாளன்
றன்னுடைத்தவப்பேறென்னத் தனியெடுத்தகம்புக்கானே. (௧)

புக்கவன்மனைபாலீந்தான் பொருக்கெனவவள்கைக்கொண்டு
மிக்கபால்சுரந்துகொங்கை விம்மலால்வியப்புற்றூட்டி
யிக்கவின்சேயையிந்நா ளெளிதினினமக்குநல்கன்
முக்கணனருளேயென்ன முடிவில்பேருவகைபூத்தார். (௨)

பாலமுதூட்டலாதி பயந்தசேயினுக்குமேலாய்ச்
சாலவுநடத்திப்பாலத் தன்மைபோய்க்குமரனாகி
வாலறிவினனுமந்நாள் வாசுகியெனுமோர்பெண்ணை
நூலணிமணஞ்செய்வித்து நுவலருமுவகையார்ந்தார். (௩)

முன்னயனாகத்தோன்றி முண்டகப்பொகுட்டில்வாழ்ந்து
பின்னரிவ்வுருவம்பெற்ற பிள்ளையாற்பெரிதின்புற்ற
வன்னவரிருவர்தாமு மரனடித்துணையிற்சேர்ந்தா
ரின்னவன்மனைவிதன்னோ டிருடியர்மதிப்பவாழ்ந்தான். (௪)

மாசறுதவத்தின்மிக்க வசிட்டமாமுனிக்குவாய்த்த
தேசவிர்வடமீன்சீர்த்தி செப்புவார்செப்புந்தோறும்
வாசநாண்மலர்ப்புத்தேளாம் வள்ளுவன்மனைதன்மாட்சி
பேசலுமுலகிலென்றும் பெருவழக்காயிற்றம்மா. (௫)

எள்ளுபுன்மதத்தோர்நாண வெலும்பொர்பெண்ணுருவாமூரி
லுள்ளுளாரொடுவாழாம லூர்ப்புறச்சேரிசார்ந்து
தெள்ளுசொற்புலமைவாய்ந்து சேலைநெய்திருந்தவாற்றால்
வள்ளுவனென்றார்பல்லோர் வளமையோனெனலோராரே. (௬)

பாதிவான்மதிவாழ்சென்னிப் பரமனேபரமென்றோர்ந்து
சோதிடமாதிநுல்க யேனவாகச்சொல்லி
நீதிமுற்றுணர்த்தும்பெட்பா னிகமமேயிதுவாமென்னத்
தீதின்மெய்யறிஞர்போற்றத் திருக்குறணூலுஞ்செய்தான். (௭)

அந்தநாள்பாண்டிநாட்டி லவிர்கடைச்சங்கத்துற்றார்
செந்தமிழ்ப்புலவர்பல்லோர் திடுக்குறக்கொடுமைசெய்து
சுந்தரேசுரர்தம்பாட்டுந் துகளினதெனப்போராடி
வெந்தவாணவமேற்கொண்டு மிகைபடும்வினைசெய்தாரே. (௮)

என்னபாட்டெவர்சொன்னலு மிதுபழம்பாடலென்னப்
பன்னலுமெழுதிக்காட்டும் படிறுமாதியகைக்கொண்டு
நன்னலப்புலமைத்தேற்ற நம்மதேயாகுநம்மோ
டின்னவாதனத்தில்வைகு மீட்டினரிலரொன்ருர்த்தார். (கூ)

உத்தமப்புலமைதன்ன லுறுதிபெற்றுள்ளமேலோ
ரெத்தனைபேர்வந்தாலு மிடங்கொடுத்திடமெப்பீட
மத்தர்தாமமைத்ததாதி யாகியகதையநேகஞ்
சித்தராயவர்வந்தாடல் செயுநகர்ப்புராணஞ்செப்பும். (க0)

அக்கடைச்சங்கந்தன்னை யழிப்பதுகருதியான்ற
முக்கணனருளைநாடி மொழிந்துளமுப்பானூலைக்
கைக்கணோர் துணையாக்கொண்டு கவின்றிருமயிலைநீங்கித்
தெக்கணதிசையைநோக்கிச் செறிபெருங்கானிற்சென்ருன். (கக)

ஆங்குறுமழைகண்டஞ்சி யாலடிதனிற்போய்நின்ருன்
பாங்குறுபுளிக்கீழ்நின்று பரிந்திடைக்காடனன்னேற்
ருங்குபுத்தகத்துப்பேயா தயங்குசிற்றிலைக்கீழ்வாவென்
றேங்குபேரொலியாற்கூவ வுடனவணுற்ருனோர்ந்தே. (கஉ)

அற்றமம்மழைசின்னேர மங்குபெய்தகன்றபின்னர்
மற்றவன்றனைவிணவி மனக்குறிப்பறிந்துன்கையி
லுற்றநூலிடைசொற்றுள்ள வொண்பொருள்வகைசொல்லென்று
முற்றயாவையுஞ்சொற்றுள்ளே னெனுமொழிமுதியோன்கேட்டு. (கங)

ஆட்டினமருந்தியுய்ய வடைபறித்துதவுமஃதைக்
காட்டியீதினுக்கும்பாடல் கழறியுள்ளாயோவென்ருன்
கேட்டிமைகொட்டுமுன்னங் கிளருரனென்னுநல்ல
தோட்டியாற்பொறிகளாய தும்பிகளைந்துங்காப்போன். (கச)

வரனெனும்வைப்புக்கோர்வித் தெனுங்கவிமகிழ்விற்சொன்னன்
பிரமனேரவற்குமால்போல் பெரியவன்றுணையாச்சேர்ந்தான்
கரவினெஞ்சகத்தளான காதலிதன்னைக்காட்டிற்
பரவுமாட்டினத்தையாவர் பாதுகாப்பினில்வைத்தாரோ. (கரு)

நக்கவர்வசஞ்சேர்த்தன்றித் தமிழ்த்திருமதுரைநோக்கி
யக்கவிப்புலவர்போகா ரதன்வகைதுலங்கவில்லை
மிக்கதாங்காட்டுத்தீயின் மேற்றிசைக்காற்றுஞ்சேர்வ
தொக்கவேயௌவைதானு மொருதுணையாகிச்சேர்ந்தாள். (கசு)

மூவரும்விரைந்தங்கேகி முதிர்தமிழ்ச்சங்கத்தார்மு
னியாவருமறியநின்ரு ரெந்தவூரெனலுமன்னோர்
பாவலரென்னத்தேர்வான் பகைத்தவள்ளுவனோர்வெண்பாத்
தேவரியாவருக்கும்வித்தாத் திகழ்பெரும்பாழூரென்ருன். (கஎ)

விள்ளுநீயாவனென்ன வெறுப்பொடுவினவலோர்ந்து
வள்ளுவனெனலுஞ்சற்று மதிப்பின்றிக்குலைக்குந்தன்மை
கொள்ளுதிகொல்லோவென்றார் குலைக்கவேவந்தேனென்றான்
றெள்ளுமூதுணர்வுற்றார்க்குந் தீவினைப்பயன்பொல்லாதே. (கஅ)

அவ்வளவிடையிடைக்காடன்று ஞற்றங்கரையிலென்றோர்பாட்
டெவர்களுமெழுதொணுச்சொ லியைதரும்படிசொற்றிட்டா
னவமிதென்றெப்புக்கொண்டார் நாரியரினத்தினல்ல
தவமுடையவளாமெளவை சைகைசிற்சிலசெய்திட்டாள். (கசு)

அவற்றினைமதவேட்காற்று வங்கனைக்கமைத்துச்சொன்னர்
தவத்தினுக்கமைத்துச்சொல்லித் தாழ்ச்சிகண்டொல்கச்செய்தா
ளிவர்க்குளங்கியன்றகாதை யின்னமெத்தனையோசொல்வா
ருவப்பொடம்மூவர்ப்போற்றற் குளமவரிசையாதுற்றார். (உ0)

அத்ததியறிந்துமுன்னு ளயனுருவாகிவாழ்ந்த
வித்தகப்புலவன்றன்கை மேவியவியனுரேடவ்
வுத்தமப்பலகைமீதி லுறும்படிவைத்தானுங்கு
வைத்தலுமவளவேயாய் மற்றையர்த்தள்ளிற்றன்றே. (உக)

ஆணவக்கிரனாதி யனைவரும்புனலில்வீழ்ந்து
நாணமுந்துயருமெய்தி நளிரொடுகரைசேர்ந்துய்ந்தார்
சேணகத்தொருசொலுமைச் செட்டியாஞ்செவ்வேள்போலு
மாணவனிந்நூல்சொன்ன வள்ளுவனென்றதன்றே. (உஉ)

வண்டமிழ்ப்பலகையென்றோர் வடிவெடுத்துள்ளவாணி
மண்டலம்புகழுஞ்செங்கோல் வழுதியைவிளித்தென்வாக்கே
பண்டயன்பகர்ந்தநூலும் பராசரன்மகன்சொனூலும்
விண்டவள்ளுவன்சொனூலு மெனுங்கவிவிளம்பினாளே. (உங)

கள்ளினுமினிப்பதாகிக் கவின்றருதமிழ்ச்சீரோர்ந்த
வொள்ளியபுலவர்நாற்பத் தொன்பதுபேருமன்பாற்
றெள்ளியதெய்வத்தன்மை செறிந்தவள்ளுவனைப்போற்றி
நள்ளியொவ்வொருபாட்டோதி நலமிகப்பொறுத்தாரம்மா. (உச)

சங்கநாவலரெல்லோருந் தனித்தனிப்பிரிந்துபோனு
ரங்கவரகஞ்செற்றாரு மவரவர்தொழின்மேற்சென்றார்
மங்கலின்மதுரைப்பொற்று மனைப்பெருவாவிநீரிற்
றுங்கமார்பலகையொன்றுந் தோற்றிடாதமிழ்ந்ததன்றே. (உரு)

மூவரிலிருவர்காதை முன்னுரைத்துள்ளேன்மற்றோர்
தேவனையவன்றாபித்த திருக்குறளென்னுஞ்சீர்நூல்
பூவகத்துறைவான்சொன்ன புனிதநான்மறையினுண்மைச்
சீவனேர்பொருள்களியாவுஞ் செகத்தினர்க்குணர்த்திற்றன்றே. (உசு)

நால்வர்சொல்சைவர்வேத நளிர்குருகூரன்சொல்லும்
போல்வலார்சிலர்தஞ்சொல்லும் பொருவில்பாகவதர்வேதம்
வால்வளையுலவும்வீதி மயிலைவள்ளுவன்சொலியார்க்கு
மேல்வழியுணர்த்திக்கீழ்மை விலக்குநல்வேதமாமே. (உஎ)

இந்திரப்பதவிக்கேற்று மிவுளியாகமும்பொல்லாதென்
றுந்தியகருணைவாய்ந்தோர்க் குறுதியுண்டாகத்தேற்றுஞ்
சந்திரவதனத்தாதி தருமகாரெழுவர்தம்மிற்
பிந்திவள்ளுவப்பேர்தாங்கும் பெரியவன்பேசுநூலே. (உஅ)

அத்தனிநூலான்மாட்சி யகிலமுற்றவிரப்பெற்று
மத்தகவேழமூரு மன்னராதியராற்பொன்கொண்
டொத்தபல்போகமார்ந்தா துரியமுற்றெழிலேசெய்திட்
டுத்தமமனைவிதன்னோ டுலப்பிலில்லறமுய்த்தானே. (உகூ)

நல்லறந்தானென்றெளவை நவின்றுவப்புறுத்தலான
வில்லறமென்னும்பொன்னுக் கியலுமையாணியென்னச்
சொல்லறமுயலுநாளிற் சுரரெலாம்பார்க்கவீச
னல்லறலனையகூந்த லம்மையோடாடலுற்றான். (௩0)

ஆடலிலவள்வெல்வாள்போன் றவிர்தருதருணத்தன்னோ
னேடகத்தாளிலொன்றை நருக்கெனத்தூக்கிநந்தத்
தோடதைக்கழற்றிமுன்போற் றுலங்கிடத்தரித்தான்காதிற்
சூடகக்கையாளணித் தோல்வியேற்றவளாநின்றாள். (௩க)

நந்திமத்தளமுமஞ்சு நடனமுற்றியதானக்கன்
வந்திருந்துவகையார்ந்த வானவர்தம்மைநோக்கி
முந்திவென்றவராருண்மை மொழிகுதிரென்றானன்னோர்
புந்திசோர்ந்தவசமானோம் புகலுமாறறியேமென்றார். (௩உ)

நாணமற்றதுசொன்னோர்க்கு நடனநாயகன்றான்பாரின்
மாணுறுமயிலையூர்ப்பால் வள்ளுவனொருவனுள்ளா
னணமோடவன்பாற்போய்க்கேட் டறிந்துகொண்டதன்பினன்ற
சேணகத்துமதூர்தோறுஞ் சென்மினென்றிசைத்தான்மன்னோ. (௩௩)

வேறு.

அதுவினைவலு மமரரெல்லோர்களு மகமளவறவொல்கிக்
கதுமென்றாங்குதம் முருக்கரந்தேகினர் கண்ணுதனடங்கண்டாற்
கிதுவிளங்கிடா தெனநினைத்திட்டதென் னெனச்சொல்வேனெங்காளு
மதுவுமாமிசமும்புலைவேள்வியின் மாந்துபுன்மதிப்பண்பே. (௩௪)

அவர்வந்துற்றவா றுணர்ந்துவள்ளுவப்பெய ரமைந்தவந்தணன்முன்னாட்
டவளமூரனீ ருடனிடுமனைவிபாற் றழலெனச்சுடுமிவ்வூ [ட்டாள்
ணைவணமுண்பனியா னென்றனன்விசிறியொன் றெடுத்துவந்தசைத்தி
சிவசிவாவதி லாவியுண்டாயது திகழ்ந்திலார் வியந்தாரே. (௩௫)

அன்னமுண்டபின் கயிற்றெடுதோண்டியங் கமைதருகிணற்றிட்டம்
மின்னனுளதன் பாதியிற்புனல்கொணர் வேளையிலழைத்திட்டா
னென்னவோவென வவளவில்விடுத்துவந் தெய்தினளதுநின்ற
தின்னவற்புதங் காண்டலுமறைந்தவ னிருந்தவரிலங்குற்றூர். (௩௬)

யாகஞ்செய்பவர் முதலினர்க்கிந்திர னிசைக்குநாளளவுந்தம்
போகமீந்திட லேதொழிலாகிகழ் பொதுமடந்தையர்தம்பொற்
றேகந்தோய்ந்திடு தேவர்கள்வாசுகித் திருப்பெயர்மகள்கற்பின்
பாகங்காண்டலு நடுநடுங்கினரதும் பரனுணர்த்தலின்மாதோ. (௩௭)

தமிழினுன்மறைப் பொருள்செய்தோனும்பர்க டமக்குநல்லுபசார
மமிழ்தின்மிக்கசொல் லொடுதகச்செய்தன னவர்களுமவன்றன்னைத்
திமிரமெள்ளள வேனுமில்கற்புடைச் சேயிழையொடுவாழ்த்தி
யெமிதயத்தவா வுற்றிவண்வந்தவா றின்னதென்றிசைத்தாரே. (௩௮)

அவளங்குற்றவர் வத்திராபரணமுன் னுயசீர்குறிந்தேனு
மிவர்களியாவரென் றவனிடம்வினவில ளித்தகைமனைவாய்க்குந்
தவமுளானிழை நக்கிடுமேழையேன் றூனறிகுவன்கொல்லோ
சிவன்றன்றூள்கொடு குழைகவர்கூத்தெனோர் சிறுகவியுரைத்தானே. ()

அந்தமட்டினி லையமற்றுண்மையோர்ந் தவர்தமூர்வயிற்சென்றூர்
சந்தனுசலக் குறுமுனிவரன்றரு தமிழ்க்கொருபெரும்பேறு
வந்தவள்ளுவ னிகபரத்தியாவரு மதிக்குமேதகவார்ந்தா
னெந்தமாட்சியுங் கற்புடைமனைத்தொடர் பெய்தினர்க்கரிதன்றே. (௪0)

மட்டில்பேரருட் கடற்பயனுகர்ந்துறும் வள்ளுவன்றனக்காளா
யெட்டிநேர்வினைத் தொடர்பறக்களையவே லேலசிங்கப்பேர்கொள்
செட்டிவாஞ்சையுற் றடுத்தனன்றடுத்ததிற்றிரும்பிலான்செகத்தியார்க்கு
மொட்டிடாதசில் சோதனையினுமன முடைந்திடாதுற்றூனே. (௪௧)

ஒருமரத்தினி லேறவிட்டிருகையு மொருங்குவிட்டிடச்சொன்னன்
குருபதந்துணை யெனவிடுத்தவன்மனை குடங்கிணற்றிடைநின்றூங்
கருவமாம்வெளி தாங்கிடநின்றன னன்றபக்குவநோக்கித்
திருவருட்பயன் பெறுநெறியினைவலச் செவியிடையுரைத்தானே. (௪௨)

அன்றுதொட்டவன் வாசுகிப்பெயர்மனை யவளொடுபிறந்தான்போ
னன்றுதீதெனல் கருதிடாதுரைப்படி நடந்துவந்தான்சின்னாட்
சென்றுலோகமுற் றொருபெரும்பஞ்சநோய் செறிந்ததன்னவன்றன்பாற்
குன்றுபோலநெல் லாதியதானியக் குவைகளுற்றனமன்னே. (௪௩)

அவற்றினைப்பண மில்லவர்க்கற்றையூ ணளவினிலளந்தேனோர்க்
குவப்பினோடுநீ கொண்டதற்கொருபடி யுயர்த்திவில்லெனச்சொன்னான்
றவத்தின்முற்றினிற் பிறந்தவனுதலிற் றவறிடாததுசெய்தான்
றுவக்குபஞ்சமுற் றொழிந்ததக்குவையினந் தொலைந்திலவளர்வுற்றே. ()

விற்றபொற்பணத் திரளதியூதிய வியப்பொடுதிகழ்ந்திட்ட
தற்றமப்பொனை யொருபெருஞ்சதுரமா வமைத்ததிற்பெயர்தீட்டி
வற்றலில்லதாங் கடலிடையிட்டிவண் வருகெனக்குருச்சொன்னுன்
சொற்றவாறுசெய் தனுத்துணைச் சோர்வுமில் சுமுகனுமெனவாழ்ந்தான்

அன்னசீடன்முன் மாமிசத்துணவினை ஞதலினுலோர்கா
லின்னசற்குரு வதனைமுற்றெழித்தியென் றியம்பலாமயனுநாள் [ராற்
சொன்னநூலின்முன் வேள்வியிற்றினல்சொலித்தொடாமையின்சொலுநீ
சின்னவாயிரந் தினுந்துசெத்துளபெருஞ் சேல்கொளென்றிசைத்தானுல்.

அந்தவாறொரு நாள்கொளுஞ்சேல்வயிற் றுடகச்சதுரத்தைச்
சொந்தவாளர்கண் டதிற்படர்பாசியாற் றுய்த்தகல்லெனவெண்ணிச்
சந்தவாயிலிற் போட்டனர்செட்டிதன் றுளுறைத்திமொற்றுல்
வந்தவாறுணர்ந் ததனையக்கணந்திரு வள்ளுவற்குரைத்தானே. (சஎ)

அதனைக்கேட்டலுமற வினைப்பொருளெவா றகற்றினுமகலாதென்
றுதகத்தின்பிணந் தினலுநீத்துயர்ந்துளா ருண்பவேயுணச்செய்தா
னிதனைத்தேர்ந்துல கன்றுதொட்டின்றுமே லேலசிங்கத்தின்பொன்
பதனஞ்செய்யவும் வேண்டுமோவெனச்சொலும் பழக்கமெய்தியதம்மா.

சிறந்தமேலவர் தீவினையொருவரைச் செயும்படியுரைத்தாலு
மறந்தழைத்ததோர் ஞாயமங்கதனிலுண் டாவதற்கிதுசான்றும்
பறந்தவோதிமப் புள்ளிறையாதியர் பகர்ந்தசொற்குறித்தேனு
மிறந்தவூனுமுண் பதுதகாதென்பதே யியற் * றமிழ்மறைக்கோளே. ()

மகிதலம்புகழ் வள்ளுவன்மனைவியை மலைச்சிலைக்கரன்றேவி
சகிகளோடுவைத் தின்புறவிழைந்ததிற் றடைசிறிதுறக்கண்டவ்
† வெகினமன்னனை யேனெனவினவின னியானமுதிடுந்தோறு
மெகினல்லூசியு நீரும்வைத்திடும்படி யியம்பியதேனென்றுள். (ருo)

அன்னஞ்சிந்திடி லதனிடைக்கோத்தெடுத் தலம்பியுண்பதுநாடிச்
சொன்னதுண்டவ ணியலவிந்நாள்வரை சோர்ந்திலையெனச்சொன்னுன்
பன்னல்கேட்டலும் பனையருகேகினள் பாரிடைவாழ்மாந்த
ரொன்னஞானமெய் தினுமினியவர்ப்பிரிந் திடிற்றுயருறுமாறே. (ருக)

அடிசிலுக்கினி யாய்முதிரன்புடை யாய்சொல்சொற்றவறுதாய்
கொடிதுதாள்வரு டிப்பினேதூங்கிமு னேயெழுந்திடும்பாவாய்
கடிதுபோகுதி யோவினியிரவிலென் கண்டுயில்வுறுங்கொல்லோ
விடியற்காண்டன்மிக் கரிதெனும்பொருள்கொவோர் வெண்கவியுரைத்தானே.(ருஉ)

தன்னுடைச்சரீ ராங்கிசத்துதித்திடு தனையரிற்சிறந்தோன்று
னென்னுமாண்கொளே லேலசிங்கப்பெய ரிசைந்ததோர்வணிகன்பா
லின்னுஞ்சிற்சில பொழுதினிலியானுமங் கேகுவலெனலாலே
நின்னுயிர்க்குடி லரீமுடற்செயும்வித நிகழ்த்துதியெனக்கேட்டான் ()

* தமிழ்மறை - திருக்குறள். † எகினம் - அன்னம்.

கேட்டுநின்றவன் பாலிருகாலினும் கிளர்வைக்கோற்புரிகட்டி
மாட்டுமொனிடர் பலர்சொலவீர்த்திலூர் வடபுறத்துறுகாட்டிற்
போட்டுவெந்திருந் திடுகவென்றலுமவன் பொருவறுந்துயரெய்தி
காட்டுளார்முறை மறந்திதுவினையது நம்பிழையெனத்தேர்ந்தாள். (ருச)

அந்தவள்ளுவ னொருதினம்பற்பல ரறிதராவுடல்வீழ்த்திச்
சொந்தநன்னிலே சேர்ந்தனனுடனவன் றொழும்பனுகியசெட்டி
நொந்தயர்ந்தழு தேங்கியங்குளசிலர் நுவன்மொழிவழிதேறிக்
கந்தநீர்முழுக் காட்டிநன்கியைதரு கவின்பெறப்பூசித்து. (ருரு)

வீரசைவநன் னெறிப்படிநிவேதனம் வேண்டுநரொடுதுய்த்துத்
தேரமைக்குமுன் னவ்வுருவிழித்துநான் செப்பியபடிசெய்யு
மீரமின்றியே யிதுசெய்தாயென்றலு மென்செய்வானிசைவுற்றுன்
பாரணங்கொரு பஞ்சணையாயினள் பகர்ந்தவாமுடித்தானே. (ருசு)

அவ்வுடற்றொடுங் காகமாதியவெலா மக்கணமமரேசர்
வெளவுசீர்விமா னத்தினிற்கயிலைமால் வரைத்தலைபோய்ச்சேர்ந்த
விவ்வுலோகமா னிடரினுமங்ஙன மேகினர்பலரீற்றி
லொவ்வுசெட்டிபோய்த் தேடிநொந்தென்பொர் சிற்றழுந்தளவினிற்கண்டான். ()

அதனைநீரினி லுறைத்தினியவருட னருந்தியாங்குறப்பெற்று
னிதனைநன்குணர்ந் திடுமுழுப்புலவர்க ளியாவருமெங்ஙனு
மதனைவென்றவ னருள்பெறுமேலவர் மனத்தினிற்குறியாக
வெதனையெண்ணினு மங்ஙனமுடிவதே யியற்கையென்றிசைத்தாரே. ()

அச்சரீரத்தான் முத்திபெற்றவர்தொகை யதிகமோமதனுடற்
றச்சமென்றெணித் தமிழ்விரகன்பெறு சோதியிற்புகுந்துய்ந்தோர்
மிச்சமோவறி கின்றிலேனதனிசம் வேதனுதியரோர்வா
ரிச்சரித்திர மாதொண்டைமண்டலத் திறைபலர்சொலக்கேட்டு. (ருஎ)

கச்சிவிட்டலை கடற்றுறைமயிலையிற் கடுக்கெனப்புகுந்தாங்கு
நச்சிவாழொரு சிற்பனுல்வள்ளுவ நாயனுருருச்செய்து
மெய்ச்சிவன்றரு மாகமவிதிப்படி மேவுமவ்வயின்றூபித்
திச்சியாநனி பூசைசெய்துயும்படி யிலிங்கதாரணர்க்கீந்தான். (சுo)

அந்தவிக்கிர கத்தினதமைதியு மதன்மிசையலங்கார
மிந்தநாளினுஞ் செயுமவர்பழக்கமு மென்னெனயான்சொல்வேன்
கந்தநாண்மல ரோனுமேலேலசிங் கழும்வியந்திடக்கூடுஞ்
சொந்தவாய்கொடு தொழுமவருணர்மொழி சொல்லினுஞ்சொலலாமே.

இன்றுமத்திருக் கோயிலங்குளதுமெ யெண்ணிலாவடியார்கள்
சென்றுபோற்றுபு வணங்குகின்றூர்களிச் சிறியவனேனும்போய்
நன்றுளார்பலர் மகிழவோர்பதிகமு நவின்றுகைதொழுதுள்ளேன்
கொன்றுதின்பதே கொடிதெனுந்தெளிஞரக் குரவன்மாண்பறிவாரோ. ()

இல்லறத்துறு ஞானிகட்கிறையென விகபரத்தினரியாருஞ்
சொல்லவாழ்ந்தவள் ளுவரருட் புலமையைச்சுருக்கமாச்சொலித்தீர்த்தே
னல்லலின்றிய துறவறத்தினர்க்கர சாமெனும்புகழ்தாங்க
வல்லபத்திரகிரி யருட்பெருந்திறம் வந்தமட்டுரைப்பேனே. (சுஙு)

திருவள்ளுவநாயனார்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககசுக.

## இருபத்தோன்பதாவது
## பத்திரகிரியார் சருக்கம்.

வேதியனொருவன்வேத வித்துறழ்மேன்மையெய்தித்
தீதின்மந்திரத்தாற்சிற்சில் சித்தியும்பெற்றோனாகி
யாதிவாழ்காசிக்கங்கை யதனிடையாடியாய்ந்தோ
ரோதிடும்வடநாட்டோரூ ருடையமன்னவனைக்கண்டான். (க)

அன்னவன்வித்தையாலவ் வரசனோரன்பனாகித்
தன்னதுமகளையீந்தான் றனிப்புகழமைச்சன்றானும்
பொன்னதாலளகையானைப் போலுமோர்வணிகன்றானு
மின்னனாரினத்திற்சேர்த்த வேசியுமதுவேசெய்தார். (உ)

* மான்மகனனையபார்ப்பான் மதிக்கருமுவகையெய்தி
நான்மகளிரையும்வேட்டு நலநுகர்ந்திருக்குநாளில்
வேன்மகிபனையேபோலும் விக்கிரமார்க்கன்றனைப்
பான்மதிப்புதல்வற்கொப்பாம் பட்டியென்பவனையென்னால். (ங)

தெரிவரும்பெயருற்றோனத் திகழுமோர்செட்டிதன்னைப்
பரிதிநேர்சீர்த்திவாய்ந்த பத்திரகிரியைப்பெற்று
ரரிவையர்நால்வர்தாமு மாண்மகார்ப்பயந்ததோர்ந்து
விரிதருபுவனத்துள்ளார் மிகைபடவியந்திட்டாரே. (ச)

அச்சிறார்நால்வர்தம்மி லரசனேடமைச்சன்பெண்க
ணச்சியபுதல்வர்கூடி நாரணியருள்சற்றெய்தி
யுச்சினிநகரந்தன்னி லுயரரசாட்சிசெய்து
குச்சிதம்பலரும்பேசக் குசமகவொன்றுன்மாய்ந்தார். (ரு)

செட்டிதன்மகளங்கீன்ற செல்வனுமொருவன்செம்பொன்
வட்டியைப்பெருக்கியீகை மறந்துநாட்கழித்தான்போலு
மொட்டியமூவர்கீர்த்தி யுலகமுற்றுளிரும்பண்பிற்
கெட்டிலொன்றேனுமன்னா னிசைநலமிலங்கவின்றே. (சு)

சொற்றமூவருக்கும்பிந்துந் தோன்றலாத்துணர்மென்கூந்தற்
பொற்றனிமயில்போலால்வாள் புத்திரிபயந்தபாலன்
பற்றலர்நடுங்கத்தாக்கும் பணைப்புயமுதற்பல்சீர்தோய்
சிற்றரசாகித்தென்பாற் செந்தமிழ்த்தேயஞ்சேர்ந்தான். (எ)

---

* மான்மகன் - பிரமன், அல்லது மன்மதன்.

பத்திரகிரியேயன்னேன் பரித்தலூரொன்கின்றுரு
நத்தினமுலவுஞ்சார ளுகபட்டினமென்பாரு
மெத்திசையினிலெவ்வூரோ வெனச்சொல்கின்ருருமாகு
முத்திறத்தொகுதியோரிம் மூதுலகினிலுள்ளாரே. (அ)

வடமொழித்திறமைவாய்ந்து மதுரமும்விதியுமாருத்
திடமுறுநூரோர்பாகந் திகழமூன்றுரைத்தானென்றுஞ்
சடமதைப்பயந்தோன்சொன்ன சத்தியந்தவருணகிப்
புடவியின்மகளிர்ச்சேர்ந்தும் புத்திரர்ப்பயவாதுற்ருன். (கூ)

மன்னவனுகிவேண்டு மகளிர்தோண்மருவப்பெற்றும்
வன்னமெல்லிதழ்வாய்ச்செல்வ மக்களைப்பயவாதுற்ற
வின்னலின்கொடுமைதன்னை யாவரோயறியவல்லார்
பன்னகத்தோடுநாளும் பழகரனரியல்லாதே. (கo)

ஆதலின்முத்திவீட்டி லடைதலேகடமையென்னும்
போதமிக்கெய்தியென்றும் புனிதசற்குருவைத்தேடு
மேதமேதலையாப்பெற்று மிராச்சியபாரந்தாங்கி
மாதராதியரோடாடும் வழக்கமுநடத்திவந்தான். (கக)

திருவருட்பரனைநாடிச் சிந்தைதத்தளித்துத்தன்முன்
குருவரக்காணுவாற்ருற் கோரமுந்துயருமெய்தி
யிருநிலத்திடைநற்சீட ரிருக்கின்ருர்குருவின்றென்ன
வொருபறையறையச்செய்வித் துயிர்வனாவெறுத்தங்குற்ருன். (கஉ)

அப்பறையறைவான்றன்பா லாங்கொருவீதியின்கட்
பப்பரூட்டிறமைவாய்ந்த பட்டினத்தடிகளன்பா
லிப்படியரசன்சொல்ல வில்லைநற்குரவனுள்ளான்
றப்பறவொழுகுஞ்சீடன் ருனிலையென்ருனென்ருர். (கூ)

அதனைநன்கவனுமாராய்ந் தாகுமாமென்னத்தேறி
யிதமுறுமந்தவாறே யிசைத்துவந்திறைமுன்னின்ருன்
விதமுணர்ந்திங்ஙன்மாறி விளம்பலேனெனலும்வேர்த்துப்
பதமுதலுடலமுற்றும் பதறிடப்பணிந்துபோற்றி. (கச)

ஐயநீயுரைத்தவாறே யறைந்துபோயினனியானங்கோர்
துய்யநீறணிந்தமேனித் தொண்டர்வந்திதனைச்சொல்லி
மெய்யறிவதனைமாற்றும் விஞ்சையும்விளைத்தார்கெட்டே
னுய்யவிட்டிடுதல்வேண்டு மொறுத்திடேலென்ருனேர்ந்தே. (கரு)

மன்னனங்கேகியந்த மாமுனிவரனைநோக்கி
யின்னதேனுரைத்தீரொன்ரு னியானுளேனுனக்குவேண்டு
நன்னலமுழுதுஞ்செய்ய நவையில்பக்குவமெய்தில்லா
யென்னநன்குறுத்திச்சொன்ன ரின்னலுங்களிப்புமெய்ந்தே. (கசு)

என்றினிப்பருவமியானெய் திடுவனென்றிரங்கிச்சோர்ந்தான்
பொன்றிரளனைத்துமள்ளிப் புறத்துளரீர்க்கிறைத்தவள்ளல்
கன்றிடேல்வாரமொன்றிற் கவின்றருங்காண்பாய்வேறூர்ச்
சென்றிடேனுன்னைக்கொண்டே செல்லுவேனென்னச்சொன்னூர். (கள)

நவினயவசனங்கேட்டு நாளொருயுகமாத்தோற்றக்
குவிதருகரத்தனுகிக் கோயிலுட்குறுகிவாழ்ந்தான்
செவியணிவளையானன்பர் செப்புநாளதன்முன்னுளி
லவிர்தருகதிரோன்மேற்றிக் கலைக்கடலமிழ்ந்தபின்னர். (கஅ)

அரண்மனைவிலாசமெங்கு மலகிடுமொருத்தியண்டர்
பரவுசீருடையதாய பளிக்கறைப்பள்ளிக்கட்டில்
விரவுபூவணையின்மேவி விரைந்தெழல்விரும்பியுற்ற
கரவுதான்பொய்த்துமெய்யாய்க் கண்டுயிலடைந்தாளங்கோ. (கசு)

அப்பிழையறிந்துமன்ன னவட்சிறைச்சாலையுய்த்துத்
திப்பியத்துயில்கூர்ந்திட்டுத் தினகரனுதித்தபின்னர்க்
கொப்பியல்புளிவளாறு கொண்டுவந்தடிக்கச்செய்தான்
செப்பிணைத்தனத்தப்பாவை சிரித்துமிக்களிகூர்ந்தாளே. (உ0)

அதுதெரிந்தடியைநீக்கி யம்மகடன்னைநோக்கி
யிதுகுறித்தழாதுநீமிக் கின்புறலென்னேவென்றான்
பொதுமுதலாகுமீசன் பொற்பதத்தருச்சித்தற்கா
மதுமலர்விரித்தபாயல் வாயரைக்கடிகையுற்றேன். (உக)

பாவமித்துயரீந்திட்டாற் பலதினமடவார்தம்மோ
டாவலுற்றதனிற்றுஞ்சு மரசனையந்நாட்டிற்
றேவதுதுவொத்துன்பஞ் செய்வரோவெனச்சிந்தித்தே
னேவரும்வியப்பதாகு மிச்சிரிப்பெழுந்ததென்றாள். (உஉ)

என்றலுங்குரவனந்நா ளியம்புநாளிதுவென்றோர்ந்து
மன்றனதாள்கைமுற்று மறந்துகைவிடுத்துத்தற்சேர்
மின்றனையனையார்தம்மை வெருளுறவிலக்கித்தண்ட
மொன்றணிந்துரிமைநாயொன் றுடன்றொடர்தரச்சென்றானே. (உங)

சென்றுபேய்க்கரும்பொன்றேந்துந் தேசிகன்றிருமுன்வீழ்ந்திட்
டின்றுனதடிமையானே னிகத்துமாவிழந்தேனித்தண்
டொன்றுமென்னவையவத்தோ டொத்ததாலொழித்திட்டில்லே
னன்றுபின்றொடருமிந்நாய் நசையுமாற்றறியேனென்றான். (உச)

ஆனையும்பரியுந்தேரு மரிவையர்குழாமுமம்பொற்
றானையும்பணியுமற்றுஞ் சாற்றுவமுழுதுநீத்த
கோனையவ்வளவிலேற்றுக் கூட்டியோர்காட்டிற்கொண்டேய்த்
தேனையர்வாராத்தானத் தீண்டுகில்லென்னச்சொல்லி. (உரு)

போயினரன்றுமுற்றும் புலர்ந்தவணின்றான்வந்த
நாயிவன்றன்னைவிட்டு நழுவிடாதயர்ந்ததன்பா
லாயிரம்வினையுந்தீர்க்கு மன்னமட்கலத்திலேந்தித்
தாயினுமினியர்வந்தார் தவபலம்பெற்றான்போன்றான். (௨௬)

அங்குறுகுளத்திலாட்டி யரியவெண்ணீறுபூசிச்
செங்குணத்தருமைகாட்டிச் சேந்தனுக்குரைத்ததோதிப்
பொங்குதீப்பசிநோய்தீரப் புசிப்பளித்துடனுங்கெய்து
மங்குறுத்தவந்தோய்நாய்க்கு மகிழ்வுடனிட்டாரன்றே. (௨௭)

ஐயமுற்றொழியத்தேற்றி யரசனென்றருமையாருஞ்
செய்யமாட்டாதவேற்றார்த் தெருவினிலிவனைக்காட்டிக்
கையடகாக்கொள்வார்க்கோர் காசுபெற்றளிப்பேனென்றார்
பையரவனையவல்குற் பரத்தையாமொருத்திவேட்டாள். (௨௮)

அவளிடங்காசொன்றேற்றிட் டன்னவன்றன்னைநோக்கி
யிவள்பணிசெயலிற்சோரே லியாஞ்சிலநாளின்மீட்பேஞ்
சிவனருட்செயலேயென்னச் செப்புசென்றாரஃதே
தவமெனமுயன்றங்குற்றான் றனயனிலவளைச்சார்ந்தே (௨௯)

கணவனுத்தரவின்மாறாக் கன்னியிற்கருணைப்பான்மை
யணவுசற்குருசொற்றள்ளா வறிவுடைச்சீடனானேன்
றணவறுமுவகைவாய்ந்து சரதசித்திகளுந்தோய்ந்து
பிணமெனவீழாவீடும் பெறுமெனல்பிரான்சொல்லாமால். (௩0)

அங்கவள்பணியுமோரைாங் தக்கரஞ்செபிக்கும்பண்பு
மங்கலிறவமாக்கொண்டான் வாழ்வுமிஞ்சிடலினன்னாள்
பொங்கமார்தரநல்கன்னம் புசித்துநாயினுக்குமிட்டான்
சங்கரனருளுண்டாங்காற் றடைசெய்வாரொருவரின்றே. (௩௧)

தடியொடுசுவானந்தானுந் தன்றுணையாகக்கொண்டாற்
கடிகடாமுதலிலன்ன மளித்தபாத்திரமுஞ்சேர்ந்த
திடிவினுவரவொத்தேங்கா திருப்பினுந்தன்னையந்தக்
கொடியனாளடகாக்கொண்ட கோதறக்குறிப்பதுண்டே. (௩௨)

ஒருதினத்திருளிராவி லுண்கலங்கழுவுநீரைப்
பெருநலத்தன்னேனூற்றப் பிறையெனவெளுத்துக்கூனன்
மருவுதாய்க்கிழவிமீது வாய்ந்ததான்மகளிற்சீர்த்த
திருவுருப்பெற்றுமூப்புத் தீர்ந்திளமையினாளானாள். (௩௩)

அவ்வியப்புணர்ந்தபோதே யவண்மகண்முதற்பல்லோரு
மிவ்விளம்பருவமின்னே னெச்சிலாலியன்றதென்று
லெவ்விதஞ்செய்யமாட்டா னெனக்குறித்திறைஞ்சினார்ச்
செவ்வியனெல்லாஞான தேசிகன்றிருக்கூத்தென்றான். (௩௪)

அன்றிரா முழுதுநீங்கி யருக்கன்வந்துதிக்கும்போது
கன்றினைநீத்துப்போன காலிநேர்கருணையாசான்
முன்றில்வந்தவளைக்கூவி முன்னவடரும்காசிந்திட்
டின்றிருப்பணிசெய்தான்கொ லூறிலாதென்னக்கேட்டார். (கரு)

இத்தகைத்தவனென்றோரா தியான்பணிகொண்டேனென்றப்
புத்தமுதனையசொல்லாள் புலர்ந்துதாழ்ந்திறைஞ்சிநொந்தா
ளத்தவரிருவர்தாமு மருமைவாசகங்கள்பேசிச்
சித்தர்தம்பெருமானூரூந் திருவிடைமருதூர்சேர்ந்தார். (கசு)

குருவெனத்திகழ்வார்மேலக் கோபுரவாயிலுற்றார்
தெருளுடைச்சீடனுசான் செப்புசொற்படியேசீழ்பான்
மருவுகோபுரத்தின்வாயில் வைகினன்மருதன்செய்த
திருவிளையாடல்கோடி தெரிந்தவர்செப்புவாரே. (கஎ)

மன்னனுயிருந்தோன்கற்பில் வனிதைபாலடகதாகிச்
சொன்னகுற்றேவல்செய்த துயாதோதொகைசொல்லொண்ணுப்
பொன்னழித்தவரோர்காசு புரந்தவெந்துயரோமேலென்
றுன்னவல்லவருஞ்சில்லோ ருலகினிலிருக்கலாமே. (கஅ)

வேறு.

ஓரிரவின்போ துமைகணவன்று னுடையுமி லவனுகிச்
சீரியமேலச் சிகரியுளார்பாற் சென்றமு திடுகென்று
னூரிலிரந்துண்டாலு மெனவாவா யொருகோ வணமுளதா
னேரிலெனைக்கண் டேற்றதுதகுமே நீயென வினிதோதி. (கசு)

என்னினுமிக்கோ னொருசமுசாரி யியல்கீ ழச்சிகரி
தன்னிலுளானன் னவனிடமேற்கிற் றரலா மமுதென்று
ரன்னியமில்லா னவனுமிரக்கின் றதுசொல வாங்குள்ளா
னுன்னிலையிவ்வா றென்றனனெனவெய் தோதி மறைந்தானே. (சo)

பற்குனனனையார் புகழிசையிகழ்சீர்ப் பத்திர கிரியுண்மைச்
சற்குரவன்சொற் சாரமறிந்தே தடியாற் றன்னருகே
நிற்குநனையை யடித்தனனுயிர்போய் நீட்டி நிமிர்ந்ததுடன்
றெற்குடையானைச் செறுமவனருளைச் சிந்தைசெய் துளநொந்தான். (சக)

தடியையொடித்துத் தளர்கிழவிக்குத் தமநிய நகர்மடவார்
வடிவருளுங்கைக் கலமுமுடைத்து வண்பொடி யுறுபையுங்
குடியிலிரத்தற் காதரமாகுங் கோவண முங்கொண்டே
யடியவர்முறையிற் றமிழ்கொடுபாட லநேக மொழிந்தானே. (சஉ)

இன்னிசையுஞ்சுவை யும்பொருளும்பொலி யெக்கா லக்கண்ணி
பன்னினனுசிரி யன்பழுதின்றிய பக்குவ னெனமகிழ்சீர்
துன்னினனென்னினு நாய்தனதோரடி துய்த்துயிர் விட்டிடுதீங்
குன்னிவருந்திடு சோகமுநெஞ்சிடை யோர்வயி னுற்றதுவே. (சக)

தனையரின்மிக்குயர் நாயுயிரொவ்வழி தட்டழி வுற்றதுவோ
வினையிலகப்படு மோகமனூரிடை மேவிடு மோபிரமா
வனையவுடற்றர ணோவுறுமோவென வரனரு ளினைநாடி
யெனைமிகநம்பு மதைக்கைவிடேலென வென்று மிரந்தானே. (சச)

பத்தினிமந்திரி யாதியராநிகழ் பற்பலர் களுமெய்தா
மெய்த்திடபத்தி யுடன்றொடர் நாயதன் மேதகை யாரறிவார்
முத்தியடுத்தத னுலதுசோர்வறு மூதுணர் வெய்தியதோ
ரத்தியுரித்தவர் கண்ணருளெய்திடி லார்கதி யடையாரே. (சரு)

வேறு.

அந்தநாயுயிர்போய்த் தொண்டைமண்டலத்தி னணிகிளர்மங்கல மென்னுஞ், செந்தகைநகரிற் பொருண்மிகைபெற்றமோர் செட்டிதன்மகளெனச்செனித்து, நந்தலிலெழிலு முணர்வுமிக்கடைந்து நாளொருமேனியாவளர்ந்து, குந்தவேனிகர்கட் பார்வையும்பொலிவுங் கொண்டுநற்பருவமெய்தியதால். (சசு)

அத்தனிப்பருவம் வருதலுமருத னருட்டிருநோக்கினுலன்னுள்
சித்தமதனிற்பத் திரகிரியார்தந் திருவுருவாதியசிறப்பு
நித்தமுநடந்த கதைகளுநாயாய் நிகழுடனேயமிக்கான்றன்
கைத்தடியடியாற் பிரிந்ததுமாங்குக் கவினுடற்பெற்றதுந்தோன்ற. ()

அவற்றைமற்றொருவ ரொடுமுரைத்தில்லா ளவள்குலத்தினர்மணம் பேசத், துவக்குதோறிசையா மொழிமிகச்சொன்னுள் சோகமுற்றன்னை தந்தையர்தா,முவக்குமாறுனக்கியா தெனவிரந்திட்டா ருளசிவதலந்தொறுமேகிப், பவப்பெருக்கொழிக்க வேண்டுமென்றுரைத்தாள் பழுதிலா நலமெனமகிழ்ந்தே. (சஅ)

தாங்களுந்துணையா மகளொடுகூடிச் சகடமேற்பலபொருள்களுங்கொண்
டாங்கனபரிவா ரங்கள்சூழ்தரவே யருணையாமாதையாதியவா
வோங்கருட்டலங்க டோறுமொவ்வொன்றி லொவ்வொருதினமிருந்தொருவி
யேங்கலுற்றவடா னெண்ணிடுந்தலமா மிடைமருதூரினிலேய்ந்தார். ()

அங்குவந்திடலு மம்மகடன்னூ ராமெனுமுணர்ச்சியளாகி
யிங்குநின்றிடுமி னெனவனைவரையு மிகந்துதான்றனித்தினிதேகித்
தங்குபேரன்பார் பத்திரகிரியார் சரணநாண்மலர்மிசைப்பணிந்தாள்
பைங்குழற்சிகிநே ரவளைநேர்பார்த்துப் பரிந்துநீயார்பகரென்றார். (ருO)

ஐயநின்பிறகோர்சனியெனத்தொடர்ந்தன்றருந்துயர்விளைத்தநாயடியாள்
கையதாலெனக்கவ்வுடலொழித்தனையிக்கவினுடற்கொடுவந்தேனென்னலு
மெய்யறிவடைந்த வியனினைந்துவகை மேவியும்விட்டிலுய்க்காமல்
வையமேற்பிறப்பே னளித்தனையென்ன மருதன்மேற்சினத்துடனெழுந்தார்.

அவள்வலக்கையை விரைந்துதான்பற்றி யத்திருக்கோயிலுட்பு கலு, முவகைதீர்ந்தவரா யவளுடன்வந்தா ரொருங்குநொந்தனுகினரப் பெண், சிவனிவனெனவே கருதியீண்டியலுஞ் செயலினைத்தெரியினென் றனண்மெய்த், தவசிகாமணியா மவன்மகாலிங்கந் தன்னெதிர்சென்று காட்டிகமாய். (௫உ)

பிச்சைச்சோற்றிற்கும்பிறப்புண்டோமருதாபேசெனக்கேட்டனனதனுக் கச்சைவனெதிரித் தகவுலகெல்லா மறிதரச்செய்தனனென்றப் பச்சைமாமயினேர் மகளையங்கியாரும் பார்த்திடவிழுங்கினனவனக் கொச்சைநெஞ்சுடையா ரறிதரப்பழமை கூறியக்கோபுரஞ்சேர்ந்தான்.()

வரகுணன்கரத்தான் மங்கலந்தரித்த மகளையுமருந்துமவ்விலிங்கங் கரவறுஞானக் கனிகிகரவளைக் களிப்புடன்விழுங்கலோர்வியப்பன் றரனருட்செயலோர்ந் தவளினத்தவர்தா மகன்றனரவர்தமூரருட்சீர் விரவுநாயடியாண் மங்கலமெனும்பேர் மேயதுதொண்டர்கள்சொலவே.

அன்னவூரருணை சலத்தினுத்தரத்தி லவிர்வதாமன்னதோரைந்து வன்னமேநாடு மரனடியவர்தாம் வரின்மிகமகிழ்வதம்மங்கை முன்னம்வீடடைந்த துன்னுவாருணர்வின் முதலடியவரினுமவர்தம் பின்னடியவர்தம் மடியவர்மேலாம் பெருமைநன்கிலங்கிடுமாதோ. (௫௫)

அவ்விடைமருதா ரினிற்சிலநாட்போ யருள்கிளர்பத்திரகிரியுந் திவ்வியகுரவன் றிருவுளக்குறிப்பாற் சிவசொருபத்தினிற்கலந்தா னிவ்விரண்டுயிர்க்குமுதற்பெருந்துணையா யிலங்கிசைப்பட்டினத்தடிகள் வவ்வீடடைந்த சரித்திரமவர்க்கா வகுத்துளசருக்கமோதிடுமே. ()

அத்தியீருரிபோர்த் தவர்திருவருளு மருந்தமிழ்ப்புலமையுமமைந்த பத்திரகிரியு மவற்றொடர்நாயும் பரகதியடைந்தவாறுரைத்தே னத்தியபொய்யா மொழிப்பெயர்புனைந்த நாவலன்றனதகநாணச் சத்திவேற்குமரன் றடுத்தினிதாண்ட சரித்திரஞ்சாற்றுவன்சிறிதே. ()

பத்திரகிரியார்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஉஉசு.

முப்பதாவது

## பொய்யாமொழிப்புலவர் சருக்கம்.

செய்யாளருணீடும்புகழ்த் தென்பாண்டிநாட்டிற்
பொய்யாமொழியூருடொரு புலவன்பிறந்திட்டான்
மையான்மகிழ்நாலாங்குலம் வாழ்வார்தவமனையான்
மெய்யாலவனூர்ப்பேர்தலை மிசையேறமிளிர்ந்தான். (௧)

அவன்வாலிபதிசையின்கதை யகிலஞ்சொலவில்லை
சிவனேசமுமருமைத்தமிழ் தேறும்பெருந்திறலு
நவமார்பணிபலபூண்பவர் நாணுங்கவின்மனையு
முவமானமின்மிடியின்றொடர் போவாமையுமுற்றான். (௨)

தினமுஞ்சிலர்பாலன்பொடு சென்றின்றமிழ்பாடித்
தனமேனுமென்முதலாகிகழ் தருதானியமேனு
மனம்வந்தவர்தாலைச்சிவன் மகிழ்வாவிடலெனவேற்
றனரேர்மனையவள்பாலிடு மதுவேதொழிலானன். (ங)

அவனூடுபல்கனவிற்றிக முயில்வேல்புனைமுருகோன்
றுவர்போலொளிர்தருவண்கவி சொல்லென்மிசையெனலுஞ்
சிவனாகியகோழிக்கொரு சிறுகுஞ்சனையாய்நிற்
கெவணம்புகல்வேனீயவ னிசையின்கிளையென்றான். (ச)

அதுசொல்லியுமவனப்புல வன்பாலொருசனவி
லிதுமுன்புகல்கீரன்பட லேனோர்கிலையென்றும்
விதுவார்சடையானல்லது வேறோர்கடவுளின்மேன்
மதுரம்பொலிகவிபாடிட மாட்டேனெனநின்றான். (ரு)

மனிதத்திரண்மீதுங்கவி வனையுந்துணிவுற்றோன்
பனிவெற்புடையாள்கைச்சிறு பாலன்பலகால்வந்
தெனிசைத்தமிழ்பாடென்று மிணங்காவிதமெண்ணிற்
றனிமைப்பரநிலையோர்ந்தவர் தாமுஞ்சகியாரே. (சு)

தஞ்சைப்பதியினிலோர்தரு மனேர்தகைவாணன்
விஞ்சைத்திறன்மன்னர்க்கொரு வேந்தாமெனவாழ்ந்தா
னஞ்சைப்பொருமிடிதீர்வது நாடிப்புலவன்போய்
மஞ்சைப்பொரவேயன்னவன் வண்மைக்கவி பெய்தான். (எ)

பொருவாதுயர்சுவைதோயகப் பொருட்கோவைசொலிடலு
மொருபாடலுக்கம்பொன்னொரு தேங்காயள வொப்பப்
பெருகார்வமொடுதவிப்பிற பொருளும்பலபெய்தா
னருகோர்துணையில்லானவை கொடுவீதியணைந்தான். (அ)

அங்குள்ளபன்மிடியாளொரு மவனைத்தொடர்ந்தேற்றா
ரெங்குள்ளவர்நீரென்றும் வினவாதுளிரங்கித்
தங்குங்கலிதருவாதனை தனையுங்குறியாமற்
பொங்குங்களியொடுநல்குபு போநப்புகழ்பூண்டான். (கூ)

மன்னனவனிவனுக்கிட லொருவண்மையதன்றன்
றின்னனிரவலருக்கிட லேமிக்குயர்வென்னச்
சொன்னார்பலரிவனிட்டது துதியின்விலையன்றான்
முன்னுளிருந்தாங்கேகவி மொய்க்கும்படியுற்றான். (க0)

அருளில்லவர்பொருண்மிக்கடைந் தாலுங்கொடுக்கறியார்
பொருளில்லவருளூற்றிடும் போதக்கொடைபுரிவார்
தெருளின்பமுளாரோயிது தேர்வார்பிறர்தேறார்
மருளில்புலவன்றற்கென வைக்காதிடல்வியனே. (கக)

நிதமுஞ்செயுமுயல்வின்படி நேரோர்சிறுநகரு
டிதமின்சொலுரைத்துச்சில ரீயப்பெறுகம்போ
டுதகம்பெயுலைக்காரிகை யுறுதன்மனையுள்ளி
மிதமின்றியநடையோடழல் வெம்பாலையில் வந்தான். (௧௨)

அருமைத்தமிழ்மிகைநல்கியு மழனோர்கொடுமிடியா
லொருபொற்கொடியொடுநாடொறு முழலச்செயுமொருவன்
பருவப்பிரிவொடுசூழ்தரு பலமக்களையுதவித்
தெருள்கெட்டுளமறுகும்படி செய்யாமையொர்நலமே. (௧௩)

வேறு.

வெய்யில்வாதனை யதுஞ்சகியாதவன் விரைந்துபோந்தருணத்திற்
கையில்வேன்முத லியபடைசிலகொடு கருமுகிலெனத்தோற்றும் [வேள்
பொய்யில்வேட்டுவக் குமரனுமுருக்கொடு பொருப்பெலாமுடைச்செவ்
பையில்பாம்புறழ் சினத்தனுநில்லெனப் பகர்ந்தெதிர்திகழ்ந்தானே. (௧௪)

கண்டுநெஞ்சகங் கலங்குபுநடுங்கினன் கம்பனைக்கவர்ந்தேகைக்
கொண்டுபோங்கொலென்றெண்ணினனென்செய்வான்குமரவேட்டுவமூர்த்தி
யண்டுதன்மைய னாகிநீயாரென வதட்டலுமயர்ந்தாறுப்
புண்டுலங்குபாழ் மிடிச்சளத்துழுங்குறு புலவனென்றிசைத்தானே. (௧௫)

புலவனென்றசொற் கேட்டவனக்கெழிற் பொதியமால்வரைக்கோமா
னலதுநீயுமோர் புலவனுவிளங்குத லதிசயமெனவன்னோன்
கலகவேட்டுவக் குலத்திவன்கல்விநூற் கணக்கறிபவனுற்சொன்
னலமுணர்ந்துயி ரொடும்பொருமொரும்விடு நமையெனமதித்தானே. ()

மதித்ததன்றியத் தகவினுக்கியைந்ததாம் வார்த்தையொன்றுரையாமற்
கதித்ததோர்தறி யேயெனநின்றமை கண்டுவிற்கார்வேடன்
விதித்தநூல்வழி செந்தமிழ்ப்பாடனீ விளம்பலுண்டோ வென்னக்
கொதித்தநீர்க்கட லுடைப்புவியுணர்கவி கோடிசொற்றுளனென்றான். ()

ஆயினென்பெயர் முட்டையாமென்மிசை யருந்தமிழ்க்கவியொன்று
நீயினுங்கொடி தாயவிப்பாலையின் றிறத்தொழுபகரென்றான்
வாயியம்புமுன் பொன்புரைகள்ளியின் வண்பொறியுகுகானிற்
போயினுள்சிறு பேதைவேன்முட்டையைப் பேற்றலாரெனவந்தோ. ()

வேலமுள்ளதிற் றைக்குமேயென்றொரு வெண்கவியுரைத்திட்டான்
பாலலோசனத் தந்தையூர்வேடனுப் பார்த்தன்முற்போமந்நாள்
சீலவேடிச்சி யானதாய்தோட்சுமைச் சிறியவேணையிற்றுஞ்சுங்
கோலங்கொண்டவன் வினவியிப்பாடலிற் குற்றமொன்றுளதென்றான்.

வில்லுக்குங்கதிர் வேற்குநின்றேட்குநான் வெருள்வதுண் டியனோதுஞ், சொல்லுக்கஞ்சிடே னெனச்சொலிப்புலவனியான் சோர்ந்தவாறுரையென்றான், கல்லுக்கோரிறை யாமவன்கள்ளியிற் கனல்படுந்தானத்தே, யொல்லும்வேலமுள் வெந்திடாதிருக்குமோ வுணர்ந்துசொல்லெனக்கேட்டான். (௨௦)

குஞ்சின்மேற்கவி பாடிடேனென்றதிற் குறியமுட்டையைப்பாடற்
கொஞ்சிலானது கேட்டுளகாணிமற் றொருவரின்மையையுன்னி
நெஞ்சினூடுசெற் றுவப்புமுற்றிச்சிறு நீலவேடுவனேர்மைக்
கெஞ்சினேமென வருந்தலுமவனின்பே ரென்னெனவிவன்றன்பால். ()

வினவிச்சொன்னபி னம்பரத்தேகின்று விழுந்துளிவேமென்றுங்
கனலிற்றோயினு மெழுந்துதற்சுடுமென்றுங் கருதுபுகார்மேகம்
புனல்பெய்யாச்சுரத்தென்மகள்போதல்பொய்யாமொழிப்புலவோனுக்
கினமல்லாப்பகை வரின்செலவொக்குமென் றேயொர்வெண்கவிசொன்னான். (உஉ)

வேடன்பாடல்கேட் டப்பெரும்புலவன்றான் வெட்கமிக்குறும்வேளை
யாடன்மாமயிற் பரியிற்றன்கோலமா யரிவையரிருவோரும்
கூடவைகுறத் தேவர்கள்சூழ்தரக் குலவுசேவையுதீந்தான்
பாடலாயிரம் பலசொல்வார்க்கதுநல்காப்•பண்புமன்னவன்பாற்றே. ()

கனவிற்காண்டொறு மிகழுமப்புலவன்றான் கண்ணெதிர்பகற்போதி
னனவிற்காண்டலு மளப்பறுமுவப்பனு நன்குனதருள்வேண்டா
வெனதுமீதுனக் கித்தயையுற்றவா றென்னெனவியந்தோதி
யனகமாதவப் பயனெனத்தேறிவீழ்ந் தழுதுகைதொழுதானே. (உச)

இருட்பெருங்கட லனையதன்சிந்தையி னேத•முற்றறநீங்கி
யருட்பெருந்திரு வாக்குமெய்திடப்பெற்று னஃதருள்குமரேசன்
மருட்பெருக்கறு மாதவரிதையத்தோ மறைமுடிவினிற்றானே
பொருட்பெருக்குறு மலைக்குகைதோறுமோ புகுந்துருக்கரந்தானே. ()

புதுநலம்பெறு புலவன்றன்மனையினிற் போய்மனையவடன்பா
லிதுசொலாதிரண் டொருதினங்கழிக்கையி லின்மொழிக்கிளிபோல்வா
ளெதுகொலோவொரு பேறுபெற்றுளாய்முகத் திலங்குகின்றதெனென்றான்
மதுரைமன்னனைப் பார்த்துவந்ததன்றிறம்வகுத்துநிற்குரைசெய்வேன்.

என்றுசென்றவன் சொக்கநாயகற்றொழுதற் கேகும்வீதியிற்கண்டு
குன்றுமுற்றுனா னருள்பெறுமிபுலவனியான் குறித்துணரெனச் சொல்கா
லன்றுவாழ்ந்தவ ராயமெய்ப்புலவரை யனையைகொலெனவஞ்சா
வன்றுளைக்கைமால் களிற்றினையேறிகர் வழுதிமன்னுரைத்தானே. (உஎ)

அக்கணத்தினிற் சங்கநாவலர்குழாத் தணியுருச்சிலைவாய்ந்த
மிக்கதானமெய் தினருடன்புலவனவ் வியனுருக்களைநோக்கி
யொக்கவுங்களோ டியானுநந்தமிழொடெ னுரையுமாமெனிலோரத்
தக்கசாட்சிமன் னனுக்குரைத்திடுமென்றோர் தனிக்கவிபகர்ந்தானே. ()

அந்தவெண்கவி யொலித்தலுமவைமுழு தாகுமாமெனச்சொல்லித்
தந்தஞ்சென்னிமுற் றசைத்தனமன்னவன் றான்மருண்டுடன்றாழா
தித்தவாறொரு வித்தைசெய்தனன்கொலென் றெண்ணினனெல்லோரும்
பைந்தணீர்ம்லி தருபொற்றாமரைத்தடப் பக்கல்வந்தனர்மாதோ. ()

வாலுமன்னனே நில்லெனச்சொல்லியவ் வண்டமிழ்ப்புலவன்றன்
புரவலத்திரள் களின்முனுளிருந்தவர்ப் போல்பவரிலரென்றங்
கரவில்கற்புடைப் புலவர்வாழ்குவரெனல் கட்டுரையாமாகிற்
பரவுசீர்ச்சங்கப் பலகைநீமிதவெனப் பகர்ந்தனனொருபாட்டே. (௬0)

அதுவிளம்பலு மனைவருங்காணுற வம்மணைமிதந்திட்ட
திதுதெரிந்துடன் மன்னனென்பிழைபொறுத் திடுகவென்றவன்றாளிற்
கதுமெனவிழுந் திறைஞ்சினனதனையுங் கணித்திலனெனிலோர்பா
மதுரைமாநக ரிருந்ததோர்கதையென மறையவும்பகர்வானே. (௬௧)

அந்தமட்டிலம் மன்னனப்புலவனே யறிந்ததுமாராயிற்
சுந்தரேசுரர் கருணையேயாமெனச் சொல்லிடத்தகுங்கண்டீர்
மந்தபக்குவ மன்னர்தம்படையற மாய்த்தணிமனேமாரைச்
சொந்தமாக்கொடு தமைச்சிறைப்படுத்துநர் தோளைமட்டறிவாரே. ()

தமிழ்வளர்த்தவர் மரபினனென்றசொற் றவறிடாநிமித்தத்தே
யமிழ்தமன்னசொற் புலவனேச்சிவிகைவைத் தரசன்றன்முற்கொம்புஞ்
சிமிழ்குலாமுலே மனேவிபிற்கொம்புமாச் சிலர்துணைக்கொடுதாங்கி
யிமிழ்கடற்றுகை யேழுமோர்வாவியா மெழினகர்வலம்வந்து. (௬௩)

வேண்டுகின்றபல் செல்வமும்புலவன்றன் வெறுமனேயிடஞ்சேர்த்திட்
டாண்டுவாகனத் தவனேயுமுய்த்தன னங்ஙனஞ்செய்யாம
லீண்டுமெய்ப்புகழ் வாணனிற்கொடுத்திடி லேற்பவர்களுக்கீந்திட்
டியாண்டுகம்புகேழ் வரகளிப்பவருளா ரெனமுன்போற்றிரிவானே. ()

கனகமாதிய மிகைபடமனேயினிற் காண்டலும்புலவோன்ற
னனகபத்தினி கனவுகொலோவிதெவ் வையமுற்றனளன்னோன்
பனகபூடணன் விழிதருசேயருட் பயனெனச்சொலத்தேறி
யினநல்வாழ்வுமிப் பிறப்பினிற்பெறும்விதி யிருந்ததென்றளிகூர்ந்தாள்.

அன்னவாழ்வயின் றறம்பலபெருக்கிமற் றையரிடமலேந்தேற்கு
மின்னன்முற்றொழிந் திருவருமொருமனத் தினரெனவுலகோது
நன்னலம்பொறுத் தறுமுகக்குருபர னட்டுறுகதிசேர்ந்தார்
சொன்னபாடலின் படியரசரினலோர் தோற்றரிதாயிற்றே. (௬௬)

போனகம்பெற வேழுயன் றுழன்றபொய் யாமொழிப்புலவோனே
ஞானவேள்வலி தினிற்றடுத்தாண்டரு ணலந்தரு கதைசொன்னேன்
பானலார்வய லருணையிலொருபெரும் பாவலன் கிளியாகித்
தேனளாவிய நீபமாலிகைப்புயஞ் சேர்ந்தவாறுரைப்பேனே. (௬௭)

பொய்யாமொழிப்புலவர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௪௨௬௬.

---

முப்பத்தொன்றாவது

## அருணகிரிநாதசுவாமிகள் சருக்கம்.



அருணகிரி நாதற்கென் றன்றொருகா வியஞ்சொற்றேன்
றெருளூறுமிப் புராணத்துஞ் சிறிதொருவா றுரைக்கின்றேன்
பொருளதனிற் றேர்மினெனப் புகன்றிட்டாற் புலவர்புக
ழிருளபடுமென் றஞ்சியதா லிஃதுணர்வார் களுமுளரோ. (க)

பட்டினத்துப் பிள்ளையொரு பாவைநல்லாண் மோகத்தால்
விட்டிடுஞ்சுக் கிலத்தையவள் விழுங்கியது வரையவர்தம்
மட்டில்புகழ்ச் சருக்கத்தால் வயங்குமதா லவள்சூலா
யெட்டினுட னிருமதியு மிகந்தொருசேய் பயந்தாளே. (உ)

பெற்றவளு மவடாயும் பெரிதுவக்கும் விதங்கண்டு
மற்றவிலை மகளிரெலா மகட்பெறலபோன் மகிழ்வதென்னென்
றற்றமதி வியப்புற்றா ரம்மகவு மதன்மூத்த
நற்றகைய பெண்மகவு நாடோறும் வளர்ந்தனவே. (ங)

அம்மகள்பேர் தெரிந்தில்லே னருந்தவப்பே றுவருமச்
செம்மகனுக் கருணகிரித் திருநாமம் புனைந்திட்டா
ரிம்மகன்றன் வயதொருமூன் றெய்திடலும் பாட்டியென்பாண்
மைம்மருவு கண்டத்தார் வாழ்கயிலை மலைசேர்ந்தார் (ச)

அவள்போயாண் டாயதற்பி னவ்வூர்க்கோ யிலில்வாழுஞ்
சிவனார்தம் மங்கலமச் சிறுமிதனக் கணிந்திட்டா
ரிவனேழாண் டடைச்சேயா யிலங்குகையி லெழிற்றாயுந்
தவர்மேன்மை நன்குணர்தன் றாய்போன வழிநோக்கி. (ரு)

தன்மகட்குத் தான்பெற்ற தவபலத்தின் வகைகூறி
நன்மகன்சொற் றட்டாது நடப்பதே நன்குறுந்திப்
பன்மறைக்கு மேலாய பரத்துவம்பெற் றிருந்துமொரு
வின்மலையாக் கொண்டபிரான் வியனுலகின் மேவலுற்றாள். (சு)

தாய்போன துயர்சிறிதுந் தம்பிமனத் துதியாம
லாய்போதத் தினளாகி யக்காண்மிக் காதரித்தாள்
சேய்போலு மெழில்வாய்ப்பத் திகழ்பருவம் பெற்றிடலும்
பேய்போலு மனத்தினனாய்ப் பெருங்காமக் கடல்வீழ்ந்தான். (எ)

தன்றமக்கை சலியாமற் றரும்பொருளைத் துணைக்கொண்டு
மின்றனையே ரிடைநல்லார் வீடுதொறும் போய்ப்புணர்ந்து
குன்றலின்றி வளர்சூட்டாற் குட்டநோய்த் தொடர்புற்றும்
பொன்றனையே விழைகின்றார் புணர்ச்சியொழிந் திலன்மன்னோ. (அ)

அப்பருவந் தனிற்றமக்கை யாபரணங் களும்வீடுங்
கைப்பலபண் டமும்விற்றுக் கனங்குலைந்து மிடிமீறி
யெய்ப்பவளா மற்றொருத்தி யுறுமனையின் சிறுகுச்சி
லெப்படியோ வமுதுசமைத் திவன்றனக்கோர் நாளிட்டாள். (௯)

அன்றுமவன் வழக்கம்போ லாடகநல் கெனக்கேட்டா
னின்றமுத லெனைச்சேர்வா யானுமவ ரினத்தினளே
யென்றுரைத்தா ளக்கணமே யாக்கையின்மேல் வெறுப்பெய்திக்
குன்றுறழ்கோ புரத்தேறிக் கூசாமற் குதித்தானே. (௧௦)

குதித்தவன்முன் னங்கமருங் குமரனொரு குருவாகு
மெதித்தலைவ னெனமுழுநீற் றெழிலாதி யனகாட்டி
விதித்திறத்தா லுய்ந்தனையிவ் விதஞ்செய்தன் முறையன்றென்
றுதித்தபகல் போலொண்மைத்தி லுணர்வுண்டாம் படிநோக்கி. (௧௧)

தக்கபுகழ்க் கவுமார சடாக்கரத்தின் முறைகூறி
மிக்கநுட்டித் திடுவாயேல் வேற்பெருமான் மயின்மீது
பக்கலுறு மிருவரொடும் பரிந்தெதிர்வந் தருள்வானென்
றக்கணமே யாங்கிலங்கு மணியுருவிற் கரந்தானே. (௧௨)

குருவாகி வந்ததுமக் குமரனே யெனத்தேறி
யொருவாம லிரவுபக லுருச்செபித்துத் தியானித்தான்
பெருநோய்தீர்ந் தவிர்நாளிற் பின்னுமொரு தவனாய்வந்
தருளார்மெய்த் திருவேட மளித்துமறைந் தனனம்மா. (௧௩)

கனவிரண்டி னனவிரண்டிற் கண்டவநு பவமெல்லா
மனதறிந்த களிப்பளித்து மற்றையவர் கண்காண
வனகவிளை யாட்டியற்று மதுகிடையா மையினோங்கித்
தினமும்வெகு வாமுயன்று செழுந்தமிழாற் றுதிசெய்தான். (௧௪)

நோய்மாறி யெழின்மலிந்து நோக்குநரெல் லாம்விழைசீர்
வாய்மார னெனத்திகழ்ந்தான் மாட்டணுகிப் பலகான்முன்
றோய்மாதர் செயுநயத்திற் சோராமெய்த் துணிவுற்றான்
பாய்மானூ னசைவெறுத்துப் பசும்புனுகர்ந் துயல்போன்றே. (௧௫)

எவ்விரதங் களுமரிதன் றேந்திழையின் னார்வலிதில்
வெளவிடினு மருளாமை மாவிரத மெனச்சொல்வா
ரவ்விரத்தி பெருங்காமத் தருணகிரிக் கமைந்ததெண்ணிற்
செவ்வியவேற் படையேந்துஞ் சிகிப்பரிவேள் செயலாமே. (௧௬)

வெய்யின்மலி தருநாளின் மேகமழை பெய்தாற்போ
னெய்யிடுதீ யனையதுயர் நெடிதுறுமத் தவன்காணத்
தொய்யின்மென்றோ ளிருவரொடு தோகைமயிற்பரிமீது
கையிலணி வேன்முருகன் காட்சியினி தளித்தானே. (௧௭)

காண்டலுந்தன் றுயர்முழுதுங் கண்டில்லான் கருணையினிற்
றாண்டருள வந்தெண்ணி யளப்பரும்பே ருவப்பார்ந்தான்
வேண்டன்முழு மையும்பெறலால் விண்ணவரின் மேன்மையுற்று
நீண்டவனுன் முகன்முதலோர் நிகழ்த்துபுகழ் பொறுத்தானே. (கஅ)

தானேமெய் யருள்வாசஞ் சகமுழுதுங் கமழ்ந்ததுசெந்
தேனேயென் றினித்தமொழித் திருப்புகழா தியபனுவல்
வேனேயற் கணிந்திட்டான் மெய்ப்புலவர் வெள்ளைகிற
மானேர்வா ளருள்சான்ற மதித்துணர்ந்து பகர்வனவே. (கக)

நோயினருங் குறையினரு நூறுநா ருச்சிகரிச்
சேயினெறி யிவன்சான்றுத் தெண்டனிட்டுப் பயனெய்திக்
காயிகத்தொண் டியற்றுநருங் கனகமுத லியகொணர்ந்து
வாயிலினிற் குவிப்பாரு மலிந்துபணி வாய்ந்ததுவே. (உO)

கோபுரத்தை யொட்டியொரு கோயிலுண்டா யதுகுன்று
லாபுரப்பா னங்கிசரா மரசர்களு மதித்திட்டார்
நாபுரப்ப தருமையென நவிலுநூல் பிழையாதம்
மாபுரத்திற் சிலர்கணிகை மகனெனவெள வாருமுற்றார். (உக)

அரியதமிழ்ப் பெருஞ்சந்தத் தருணகிரி தனைப்போற்றும்
பிரியமுளார்க் கானந்தப் பேறும்வகை பேசுமிகற்
குரியவருக் கெந்நாளு மோவாத வுறுகண்ணுங்
கிரியனையன் மகளீன்ற கேகயவேள் கொடுத்தானே. (உஉ)

அந்நாளத் தவன்றமக்கை யகத்துயர்முற் றறநீங்கிச்
செந்நாவூற் றுய்பகர்சொற் றிறமென்னுந் தெளிவெய்திக்
கைந்நாகத் துரிபோர்த்தார் கயிலைமலைத் தலைசேர்ந்தாள்
வெந்நாகக் குணத்தோரும் வியந்துமிகப் புகழ்ந்தாரே. (உங)

ஆன்மநிலை வத்துநிலை யகிலநிலை முழுதுணர்ந்தும்
பான்மணக்குஞ் சொற்றமக்கை பரகதிசேர்ந் ததிற்களித்தும்
வேன்மருவு தடந்தோட்சேய் வியனருட்சீர் மேவுமவன்
றான்மனிதக் குலமுறையிற் சற்றழுது தேறினனே. (உச)

அங்குநடந் தனவாய வதிசயமெல் லாமறிந்து
பங்குபங்கா விரித்தோதும் பக்குவமுள் ளாரெவரோ
கொங்குநாட் டிறையுகவுங் கொடுவாட்கை யினனுளத்திற்
றங்குமா ணவக்கசடு தவிர்ந்துய்கை சாற்றுதுமால். (உரு)

வேறு.

ஓங்குகச்சியூர் வயிணவவேதிய னொருவன்
நீங்குதிர்நெடு மால்வளர்தலந்தொறுஞ் செல்வான்
றுங்குசக்கர கிரியெனவருணைய தனிற்போ
யாங்குகோபுரத் தமர்புலவனையுநன் கறிந்து. (உசு)

பித்தன்றன்சிறு மகன்பெருமாளெனப் பேசும்
வித்தகத்திருப் புகழ்சிலவின்வலால் வெதும்புஞ்
சித்தமெய்துபு தென்றிசைவழிக்கொடு சென்று
பத்தர்போற்றிய பலதலங்களிற்சில பார்த்து. (உஎ)

பூமுடித்தரிக் குதவினுள்வில்லிபுத் தூர்புக்
கேமுறுதவை கானசவிதிப்படி யிறைஞ்சிப்
பாமுழக்குநாச் சக்கரவர்த்தியாம் பனவன்
மாமுகப்பிரா னெனக்குலாவிடல்வினுய் மகிழ்ந்து. (உஅ)

தானங்குற்றரு ணையிலறிந்திட்டமை சாற்றிக்
கூனல்வால்வளை யுலவுதென்குருகையா தியவா
மானமார்தலத் தாவன்மேலிட்டதால் வணங்கிப்
போனபின்னவன் றன்னுளத்தாணவம் பொங்கி. (உகூ)

விருதுவாகனம் வேண்டியபரிசன மிகக்கொண்
டெருதுபோரினுக் கெழுதல்போன்றருணையி லெய்திக்
கருதுமெண்ணம தனையவூர்மன்னிடங் கழறி
யிருதரத்தரு மொருதலத்தெய்தின ரன்றே. (௩0)

எண்ணில்பாவலர் செவியறுத்திட்டவே தியனுந்
தண்ணிலாமதிச் சடிலர்சேயருள்பெறுந் தவனும்
விண்ணினீடிய சிகரிவாய்வாதிடும் விதத்தைக்
கண்ணியாங்குவந் துற்றனர்கணிக்கரும் பலரே. (௩௧)

அந்தணன்றனைக் காண்டலுமருணையின் றவநேர்
மைந்தன்கைகுவித் திட்டுமோசீர்வதி யாமல்
வெந்தசிந்தைய னுயவன்விரைந்துநீ தொடுத்த
சந்தவான்கவி களிலொன்றுசாற்றுதி யென்றான். (௩௨)

உடனன்னேன்சிறு மதிப்புலவோருறைக் கரிதாக்
கடலேநேர்விரி வுள்ளதாக்கழறினன் கருத்திற்
றிடநினைத்ததி சயித்தும்வெற்றிலைச்சுரு டினவெற்
கிடவந்துள்ளவ னிதுபுகன் றிடுவனென் றிசைத்தான். (௩௩)

அச்சொற்கேட்டலு மறுமுகக்குருபர னடிமை
யிச்சொற்பேசுநீ யெங்ஙனங்கவிபுகன் றிடுவாய்
பொய்ச்சொற்புல்லனென் றிகழ்ந்தனன்புரவல னெழுந்து
மெய்ச்சொற்சீலரா நீரிவண்பொரல்விதி யன்றால். (௩௪)

நூறுபாடன்மட் டொருவர்முன்னுவலமற் றொருவர்
தேறுசெம்பொருள் விவரமாச்செப்பிடல் வேண்டு
மீறுவார்கையர் மெலிபவர்செவிகளை விரைவிற்
கீறுதற்றுணை யாகுவேனெனக்கிளத் தினனே. (௩௫)

கழறல்கேட்டலு மியமகவந்தர்தியாங் கவினான்
மழவருக்குகன் மிசைத்தவன்றுவக்கினன் வந்தோ
னழகிதென்னுநல் லுரைகவிசொலுந்தொறு மறைந்தான்
பழகுந்தேற்றமன் றிரண்டுமெய்யருட்பெரும் பண்பே. (கக)

பார்திதிர்ந்துமேற் பிரபந்தகடக்கையிற் பகைத்த
வாதிதான்செயம் பெறுங்கொலென்றஞ்சுபு மற்றோன்
சோதிவேலனைக் கருதலும்வேறோர்தொரு தமின்றித்
தாதிகழ்ந்ததோர் கவிதையங்குதித்தொலித் ததுவே. (கஎ)

அதன்பொருட்சொலுந் திறமிலனாகியந் தணன்றான்
மதந்தவிர்ந்துதோற் றேனெனவாய்கொடு பகர்ந்தா
னிதன்பெருந்தகை யெதிர்த்தவன்மட்டறிந் திட்டான்
க்தங்கொடங்குளார் செவியறுப்பதுகட னென்றார். (கஅ)

ஓதல்கேட்டருந் தவனென்பாற்றோல்வியுற் றிடுமேற்
காதறுப்பவ னேயவனாயினுங் களைந்திட்
டேதநல்கிடே னியாவருமறிதர யானின்
றீதலாகியன் னவன்செவிவாழ்கவென் றிசைத்து. (ககூ)

வாளைவாங்கிமன் னவனிடங்கொடுத்தனன் மாற்றார்
தோளைச்சென்னியைத் துணித்திடுமவன்மிகத் துதித்தான்
வேளைநம்பின னக்கவிப்பொருளையும் விளம்பி
நாளையென்றிடா ததன்குறைக்கவிகளு நவின்றான். (௪0)

இவற்றிற்குந்தகு முரைசொலியிசைத்தவா றெழுதித்
தவற்கொர்பேரரு ணேசனென்றமைத்தவன் றமிழ்ப்பாட்
டெவற்றிற்கும்பெரி தென்றொருநவிதைநன் கியம்பிக்
கவற்றிடாதுயிர்க் கிதஞ்செய்வோனாகியக் கவிக்கோன். (௪க)

சிறிதுகாளவண் வசித்தருணேசனுஞ் செங்கை
மறியுளாற்றெழும் வீரபுடதேவமன் னவனுஞ்
செறியுமன்பின ராயபின்றன்னகர்ச் சென்று
பொறிகுலாமணி மார்பனைப்போற்றிசைத் திருந்தான். (௪உ)

ஒன்றுமாய்ப்பல பொருளுமாம்பரத்தரு ளுறினுந்
துன்றுகாருணி யத்தளவேவலி தோயு
மென்றுசொல்வதற் கெழிலருணேச்சிக ரியின்முன்
னன்றுவாதிடு மிருகவிப்புலவர்சான் றுமே. (௪ங)

மன்னர்போற்றிய வண்டமிழ்ப்புலவனைச் செயித்தா
னென்னவேந்தனு மேனையமானிடர் பலரு
நன்னலத்தரு ணேசனைத்துதிசெய லாடி
பின்னலோடமுக் காறுமிக்கெய்தினர் சிலரே. (௪௪)

அருணையூர்விடுத் தவன்பலதலந்தொறு மணைந்து
பொருணயம்பெறு சிற்சிலகவிகளாற் போற்றித்
தெருண்மனந்தரு செந்திலிற்றிருப்புகழ் முழுதுங்
கருணைநீர்மலி கந்தவேள்களிப்புறப் படித்தான். (சரு)

அவன்களிப்புணர்ந் தடியனேன்பகரிவை யனைத்து
மெவன்சொனுமன் னவற்கென்பேறிடுகவென் றிரந்தான்
சிவந்தவேலனங் கனஞ்செய்வே னெனச்சொலாதிருக்க
வுவந்திலானெனக் கடலிலேயுருவியிட் டனனே. (சசு)

அங்குவிட்டன பற்பலர்கொண்டன ரருட்சீர்
தங்குமேற்றிசை யிலஞ்சியிற்குகற்றொழு தழுதா
னெங்குபோயினு மினியொர்காற் சேருமென் றிடலும்
பொங்குமார்வமுற் றவன்றனூர்புகுந்தன னடந்தே. (சஎ)

வரவுகாண்டலும் பற்பலர்மகிழ்ந்தனர் சில்லோ
ரரவினேர்படு தேரையின்கூட்டமொத் தயர்ந்தா
ரிரவினும்பகற் பொழுதினும்பழமலை யிடம்போய்க்
கரவிலியோகஞ்செய் தானெனக்கழறுந ருளரே. (சஅ)

வேறு.

அந்நாளிலருணகிரிக் கரசன்முதலினர்தாமு மருமைகூறிச்
செந்நாவாற்சொன்னபடி நடக்கும்விதஞ்சகியாமற் சிந்தைநொந்து
பைந்நாகம்புனைதியோன் சம்பந்தாண்டானெனும்பேர் படைத்தபாவி
மைந்நாகமலைபோல்வான் மலைமகளைத்தினங்கருதும் வழிபாடுள்ளான். ()

மன்னவன்பாற்றினந்தினமு மருணகிரிதனையிகழ்ந்து மதியாவண்ணஞ்
சொன்னதன்றியுமையவளை நீகாணச்செய்வனென்றுஞ் சொல்லியவ்வா
றன்னவன்கந்தனைக்காட்ட வல்லான்கொலோவினவி யறிதியென்று
னின்னவிதஞ்சிற்சிலகாற் கழறியுமாங்கவன்முயலா திருந்தானன்றே. ()

கலைப்பார்தாங்கலைக்கும்வண் ணாடோறுஞ்சலியாமற் கலைப்பாராகின்
முலைப்பாலும்வேம்பாகு மென்றபழமொழிப்படியே மூவாவென்றிச்
சிலைப்பார்த்தனேயனைய பிரபுடதேவனுக்கன்னுன் செப்புஞ்சொல்லான்
மலைப்பாவைதனைமுருகோன் றனைவிழிநேர்காணுமிச்சை வாய்ந்ததாலே.

மந்திரியைக்கோபுரத்துக் கங்குளமாதவனுமந்த வாற்றிற்கொப்புந் [றி
தந்திரஞ்செய்திடவிடுத்தா னவன்போயத்தவனடிக்கீழ்த் தாழ்ந்துபோற்
முந்தியுமையவளையெதிர் காட்டுவதற்கவனிசைதன் மொழிந்துவேண்டப்
பிந்திமுருகோனையுநான் காட்டுகின்றேனெனவொருசொற் பேசினனே.

அந்தவாறரசனுணர்ந் தானந்தக்கடற்படிந்திட் டவனைநோக்கி
முந்தநீயுரைத்தபடியுமையவட்காட்டுதியென்றான் முயன்றுபார்த்துக்
கந்தவேளாடலினாற் றடைப்பட்டாளென்னஙிசங் கழறிச்சோர்ந்தா,
னிந்தவாறேயவன்மே லெனற்சான்றுமெனப்பலரு மியம்பினாரோ. (ருஉ)

மற்றைநாளருணகிரி யங்குளதோர்மண்டபத்தின் வடகீழ்த்தூணி
லிற்றையேவரவேண்டு மெனக்குகனைப்பூசித்தா னிம்மவல்லி
யற்றைவேண்டிடுமேவற்காத் தடைசெய்தாண்மயிற்பரியா லதனைநீக்கிக்
கற்றையாங்கிரணங்க ளேழ்திரையுந்துளைத்தொளிரக் கண்டானன்றே.()

கண்டவுடன் வெளிவந்தம் மன்னனைக்கொண் டொருகண்ணுற் கா
ணீயென்றான், விண்டமொழி குறியாம லிரண்டாலும் பார்த்திழந்தான்
வேற்கை வேளைத், தண்டமிழ்ச்சீ ரருணகிரி யிரந்தவைபெற் றிடக்கொ
டுத்தான் சகத்திரக்கால், மண்டபமா தியபணிகள் செயற்குடன்பா
டுற்றரசன் வணங்கினனே. (ருரு)

அக்கணமே யங்குள்ளா ரனைவோருந் துணிந்துசம்பந் தாண்டான்
றன்னைப், பொக்கனெனப் பழித்திட்டார் மலேச்சாயைக் கப்புறத்திற்
போவேனென்ற, மிக்கசவதப்படிபோ வதற்கிசைந்து மவன்சிகரி மே
யான் றன்பாற், றக்கபல ரறிதரப்போய்க் கற்பகத்தண் மலர்கொணாற்
றவன்று னென்றான். (ருசு)

அன்னவன்சொற்கேட்டதனுக் கியாதொன்றுமருணகிரி யறையானுகி
மன்னனைப்பார்த்தம்மலர்நின் றிருப்பணிமுற்றுறுநாளில்வழங்குவேன்கா
ணின்னவனையிக்கணமே வெளிப்படுத்தியிவம்வசித்த விடத்தோர்வாவி
நன்னயத்தாற்செய்தங்நீ ராற்குகனுக்கபிடேக நடத்தென்றானே. (ருஎ)

அனியாய மாவலிதிற் பகைத்துயர்ச்சி யிழந்தசம்பந் தாண்டானப்
போ, தினிநானிங் கிருக்கும்வண மிரந்தாலுஞ் சம்மதியே னிவன்போய்
விண்ணூர்த், தனிவாச மலர்கொணர்நாள் வந்துபோம் படியொருசொற்
றருதியென்றான், முனிவோன்சம் மதந்தெரிந்தே மன்னிசைந்தா னவன்
போனான் முகச்சோர்வுற்றே. (ருஅ)

அப்பணிசின்னுளினிறை வேறியதாலம்முனிவ னளியுண்டாடாச்
செப்பணிமாமலர்கொணர்நா ளின்னதெனத்தெரிவித்தான் செகமுற்றூர்
தெப்படியுமிடர்செயவே குறித்தகிலவனுளனென் றெண்ணிடாம [ந்த
லொப்பறுபைங்கிளியுடற்புக் குள்ளவுடல்சிகரியில்வைத் தோடினனே.

போனவிதமாங்குறுசம் பந்தாண்டான்றான்வணங்கும் புவனையாற்றேர்ந்
தினமுற்றனருணகிரி யெனப்பலருமறிதரச்சொற் றிறைமுன்னேகி
வானமலர்தருதுமென்றோன் வல்விடந்தின்றிறந்தானவ் வஞ்சப்பாவி
யூனதுகோபுரத்தின்மிசைக் கிடப்பதனாற்கோயிலிற்றீட் டுற்றதென்றும்.

அத்திறமெற்கில்லையெனச் சொலநாணியவமதிப்புற் றழிந்தானென்றுஞ்
சித்திமுற்றும்பெற்றான்போற் செய்ததிருட்டின்றுநன்றாத் திகழ்ந்ததென்
பத்திபுளாரறியநிச மரணமுறிற்சமாதிசெயப் படுவானென்றுங் [றும்
தத்திரமாச்சுலேவதுவே தருமமென்றும்பலவாறு சாற்றினனல். (௬௧)

பேயுலகமென்கைமெய்யாப் பலர்தாமுமவன்வாய்ச்சொற் பெரிதுநம்பித்
தீயுளந்தவுடலையிட்டுத் தகித்திட்டார்கிளியானோன் செம்பொனூரின்
மேயுனாக்குந்தமிழ்மொழியால் வியந்தமராரிந்திரன்பால் விளம்பவன்றான்
வாயுபசாரம்பலசொற் றதன்விருப்பப்படியேயோர் மலரீந்தானே. (௬௨)

அம்மலர்கொண்டதுதிரும்பும்போதேதான்வைத்தவுட லழிந்ததோர்ந்து
கைம்மலைமாமுகற்கிளையான் றிருவுளப்பாங்கெனத்தேறிக் கவலைநீங்கிச்
செம்மலைச்சாரலினருணை நகராளுமன்னனிடஞ் சேர்ந்திட்டப்பா
லிம்மலர்தானிமையாரூர்த்தருமலரொன்கடன்றீர்ந்ததெனச்சொல்லிற்றே.

சொன்னவுடனவனிந்த வுடற்புகுந்துபோனவிதந் துலங்கியந்த
மன்னன்வெகுவாவருந்தி வாளெடுத்தக் *கொடியவனை மாய்க்கப்போரு
னன்னவனைக்கிளியழைத்து நீபதறேனடப்பவெலா மறிதியானின்
றின்னவுடலிடைவசிப்பக் காண்பதுவுங்குகனருளே யென்றதன்றே. ()

அவ்வசனங்கேட்டரச னுன்றனக்குமென்றனக்கு மானநேய
மிவ்வளவுதானோவென் றிரங்கினனதற்கதுதா னின்னஞ்சின்னு [றுன்பா
ளொவ்வருஞ்சீர்க்கோபுரத்தில் வுடலினத்தோடிருப்பேனங் குறுந்தோ
லெவ்வமில்சொற்பகர்வேனென் றிசைத்துடன்கிக்கியென வாங்கேகிற்றம்மா. (௬௫)

அங்கிறந்துகிடந்துயிர்த்துப் பறந்தோடுமொசுவலி யடைந்ததென்னப்
பைங்கிளியெல்லாங்களித்துப் பழகுதலுமவற்றினது பகர்ச்சியாவுஞ்
செங்கிரிநேர்குமரகுரு பரனருளாற்றேறிமிகுந் திருத்திசெய்தா
னெங்கிருந்திட்டாலுமருட் பேறுடையாரானந்த மெய்தன்மெய்யே. ()

தென்னருணைக்கோபுரத்துக் கிளியுருடனொன்றாகித் திகழுமன்றோன்
றன்னருமையறிந்தபெருந் தவர்வரினுமன்வரினுந் தனதுவாயாற் [ற்றூ
சொன்னகவியெழுதிநுவன் றுணரவல்லார்வரினுமின்சொற் றொலவிம
மின்னதெனத்தெரியாத வாறிருந்தானடந்தகதைக் கெண்ணின்றாமே. ()

பாகசாதனனகர்போய்க் கண்டுமெதில்வாழுமிச்சை படைத்திடாமற்
சீகரநீர்ப்புவித்தலையாந் திருவருணைக்கோபுரத்திற் றிகழ்பைங்கிள்ளை
தேகமதேயான்மாவென் றுணருமதத்தினர்பகர்சொற் றிருட்டின்கூற்றாய்க்
காகமெனக்கலந்துவக்கும் புலவோர்தங்கண்மணியாய்க் கவின்றதன்றே.

அச்சமணனிவ்வளவிற் பகைதீர்ந்ததென்றுமகிழ்ந் தமைந்திராமற்
பச்சணிக்கிள்ளையையரசாம் பிரபுடதேவனைப்பினுந்தற் பழிக்கின்றோரை
நிச்சலுமச்சுறுத்திவணங் காவிடிற்கொல்லுதல்குறித்து நீலக்காளி
நச்சரவப்பணியாதி யொடுதோன்றத்தகுமுயற்சி நடத்தினானே. (௬௯)

சீரியர்தாஞ்சிறிதுமொவ்வாத் தீமைகளுமவன்றுணிந்து செயுமங்காளிற்
கூரியவேற்குகன்றனது கிளியிடமென்றாய்ந்துதிநீ கூறுகென்று
னாரியமாதியமொழிகள் பலகலந்திட்டவள்பெருமை யறைந்தப்பாலந்
நாரிதருபாலனாறு முகப்பெருமாளென்றோர்கவி நவின்றதன்றே. (௭௦)

* கொடியவன் - சம்பந்தாண்டான்.

ஆயிரஞ்சென்னிகளிரண்டா யிரங்கரங்களொடுகொளி யாண்டான்றன்பால்
வாயிடிபோற்றொனிதரவங் ததட்டுதலுந்திடுக்கமுற்றுஃமடியக்கொன்று
போயினடன்வினைதனையே சுற்றுமெனும்பழமொழிதான் பொய்யாமெய்யே
யாயினதென்றுலகிலுறு நல்லோரெல்லோருமகிழ் வடைந்தாரம்மா. ()

ஆறுருயிரீந்திருப்பு கழும்வகுப்பெண்ணுன்குடனம் தாதியொன்றும்
வீறுர்வேல்சேவன்மயில் களைப்புகழ்ந்தவிருத்தமுமுமல் விளம்பிமேனி
வேறுயபின்புகந்த னலங்காரமநுபூதி விளக்கிச்சில்பாட்
டேறுமதின்றிவன்மூக் கால்வரைந்ததாயுமுல குரைக்குமன்றே. (௭௨)

தந்திமுகனைக்குகனை யெனவாத்தாள்குறத்தியெனச் சமயநோக்கி
வந்திடும்பாடலும்பலவே வான்மலர்சூடியமகுட மன்னனுவி
யிந்திரனூர்புக்கதற்பி னவன்மகன்றனரசாட்சி யினுஞ்சின்னுள்போய்ப்
பந்திபடுமினத்தோடு வடதிசைநோக்குபுகடிதிற் பறந்ததன்றே. (௭௩)

சென்றுகயிலாயவெற்பின் மேற்றிசையிற்கந்தகிரிச் சிகரத்துற்றுப்
பொன்றுதலுறுமுனிவோர் பலர்வினவஞானுந் பூதிபாடிற் [ண்டா
றன்றுகுகவேளழைத்துத் தனதுவலத்தோளின்மிசை யமைத்துக்கொ
னின்றுமவ்வாறிருக்கின்ற தெனவுலகிற்பலர்தாமு மிசைக்கின்றார்.

அத்தகையவருணகிரி தனைக்குறித்து முருகோனென்னறிவுசான்று
வெத்தனையோதரமொருசொ லிசைத்துள்ளானதைப் பலபாட்டிடத்திற்சற்றுஞ்
சித்தமொல்காதுரைத்துள்ளே னின்றுவரை சந்தேகந்தீரவில்லை
பொய்த்தமொழியஞ்சாமற் புகலுமவரெவரேனும் புலையர்தாமே. (௭௫)

வாக்கிலுயர்ந்தோனருண கிரியேயென்றொருபுலவன் வகுத்துச்சொன்னான்
றேக்கியசீர்த்திருப்புகழைக் கேட்கின்றசெவித்திறமோர் தெளிஞன்செய்யு
ளாக்கியவன்பகர்பாவென் றறிவில்லார்பலருரைப்ப வதனிற்சேர்த்தா
னுக்கிழத்திமகிழ்வண்ணப் புலமையுளார்நன்குணர்ந்து நவிலற்பாற்றே.

பூவிலெவனேனுமொருமந் திரவாதிகந்தனநுபூதிநூலைத்
தாவில்பெருமந்திரமென் றுணர்ந்துகவிக்கெல்லாஞ்சக் கரந்தாபித்தா
னுவதனலைதையுருவேற் றிடுமொர்விடன்றிருமதுரை நகரின்பாங்கர்
மேவிடுமோர்சிற்றூர்க்கு வெற்றிலைதின்றக்கவிகள் விளம்பிப்போனான்.()

போமவன்றன்பொன்னுமணிப் பணிகளும்பட்டாடையுங்கொள் பொலிவையோர்ந்
தீமனத்துத்திருடர்நெருங் கிடத்துணைபட்டுருவ விடுஞ்செவ்வேலாவென் [அ
றுமவொலியுடனெறிவெற் றிலைக்காம்பாலுரம்பிளப்புற் றவர்கண்மாய்ந்
நாமநெடுங்கடற்புவியி லிக்கதையைத்தினநவிலு நர்பல்லோரே. [தார்

சிவகாசியூரிலொரு பரதேசியருணகிரி செஞ்சொற்பாடற்
றலைசேயத்தொடுத்திப்போன் றனையடுத்தோனொருவனுய்யத் தகுஞ்சொற்சொன்னு
னவனுதுகுலகுருவங் தவன்சிகைநீப்பதின்முயன்று னவ்வாறுற்றிற்
சவமாவாயென்றவன்சொல் லியுமுயன்றக்கணமிறந்தான் சரதமாதோ.()

பூதவேதாளவகுப் பினைமிகச்சொல்சங்கரப்பேர்ப் புனிதன் சோணாட்
டேதமில்வேளாளனடி யவர்க்கடிமைத்திறஞ்செய்வோ னெறிசேர்தூர்க்குப்
போதருபாதையின்மயங்குந் ததியிலெந்தாண்டுடைப்பனவப் புதல்வனுகி
யாதரஞ்செய்தவ்வூர்போந் துணைவரலுமுருக்கரந்தா னயில்வேலானே.

இன்னணஞ்செந்தமிழ்ச்சந்தக் கிளிப்புலவன்கவித்துணைகொண் டிகத்தில்பல்லோர்
நன்னலமுற்றமைமுழுது நவின்றுமுடிப்பதற்கறியே னுளுங்கோடி
யன்னவன்னடந்து கொண்டேயிருக்குமதனுன் முருகோனருள்வேட்டுள்ளி
ரென்னபட்டானுலுமவற்றொன்றேனும்பிழையறச்சொற்றிறைஞ்சுவீரே.

கந்தனதுபுயமீதி லருணகிரிகிளியான கதையுமன்னோன்
செந்தமிழாலிவ்வுலகிற் சிற்சிலர்பேறடைந்ததுவுஞ் சிறிதுசொன்னேன்
மந்தகுணத்திறமாப்பு மலிபுலவர்க்கெமனேபோல் வயங்குஞ்சீர்த்தி
சொந்தமெனக்கொண்டுவில் லிபுத்தூர்வாழ்ந்திருந்தவன் சீர்சொல்லுவேனே. (அஉ)

அருணகிரிநாதசுவாமிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙசு.

## முப்பத்திரண்டாவது
## வில்லிபுத்தூரார் சருக்கம்.



செய்யசீர்ப் பெண்ணைநாட்டிற் றிருமலிசனியூர் தன்னில்
வையமா மகள்புரிந்த மாதவப் பயனேயாகிப்
பையரா வணையான்றன்னைப் பணியுமோர் பனவனில்லிற்
பொய்யறு புலமைதாங்கும் புண்ணியத் தொருசேய்பூத்தான். (க)

அன்னவன் வில்லிபுத்தூ ரடைந்துவாழ்ந் திருக்கப்பெற்றான்
பின்னவனுடனேதோன்றிப் பிறங்கின னொருவனென்பா
ரின்னவர் தம்மிற்பின்னோற் கியல்கதை யொன்றேயாகு
முன்னவன் பங்கேமற்றைச் சரித்திர முழுதுமாமே. (உ)

அண்ணனுக் கடங்கியன்னோ னவயவத் தொன்றுபோன்று
திண்ணமா ருரிமைபூண்டு சீரிய தம்பிவாழ்ந்தா
னெண்ண மிக்குலகத்துள்ளாரி யாவரும் வியந்துசொல்ல
வண்ணவான் புலமைப்பண்பின் மடங்கலே றனையரானார். (௩)

எழுத்தொரெட் டுரைத்துநாடி யாவையும் புரப்போன்றன்சீர்
வழுத்தலாற் செல்வப்பேறும் வளம்படப் பெற்றோரானார்
பழுத்தமெய்ப் புலமைப்பாங்கும் பரித்ததாற் பரிவொன்றில்லார்
கழுத்தணி மடவாரோடுங் கலந்துவாழ்ந் திருக்குநாளில். (௪)

கொங்குநா டளிக்குமன்னுங் குவளையந் தொடையன்மார்பன்
பொங்கும்வா ரிதியேபோலும் பொலிவுறு பாரதத்தை
நங்குறு முனிமுன்னல்கு நறுந்தமிழ்க் கவிகளாக்கற்
கிங்குவல் லவராரோவென் றிச்சையால் வினவலானன். (௫)

பற்பல வறிஞர்தாமும் பாண்டியின் வில்லிபுத்தூர்
விற்பனப் பனவர்தாமே விளம்பிட வல்லார்வேண்டும்
பொற்பண மிகுதியுள்ளார் புரவல ருறவுவேண்டா
ரற்பமும் பிணக்கமில்லா ராமிரு துணைவரென்றார். (சு)

அதனைநன் குணர்ந்திட்டன்னோ னவர்குல முதியாளாமோர்
விதவையை யழைத்தாங்கன்னோர் மேவுமில் விடத்திற்சார்ந்தும்
றிதமறு கலகமுண்டாக் கிடுதனின் கடமையென்னப்
பதமலர் தொழுதற்கேற்றம் பதின்மடங் குபசரித்து. (எ)

வேண்டிய பொருளுநல்கி விடுத்தனன் விரைவிலேகி
யாண்டியன் றின்சொற்பன்பா லவருடன் கலந்துகொண்டாண்
மூண்டிடும் பகையுண்டாக்க முயன்றமன் மதுரைக்கேகிப்
பாண்டியன் றன்பாற்சின்னாள் பழகுபு தனித்தவேளை. (அ)

இத்திற முழுதுஞ்சொற்றவ் விருவர்தம் வழக்குவந்தா
லெத்திறத் தேனுமென்பா லியன்றிட வனுப்புகென்றேற்
றத்திறம் பெற்றுமீண்டா னவன்பெய ராண்டான்பிள்ளை
செத்திற வாதகீர்த்திச் சீரிய னென்பார்சில்லோர். (கூ)

சேர்ந்தவக் கிழவியாங்கு சிறியவன் மனைவிதன்பா
லார்ந்தபல் விகற்பமூட்டி யவடனோ ரகத்தியோடு
நேர்ந்தசொற் பேசச்செய்து நிகழ்த்தரும் பகையுண்டாக்கிச்
சார்ந்தவர் கொழுநர்த்தத்தம் வசஞ்செயச் சமர்த்துஞ் செய்தாள். (கo)

இருதிறத் தினருநல்லா ளெனச்சொலப் பொதுவேயாகி
யொருவரோ டொருவர்கூடா வுட்பகை விளைத்தபாட்டி
தருகிக ராண்டான்பிள்ளை தவமுமித் தனைத்துன்பிரு
மருளுடைக் கரியமாய ஞணையு மனையாளன்றே. (கக)

ஒருமனைப் பிறந்தபால ரொன்றுபட் டொழுகிடாம
லிருநிலத்திடை வெவ்வேறா யிகல்வதனை து வெண்ணிற்
றிருவில்லி புத்தூரார்தஞ் சீர்மனைத் திறத்தாற்செப்பும்
பருவமோ ரேழுந்தாண்டும் பாவையு மாகுவாளே. (கஉ)

அந்தண ரிருவர்தாமு மவர்பொருட் பாகஞ்செய்வான்
முந்தவே கொங்குமன்னன் முயன்றவா றவன்பால்வந்தா
ரிந்தநா ளேநன்னுளென் றியம்பரு முவகைபூத்து
வந்தவர்க் குபசாரங்கள் வளம்பட நடத்தியப்பால். (கங)

பாரதந் தனையிரண்டு பாகமாப் பிரித்துநல்கி
நீருந் தமிழ்ப்பாட்டாக்கி நிகழ்த்திய பின்னர்நுந்தஞ்
சீரதைப் பாகித்தீவேன் றிண்ணமென் றிசைத்தானேற்று
நாரணன் பணியேயாமா னலமெனக் களிகூர்ந்தாரே. (கச)

அப்படிச் சிறிதுநாளங் கவன்வசத் தினராவைகி
முப்பழச் சாறும்பாகு முதிரவே யட்டபாலு
மொப்பவே வண்ணப்பாட்டு முடனுடன் கலந்துபாடி
யெய்ப்பறு கவிகளாறு யிரமெனமுடித் திட்டாரே. (கரு)

காவியப் புலமைவாய்ந்தோர் கணக்கில்பற் பலரானாலுந்
தாவில்சீர் வில்லிபுத்தூர்த் தமிழ்ப்புல வனையொவ்வாரே
தேவினத் தெதுவானாலுந் தேசிகன் றனக்கொப்பாமோ
வாவியை யுடலிலுள்ள வவையவத் திரள்போலாவே. (கசு)

இருந்தநற் கொருபாட்டப்பா லெழுந்தநற் கொருபாட்டோதிப்
பெருந்தொகைப் படுத்துவாரைப் பேதையர் வியந்துகொள்வார்
மருந்துறழ் கவியொன்றுற்பல் வான்பொரு டெளிவாச்சொல்லுந்
திருந்தியற் பாரதச்சீர் தெரிபவர் சிலர்தாமன்றே. (கள)

தொடைச்சிதை வோசைமோனைச் சோர்வுறச் சொல்லும்பெட்பாற்
கடைப்படு புலவர்தங்கள் காவியப் பகுதியெல்லா
மடைத்தலைக் குருகைவானை மருட்டுசீர் வில்லிபுத்தூ
ருடைப்பெரும் புலவர்பாடற் கொப்பெனச் செப்பொண்ணுவே. (கஅ)

ஆமையுந் தவளையாதி யனவுமே யனையவாகிப்
போமையக் காவியங்கள் புவியினி லநந்தமுள்ள
தீமைதீர் மகவான்விண்ணிற் செலுத்தும்வெண் பரிபோற்செல்லும்
பாமைய லறக்கொள்கின்ற பாரத முதற்சினூலே. (கசு)

திண்ணமுந் தெளிவுமோசைச் செறிவுமார் தருபாச்சிலம்
வண்ணவாய்ப் புலவரோர்வார் மற்றைய ரறியமாட்டார்
வெண்ணகை மடவார்தானை வேள்புரை யாண்டான்பிள்ளை
யெண்ணமுற் றியதாலார்வ மெனுங்கடற் குளித்திட்டப்பால். (உo)

அவ்விரு பனவர்தம்பா லவர்குலக் கிழவிதன்னால்
வெவ்வினை விளைத்ததாதி விதமெலாம் விளம்பிக்கூட்டி
யிவ்வித மிசைத்திட்டென்னு ளிச்சைதீர்த் தீரானீர்தா
மெவ்விழை வடைந்திட்டாலு மியான்முடித் திடுவேனென்றான். (உக)

அந்தமன் னுரைகேட்டண்ண னருந்தமிழ் முனிக்கோன்சொற்போற்
சந்தமோ திடுதற்கொப்பித் தவறினோர் செவிகள்கொய்வா
டந்தனுப் புதியென்றான்பின் றம்பியென் றனக்கென்றியாதுஞ்
சொந்தமின் றெனலுமார்வந் தோய்ந்துபல் விருதோடிந்தான். (உஉ)

அவ்வள வினிலன்னோர்தா மவர்தமூ ரடைந்தாரங்கு
வெவ்வழற் பகைமூன்மூட்டும் விதவையாம் பாட்டிதானு
மெவ்வள வோனுயங்க ளியம்பிமா தனையுமுன்போன்
றெவ்வவே கூட்டிவைத்தா ளுரைத்திறம் பெரிதாமன்றே. (உங)

மூரல்வாய் மயிலனேர்மாதர் மொட்டைச்சி யொருத்தியாலே
பாரத முடிந்ததென்னப் பழமையாப் பகராலுற்றூர்
வாரள கத்தாடன்னால் வயங்கிய வதுதானந்தோ
நோதன் விரோதமாக நிகழ்த்தவும் பட்டதம்மா. (உச)

மூத்தவன் புலவர்கோவா முரணிய புலவர்காதைக்
கோத்தசில் பணிகளோடு கொய்வதே செய்வதாகு
னேத்தடற் புலமைவாய்ந்து மிளையவ னென்றுமெல்லாங்
காத்தருள் கமலக்கண்ணன் கருணையே கருதிவாழ்ந்தான். (உரு)

புரைதவிர் கவிதாசார்வ பூமனென் றொருபேர்பெற்றுத்
தரையில்வாழ் புலவருள்ளத் தருக்கெலா முருக்குந்தக்கோன்
கரையில்பே ருவகையெய்திக் களிக்குநாள் கவிசொன்மாண்பா
லரையர்பற் பலர்கொண்டாட வனந்தனென் றொருவன்வந்தான். (உசா)

அன்னவன் பாற்போய்வந்திட் டதற்கெலா நிலைப்பக்கண்டு
பன்னருந் தகையதாய பருங்குழிப் பெடுத்துநல்கிச்
சொன்னதிற் பிழைகண்டார்த்துத் தோற்செவி யறுக்கப்போங்கா
லென்னது பெயர்கொள்சேடற் கிலையிதாய்ந் தியற்றுகென்றான். (உஎ)

அம்மொழி வினவிக்கொய்தா லவனொடொப் பாதலோர்ந்து
செம்மொழி சமயங்கண்டு செப்பலுக் குவகையெய்தி
யிம்மொழி விலைப்பேறாநிற் கீந்தனன் செவியென்றிட்டான்
மெய்ம்மொழிப் புலவர்தம்முள் விகற்பமும் வியப்பாமன்றே. (உஅ)

பொருப்புறழ் பெருமையோனைப் பொருவில்சீ ரருணைக்கேகித்
திருப்புகழ் நாதன்றன்பாற் றீர்வருஞ் சிநேகனாகி
நெருப்புநேர் கோரநீங்கி நெடியமா லடியார்போற்றும்
விருப்புறு தவமேற்கொண்டு மீண்டுதன் னூரில்வந்தான். (உகூ)

காளிகாட் டேறியாதி கலையுபா சித்தானாலுந்
தேளினிற் றுயர்செய்வாரைச் செகம்பெரும் புலவரென்னும்
வாளினாற் புலவர்பல்லோர் வார்செவியரிந்து வாழ்ந்த
வாளிநேர் பனவன்மாட்சி யறிந்தவர் சிலர்தாமம்மா. (௩0)

வரைதொறு நடஞ்செய்வானை வழிபடு மருணைநாதன்
கரையில்சித் திரமாச்சொல்லுங் கந்தனந் தாதிப்பாடற்
குரையுட னவன்சொன்மாட்சி யொண்டமிழ்ப் புலவரோர்வார்
திரையுறு கரியசிந்தைச் சிறியவர் தேறிடாரே. (௩க)

செயமலி ராமன்காதைத் திருப்புகழ் செப்பியப்பா
லயகுணப் பெரியோனென்ன நாடெலாஞ் சொல்லவாழ்த்திட்
டயலறக் கலந்தசிந்தை யண்ணன்முன் றம்பிபின்னாப்
புயற்புறழ் மேனியான்வாழ் புனிதவை குந்தஞ்சேர்ந்தார். (௩உ)

வில்வலி தனிஸ்ரீராமன் விளங்கிலக் குமிணன்போலுஞ்
சொல்வலி யிருவர்காதை சுருக்கமாச் சொல்லித்தீர்த்தே
னல்வலி தவிரிரட்டை யாரெனுந் துணைவர்காதை
கல்வலிச் சிந்தையோருங் கசிவுறவுருக் கின்றேனே. (கக)

வில்லிபுத்தூரார்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙஎ௯.

முப்பத்துமூன்றாவது
இரட்டைப்புலவர் சருக்கம்.

பைந்தமிழ்வளம்பெருகு பாண்டிவளநாட்டி
னந்தலில்சதுர்த்தூர்களி னல்லவனொருத்தன்
கந்தமலியுங்குழல்கொள் காரிகைதனோடு
மைந்தர்பெறவேண்டுமென மாதவமுயன்றான். (க)

உருநலமறந்தரு முணர்ச்சியுயர்கல்வி
யொருமைபிரியாமைமுத லொத்தபல் குணத்தோ
டிருபுதல்வர்நல்குதி யெனப்பெரிதிரந்து
நிருமலனடித்துணையை நெஞ்சினிடையுன்னி. (உ)

தொண்டர்பணியேபெரிது தொட்டினிதிழைத்தா
ரண்டர்தொழுமீசனுமை யாதியரைநீத்தோர்
தண்டணிவயோதிக தவத்தரெனவந்துண்
டெண்டமிகையம்மக னுறும்படிகொடுத்தார். (ஙு)

அவ்வுணவருந்துதலு மன்றுமுதலாவச்
செவ்வுருவமாதினது சிறியவயிற்றில்
வெளவுகருமுற்றியிரு மக்கள் குருடெய்கா
லொவ்வுதலிலாதது மெனக்கடிதுதித்த. (௪)

ஆண்மகவிரண்டொரு கருப்பமதிலாயுஞ்
சூண்மருவலாஃமிகு துயர்க்கடலிலாழ்ந்தார்
வாண்மதனைநீற்றினர் மனத்தினிடையெண்ணும்
கோண்மனிதராமவர் குறித்தறிவதேயோ. (ரு)

வாளெனவிளங்குகண் மடந்தையொரிரட்டைக்
கோளெனவளித்தமகர் கோதடைதல்குன்று
வேளொறழ்துறந்தருள் விளக்கமுறுமேலோர்
சூளெனநினைத்துயிர் துடித்துநனி சோர்ந்தார். (சு)

சூனுறுமுடற்கொளிரு தோன்றல்பெறவின்முன்
போனுவலவாழ்மலடு போதநலமென்று
மானுடையர்தொண்டராரு ளும்பரிகலத்தா
லேனுறுகணுற்றதுகொ லென்றுமனநொந்தார். (எ)

அவ்வினைஞர்தங்கனவி லாயிழையொர்பார்கர்
செவ்வியகலாடைபுனை தேசிகரின்மேவி
யிவ்விருமகாருமிக லோகபரலோகத்
தொய்வினரிலாதுயரு மொண்டகையரென்றார். (அ)

ஒண்ணிறைகளுள்ளமக வொன்றுதவுந்தோறுங்
கண்ணிலதுவுந்தொடர்தல் கண்டுகளிகூர்ந்தார்
திண்ணியபிறேனடை திறப்படலுமுன்னே
னண்ணியபுயத்துட னலைந்திடலுமாய்ந்தார். (கூ)

எத்தகையவாச்சரிய மோசெயவிறேர்தா
மித்தரையில்வந்துளரெனப் பெறுநர்தம்மோ
டுத்தமரெலோருநனி யோதியுணர்நாளின்
முத்தமிழ்நறுங்கவி மொழிந்திடன்முயன்றார். (க0)

முன்னவன்விழித்துணையு மொய்ம்புமலிபின்னோன்
றன்னதுபதத்துணையு மென்றுகவிதானு
மன்னவர்பொதுப்பட வறைந்தனரநேக
நன்னலமுடன்பிறவு ஞாலமுறுமாறே. (கக)

தோளிலுறுமன்னன்வழி சொன்னபடிகூடித்
தாளின்வலியாலினிது தம்பிசெலல்காண்பார்
வேளினையளித்தவரி வீயரசிலேறுங்
கோளினையினைந்துகளி கூர்வர்பெரிதம்மா (கஉ)

நொண்டிகுருடெனவசை நுவன்றுகெடுவாரும்
வெண்டிருவருட்பொலியும் வித்தகர்களென்னக்
கண்டினிதுதொண்டுசெய்து காதலடைவாருந்
தெண்டிரைவளைந்தபுவி யிற்சிலர்களன்றே. (கங)

நச்சுரகபூடணனை நாடொறுநினைந்து
பச்சுருவமாதருள் படைத்தபெரியோர்கண்
மெய்ச்சுரரின்மிக்கபத மேவிவரைமுன்னே
யச்சுவினிதேவதைக ளென்றுமறைவாரே. (கச)

செவ்வையதமிழ்க்கவிகள் செப்பியெணில் சித்தி
யிவ்வையமதிற்செயு மிரட்டையரை நாடி
யெளவைதருபாலர்கொ லெனுவதிசயித்துக்
கொவ்வையிதழ்வாய்மகளிர் கூறுதலுமுண்டே. (கரு)

அன்னமிவர்வான்மனைவி யங்கணருளெய்திச்
சொன்னபடியேநடவு தூயரிருவர்க்குந்
துன்னல்கொடிதென்னுமிரு ளுறுமறவிழைத்த
தின்னவினையாமென வியம்புமவரின்றே. (கசு)

காலமொருமூன்றுமுணர் வார்களைவினவிச்
சீலமிகுமன்னவர் செயற்றெருகுதிசெப்பின்
மாலகிலமாணிடருள் வந்த * கதையொன்று
போலவிரிவாகுமெனல் பொய்ம்மையறுமெய்யே. (கஎ)

தம்மையருமாதவ முயன்றுதவுதக்கோ
ரிம்மையினர்முன்னிகழ் விசைத்தமொழியாலாம்
வெம்மைமிகுதண்மையுற மேதகுமுவப்பா
யம்மையிலரன்பத மடைந்தகடன்முற்றி. (கஅ)

நீரொருமையெய்தியவர் நித்தமுலகத்து
டோரொருவர்பாலொவொர் பணங்கொடுகளித்துச்
சீரொருவர்நல்கினும்வெஃ காததிடமல்கி
யூரொருதினம்புவி யுலாவருதலுற்றார். (கக)

சோழனதுநாட்டினிடை துன்னினரநாளி
லாழறிஞருமவனெ ராச்சரியங்கண்டு
வேழமுறழ்பாவலவர் விள்ளல்கடனென்று
கேழவிர்பொருட்பொதி கிழிப்பயனமைத்தான். (உ0)

அக்கிழிபெறத்தகு மவாவினிடைமூழ்கி
மிக்கியலுணர்ந்தபலர் வெஃகிமனநொந்தா
ரிக்கிளைநிகர்த்தசொ லிரட்டையர்களாங்குற்
றுக்கிளருமன்சபையி னேரமதினின்றார். (உக)

நின்றவரையங்குறு நெடுந்தகையரியாரு
மன்றவருகெய்திடன் மதித்தும்வினவில்லார்
பொன்றருகடுக்கனெடு பொற்புமலிதானே
யொன்றலுறின்வம்மினென வோதுமவர்தாமே. (உஉ)

கோரகுருடன்றன்மிசை கோதுபடுதாளா
னூரல்கொடிதாகுமென வுன்னியொருவில்லா
ரீரமுடனின்சொலிசை யாவிடினுமிஃதே
யோரருமையாகுமென வுன்னறகுமாதோ. (உ௩)

வேறு.

ஆனபொழுதிளையவனியா னடந்துவந்ததூரமறக் கொடிதேயென்றன்
கானலங்குன்றியதெனும்பாட் டரைசொன்னனவன்றேளிற் கவினுமுன்
றேனசைசுடனத்தைகொளுந் திருவாடாவிங்கணிருந்தேனுக்கெங்கே [னேன்
தானமெனப்பின்னரைப்பா டலும்பகர்ந்தான்வளவனதி சயத்தனுகி. ()

அக்கணமேயரியணைவிட் டெழுந்துபோயவர்திருத்தா ளருகில்வீழ்ந்து
மெய்க்கடவுட்புலமைகொணீ ரிங்ஙனமீண்டெய்தியதேவியனென்றோதி
பக்கலிருதனத்திருத்தி யவையறியவயற்செந்நெற் பயிரிருற்றே [ப்
னுக்கதனோத்தையுணக்கண்டுவந்தேனதனையிவருரைத்தரென்றான். ()

* கதை - இராமாயணம்

என்றமொழிவினவலுமாய் குற்றவர்களெல்லோருமிறைஞ்சலானூர்[த்தா
மன்றனதேவலரதற்காச் செய்துளபொற்கிழியையவர் வயின்கொண்டிய்
ரின்றமிழ்வாணரின்மூத்தோரொருபணமாத்திரங்கரத்தாலெடுத்துக்கொண்டு
குன்றவில்லார்திருக்கோவிற் பணியிலவற்றினைச்சேர்க்கக்கூறினனே. ()

அத்தகுதியீறிந்தவர்தா மிவர்மனிதரலர்ககனத் தமரரோமெய்ச்
சித்தர்களோதிகழ்வேட நிசமோபொய்யோவெனவுஞ் சிந்திததாரய்
வித்தகர்தாமரசனிடம் விடைகேட்டாரவனம்பால விரும்பும்வண்ண
மெத்தனையோபகர்ந்தானென் றினுக்குமிசையாதுமறுத் தேகினரே. ()

மன்னவன்பொற்சிவிகைமணிப் பணித்திரள்பட்டாடைவகை வழங்கப்பெற்றிட்
டன்னவனூட்டினிற்பலர்குற் றேவல்செயவாழுநல மதையெண்ணாராய்
முன்னடந்தவாறொருவர் மிசையொருவரிவர்ந்தேகு முறையேவேட்டா
ரென்னவிதமோவவர்தந் திருவுளப்பாங்கானடியா ரெளிதோர்வாரே. ()

அத்தினத்தோர்குளக்கரையி லரசடிவிநாயகன்பா லண்ணன்கை
யில், வைத்திருந்தபணமுதலா வனவமயமுழுக்காடி வந்துபார்த்துச், சத்
தியமாய்த்தம்பியைக்கூய்ப் பணங்காணேனெனச்சொன்னான் சலிப்போ
டன்னோ, னித்திருட்டிப்பகற்பொழுதிற் கண்ணுளநீயறியாதியா ரிழைத்
தாரென்றான். (உகூ)

தந்திமுகக்கணபதிமுன் வைத்ததுண்டுமெற்றொருவர் தாமுமீண்டு,
வந்திடக்கண்டிலனெனவே தமையனுரைத்தலுமவன்கை வழிப்பின்னோ
ன்போய்த், தொந்திமுதலியவுறுப்பு முழுமையுந்தன்கைகளினாற் றொட்
டுப்பார்த்து,முந்தியதேவாமிவனே திருடிவைத்துள்ளானிதுமெய்ம் மொ
ழியென்றப்பால். (கூ0)

தம்பியோபெண்டிருடி தாயினுடன்பிறந்தவனுஞ்சண்டி மாமன்
கொம்பியலாய்ச்சியர்குலைய நெய்திருடினோனுனது குலத்துக்குள்ள
வம்பிதெனக்காளறிவே னீயுமெந்தம்பணந்திருடல் வழக்கோவென்று
தம்பிமுகப் பெருமான்றன் மடிபிடித்தோர் முழுப்பாட்டுஞ் சொன்னனன்றே.(கூக)

அக்கவிக்கோர்பணமுமுன்று னெடுத்ததொருபணமுமிரண் டாக
வாங்கு, முக்கணுடைக்கணபதிதன் றுதிக்கையினாற்கொடுத்திடலு முன்
னோன்பார்த்து, மிக்கவியப்படைந்துதம்பி யினைத்தழுவிநின்கண்ணே
மெய்க்கண்ணாகும், பொய்க்கண்முகந்தொறும்பலர்க்கு மிருந்தெனெனப்
பலவாறு புகழ்ந்தானம்மா. (கூஉ)

அப்புகழ்ச்சியாற்களிகூர்ந் தாணவப்பேராழியினி லமிழ்ந்திடாமன்,
மெய்ப்புலமைத்துணைவனண்ணன் றனைத்தொழுதுநடம்புரியும் விமலன்
றாட்கே, யொப்புரைக்கத்தகுமுனதாள் சுமந்தபயனேயிதுவா முண்மை
யென்று, வெப்புனிதரிவர்போன்றோன் றுய்ப்பிறந்திட்டாலுமிப்பண்
பெய்திடாரே. (கூஙூ)

அன்னவர்தாமப்பணத்தா லன்னமமைத்தருந்திமுன்போ லருங்கா னீந்திப், பன்னரும்பல்பதிகளிற்போ யொவ்வொருவர்பாலோரோர்பண மேகொண்டு, நன்னலமாயிரம்விளைத்தோர் குயப்பிரபுகொடைத்திறமை நாடிச்சேர்ந்தா, ரின்னவரையவன்மதியா தீன்றசிறுமகட்கிதஞ்செய் திரு ந்தானன்றே. (௧௪)

ஆங்காட்டிக்குருகுமவன் விழிகாணத்திகழ்வாரி லண்ணனிந்த
மாங்காட்டிவேளாளன்றன் மகளைமருமகன்றன்பால் வதுவைசெய்து
போங்காட்டியின்பமிகப் புசித்தானென்றரைப்பாடல் புகன்றான்றம்பி
தீங்காட்டந்தொனிக்குமதைத் திருக்குறண்மேற்கோள்காட்டித் திருத்திசெய்தான்.

மக்கண்மெய்தீண்டலுடற் கின்பமாமவர்மழலை வாய்ச்சொற்கேட்டன்
மிக்கசெவிக்கின்பங்கா ணெனுங்கவிசொன்னனுடனவ் வேளானஞ்சித்
தக்கபுலவோரெனத்தேர்ந் திலனோரோவென்றிருந்தேன் றவறென்மீதே
யக்கணமீராரெனக்கேட் பதுகடன்றானென்றவர்தம் மடியில்வீழ்ந்தே.()

ஆதனத்திலிருவரையு மிருத்திமிகுமுகமனுரை யறைந்தானன்னோர்
நீதரவேண்டுவதொர்பணந் தாவெனப்பெற்றவனைவிட்டு நீங்கிப்போனார்
பேர்தவுணர்விலனுகி லங்ஙனஞ்செய்யானவரும் போயங்கெய்தார்
சீதமலர்க்கற்பகமும் பெறவல்லாரிவணலைதல் சிவன் கூத்தாமே. (௧எ)

கல்வியில்கண்ணுக்கினியா னேனையசீர்பெறுதிருவேங் கடத்தானெ ன்னுஞ், சொல்விளங்குமிருதுணைவ ரொருவளவிற்குடியிருப்பார் தொங் தந்தீர்ந்தார், நல்வினைஞர்க்காகாதான் மூத்தவன்பின்னோனவர்மே னசை மிக்குள்ளான் பல்விதத்தாலிளையவன்பேர் வினவியிந்தப்புலவரவர் பதி சேர்ந்தாரே. (௧அ)

அங்கவர்வாழ்மனைமுகப்பிற் போதலுமூத்தவன்றான்கண் டதட்டிச்சீற்று
புங்கவரிற்சிரியரா மவர்வெருண்டார்போனழுவிப் போகலுற்றார் [ன்
செங்கணெடுமாலனைய விளையவன்கண்டுடன்வணங்கித் தினமுநாயே
னுங்கள்புகழ்வினவியெதிர் காணுறச்செய்தவப்பயனுவுற்றீ ரென்று. ()

பேரன்பாலழைத்திடலு மறுக்கிலராய்மகிழ்ந்தவன்றன் பிறகிற்சென்றார்
வாரமுறுமனைவியுமக் களுமவர்தாடொழுவித்து மணம்விராவுஞ்
சீரதயிலமுநீரு முழுக்காட்டியுணவருத்திச் செம்பொற்கட்டில்
சாரவைத்துப்பணிபலவுஞ் செய்தனனன்னவர்குலத்தோன் றானென்பாரே. (௨0)

தேன்பொழிந்தவாய்த்திருவேங் கடத்தான்முன்வேம்புறழ்சொற்செ ப்பும்வாயோ, டேன்பிறந்தானோகண்ணுக் கினியானென்றனன்மூத்தோ னிளையோன்மேனுண், மான்புரைகட்டிருவருபாற் கடலிடைமுன்மூதே வி வரலேனென்றான், வான்பரவுபுகழிரட்டை யார்கவியென்றின்றுமது வழங்கலுண்டே. (௨௧)

கல்லாலயமுந்தேவு மாருமலம்பன்றியுண்கைக் காமென்றூற்போற்
பொல்லாதபொருள்களைச்சொற் றவற்றையுநல்லனவாகப் புகழ்ந்திட்டென்று
மெல்லாரும்வெருளுறுகண் ணுக்கினியானிழிவிலிணை யில்லானென்னச்
சொல்லாயேபேசினரச் சொற்களுமோர்கவியாகித் துலங்கிற்றம்மா. ()

வெம்பியொருகவியுரைத்தா லவன்றலைபற்பலதுண்டா வெடித்தேவீழுந்
தம்பிகுணசீலதவ நோக்கத்தாற்பிழைத்துநடைச் சவம்போன்றூற்றான்
கம்பிதமெய்தாதுயிர்கட் கிதஞ்செய்திருவேங்கடத்தா னெனுங்காராளன்
செம்பியன்பாண்டியன்சேரன் முதலினரிலொருவனிகர் சீர்பெற்றானே.

அவனிடத்துமொருபணம்பெற் றகன்றிரட்டைப்புலவோர்தா மந்தமூரிற், சிவனறிந்தவிளையாடல் பலசெய்தருணபுரியிற்சென்றங்குள்ள, நவமலிவாழ்வினனெனக்கேட் டொருசமணன்கண்ணெதிர்போய் நகைப்பநின்று, ரிவரைமதியாதுவெறுத் தியாரென்றான்றமிழ்ப்புலவ ரெனச் சொன்னரே. (சச)

சொன்னவரைப்பார்த்துமுன்பினின்னசொற்களியைதரப்பாத்தொடுமினென்று, னன்னவர்தாமுடன்மன்னுமருணைநகர்வாழ்சம்பந் தாண்டானுக்கீன், டென்னவித்த்தினுக்காகத் தலைச்சவரம்பண்ணுகின்ற தென்றுமின்னூர், வன்னவளைக்காந்தளங்கை கொடுகுட்டாமலுக்கென்றும் வகுத்திட்டாரே. (சரு)

தானுரைத்தசமத்தியினிற் பெருநகையிரசங்கலந்து சாற்றக்கேட்டும்
வேனுடனச்சமுஞ்சிறிது கொள்ளாதுகண்களினுல்வெகுண்டானன்னோர்
பானுவுள்ளமட்டமெருப் பழிசுமப்பாயெனச்சினத்தாற் பகர்ந்துபோயேற்
றூனைக்குஞ்சிவபெருமா னருள்வழிசித்தாடினரிவ் வகிலத்தம்மா. ()

தில்லைநகர்க்கலம்பகமுங் கச்சியூர்க்கலம்பகமுஞ் சீருலாவு
மெல்லையில்பஃறலங்களிடை யெப்பிரபந்தங்களுமோ வியம்பியாவுந் [ளி
தொல்லையெனுந்துணிவெய்தி முத்திபெறுங்கருத்தினராத் துயிலோர்நா
லல்லைநிகர்கண்டத்தா ராமாத்தூர்க்கேகுமினென் றறைந்திட்டாரே. ()

அக்கனவுகாணன்முத லாயவிதம்விரித்துநன்று யவ்வூர்க்காகு
மிக்கபுராணத்தினிடை விளம்பியுளதவராங்கு மேவும்போதே
யிக்கனையமதுரமுறு மிசைத்தமிழாற்கலம்பகமொன் றியம்பித்தீர்த்தார்
புக்கவரையரசன்முத லினர்தாமுஞ்சிவனுரையாற் போற்றினரே.(சஅ)

அச்சுதேவப்பெயர்கொ ளரசன்முதற்பற்பலரு மருகிற்சூழ
நச்சுரகப்பணியுமணி தருமபிராமேசர்முன்பி னவிலும்போது
மெச்சுபுகழ்ப்பம்பைநதி மேற்கரையிற்கோயிலென்றூர் வேந்தனுநிக்
கச்சுறுமென்முலைமகளிர் வரையாருமிதுபொயெனக் கழறினரே. (சகூ)

அந்தமட்டிலிதன்முடிவு தெரிந்தபின்றான்குறையுமரங் கேற்றலாமென்
றந்தருட்பாவலரிருவர் களுமொ[illegible]ந்தாரரசன்மனை யுணவுநீத்துச்
சிந்தனையிற்கொதிப்புமிகுந் தக்கோயிற்சந்நிதியிற் றியானித்துற்றார்
பைந்தண்முகிலன்றிரவின் மழைமிகப்பெய்தவ்வாறே பண்ணிற்றம்மா.

ஆதவன்வந்துதித்தலுமங் குள்ளவரெல்லோர்களுங்கண் டதிசயித்து
வேதன்முதற்றேவர்களி லிவரிருவருடற்சுமைபொய் வேடமென்றார்
மீதமுளபாடல்களும் படித்துமுடித்ததற்பினந்த வேந்தன்றாழ்ந்து
போதவுநீர்புகன்றபடி புரிவலென்றானவரவன்பாற் புகல்வதானார். (௫௧)

வருமுனைமைக்குறித்தொர்களுக் கண்டிலையேலணுத்துணையு மதிக்கமா
யருமைமிகுகவிகேட்டு நதிபிறழாவிடிலிகழு மவரிற்சேர்வாய் [ட்டா
நிருமலனெம்விருப்பளிக்கைக் கிருக்கின்றானீயருட்சீர் நேடிவாடும்
பெருமையுறுதவர்புலவ ரன்றியிரவலர்தமையும் பேணென்றாரே. (௫௨)

இன்றுமந்தநதியவ்வா றொழுகுதலும்பெருவெள்ள மெய்துமாயின்
முன்றுலங்குவழியினும்போய்மாதைநகர்ச்சூழ்தரலுமுறையிற்காண்மின்
குன்றுறழுமாணவங்கொண் டிகலுமிளம்புலவீர்காள் கோடிகோடி
யென்றுபஞ்சாக்கரஞ்செபித்தா யினுமரன்பாலருள்பெறலே யேற்றமாமே.()

ஏதினெறிக்குரியாரும் வியந் [illegible] புலமை யிரட்டையார்தா
மாதிரத்திற்றிரிதருமா லறந்துறந்துநந் [illegible] த்தூராளு
நீதிமன்செய்தவபலமாச் சிலநாளுற்றொருரு[illegible]கண் ணேரிற்றோற்றுஞ்
சோதியினிற்கலந்தேபோயயனியமனெனுமவர்கைத்தொடர்பற்றாரே.

இத்தகையகவிக்குரிய ரின்னாரென்றொருபாட லிசைத்தோனாரோ
கைத்தலில்சீர்க்கலம்பகத்துக் கிரட்டையர்களெனத்துணிந்து கழறினான்மெய்
யெத்தனைமாதுரியமொடு சாதுரியமியைதரப்பாட் டிசைத்திட்டாலு
முத்தமப்பேறாயவருட் செயலிலையேலுலகமுழு தொப்பாதன்றே. ()

எப்பிறப்பின்றவத்தாலோ வருட்பெரும்பேற்றுடன்பிறந்த விரட்டையார்தம்
மெய்ப்பிரதாபக்கடலிற் சிறிதறிந்தமட்டுரைத்தேன் விண்டுவோடு
திப்பியநான்மறைப்பிரமன் றேடுமலைக்குகையி னிடைசேர்ந்துவாழ்ந்த
தப்பிதமில்லாதகுகை நமசிவாயன்பெருமை சாற்றுவேனே. (௫௬)

இரட்டைப்புலவர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௪௩௪.

---

## முப்பத்துநான்காவது

## குகைநமசிவாயசுவாமிகள் சருக்கம்.

முன்னமாதவர்பலர் முக்கணனரு
ளன்னலமிகப்பெறு நந்திதன்னொடு
துன்னலாற்பெரும்புகழ் தோய்ந்துவாழ்வது
கன்னடதேயமாங் கவின்கொள்பூமியே. (க)

அந்நாட்டிடையிலோ ரரியமாதவ
னெந்தமாதாபிதா வீன்றசேய்கொலோ
சொந்தமாங்குருவெனத் தொடர்ந்ததாரையோ
செந்தகைச்சிவனருட் சீர்பெற்றனரோ. (உ)

அருட்பெரும்பேறுபெற் றவனையன்பினு
லிருட்கருங்களப்பிரா னியற்றமிழ்த்தனித்
தெருட்புனைதேயத்திற் றிருவண்ணாமலைப்
பொருட்சொலுங்குருவெனப் போதிநீயென்றான். (ங)

அக்கணமன்னவ னடல்விடைப்பரி
தெக்கணத்திக்கினிற் செலுத்தினனது
மிக்கவீராகம தவத்தின்மேம்படு
தக்கவரூர்தரு தருமந்தானரோ. (ச)

இடைவழிதன்னிலோ ரூரிலேய்தலு
மடைவுடன்மணஞ்செய்வீட் டதிபனுய்மலர்த்
தொடைமுதலியகொடு தொழுதுபோற்றித்த
முடையநாயகனென வுன்னிக்கொண்டுபோய். (ரு)

மனையினிலுள்ளவர் வந்துற்றொரனு
மனைவருமவன்கைநீ றணியச்செய்தபின்
புனைமலர்ப்பந்தரும் பொருளெலாமுமூழ்
வினைவலியாலழல் வேவச்சுட்டதே. (சா)

அத்தனைகாண்டலு மாங்குள்ளார்பல
ரித்தவனீற்றினு லெரிந்தவென்றனர்
சித்தநொந்தவன்பர சிவனைத்தீர்வரும்
பத்தமோடுன்னுபு படைத்திட்டானரோ. (எ)

வெந்தனமுழுமையு மீண்டுமுன்னென
வந்தனகாண்டலும் வைதமாந்தரே
யிந்தமாதவன்சிவ னேயென்றேத்தினு
ரந்தமான்மியத்தள வறியொண்ணுதகே. (அ)

வருமவர்நெஞ்சக மகிழநானினி
யொருவர்தம்மனையினு முறுகிலேனெனும்
பெருவிரதத்தொடம் முனிவன்பேர்ந்துபோய்த்
திருவருணையினிடஞ் சேர்ந்திட்டானரோ. (௯)

சென்றவண்வைகியுந் திருப்பொற்கோயிலின்
குன்றவில்லியைக்கரங் குவித்திடாதுநீ
நன்றடைந்திருத்தியோ வென்றுநாடொறுந்
தன்றடங்கையொன்றாற் சைகைசெய்குவான். (௧௦)

அங்கவன்செய்திட லகமன்றுசற
துங்கவீராகமந் தமர்கள்சூழ்குரு
புங்கவனுவரு பூராரியல்லனைச்
செங்கரங்குவிக்கொணு தென்றுசெப்பிற்றே (௧௧)

குருலிங்கசங்கம மெனுமுக்கூறலா
லொருபொருட்டொழவொணு தெனுஞ்சொலுற்றுணர்ந்
திருளறவணங்கலா மிலிங்கந்தன்னுர
மருவலொன்றேயென மதிக்கைவம்பரோ. (௧௨)

அந்தமாதவத்தின னரன்சொலாலவண்
வந்தவாறுணர்கிலர் வருந்தினுரவன்
செந்தமிழ்த்தீஞ்சுவைத் தெருட்சிமிஞ்சலாற்
பந்தமார்தருவெண்பாப் பகர்பண்பெய்தினன். (௧௩)

கன்னடமல்லதோர் கலையுங்கற்றிலா
வன்னவன்றமிழுணர்ந் தாரிற்சீரியர்
பன்னலாந்தகைகொள்வெண் பாச்சொலச்செய்தா
னென்னரன்செய்திடா விதயத்தெண்ணினே. (௧௪)

அக்கினிகிரிப்பிராற் கன்பிலானெனக்
கைக்குறிகாட்டலைக் கண்டொர்நாளதி
யுக்கிரச்சிவாக்கிர யோகிவேத்திர
மெய்க்கிடர்தரும்படி வீசினனரோ. (௧௫)

இல்லறந்துறந்தவ னெதிர்த்தெள்ளாதெனை
நல்லசற்குரவனுய் நாதன்மோதிடல்
கொல்லவன்றுள்ளதீக் குணங்கள்போக்கவென்
றெல்லருந்தரத்தொரு கவிதையோதியே. (௧௬)

போயினன்போதலும் பொருவிலியோகியத்
தீயுறழ்தவனிலை தெரிந்திலேனென
வாயினுலுக்கிரத்தள மாழ்கினன்றவன்
கோயிலுட்போய்த்தொழல் குணமென்றுன்னினன். (௧௭)

அப்பொழுதத்தவ னருகிலாதிகாண்
மெய்ப்பொருளோதிய விகிதசற்குரு
துப்பொளிர்கற்கலைத் தொண்டர்சூழ்தர
வெய்ப்பொருங்கொருவமு தென்னவெய்தினன். (௧௮)

கண்டனனவறக் கசிந்துதாழ்தலு
மொண்டவர்வாய்மலர்ந் துரிமைபேசியே
கொண்டுபோயத்திருக் கோயினோக்கலா
லுண்டுமுற்குருத்துவ மென்னவுன்னியே. (௧௯)

கோயிலுட்போனசற் குருவுங்கூட்டமா
மேயினசீடரும் வீழவீழ்ந்தெழ
லாயினவேளையங் கவரைக்கண்டிலான்
சேயினைத்தருங்கணமர் செயமெலன்றோர்ந்தனன் (௨௦)

வம்பிடுமொழிசொல பலகலைத்தூக்குநாங்
கும்பிடுகலங்குறித் தடிக்குசற்குரு
தெம்பிடுஞ்சிலையினாற் சிரத்தின்மொத்தினாற்
கம்பிடுமரனரு ளாமென்றன்புற்றான். (௨௧)

அன்றுகைப்பிரம்பினா லடித்தயோகியுட்
குன்றுவில்லாமெனக் குனித்தகொற்றவன்
சென்றுநீயடித்தலுஞ் செழுந்தமிழ்க்கவி
யொன்றுரைத்தானென துருவன்றானென்றான். (௨௨)

பொருவருந்திருவருட் போதமெய்தலா
லிருவருமெத்தலத் தெதிர்ப்பட்டாலுமாங்
கொருவரையொருவர்தா முறவணங்கினார்
மருளின்மெய்யடியவர் வழக்கிதென்னவே. (௨௩)

ஆலயத்துட்புகுந் தரனைக்கைதொழுஞ்
சீலமார்தவசியுஞ் சிவாகமப்பெரு
நூலறியோகியு மடியர்நோன்மையைச்
சாலவுற்றார்தமுட் டவறுநீங்கியே. (௨௪)

அத்தனியோகியெங் ககன்றிட்டான்கொலோ
வித்தவனருணைவிட் டேகிடாதுற்றான்
மத்தகமுரித்தவன் மகிழ்ச்சிகூர்ந்துதன்
பத்தனென்றுலகெலாம் பகரச்செய்தனன். (௨௫)

ஊரினும்வனத்தினு முலவினான்றனைப்
பாரியமலைகடு வசிக்கப்பண்ணலாற்
சீரியகுகைநமச் சிவாயனென்றொரு
பேரிகமெங்கணும் பிறங்கக்கண்டனன். (௨௬)

அங்கிருக்கின்றவற் காகவேண்டுவ
வெங்கிருந்தியாவரா லேனுமென்றென்றும்
பொங்கியபெருங்களி பூப்பப்பூப்பவெண்
சங்கியல்காதினன் றருவித்தானரோ. (உஎ)

ஈறுதீர்மெய்ப்புக ழியைந்தபோகற்கு
மாறுதீர்கொங்கணன் வாய்த்தவாறெனத்
தேறுமேலவர்குழாங் தினமுமன்பொடு
கூறுமோர்சீடனைக் கூட்டினனன்றே. (உஅ)

அப்பெருஞ்சித்தனன் றடைந்தவாசையே
யிப்பெருந்தவனுமெய் தலினிச்சீடனு
மெப்பெருநகரினு மேகிவந்தவன்
கைப்பெருஞ்சித்தியாற் காமமூட்டினன். (உகூ)

தினங்தொறும்புதுப்பரு வத்துச்சேயிழை
மனந்தனொடணைந்துமுன் றுயின்றவாயெழுந்
தினந்தமர்பாற்கன வினைத்தென்றோதிட
வனந்தரஞ்செய்தன னருள்கொண்டையகோ. (௩0)

எம்பிரானருள்பெறு மீடுளாரெனில்
வம்பிவாறியற்றினு மகிதலத்துளார்
நம்பிரார்த்தனையுமா தவமுமாகுமா
னம்பியேயதுபெற லலத்தின்மிக்கதே. (௩க)

இத்தகைவஞ்சக வின்பமார்ந்திடு
மெய்த்தவரிருவர்தா மவரைவெஞ்சம
னுய்த்ததூதுவர்களு மோதிமத்தினன்
கைத்தலங்களுங்தொட வில்லைகாண்மினே. (௩உ)

அப்படிநடக்கையி லரனுக்கீந்துள
மெய்ப்படிவத்தவன் விரகத்தாற்புணர்
செப்படித்துணைமுலைச் சிறுமியாமவ
ளிப்படிமானிடத் திலையொர்நாளிலே. (௩௩)

கொங்கணனெங்கணுங் குளிகையாற்சென்று
ளங்கவனெத்திறத் தறிந்திட்டான்கொலோ
சங்கரன்றிருவுளத் தயைபெற்றோர்களுக்
கிங்கரிதாயதொன் றிருக்குமென்பரோ. (௩௪)

ஒருதினந்தக்கதா யொருத்தியின்மையா
லருணையின்வடபுலத் தமருந்தூர்க்கையை
வருதியென்றழைத்தலு மனிதமங்கையாய்க்
குருவளர்செம்மலைக் குகையிற்சேர்ந்தனள். (௩௫)

சேர்ந்தவட்புணர்தலுஞ் சிறிதுங்காமநீ
ரார்ந்தவனுருகில னதுகண்டத்தவ
னேர்ந்தநீயார்கொன்மெய் நிகழ்த்துகென்னவே
யீர்ந்தயையுடன்வினா விடலுஞ்செப்பினுள். (கசு)

அக்கணமகளிர்மா லறவிட்டோடின
னிக்கதைத்துணையென விலங்கும்போகன்றான்
றிக்கறிதரப்பெருஞ் சீனநாட்டிடைப்
புக்கனன்பலமினார் போகம்வேண்டியே. (கஎ)

கல்லுருவனிதையைக் கருதிநீயெவள்
சொல்லுதியெனவினா வளவுந்தொல்கதை
புல்லுதல்பற்றியே பொதுவிற்கூறினே
னல்லுணர்வினரதை நவையென்றார்களே. (கஅ)

முந்துகல்வினவுகான் மூகைபோன்றது
பிந்துகற்றன்பெயர் பேசிப்போயதா
லிந்துவாழ்சடைப்பிரா னியாவன்மீதரு
ளுந்துறவைத்துளா னோநன்கோர்மினே. (கக)

ஒருசிலைமந்திர மொன்றுமில்லதொன்
றருளுடைப்பனவரா ராதித்திட்டதா
லிருதிறமங்ஙன மிலங்கலுற்றன
மருண்மலிபுன்றவர் மதிக்கொண்ணுதவே. (சo)

இருநிலத்திக்குலத் தின்னவாவரு
மருமகனெனத்தெரி வருமச்சீடன்றான்
குருபதம்வருடுமோ ரிரவிற்கூறையை
வெருவரலொடுமிகக் கசச்கிவிட்டனன். (சக)

ஆங்கியன்றமைதெரிந் தருட்பெருங்குரு
வீங்கிதேன்செய்தனை யெனலுந்தில்லையி
லோங்கியசபைத்திறை யோரந்திக்கெழீஇ
வேங்கிளர்ச்சியதற விலக்கினேனென்றான். (சஉ)

அருகிருந்தவன்றனை யணைத்தென்றன்குருப்
பெருமைபெற்றனையெனப் பேசினனதைத்
திருவருளாற்சகந் தெரிந்திச்சீடன்பேர்
குருநமச்சிவாயனென் றினிதுகூறிற்றே. (சஙு)

ஒருமாத்திருகளி றூர்த்ததொக்குநா
மிருவருமொருதலத் திருக்கையென்னவக்
குருவவன்றன்னைநீ குறித்ததில்லையின்
மருவுதியெனமகிழ்ந் தனுப்பினன்மன்னோ. (சச)

## வேறு.

கோதிலாவருணைமலையிலுள்ளகுகை நமசிவாயமுனிகுன்றவிற்
சோதிமீதுபலவெண்டளைக்கவிகள் சொல்லியேதனிவசித்தனன்
போதினனையபுலவரும்பழுதில் புனிதமாதவரும்வந்துவந்
தீதிவாறெனவுணர்ந்துபோயினர்க ளெண்ணிலார்தினமுமென்பரே. ()

அம்மலைக்கருகமைந்தமாநகரி லந்தநாளின்முசுகுந்தனுஞ்
செம்மல்சேனையதிபர்க்குமக்களென வந்துவாழ்மரபர்திரளுறீஇத்
தம்மகத்துவமுணர்ந்திடாமலிழி சாதியோர்கணடைதழுவல்கண்
டிம்மகாமுனிவனன்னடைத்திற மியைந்திடப்பெரிதியம்பினன். (சசு)

செப்புமம்மொழிவினவியோர்சிலர் திருந்தினர்பலர்சினத்தராய்
வெப்புரைத்தொகைமொழிந்திகழ்ந்தனரொ ரிடையன்மாய்ந்தசினைமேடத்தோ
டொப்புடைக்குருளையோரிரண்டிதனு ளுள்ளகொண்மினெனவோதியே
பப்புபாங்கிலைதிருத்தியங்குலவு பலருநன்கறியநிலவினன். (சஎ)

அவர்கடம்மிலொரிடக்கனித்தசை யருந்துமாசையிலழுந்துமோர்
தவசியிம்மலையினடுவுறுங்குகை தனிற்றனித்துளனெனச்சொனு
னுவகையோடுநிசமென்றுசென்றவ னுரைத்தலுந்தவனுறுத்திடா
தெவளவென்றுவிலைவினவிநாளைவரு கீதுமென்றினிதனுப்பியே. (சஅ)

கற்றைவார்சடிலநாதனைப்பெரிது கருதியன்பொடுகசிந்துநீ [ர்
யிற்றையென்னிடமிதுய்த்ததேனெனவொரினியபாடல்சொலிநீற்றிலோ
சற்றையிட்டனனெழுந்திரண்டுகுரு ளையுமளித்ததுசணத்திலப்
பொற்றையிற்றழைகொய்திட்டுமெங்கதுபுரந்தனன்பொருவில்பொறுமையான்.

அன்றுபோய்மறுதினத்தவாயனவ னடைதலுந்தனதொராடுதான்
கன்றுபெற்றுநிலைநிற்கைகண்டளவில் களியினோடுவியனடையவே [நிற்
பொன்றுமஃதுகொளுமுனிவனென்னல்பகர் பொருள்கொலோவிவைகொள்வேட்கை
கென்றுகேட்டலும்வணங்கியன்னவைகொ டேகினன்மலையிறங்கியே. ()

போமவன்பழையதெருவிலுற்றது புகன்றனுப்பினனையெள்ளியத்
தீமகன்சொல்வழியூதியம்பெறுத றேற்றமேயெனினுமத்தவற்
சாமயந்தினுமொரீனனென்றமொழி தழலெனச்சுடுவதென்றுமம்
மாமயேசன்முனியிற்பல்கோடியிடர் வந்துசூழனிசமென்றுமேல். (ருக)

அருணையீசனவனன்றியில்லையிலை யென்றுமாயிரவிதத்தவாம்
பொருணயம்படுசொலோதியோரிரு புயத்தினுந்துவள்புனிற்றிளங்
குருளையேந்திமுதனுள்சுமந்தவது கூடவேயினிதுகூய்வரச்
சுருள்குழற்றன்மனையாதியோருவகை துன்னவேமனையினண்ணினன். ()

அன்றனுப்புகையினுந்தடாதசில ரங்குகூடியொருமைந்தனை
யின்றமாமுனியெழுப்புவானெனி லெழுந்திரேலெனவொர்பாடையிற்
றுன்றவைத்தவன்முனேகியிப்பிண மெழுந்துபேசவருளென்றலும்
பொன்றலுற்றவுயிர்போயதென்றன னவாறுபோயதெமபுரமரோ. (ருங)

பொய்ப்பிணர்திருவணுமலைக்கடவுள் பொற்பதம்பரவுபுனிதனுன் [யித்
மெய்ப்பிணக்கைகயடைந்தபோததொட வீணராமவர்வெகுண்டுபோ
தப்பிதஞ்செயன்மொழிந்துவாடினர் தமர்க்குளுள்ளசிலதகுதியோ
ரிப்பிழைப்பயனெவாறுமுற்றுறுவ தோவெனப்பெரிதிடைந்தனர். (௫௪)

கோளர்வகுநகர்கொல்லினும்புகலல் கேட்டிடாதநகர்கோரவெங்
காளையாகுமவர்கதறுமூர்நெடிது கனபழிச்சுமைசுமக்குமூர்
தேளைநேர்பதகர்வாழுமூரெனுரை செப்பியேயழியுமூரெனு
தாளுநாதனடநானுளேனெனவி லழிவுருதருணைமலையெனு. (௫௫)

ஒருதமிழ்க்கவியுரைத்தமாமுனிவ னுள்ளெழுந்தசினமொருவினுன்
மருவுபன்னிருசகத்திரங்குடி வளங்கொளக்குலவுமனிதர்தாம்
பெருமிதக்கலியுநோயுமெய்தியதி பேதவாதவல்வினாதராய்ப்
பருவரற்சுமைகொடேகினாளவில் பலபலூர்தொறும்வசிப்பவே. (௫௬)

ஊருடன்குலமுமதமுமங்ஙன முரைத்திடும்பலபல்கூட்டமுஞ்
சேருமோர்புருடனுல்விளங்குமொரு தீயனுலழியுமென்றசொற்
பாரும்வானமுமுரைக்கைமெய்ப்படவொர் பதிதனப்பரமமுனியிடங்
காருடற்பொதுவன்மாய்ந்தவாட்டின்விலை கழறுமாறுவிடல்காட்டுமே ()

சேணிடத்திரதகுளிகையாலுலவு சித்தரும்பெரிதுசிந்தியா
நாணிடச்செயனடத்தியுற்றகுகை நமசிவாயமுனியிசையினுல்
வாணிலாவருணைநனிவிளங்கியது வம்புசெய்தகலுமாபினிற்
பேணியோர்சிலரவூரிலுற்றனர் பிறந்தமாட்சிமைபிறங்கவே. (௫௮)

ஒருதினத்தினிலொரிடையனூறுபசு வோடவெற்பருகிலுற்றபோ
தருமைமிக்குறுமவற்றுளொன்றையடல் வேங்கைபற்றியகலத்தெரிந்
திருமருப்பழகுமுதலவுஞ்சொலி யிரங்கியேயவன்விரைந்துபோய்த்
திருவருட்கடலையனையவம்முனி செவிப்படச்சொலியிறைஞ்சினுன். ()

ஆயன்வந்துதனெடோதன்மட்டுமொ ரரைக்கவிக்கிடையறைந்துபின்
மாயவன்விழிசுமந்திடுஞ்செழு மலர்ப்பதங்கொளருணேசனைக்
கூயதைக்கடிதுபார்பழிச்சுமை கொளேலெனுவரையுமோதினுன்
றீயவெம்புலிகொணர்ந்துவிட்டது திரும்பிவந்தவழிசென்றதே. (௬0)

அப்புலிக்கடியினுலுகுங்குருதி யடைபடப்பொடியினுலடைத்
திப்புண்வாதனைசெயாதினேயுலரு மேனையோர்சொல்வழிமூன்றுநாள்
பொய்ப்புலிக்கெலிகொலாதவாறென நினைந்துசிற்சிலபுரிந்திடே
றப்புருதிவணளித்துளானினை யென்றனன்பொருவிறவசியே. (௬௧)

ஆயனங்கதுவினுவியுன்னையல தறிகிலேனெருவர்தம்மையென்
றேயவோதுபுவணங்கியப்பசுவொ டேகியங்கதைநினைந்தழும்
வாயகன்றமுதருந்தவூட்டியதன் வகைபலர்க்குரைசெய்துற்றனன்
சேயுசோணகிரிநாதன்மெய்யருள் செறிந்தவர்க்கரியதில்லையே. (௬௨)

கச்சிமாநகர்விடுத்தொர்த்ாதகுரு கனகதண்டிகையிலேறியே
நச்சியுத்தரதிசைக்கொடேகுகையி * ஞகன்மைந்தன்விழிநண்ணியாண்
மெய்ச்சிவன்†கிரிதெரிந்ததீங்கிதென் விழிப்படாதுமறைமின்னென்றுன்
றைச்சிடுங்கலைகளால்விளங்கும்விரு தான்மறைத்தனர்கடாசரே. (௬௩)

அதுநடந்ததுபல்காததூரமதி லருணையின்குகையுளமர்வலோவி
கதுமெனுநகைசெய்தொருதமிழ்க்கவி கனற்பிழம்பெனவிளம்பினுன்
விதுவணிந்தசடைநம்பனைப்பரவும் விரகிலாதுகெடும்வீணனென்
றிதுபிறந்திடலுமவன்விழிக்கணொளி யிற்றதெட்டுணையுமின்றியே. (௬௪)

உரகவெற்பிலவனுற்றதுங்கரிய னுக்கியைந்தபணிசெய்தது
மரனையம்மலையினிற்றுதித்தியென வன்னவன்சொலியனுப்பலுங்
கரவில்சிந்தையுடனுந்தரத்தில்வெகு கவிசொலிக்கணிணைபெற்றதும்
பரவையாடைபுனைபாரின்மீதுபகர் பற்பன்மானிடருளார்களே. (௬௫)

பின்னுமங்ஙனமநந்தமாடல்கள் பிறங்கிடும்படிசெய்துற்றனன்
மன்னுதென்னருணையீசர்தம்மருள் வசத்தனுகுமொருமன்னனுற்
பொன்னுடன்பன்மணியணிதருஞ்சிவிகை புவியெலாமறியவீந்துதன்
முன்னுகைக்கவுமியம்பினுர்வயது முறையினூறுநிறைவாயதே. (௬௬)

பிரமனிட்டபொதுவாயுண்முற்றியது பின்னுமிங்குறுதல்பிழையெனத்
தரமதற்குரியவாறுசெய்ததொர் சமாதியின்குழியிறங்கலும்
பரமன்விண்ணினிடைநின்றுவந்துளவர் பற்பலோர்களும்வினுவவே
யுரமொடின்னமுமவளவுநாளுலகி லுறுகவென்றுரைசெய்தானரோ. ()

வேதனன்றெழுதும்விதிபிறழ்ந்ததுபல் வெற்பிலுற்றபலசித்தருந்
தாதளைந்தசிலகற்பமேவயது தருவதென்றமொழிதப்பிய
தாதவன்சசியொடங்கியுங்கணெனு மருணைநாதர்திருவருளினு
லேதடைந்திடினுமடையலாகுமென விகழும்வானமுமிசைத்தவே. ()

வெளியில்வந்துமுனமொத்திருக்கையின் மிலேச்சமன்னவனொருத்தன்வெங்
களிறுபோல்பவனகித்தெனும்பெயர்கொள் கண்டகன்பொருவில்காதக
றளிர்நிறத்துமடமாதரைப்பலபல் சாதியிற்கவர்தருக்கினுன் [ன்
வளியெனச்செல்பலபரியினுனுலகை வாட்டினுன்கலியன்மகிழவே. ()

தண்டமிழ்ப்பெரியதேயமெங்குமொரு சமயமிஞ்சையுறவுஞ்செய்தான்
வண்டனுமவனியற்கையாவையும் வகுத்துரைப்பதிழிவாகுமத்
துண்டரீகனழிகாலம்வந்ததுயர் சோணவெற்புருவமாகுவார்
கொண்டகோயிலினிடம்புகுந்துபல கோரணித்தொழினடத்தினுன். ()

அக்கடும்பிழைசகித்திடாதுகுகை யதனில்வாழுமுனியவனுடன்
றெருக்கசேனையுமெரிந்துவீழ்தரவொர் சொற்சொலாதுதிரிசுடர்களா
முக்கணுதன்மிசைநெற்றியுற்றகணு முடிவினித்திரையடைந்ததோ
கைக்கணிச்சிபரிபோயதோவெனவொர் கவியுரைத்தனனிரங்கியே. ()

* நாகன்மைந்தன் - கண்ணப்பநாயனுர். † கிரி - திருக்காளத்திமலை.

அன்றிராவிலகிதின்கணுவினிடை யருணையீசரொருதவசியாச்
சென்றிலங்குபடையொன்றினன்முது கிடத்திலோர்சிறிதுகுத்தினர்
வென்றிவீரர்குலகாலனுமவன் விழித்தனன்சிறிதுவேர்க்குரு
வென்றியம்பரியலூறலோடவ ணெழுந்ததோர்கொடியபிளவையே (எஉ)

அதுதெரிந்துமனமஞ்சினனவனெ டங்குவந்தசிலபெரியர்பா
லிதுவிளம்பினனிவாலயத்தினி லிருக்கொணுதெனலுமேகினன்
சதுமுகப்பிரமனனையவேதியர் சடங்குபற்பலவியற்றியே
விதுவிருந்தசடையீசர்பூசைவிதி விலகிடாதுநிறுவினரரோ. (எங)

போயவன்பிளவைமிகவளர்ந்துபல் புழுக்கள்பற்களுளவாமரீஇ
யேயதுன்பமொருகோடிநல்கிடலுமி யாக்கையூனவையருந்திடா
தாயசூலுடையமகளிரைக்கொலைசெய் தவர்சிசுக்களையெடுத்ததிற்
றேயவைத்தனனெனச்சொல்வார்பலர் துடித்திறந்தனனொரிரவிலே. ()

அவனிறந்ததினமுலகிராவணனி ரணியனுதியரழிந்தநா
ளௌவளவார்வமருவுற்றதோவவள வெய்தலுற்றதிதுமெய்மையே
தவளவாரணமுகைத்துளானகர் தனிற்குலாவமரர்தாமுமிக்
குவகைவாரியிலழுந்தினரிவை யொருங்கியற்றலரனொருவனே. (எடு)

முன்னைநூறுவயதுங்கழிந்தபடி முக்கணனுவலுநூறுமற்
றன்னைதந்தைகுருதெய்வமாமலையி லன்றுசெய்குழியினிடைபுகுந்
தென்னையிவ்வுடலெனச்சொலேன்மினென வேயியம்பியருவெய்தினன்
பின்னையுள்ளவரிலிங்கம்வைத்தினிது பேணியுய்ந்தனர்பெருக்கவே. ()

இந்தமாமுனிவன்வெண்டளைக்கவிக ளெண்ணிலாதபலசொல்லினு
மந்தமாதிதொடர்பாடல்சோணகிரி யாதிமீதுசொலனூறுதான்
முந்தவிப்பெரியன்வந்துபோகின்முத லாகுமக்கவியின்முதியனென்
றெந்தகாவலவனும்புகழ்ச்சிபெற வில்லையீதறிவள்வாணியே. (எஎ)

அந்திவானனையவருணைநாதர்திரு வருள்வளக்கடலின் மூழ்கலா
னந்தியன்னகுகைநமசிவாயர்கதை நானறிந்தளவி லோதினேன்
பிந்தியன்னவர்தமடிமையாய்க்குரவ ஞேவெனுவவர்சொல் பெருமைபெ
றுந்திசைப்புலிசை நகரிலேகினர்த முயர்வுகூறுவனெர்சிறிதரோ. [ற்

குகைநமசிவாயசுவாமிகள்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஅகஉ.

---

முப்பத்தைந்தாவது

## குருநமசிவாயசுவாமிகள் சருக்கம்.

நலஞ்சேரருணைக்குகைவாழு நமச்சிவாயர்
பொலம்போல்பதநாடவிற்சற்குரு போதம்வாய்ந்தோ
னலந்தேதில்லைக்கேகையிலம்மலை யாரமாகப்
பலஞ்சாலும்வெண்பாவொருநூறு பகர்ந்திட்டானே. (க)

அவனுங்குருவேயெனவெண்கவி யன்றோர்பாவுஞ்
சிவனன்றிமற்றைச்சிறுதெய்வமுஞ் சிந்தியான்றன்
புவனம்புகழ்தில்லையிற்போய்ப்புலி யோடெபாம்புந்
தவமுன்செயற்காநடஞ்செய்சபை தன்னைக்கண்டான். (உ)

அங்குற்றபொன்விக்கிரகத்துரு வாயமூர்த்தி
தங்குற்றதன்னன்புடைச்சற்குரு வாகித்தோற்றிற்
றிங்குற்றதனுற்பிழையின்றென வெண்ணித்தேறி
யெங்குற்றதுமோர்பொருளென்றுண ரீடேவாய்ந்தான். (ஈ)

ஒருக்காலெனக்காவின்னுமாட லுனூற்றென்னுதோ
விருக்கானுவலும்பர்முன்கண்ட தெனக்கொப்பாமோ
மருக்காலிதழித்தொடையாயென்றோர் வண்டமிழ்ப்பாத்
திருக்கால்குனித்தாடினன்மீதங்கு செப்பினனே. (சு)

அப்பாடலுரைத்தலுமவ்வம் பலத்தின்முன்னர்ச்
செப்பாலுருவஞ்சமைந்துற்ற சிவன்கலீரென்
றிப்பாருலகிற்பலர்காணுற வேநடித்தான்
பொய்ப்பாசமற்றோர்கவியாது புரிந்திடாதே. (ரு)

அதுகண்டுவப்பாம்பெருஞ்சாகரத் தாழ்ந்துஞான
மதுவுண்டவண்டாமெனத்தன்னை மறந்துவானின்
விதுவொன்றுசடைப்பெருமானருள் வென்றிதுன்றிப்
பொதுவென்றநிலைத்தலைநின்றுளம் பூரித்தானே. (சு)

மனிதத்திரளும்பலதேவரு மற்றையோரும்
கனிவிற்றுதிக்குந்திருத்தில்லையிற் காத்திருந்தான்
பனிவெற்புடையாண்மணவாளன் பகர்ச்சிதன்னாற்
புனிதத்தலம்பற்பலகண்டன்பிற் போற்றப்போனன். (எ)

போகுந்தலந்தோறுநடந்த புதுமைகோடி
யாகும்பகர்தற்கறியேனறை வாருங்காணேன்
பாகும்பழிக்கப்படுசெந் தமிழ்ப்பாண்டிநாட்டில்
வாகும்புகழுங்கொடுநீடு மதுரையூரில். (அ)

போனன்பலவீட்டினுமன்னம் புசிக்கைவேட்டுத்
தானுப்புகுந்தேற்றுமோர்சற்றுந் தரப்பெற்றில்லான்
மேனளரசாட்சிபெற்றெண்டிக்கும் வென்றுமீண்ட
மீனம்பிகைசந்நிதன்னில் விரைந்துசேர்ந்தான். (கூ)

ஆலம்புரையுங்கறுப்பாரங் கயற்கணம்மே
காலிங்கழியும்புகல்சொற்கழி யாதுகண்டாய்
சாலப்பசித்தார்க்குமின்பாலமு தந்துய்த்தார்க்கும்
போலப்பொழுதேகுமென்பாடல் புகன்றிட்டானே. (க0)

அப்பாடலுரைத்தலுமப்பனை யாருங்காண
மெய்ப்பார்ப்பனப்பெண்ணுருக்கொண்டு விளங்கிவின்னோர்
துய்ப்பாமமுதம்புரைபாலும்வெண் சோறுமீந்து
மைப்பாற்குலவுஞ்சிறுமின்னின் மறைந்திட்டாளே. (கக)

மீனக்கொடிக்காவலன்செய்ததொர் வேள்விவந்தா
டானன்னமிடும்படியெண்ணிய தன்மையாலே
மானம்மதுரைப்பதிவைகிய மாதரெல்லா
ஞானம்முனிக்கில்லையென்றோத நடாத்தினளே. (கஉ)

எந்தத்தலமுந்திருத்தில்லை யிடத்திற்கானு
மந்தச்சபையுள்ளமைந்துள்ளன வாமென்றோர்ந்து
முந்தக்குரவன்பகர்ந்திட்ட முறைவழாமல்
வந்தங்கமைந்துற்றனன்சிந்தை மகிழ்ச்சிகூர்ந்தே. (கங)

ஞானப்பெருங்கூத்தினன்பாதங்க ணண்ணலாலென்
னினக்கொடுங்கூத்துகளியாவு மிழந்துவிட்டேன்
வானத்தவரிந்திரன்மாலய னாதியோராம்
யானற்புதமீதென்றோர்பாட்டு மிசைத்திட்டானே. (கச)

குருவாய்குருவோவெனச்சொல்பயன் கொண்டதொண்டன்
பெருவாய்மைமுற்றிப்பிரமாதியர் பேசிக்கொள்ள
மருவார்மலர்க்கொன்றையன்பொன்னடி வாய்ப்புகுந்தான்
கருவாதனையென்றுசொலேழு கடலுநீத்தே. (கரு)

திடமிஞ்சியபத்தியுளார்பலர் சேர்ந்துசீர்சான்
மடமுந்திருக்கோயிலுஞ்செய்து வணங்கலுற்றார்
நடனம்புரிபூங்கழற்போற்றுநர் நாசமில்லா
ருடலும்பரமாயதென்றோதினு மொக்குமன்றே. (கசு)

சிரத்திற்குருநாமந்திகழ்ந்த நமச்சிவாயன்
வரத்திற்புவிசொல்லிடக்கேட்டன மட்டுஞ்சொன்னேன்
றரத்திற்பெரிதோங்கியதத்துவராய மூர்த்தி
சரத்திற்சுருக்கப்படமேலினிச் சாற்றுவேனே. (கஎ)

குருநமசிவாயசுவாமிகள்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - கருஉக.

---

* மதனமதுரை
ஞானமுனி } என்பன இசைபற்றி மகரமிகுத்து வந்தன.

முப்பத்தாறுவது

## தத்துவராயசுவாமிகள் சருக்கம்.

சோழநாட்டிரு வைதிகவேதியர் சொருபநிச்சயந்தன்னை
வீழவல்லவ னொருவன்றத்துவத்தையே விழைபவனொருவன்றாம்
வாழவந்ததோர் சாதியின்முறைப்படி மாமனுமருகோனு
மாழநெஞ்சகத் தாற்பெரிதுழைத்துமெய் யருளடைந்திலர்மன்னோ. (க)

குரவன்றன்னருள்பெறினன்றியாதுங்கை கூடிடாதெனத்தேறிப்
பரவைஞாலமேற் றெற்கினும்வடக்கினும் பறிந்தனரிருவோரு
முரமொடப்பய னொருவனுக்கெய்தின்மற் றொருவனுக்குபதேசங்
கரவிலாதுசொற் றிடுதலேகடனெனுங் கட்டுரைகுறிக்கொண்டே. (உ)

இருவர்தாமுமஃ தெய்தினுமெய்திடா திடையினும்வழக்கின்றென்
றொருவர்சொல்லவும் வேண்டுமோதென்றிசை யுறுஞ்சொருபானந்தன்
மருவுஞாழலங் காட்டிடையொருபெரு மாதவன்றனைக்கண்டு
திருவருட்செய லடைந்துபோயினவழி திரும்பிவந்தனன்மன்னோ. (ங)

மற்றைத்தத்துவ ராயன்வேங்கடம்வரை வருந்துபுநடந்தேகி
யொற்றைநாளினுந் தனைத்தடுத்தாள்பவ னொருவனைக்காணு
வற்றைநாள்பிரிந் திடும்வயினடைதலு மவனொருமுனியாகிக்
கற்றைவார்சடைத் தம்பிரானெனத்திகழ் காட்சிகண்டடிவீழ்ந்தான். (ச)

அம்மலைக்குழுத் தரத்தினுமவன்செலா மையினிமித்தமதோதிற்
றம்மதன்றிய கலையினம்பயில்வுறு தானமென்றிடலோர்ந்தே
செம்மவாவறத் துறந்தமாமுனிவனத் திறமிவனையுஞ்சேரக்
கைம்மலர்ச்சிரத்தமைத்தொருமொழிசொலிக்கடாட்சமுஞ்செய்தானே.

சொருபனாகிய குருபரனநுபவந் துகளிறத்துவராய
னிருதயத்தினு நிகழ்ந்ததாலுவகைவா ரிதியின்மூழ்கினரானர்
சருவகாரண மானமனோலயந் தனைக்குறித்திலராகி
யருமைநூல்வழி பிதற்றும்வாய்ஞானிகட் கத்தனைபாடின்றே. (சு)

சீடனுமவன் செந்தமிழ்ப்பெருங்கடற் சீர்முழுதறிந்துற்றும்
பாடல்விட்டன னிராப்பகலநுபவப் பழக்கமேசெயலானு
னீடறிந்தில ரவனையத்துவிதியே யென்னினுங்குருபத்திப்
பீடனந்தமை யுணர்ந்தவர்சமரசப் பிடிப்பனென்றிசைப்பாரே. (எ)

குரவன்பத்தியிற் சிரியரளவிலார் குவலயத்தவிர்ந்தாலுங்
கரவினெஞ்சுடைத் தத்துவராயனைக் கடுப்பவரிலர்மெய்யே
யரனுமாயனு மயனுமற்றையவினோ ரனைவருமவனேயென்
றிரமுற்றேனது வேமறைத்துணிபுமாஞ் சிறியவருணராரே. (அ)

அந்தகைப்பெருஞ் சீடனுமவன்முனா ளறிந்துவப்படைந்திட் ட
முத்தமிழ்ப்பயன் வீண்படாநிமித்தமே முதிரருள்வடிவான
வுத்தமக்குரு வவன்றன்மேற்சினஞ்செய வுன்னினனிடங்காணான்
சித்தமுற்றொருப் படுமவர்தம்மிசைத் தீங்கெவர்தெரிவாரே. (௯)

கருமவாதிக டருப்பணஞ்செயத்தகு காலமத்தனையுள்ளா
மருமையாமமா வாசையிற்றயிலமிட் டாடல்வேட்டனனாசான்
வருநனாளிது வெனச்சொலத்துவக்கிய மாவெனச்சொலிவிட்டான்
றருமமியாஞ்சொலன் முறையலவெனுமதி நதியில்வந்ததனாலே. (௧௦)

கழறுமம்மொழி வினவலுங்காலமுங் கருமமுங்கடந்தேன்பால்
விழலைநேரவற் றினைக்குறித்தரைமொழி விளம்பினைநின்ஞானத்
தழகுநன்றுநன் றினியென்முனிற்கொணா தகன்றுபோகுதியென்னத்
தழலைநேர்கொடுஞ் சினத்தர்போற்பேசினன் சற்குருபரன்மாதோ. (௧௧)

சீடர்தஞ்சிகா மணியதுவினவியுந் தெண்டனிட்டுடனீங்கிப்
பாடனெஞ்சுதூ தாம்வகைதொடுத்தலைப் பரவையில்விழப்போனான்
கூடவுற்றவர் களிலொருவனைவிடுத் தருட்குருவவன்றேகம்
வீடலெய்துமு னியாமழைத்தனமென விளம்பிமீட்குதியென்றான். (௧௨)

அவன்சென்றாழியி லிறங்கிநீர்கழுத்தள வாம்வரைபொறுத்தன்னோ
னுவந்துன்றேசிக னுனையழைத்தானென வோதலுமுடன்மீண்டு
கவன்றுபெண்மட லேறுவதாப்புதுக் கவித்தொடைதொடுத்தேகிச்
சிவன்றனைப்புரைந் தமர்சொருபானந்தன் சேவடிபணிந்தானே. (௧௩)

பணிந்தசீடனைக் குருபரனணைத்துநின் பாடல்கள்பார்மாதுக்
கணிந்தபூணெனத் திகழ்தரும்பொருட்டினை யலக்கழித்தனன்கண்டாய்
துணிந்தநீயினுஞ் சிலகவிப்பனுவல்கள் சொலிமுடிக்குதியென்றான்
றணிந்தசிந்தையோ டவனுனதாணையிற் றவறிடேனெனச்சொல்லி. (௧௪)

பரணியோரிரண் டொடுபலவிதம்படு பாடுதுறையுநல்ல
பிரமகீதையா தியசிலநூல்களும் பேசுபுமுடித்திட்டா
னரவநேர்சில புலவராயிரங்களி றடுந்திறமையுமுன்றன்
குரவனுமெதி யுளன்கொலோபரணியேன் கூறினையெனக்கேட்டார். ()

கேட்டபாவலர்க் கம்முனியென்குரு கிளர்களிற்றினங்கொல்லான்
வேட்டநெஞ்சக மாமதமாப்பல விழிமலர்கொடுகொல்வான்
வாட்டடங்கைவீ ரரிற்கடையேயென மதிக்குநீரவன்வந்தாற்
கூட்டமோடுயர் நிருவிகற்பப்பதங் கொளச்செய்வானிசமென்றான். ()

அன்னவாசகங் கேட்டலுமதுநிச மாமெனிற்சொலலாகு
மென்னவக்குழாத் தினரவனுடனெழுந் தேகினராங்கேகு
முன்னமக்குரு வுணர்ந்தவர்தம்மிசை முண்டகக்கட்பார்வை
துன்னநோக்கின னோக்கலுஞ்சீடன்வாய் சொன்னவாறிருந்தாரே. (௧௭)

எழுதுசித்திரக் கூட்டமொத்தங்கவ ரிருந்ததாலவர்ச்சேர்ந்தோ
ரழுதுநெட்டுயிர்த் திறந்தனரோவென வையுறீஇத்துயர்ப்பட்டார்
பழுதுறுத்தவ மெத்தனைபிறப்பினிற் பரிந்துசெய்தனர்கொல்லோ
முழுதுமாகியொன் றேனுமாகாநிலை முன்னுமுனடைந்தாரே. (கஎ)

எந்தச்சித்தியு மிதயமதனையடக் கிடுதெலிற்கடையென்ன
முந்தச்சிற்சிலர் நூல்சொலுமவ்வழி முயல்பவர்களுமோர்வார்
மந்தப்பக்குவ ரறிந்திடார்தத்துவ ராயனவ்வலியோடு
சந்தப்பாவனை தெளிதருபுலமையுந் தலைக்கொடுதிகழ்ந்தானே. (கஅ)

தனதுசற்குரு வாஞ்சொருபனையவன் றன்குருவொடுபொடி
யனைகமெய்ப்புக ழுறச்செய்தானவன்பக ருந்தமிழ்க்கவியின்றேற்
பனகபூபதி தலைச்சுமையாகெடும் பாரினிற்பலர்தாமு
மினதன்மைக்குரி யாரென்றவ்விருவரோ டிவனையுமியம்பாரே. (உ0)

மகர்க்குப்பேரிடு வார்பலருலகினில் வழுவிறத்துவராயன்
றகப்பனோர்குரு தந்தையாகிமுழு தாதைக்குப்பெயரிட்டா
னுகப்பவேமுதற் சிவப்பிரகாசனென் றுள்ளவாறுணராதார்
சகத்திற்பின்றமிழ்ப் புலவனுநிகழ்ந்தவன் றானெனமருள்வாரே. (உக)

முந்துநாள்சொரு பானந்தனுய்வுற மொய்த்தஞாழலினின்று
வந்துபோயவன் குலமுறையாதிய வகுத்துரைப்பவரின்றே
யிந்துசேகரன் மாலயனுதிய ரினத்தொருவன்றானே
யைந்துவெம்புல னடக்கியுய்ந்தவரினத் தொருவனேவருள்சான்றே. ()

சொருபன்றன்றிரு வருளினல்விகற்பமில் சுகபதமடைந்தோரைப்
பொருவிலாச்சக சநிலையில்வரும்படி பொருந்தினனேமீட்டா
னொருசில்லோர்துற வடைந்தவரொருசில ருலர்புளிப்பழமொத்தார்
திருபர்தம்மினு ஞானிகண்மேலெனு நிசம்விளங்கியதன்றே (உ௩)

பத்திவேறுமெய்ஞ் ஞானம்வேறெனப்பகர் படிற்றுரைப்பலமூடர்க்
கித்திறத்துயர் தத்துவராயன்ற னியற்புலமையுமோன
சித்திநல்குசற் குருவிசுவாசமுந் தெளிவுமெய்தரிதேயா
மெத்திறத்தெது மாயையான்பிரமமென் றியம்பன்மிக்கெளிதாமே. ()

யான்பரம்பொரு ளொன்றுசொல்லினுங்கதி யெய்தலாமெனுநூல்க
டாம்பயின்றிலன் போலுமத்தத்துவ ராயனுந்தவசீலன்
கான்படர்ந்தகொன் றைத்தொடைச்சிவனிகர் கருணையங்குருமூர்த்தி
வேன்படுஞ்சினஞ் செயல்பொருதலைக்கடல் வீழ்ந்திடச்சென்றானே. ()

சொருபன்போல்பவ னல்லனேயென்னினுந் தொடர்ந்தொருசொற்சொன்ன
குருவைத்தெய்வமென் றுணர்பவனெண்ணங்கள் குறைவறநிறைவேறு
மருவமேபர மெனத்துணிவார்கட்கு மதுபெருந்துணையேயாம்
பருவமெய்துமுன் பிஞ்சினிற்பழுத்துப்பாழ் படுமவர்பலரம்மா. (உகூ)

துவிதமத்துவி தமெனப்போராடுநர் தூயமெய்யுணர்வில்லா
ரெவிதத்தாயினுஞ் சித்தியுமுத்தியு மெய்தலேகுறியர்கு
மவிதத்தன்னவன் றன்னையத்துவிதியென் றறைபவர்பலரேனுந்
தவிதத்தீர்தரு குருபத்திமிகுதியாற் சமரசியானனே. (உஎ)

பண்ணனிமந்நகான் மறைப்பொருட்குரியபார்ப் பனக்குலமகவாகித்
தண்ணளிச்சொரு பானந்தற்கடிமையாந் தத்துவராயன்று
னெண்ணமிக்கவே தாந்தசித்தாந்தவாழ் வெய்தியதரிதன்று
வண்ணநாவலர் தங்களிலொருவனும் வாழ்வுறல்வியப்பாமே. (உஅ)

சொருபனென்றசற் குருபரன்கழிக்கருந் தொம்பதங்கடந்தப்பா
லருவமாம்பரத் திடைக்கலந்திட்டதுண் டதன்வகைவினவில்லேன்
பொருவிறத்துவ ராயனாகியதமிழ்ப் புலமைசான்முனிவீட்டின்
மருவலுற்றநா ளவனுடல்சமாதியில் வாய்ந்ததாப்பகர்வாரே. (உகூ)

தண்டமிழ்ப்பெருந் தகவுடைத்தத்துவராயனுங் குரவோனு
மண்டகோடியுண் டவிர்தருமகண்டமூ டடைந்தவாறுரைத்திட்டேன்
றெண்டனிட்டதொண் டருக்கெலாம்வீடரு டிருச்சிற்றம்பலநாடி
கொண்டதாஞ்சரித் திரமுங்கேட்டளவினிற் கூறிடத்துணிந்தேனே. ( )

தத்துவராயசுவாமிகள்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - கஙெகூ.

---

## முப்பத்தேழாவது
## திருச்சிற்றம்பலநாடிகள் சருக்கம்.



வளநாட்டொரு சைவவேளாளன் மகத்துவம்பெறு குருத்துவம்வாய்ந்தோ, னுளதன்பன்னியோ டருந்தவமுயன்றிட் டோரிரண்டுபாலகர் தமைப்பயந்தான், பளபளீரென வெயினிலவெறிக்கும் பரிதியும்பனிமதியமும்போல்வார், களவின்ஞானமுஞ் சித்தியுமெய்துங் காரணந்தனைக் கருதினொந்தனரே. (க)

சீர்த்ததாங்கழ் முயற்சியாதென்னிற் றெய்வசிந்தனை யேயெனத்தேறிக், கூர்த்தவேலனை மூத்தவன்கருதிக் குறிக்கொண்டானிளங் கோக்கசிறனையான், றார்த்தராகிய சாரணர்க்கெமனுத் தோன்றியேபெருஞ் சோதியிற்கலந்த, * மூர்த்தநாடுபு நனிமுயன்றிட்டான் மொழியுபாசனை முதிர்ச்சியெய்திடுநாள். (உ)

செந்தின்மாநகர்க் கேகினன்முன்னோன் றேசிகோத்தம னுக்குகன்விழிமுன், வந்தியைந்தமெய் யருட்பயனளித்தான் மகிதலத்தரும் வானநாட்டினருஞ், சிந்தியாவொரு நாமமன்னவற்குத் திருச்சிற்றம்பல நாடியென்றளித்தார், முந்தியன்னையுந் தந்தையுமிடும்பேர் மொழியக்கேட்டிலன் மூதுலகினரே. (௩)

---

* மூர்த்தம் - திருஞானசம்பந்தமூர்த்தி.

இனையன்கண்ணெதிர் காழியர்பெருமா னெழிலுருக்கவர்ந் திட்ட செஞ்சோதி, வளைகுலாஞ்செவிக் கோலநீத்தந்த மைந்தன்றன்னுரு வே கொடுவெயன்கித், தளையையன்னமற் றையநிலையாவுந் தணந்துதத்துவா தீதமாஞான, விளைவுங்கண்ணுடை வள்ளலென்பெயரு மேவநல்கலின் மிகமகிழ்ந்தானே. (ச)

அந்தஞானசம் பந்தர்தங்கூட்டத் தவரிலுற்றவ னிவனென்பாரது பொய், பிந்தவந்துபா சித்தவன்முனே பேசுமன்னவன் பிரியநூலொன் றுட், பந்தமற்றபட் டினத்தடிகளையும் பழுதில்பத்திர கிரியையும்பகர்ந் தா, னிந்தஞாயநன் குற்றுணர்வார்க்கே யென்சொன்மெய்ப்படு மேனை யர்பலரே. (ரு)

சமணரைக்கழு வேற்றுநீரென்னச் சாற்றும்பட்டினத் தடிகளையத ற்கா, விமலனைத்துதித் தரின்முந்தினரா விளம்புவார்மொழி யதுவுமெய் யாமோ, தமயன்றம்பியென் றிருந்தவவ்விருவர் தம்மின்மூத்தவன் றன் னிடமிளையோன், சிமயவில்லினன் சமயமாஞ்சைவ தீட்சைபெற்றதாற் றெளிந்ததுண்டம்மா. (சு)

அருள்பெற்றுற்றவ ரிருவரின்முன்னோ னடுத்ததொண்டருக் கவர வரடையும், பருவங்கண்டுப தேசஞ்செய்திருந்தான் பகருமற்றையன் பழையசாதனமுற், றொருவிஞானமொன் றேயுரைத்தளவி லுறுகணீந் தன னுணர்ந்துமுன்னவன்பின், வருமவன்றனைத் திருத்தியுமவனவ் வம் புசெய்திடன் மறந்திலனன்றே. (எ)

அதுகண்டென்னெதி ரினிவரேலென்ன வண்ணன்சீறின னவனு முட்சினங்கொண், டிதுநின்றீட்சையின் குறியினிவேண்டே னெனக்கை ப்புண்டரங் களிற்சிலவழித்துக், கதுமென்றேகுபு காவிரியாறு கடந்திட் டானுடன் கண்ணுதற்பெருமான், விதுவொன்றுஞ்சடை விட்டிழிந்தாங் கே வெள்ளமங்கதி மேற்பரந்ததுவே. (அ)

வெள்ளங்காண்டலுந் தன்னதான்மார்த்த விமலன்மேயபெட் டக த்தின்மேல்விழைவுற், றுள்ளகொந்துபோற் றிசைத்தனனதுதா னூர்ந்து நீந்தியங் குற்றதுகண்டோர், வள்ளனீர்மையித் தகைத்தெனவண்ணன் மாட்டுரைத்தலு மற்றவன்வியவா, தெள்ளறீரவைந் தொழிற்செயும்பரம னிதுசெய்திட்டதோ ரேற்றமன்றென்றான். (கூ)

சரியையாதிய சாதனமூன்றுந் தவறுஞானதத் துவநிலையொன்றே, யுரியதென்றுதன் றொண்டர்கட்கெல்லா முரைக்கின்றோன்சிவ லிங்க மொன்றிடத்திப், பிரியமுற்றவா றென்னெனவியந்து பேசினர்பலர் சிலர் பெரியோனே, யரியசற்குரு நாதனென்றடைந்தா ரவனண்ணுமலைக் கரு குபோயினனே. (கo)

உற்றகண்ணுடை வள்ளலங்கொழிவி லொடுக்கமென்றொர்நா லு ரைத்தனனுறுதி, முற்றமைந்தவர்க் கினியதேதவத்தின் முயல்கின்றோ

ரிகழ் முழுவிரோதமதே, சொற்றமெய்ப்பொருள் சமரசமெனினுந் துவி தகண்டனர் துணைக்கொளுந்தகைத்தே, செற்றமிக்கவ னழித்தவெண் ணீற்றின் சீரும்பாரினிற் சிலர்தழுவினரே. (கக)

அவன்றனுதுதொன் மரபினுக்குரிய வங்கமாயிருந் தடைந்தவனு கஞ், சிவந்தீயில்வெந் தேயொழிந்திருக்குந் திருச்சிற்றம்பல நாடியென் பவன்ற்ரு, னுவந்தெணெண்மரோ டையமேற்றருந்தி யுடலிறந்தொழிந் திடிற்றெருடற்குலகோர், கவன்றிடாதிழுத் தெறிந்திடக்காலிற் கயிறுங் கட்டிபு களித்துலாவினனே. (கஉ)

குரவன்றன்னெடைக் குழுவினர்தம்மைக் கூட்டித்தம்மனைக் கொண்டு போயொருவர், பரவியன்னமிட் டிடிலொருங்கயில்வார் பலதினத்தது பலிப்பதின்ற்ருமா, லரனிலோடுகொண் டிலந்தொறுமேற்றேற் றயில்வ தேதொழி லாயினரொருநாள், கரவிலாவொரு வன்பெருமுயற்சி கைவந் தன்னவன் கடிமனைபுகுந்தார். (கங)

பாதபூசைசெய தரம்பைநெட்டிலைகள் பரப்பியுப்புமுற் பகர்பலநி றைத்துச், சாதமுந்துவ ரையினதுபருப்புந் தக்கவாறிட்டுத் தனைமறாத வனுப், போதநெய்யென வேம்பதன்றயிலம் பொருக்கெனப்படைத் தா ன்மனைப்பூவை, யீதமைந்ததா னத்ததுமதுவைத் திருந்ததானத்தி லிது வும்வைத்தலினே. (கச)

வஞ்சமொன்றறி யாளவள்செங்கை மாற்றிவைத்தது மரன்றிருவரு ளா, லெஞ்சல்கூடுத லின்றியேசமமா யிலங்கிடுங்கல சங்களுமாகி, லுஞ் சல்போன்றசை தரக்கயிற்ருற்செ யுறியின்மாறுத லொருவியப்பன்றே, நஞ்சமுண்டவ னடியரீதுண்கை நவையன்றென்றுசொனரருமுள்ளாரே.

அன்னமுண்பவர் களிற்சிலர்சிறிது மறிந்திடாதுற்ற ரருள்வசத்தி னரா, யின்னவாநடந் திட்டதென்றுணர்ந்து மியம்பொண்ணுதென வே சிலரயின்ற்ரு, ரென்னனுநெரு பக்குவக்குறைவோ னீதுவேயென விசை த்தடங்கினனுற், பின்னரவ்வித மிட்டவரறிந்து பெரிதுவாடலே பேச ருங்கொடிதே. (கரு)

ஒற்றைக்காலினிற் பழுதைகட்டினரா வுலவுமாறுபத் தோடொரை ந்தவரு, மற்றைப்போதொரு சூழலிற்கூண்டுற் றதுபவத்திற மவையுசா வியபி, னிற்றையங்குவே யென்றவன்வருகென் றிணையில்சற்குரு வியம் பலும்பணிந்தான், பொற்கறவில்விதன் றில்லையில்வசிக்கப் போதியெம் மிடைப் புகறகாதென்றும். (கள)

ஆலயத்தினிற் பத்திசெய்தற்கே யருகனென்றுமங் ஙனஞ்சினுள் செய்தாற், சீலமெய்துவை யென்றுநன்கோதித் திருவெணீறளித் தனுப் பினன்சென்ருன், பாலருத்துதாய் நீத்தலின்மேய்வான் பசும்புற்காட்டு றும் பசுவின்கன்றெுத்தான், கோலமாதிய வொன்றுநீக்கானுக் குருவுந் தெய்வமு மொன்றெனக்குறித்தான். (கஅ)

அகத்தின்பாவனை யேயெனப்பலவா மநுபவங்கள்கண் டார்வமிக் கடைந்தும், சகத்தின்மானிட ரியாவருங்காணத் தக்கசற்குரு சந்நிதியி டஞ்சேர்ந், துகப்பதேபய னெனவிழைந்துழைத்தா னுண்மைக்குண்மை யுண் டெனுமுறைப்படியே, தகப்பன்றாய்புரை யுரித்துறுமவனுந் தனது நெஞ்சினோர் சார்பினேந்திருந்தான். (கக)

அத்தகைத்திருச் சிற்றம்பலப்பே ரடிகளோர்தின மறுபத்துமூன் று, பத்தர்தம்முடன் விழியெதிர்கண்டார் பலருங்கைதொழும் படியினி தேகிச், சித்தகாட்டுறு மொருசெல்வன்றன்பாற் சேரயாமெலாஞ் சிவகதி யடைவே, மித்தரைக்கனை ண் ணெண்குழியமைத்திட் டிலிங்கத்தாபன மியற்றுகென்றானே. (உ0)

அவனவாறவ ணிசைத்தலின்முதனு ளம்பலத்தர னத்தனித்தொ ண்டற், கிவணமாய்கியல் கின்றதுபோகென் றிசைத்திட்டானவ னெழி னடைகொண்டா, னுவகையார்தரக் குருமற்றோர்தம்மை யொவ்வொரு த்தரா வொவ்வொருகுழியுய்த், தெவளவேற்றந்தாழ் விருப்பினுஞ்சமஞ் செய் தேகமாகத்த னிடங்கலந்தானே. (உக)

தனித்தசற்குரு வுள்ளதோர்குழியிற் றனிருந்துமுன் றன்சொலாற் றில்லை, யினிற்சென்றோனையுங் கூட்டிலமிந்நா ளிவர்க்கெலாந்தகு மிதஞ் செய்தேற்றனமே, தொனித்தவார்கடற் புவியிகழாதோ தொண்டுகொ ண்டொர்சொற் சொன்னதுண்டன்றோ, வநித்தங்காட்டநம் முறைப்படி பழுதை யணிந்ததும்பொயோ வெனவழுங்கினனே. (உஉ)

அக்கணத்தவ னங்குவந்திறைஞ்சி யாண்டசற்குரு வாஞ்சிற்றம்பல வா, மிக்கநீயடி யேனொருவனுக்கா மீண்டுமீண்டெழுந் தருளவேண்டா வோ, சக்கராயுத னுன்முகனறியாச் சச்சிதானந்த சாகரந்தன்னிற், புக்க தோடது வாயெனைவையாப் போதென்றோர்தமிழ்ப்புதுக்கவிபகர்ன்றான்.

அதுவினுவலும் வருகெனவழைத்தன் னவனைத்தன்றுடை யாம்வ யினிருத்திக், கதுமென்றேயவ னுவியுந்தன்னுட் கலப்பக்கொண்டுதெண் கங்கையுங்கவின்றோய், விதுவுஞ்சூடின னருளிடைத்தான்போய் விரவ லுற்றனன் விண்ணவர்தாமுஞ், சதுமுகத்தயன் மரபராமுனிவோர் தா முமவ்வியன் சாற்றினரன்றே. (உச)

குற்றவாளியென் றகற்றிடப்பட்டான் குறித்தபாட்டுடன் கூறினனு ளுன், மற்றமாதவர் கல்வியின்பெருமை வகுக்கவேண்டுங்கொ லோவ கையறியேன், பற்றறுத்துவீட் டுறச்செயுநூல்கள் பலசொன்னுரெனப் பார்சொலும்பாச, மற்றஞானசிற் றம்பலநாடி யகவலொன்றுமிக் கவிர் தரலுளதே. (உரு)

ஒன்றுங்குற்றஞ்செய் திலருடலெல்லா மொவ்வொர்தானத்திற் றனி த்தனியுறவு, முன்றுங்குற்றஞ்செய் தவனுடலாசா னுகந்தனுட னனைக் துறும்வியனு, நன்றுடைத்தவ ரேயறிகிற்பார் நானுணர்ந்தமை நவின்றி

டவேண்டின், மன்றுடைப்பிரா னருள்பெறுமவர்க்கெவ் வாழ்வும்வந்து றும் வழியெளிதாமே. (உசு)

பஞ்சகிர்த்திய நடம்புரிகின்ற பரமன்மெய்யருட் பயன்கொண்மேல வர்க்குத், தஞ்சமத்துவத் துயிர்களின்கரும சாலந்தீர்தரத் தமிழ்கலந்த வன்றன், றஞ்சநாண்மலர்ப் பதத்தபேதமதாக் கலக்கும்வண்மையுங் கை வருமாகி, லஞ்சன்வேள்சம னுதியர்ச்செகுப்ப தருமையாகுமென் றுர் பகர்வாரே. (உஎ)

செந்திலான்குரு வாதலிற்றெளிந்த திருச்சிற்றம்பல நாடிகள்சரிதம், புந்தியாற்பெரி யாருணர்ந்துவக்கப் புவியிற்கேட்ட வாபுகன்றனனினி மேன், மந்திரேசிளம்புலவருக் கெமன்போல் வயங்குமாண் புடைச்சிவப் பிரகாசன், றந்தியீருரி யான்றிருவருளாற் றவம்பெற்றுய்ந்தமை சாற்ற லுற்றேனே. (உஅ)

திருச்சிற்றம்பலநாடிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஙஅஎ.

முப்பத்தேட்டாவது

## சிவப்பிரகாசசுவாமிகள் சருக்கம்.

செந்தமிழ்த்தேயத்தினிடைத் திகழ்தருபற்பலவூரி
லெந்தநகரத்தினிடை யிருந்தோவோர்வேளாளன்
முந்தவயனரிசெயும்போர் முடிவுபெறச்சிவன்மலையா
வந்தவருணையின்சேவை வாஞ்சைகொடுபுறப்பட்டான். (க)

பரிசனங்கள்சிலசூழப் பண்டியிற்பல்பண்டங்கள்
விரிவினைக்கொண்டுள்ளபல விடுதிதொறுமிருந்தேகிப்
பிரியமுறுதலங்காணப் பெறுந்தினத்திற்றன்பூசைக்
குரியசிவலிங்கமுறு மொருபெட்டியினைக்காணன். (உ)

அங்கிருந்துமுன்னிரவி லமர்விடுதிக்காளனுப்பி
யிங்கியலப்பெற்றிலனே லிவ்வுடலிலென்னுவி
தங்கிடவாழ்கிலனென்னுந் தனிவிரதங்கொடுநொந்து
சங்கியல்காதுடைப்பெருமான் றண்ணருளால்வரப்பெற்றான். (ஙு)

அன்றுபசிப்பிலதாலு மான்மார்த்தமிழந்ததனுற்
றன்றுபெருஞ்சோர்வாலுந் தூலமுதிர்ச்சியினாலும்
பொன்றுநாரிற்கிடந்துருண்ட புண்பாடுதெரியாதார்
சென்றுதிரும்பாதாளேன் செல்லவிட்டானென்பாரே. (ச)

போனவுயிர்மீண்டாங்குப் பூசனைப்பெட்டகம்பெற்றோன்
றானடைந்தசுத்தசைவத் தன்மையினைத்தணந்தப்பால்
மானமலிவீரசைவ மார்க்கமேவலிதாமென்
றீனமுறக்கழுத்திலிலவ் விலிங்கமதைதயணிந்தானே. (ரு)

சுத்தசைவமுற்றியதாற் றுடியாயவீரசைவத்
தெத்தனையோமேலோர்புக் கிடேறினுரென்பா
ரத்தகையநெறிநீங்கி லாசாரவீனர்களாய்ப்
புத்தர்முதலினர்போலப் புலைத்தன்மையடைவாரே. (௬)

பெட்டகத்திலிங்கமதைப் பேணியணிந்திடன்மேன்மை
கட்டலவிழ்த்தோரிலங்கன் காத்தவர்களிலரோயாங்
துட்டர்பலர்தரித்ததனைத் துறந்துசமன்றாதர்களா
னட்டமிகத்தோய்ந்தெரிவாய் நரகில்விழுவுளதம்மா. (௭)

அச்சைவனன்றுமுத லடல்வீராகமியாகி
மெய்ச்சைவசித்தாந்தர் வியந்திறைஞ்சும்வீறெய்திப்
பொய்ச்சைவருவருப்போர் பூசைப்புனைந்தவிர்ந்தா
னெச்சைவர்களுநீறக் கிலிங்கமுடையவர்தாமே. (அ)

தன்னினத்திற்சிலர்தன்னைச் சார்ந்திலிங்கதாரணராய்
மன்னிடவும்பெறுமந்த மாபுருடனில்லறத்திற்
றுன்னிமகிழ்ந்திடுநாளிற் றுலங்குசிவப்பிரகாச
னென்னியற்பேருறுபுதல்வ னியானையெனப்பிறந்தானே. (௯)

பின்னுமிருமகர்கருணைப் பிரகாசனென்றுமெழின்
மன்னுபுகழ்வேலனென்றும் வந்துபிறந்தனரப்பாற்
பொன்னுறழுநலம்வாய்ந்த பூவையொருத்தியும்பிறந்தா
ளின்னுரையார்நால்வர்களு மினிதுவளர்ந்திடுநாளில். (க0)

தந்தைசிவகதிசேர்ந்தான் றுயருநான்மக்களுமோர்
நிந்தையில்லாவாழ்க்கையராய் நிலவுகையின்முதன்மைந்தன்
சிந்தையிடங்கோயில்கொளுஞ் சிவனருளாற்செழுந்தமிழில்
விந்தைமலிகவிபாடும் விரகினுமிளிர்ந்தானே. (கக)

கைத்தலத்துமார்பகத்துங் கவின்றந்துகதிசேர்க்கு
மத்தனெனுமிட்டலிங்கத் தபிடேகமாலைமுதற்
சித்தமதிற்றோற்றியவா சிலபனுவல்வனைந்திட்டான்
புத்தமிழ்தொப்பாஞ்சுவையும் பொருட்பொலிவுமுறும்படியே. (கஉ)

அழுக்காறுமலிகவிஞ ராம்பலர்நெஞ்சஞ்சாராய்
வழுக்காண்பார்போற்பெரிது வாதுசெயுந்துயர்தீர
முழுக்காதலுற்றதனுன் முதுநூல்செகல்விதிகூறு
மொழுக்காளர்களிற்சேர்த்தோ னுளனெனக்கேட்டுணர்ந்தேகி. (கங)

திருநெல்வேலியின்கீழ்பாற் சிந்துபூந்துறைமடத்தின்
மருவும்வெள்ளியம்பலவா ணப்பெயரோன்வார்சடையா
னருள்பெறுவார்நூறெழுறுந்தா னறைபாக்கள்கலந்ததனு
விருநிலத்தோர்வெள்ளியென வியம்புமண்டையாளமுற்றோன். (கச)

இலக்கணநூற்றிறந்தருவா னெனநம்பியவனிலிங்க
மலர்க்கரத்திற்கொளும்போது வணங்கினன்மற்றவன்றான்
கலக்கமுறேனின்னெறியே சடைப்பிடித்துக்கோடியென்று
துலக்கமுறச்சொல்லியவன் சூழ்ச்சிமுற்றுமுணர்ந்தப்பால். (கரு)

வேறு.

தனன தனதன தனதன தனதன.

குகரமுதலொடு கடையினு மமையவொர் குறியகவிபக ரெனவவ னுவலலு, நிகரில்பரிதியி னெயிறுகொள் பவனட னெடியனெனுமொரு * கிரியெயி றணிபவ, னிகழ்வில்வடதிசை புகுவளி யிரதன திகலனவன கர் புலிசைந லுடையதள், ககனமிசையினும் வருபரி விடையெனொர் கவிதைதனைவலி யொடுகெழ றினனரோ. (கசு)

கழறுமதுவின லலுமதி மகிழ்வொடு கலசமுனிவன தடியரின் முத ன்மைய, னழகுபெறமொழி தருவிதி முழுமையு மமையவுதவின னவை கவர் தலுமுள, பழமையினரறி வரியன சிலபொருள் பகர்தலிசைதலி னவன்வியன் முழுகினன், மழலைமொழிபகர் மதலைத னிலுமுயர் மதி யெய்தலின்மகிழ் வுறுமர னிகரவே. (கஎ)

அரனொரவுணனை யடும்வகை முருகனொ டறைதல்புரையவ னவ னும மகனுட, னுரமொடெனையிகழ் தருமொரு கவியுள னுவனுளகமழி வுறுதல்செய் தகல்கென, வரதனடிதொழு தவனது தினமுறும் வயினெ துரையென வவனலை யெறிநகர், மரகதமலையை நிகர்மயி னடவுநன் மரு வுதலவகை களில்வலி தெனலுமே. (கஅ)

உடனவியல்வல னவனிட மணுகியெ னுடனினுரவலி யுளவனை யிகழிதி, திடமல்கிடுமொரு பனுவலும் வன்குதி சிறிதெனிலைதெரி தர வலை குவனென, நடனமயிலுட னயில்கொளு மவன்மிசை நகுமதர முயல் வனுவள வுமிலது, படபடெனவிரு பதொடொரு பதுகவி பக ரும்விரைவினி லவன்மிக வெருவியே. (கசு)

உனதுவலியள வெனதிட மிலையிலை யுரைசெய்திடும்வழி நடைகொ ள்வ னெனலும, வனகனெனதொரு குருவுள னவனிணை யடிகண்முடி மிசை யணிகுதி யவன்மிசை, முனமெய்தியபகை யொழிகுதி யெனறு வன் முறையிலொழுகினன் முனிகளி கெடுதனி, மனதுகுளிர்தர விடை யுத வினனனை மகரொடுறும்வயின் மருவினன் விரைவிலே. (உ0)

வேறு.

கல்வியின்பொலிவார்சிவப்பிரகாசன்கவிமழைபொழிதருகார்போற்
பல்விதத்தலங்கடொறும்பலபலவாம்பனுவல்கள்பாடிபுபடித்து
நல்வினைத்துணைவராமிருவருக்குநறுந்தமிழ்ச்சுவையுறக்கொடுத்துச்
செல்விகேரிளையாட்சாந்தலிங்கப்பேர்ச்சீரியன்மனைவியாச்செய்தே. ()

* கிரி - பன்றி.

சிற்சிறுள்கழித்துத்தாய்சிவஈதியிற்சேர்ந்ததற்காவனசெய்து
நற்சிறுதுணைவரிருவர்தம்மோடுநாடெலாமுலவிளனவைதீர் [யு
பொற்சிலைக்கரத்தானனையவேமளன்றன்புகழ்க்குலத்தணியெனப்பொலி
மிற்சிறப்பினனண்ணுமலைப்பெயரோனிவர்கண்மூவனாயுமிச்சித்து. ()

தன்னுடைச்சுமைக ளாமெனவகித்துத் தமிழ்வலாராமவர்தமக்கு
மின்னுறழ்மருங்குற் சிறுமியர்தம்மை விதிவழிமணம்புரிவிப்பா
னுன்னுபுசிறிதன் னவருளக்குறிப்பு முணர்தரவுசாவினனவருண் [ன்.
முன்னுதித்தவனு முத்தியேகுறிக்கு மொய்ம்புடைக்களிறனுன்மொழிவா

சேய்கொண்டசுவர்க்கத் திறைவனுங்கமலச் செம்மலுஞ்சீறபையரவப், பாய்கொண்டமாலும் பரவுசீர்ப்பட்டீச் சுரத்தரனேபல வாய, நோய்கொண்டிட்டாலுங் கொள்ளலாநாளுண் டளவினுநடங்கரிதாம்வன், பேய்கொண்டிட்டாலுங் கொள்ளலாம்பெண்கொண் டிடவொணு தென்றோர்பாட் டிசைத்தான். (உச)

அக்கவியினிற்பட் டீச்சுரத்தரனை யறைந்ததன்காரணமவ்வூர்ப்
பக்கலிலங்கா ளிருந்தனர்கொல்லோ பாவையர்மயலறப்பார்க்கத்
தக்கவனந்த மூர்த்திதானென்றோ தம்மிடமம்மொழிவினவு
மிக்கவனபிமா னத்தலமதுவோ விதமிதென்றுலகர்விண் டிலரோ. (உரு)

அன்னவனப்பாட் டுரைத்திட லுணர்ந்து மவனுதித்திடுமெகட்டவற்குப்
பின்னர்வந்தவரா மிருவருமட வார் பெயருரைத்திடினுமால்பெருகு
மென்னலையவருக் கிசைந்தசிற்பனையோ டிருகவியி தந்திசைத்திட்டார்
மன்னமேனையனையாளவர்மண முடித்துமற்றவன்பந்தமாற்றனனே. (உகூ)

வெங்கையூர்க்கோவைபழமலையந்தாதிமுதலாம்வியன்கொணூல்பலவுஞ்
சங்கையில்புகழ்தோய்ந்தொலிதருசோணசயிலமாலையுமல்லமன்று [யுங்
னங்கைமாயையைவென்றடியர்பற்பலர்க்குநலஞ்செய்காவியமுநன்னெறி
கங்கையாற்றொழுகும்வெள்ளமேயென்னக்கழறுபுதிரிதருநாளில். (உஎ)

தானதத்ததன தானனந் தய்யதன.

பாலையப்பெயர்கொ டேசிகன்வள்ளிதரு
பால்குடித்துமகிழ் கூர்பவன்கையில்வடி
வேலைவைத்தவனு பாசகன்சைவர்களுள்
வீரர்கட்கொரர சாயவன்பொய்யர்சிலர்
மாலையிட்டுமண லோடுவெண்கல்லடையு
மாகுடத்தினிடை சீனிகண்டொல்வகைசெய்
தோலைபெற்றவர்செய் வேலையுங்கொள்ளுமுனி
யோதிவிட்டனனொர் பாவலங்கல்விழைவே. (உஅ)

தனனதானதன் தனனதன தானதன.

அதுவினவுதலு மனிதர்மிசைபாடுகில
னரனைமாதரியை யவர்தருகுமாரர்களை
மதுரமார்கவிகள் கொடுதுதிசெய்வேனெனமுன்
வருமவாள்வெருள வுரைசெய்தனனேடியவ
னிதுசொனனிகலு மவர்கடவிலோர்சிலையொ
டிமேனாண் *மயில மலையில்வருஞானமுனி
சதுரர்மீதமொழி தருபுலவன்மீதிலொரு
தவிடுகோர்சினமெய் துபுகுகனைநாடினனே. (௨௯)

தானதானனத் தந்தன தந்தன.

போதன்வாய்விடத் தண்டனைசெயுங்கடவுள்
பூவுநாருமத் தங்கொடவனெஞ்சினிடை
பாதசாரியிற் சென்றெனதுதொண்டன்மிசை
பாடலாகுமிக் கின்பம்வருமென்சொலிசை
யாதகோரநிற் கொன்றிவிவைகொண்டொருந
லாரமேனுநத் தும்படிவனேந்திடென
வோதலால்விழித் தங்கவனிடந்தன்மன
மோடவேதுதித் தொஞ்சுபுநடந்தனனே. (௩0)

தந்ததந்தனத் தாத்தன தானதன.

சென்றுதெண்டனிட் டேத்துதலுமாசுதவிர்
திங்களஞ்சடைக் கூத்தனிகர்பாலையனு
நன்றுநன்றுனட் பேற்றனமெனவுவகை
நன்கடைந்தருட் பேற்றியலுமாறருளி
யொன்றுதொண்டருட் சீர்த்தபதமீகுதலு
முய்ந்தவிந்தையைப் பாத்தொடைகளாலுரைசெய்
தென்றுறழ்ந்தமெய்க் கீர்த்திகொடுமாதவசி
யென்றிகஞ்சொலத் தாட்சிகளுமேவினனே. (௩௧)

வேறு.

ஒருரின்மடமொன்றிலுறுநாளிலவ்வூருண்டக்காளிதன்
சீரூர்விழாவந்துதேருருமமையஞ்செறிந்தோர்மடத்
தேரூர்முருங்கைக்கிளைக்கொய்தடங்காதிசைத்திட்டதாற்
காரூர்களத்தான்மெயருணடியொருபாடல்கடிதோதினன். (௩௨)

தேர்வெந்ததிற்றுற்றவுருவெந்துகோயிற்றிறற்கூரைவெந்
தூர்வெந்துருத்தோதுமவர்நாவும்வெந்திட்டவுருமாரவேள்
சீர்வெந்திடச்செற்றவிழிநம்பனருள்பெற்றதெய்வீகர்தந்
நீர்வெந்தொர்சொற்சொல்லிலயனுதியோரேனுநீறுவரே. (௩௩)

* மயிலம் - சுப்பிரமணியத்தலங்களி லொன்று.

மற்றோர்நகர்க்கண்வைகறையொன்றிலாங்குள்ளமாஞ்சோலைவா
யுற்றோர்பழங்கீழ்விழக்கண்டெடுத்துத்தனுரமேவிவாழ்
புற்றோலுடைத்தம்பிராற்காகுமென்றெண்ணுபோதோர்பொலா
னெற்றோன்றுமுன்வந்ததிருடாவெனச்சொற்றெழுந்தானரோ. (௧௪)

வந்தான்மடிக்கட்கையிட்டுப்பிடித்தீர்த்துவைதானிதைத்
தந்தாலும்விடுகில்லனென்றான்வெணீறுத்திராக்கந்தவச்
செந்தானைசிவலிங்கமுடனிட்டமுனியென்றுசிறிதெண்ணிலா
னந்தாமரைத்தேவன்விதிமுற்றிடற்கீதொரடையாளமே. (௧௫)

அடுத்திட்டதொண்டன்றனக்காகவன்றந்தகற்றாளினாற்
றடுத்திட்டதுண்டென்னினின்பூசைநைவேதனத்திற்குநா
னெடுத்திட்டவிம்மாங்கனிக்காவென்மடிதொட்டவிப்பாவியைப்
படுத்திட்டபின்னென்றுவரவேண்டுமென்றங்கொர்பாட்டோதியே. ()

அத்திங்களின்சூரியன்கன்னியிற்காணலுஞ்சொன்னபின்
மெய்த்திங்கள்சூடுஞ்சடைக்கற்றையான்றன்னைமிகநாடலும்
கைத்திண்டிறற்றண்டமணியேமன்விடுதூதர்கணமங்குவந்
தெய்த்திஞ்சையுறமோதியவனுவியைக்கொண்டிரிந்தார்களே. (௧௭)

இவ்வாறவன்செய்தவிளையாடல்பலவாமெனச்சொல்வரியா
னவ்வாறனைத்துந்தெரிந்தோதிடற்கானவறிவெய்திலே
னெவ்வாறுமமர்சென்னியானன்பினாலுய்ந்திடுந்தொண்டரே
வெளவாறுசமயத்துளாருக்குமேலென்னுமாவீரரால். (௧௮)

ஏகத்துவர்க்காகும்வேதாந்தசூடாமணியுமோர்மையிற்
காகத்தினினமென்னவாழ்வார்தம்வீராகமத்துண்மையுஞ்
சோகப்பெருக்கீயுமதவாதமுஞ்சொல்லலங்காரமுந்
தாகத்துடன்பாடுமவனைத்தெரிந்தோதுதவரியாவரே. (௧௯)

அவனோடுதுணைவந்தவிருவோர்களுங்கூடியாமூவருஞ்
சிவன்மேவுகயிலைக்குநிகரானகாளத்தியின்மான்மியந்
தவசீலரொடுவல்லபுலவோருமார்வந்தலைக்கொள்ளநல்
லுவமானமுவமேயமுதலாயசீரோடுரைத்தார்களே. (௨0)

தன்றம்பிமாருக்குமவர்பின்னரேவந்ததங்கைக்குளோ
னென்றங்கியைந்தாற்குமற்றும்பலோருக்குமிவனேந்தெழுத்
தொன்றந்தரங்கத்தொடியோர்வண்டமிழ்ச்சீலமுரைசெய்யினுங்
குன்றன்னநிலையின்றொருத்தன்பெரும்பேறுகொண்டானரோ. (௨௧)

அவனத்துவிதமோதினனென்றுகளிமிக்கடைந்தேபலோர்
புவனத்தின்முயல்வார்களவனிற்றமிழ்ப்பாடல்புகல்வண்மையுஞ்
சிவனைப்பணிந்தன்புசெயுநீருமொன்றுர்ச்செறுந்தீரமுந்
தவசிற்பெறும்பேறெனத்தேறியதனூடுசொரார்களே. (௨௨)

ஏற்றாருமிறைவன்றனருள்வில்வமுள்ளாகியெழிலாருகல்
லாற்றாரிலவனைப்பதஞ்சேர்த்தநாச்சொல்வாவ்வாவியைக்
கூற்றாறுதொடராதுகதியாதுபெற்றுக்குளிர்ந்தான்கொலோ
பாற்றாயரவன்மேனியதனைத்தமுறையிற்பணிந்தார்களே. (சங)

இரகாமமுடையாரைநிகராகுமெய்யன்பர்தேருஞ்சிவப்
பிரகாசமுனிவன்புகழ்ச்சிலமொருவாறுபேசுற்றனன்
வரசாந்தலிங்கப்பெயர்ச்சீடனவனேதும்வழிசென்றதாற்
பரசாயுதத்தண்ணல்பதநீழலுறுமாறுபகர்வேனரோ. (சச)

சிவப்பிரகாசசுவாமிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ககூகக.

## முப்பத்தோன்பதாவது
## சாந்தலிங்கசுவாமிகள்சருக்கம்.

செந்தமிழ்ச்சீர்மன்னுஞ் சிவப்பிரகாசப்பெயரோன்
வந்தவயிற்றினிற்பின் வந்தாண்மணவாள
னெந்தவிதத்தாலோ வில்லறச்சீர்முற்றலுற்றுச்
சொந்தவுணர்வாற் றுறவறத்திற்றோய்ந்தானே. (க)

நற்குலத்தோர்தம்முறையி னுரிதருமைத்துனனுஞ்
சொற்குறிப்பெல்லாமுணருந் தூயபுகழ்ப்பாவலனு
நிற்குநிலைசோரா நிசத்துறவோர்சேகரனுஞ்
சற்குருவுமானான் றனைச்சார்ந்தொழுகினனே. (உ)

சின்னாளுடன்வசித்துச் செந்தமிழ்ப்பாச்செய்திறமும்
பைந்நாகம்பூண்ட பரமனருட்பாங்குந்
துன்னுமகிழ்கூருந் தோற்றமுணர்ந்தக்குரவ
னுன்னுசைக்கேற்றதல மொன்றிடைவாழ்கென்றானே. (ங)

சாலக்கருணை தழைத்தகுருதாள்பணிந்து
கூலப்பொலிவாருங் கொங்குவளநாட்டினிடை
மேலச்சிதம்பரமா மிக்கபுகழ்ப்பேரையினிற்
சீலத்தர்போற்றத் திருமடஞ்செய்துற்றானே. (ச)

தன்குரவன்போலத் தலந்தோறலையாம
லின்குணத்துத்தொண்ட ரினஞ்சூழவாங்கிருந்து
நன்குமுத்திவீட்டிலுறு நான்குபெருவாயில்களே
யென்குணங்கட்போற்றிடுநூ லீரிரண்டுசெய்தானே. (ரு)

கூசலறக்கருணை கூட்டுங்கொலைமறுப்பு
மீசனநுபத்திக் கினிதாஞ்சதகமும்பொய்ப்
பாசமுழுதும் பறித்தெறியுந்தீபமுநெஞ்
சூசனிகராட்டொழிக்கு முந்தியுமாநாற்பெயரே. (சு

அந்நூல்கடோன்றியபி னன்றதுறவோர்பலரு
மெய்ந்நூல்களென்றவற்றை வேண்டிவழக்குண்டாயிற்
றெந்நூல்கடாமு மிரக்கமுதனன்கினுக்காச்
செய்ந்நூல்களென்னத் தெளிகின்றோர்திண்ணியரே. (௭)

கொல்லாமைநாட்டக் குறித்தமுதனாலிடத்திற்
பொல்லார்களிற்றலையாம் பூருவமீமாஞ்சநெறி
யொல்லாதென்றுதுசிறி தொப்பினன்போற்செப்பியதால்
வல்லார்சிலர்தா மனத்தாபமெய்தினரே. (௮)

வேள்விப்பெரும்பகையாம் வீரசைவசித்தாந்தக்
கோள்விட்டிடாத குருவாமவனாலில்
வாள்விப்பிரர்செய்கொலை மட்டுமொப்பலேனென்னுங்
கேள்விக்கெதிர்ச்சொற் கிளத்துமாறோர்ந்திலனே. (௯)

வண்டமகஞ்செய்பனவர் வாஞ்சையிடைமூழ்குந்
தண்டமிழ்த்தேயத்துச் சனங்கள்பலவாதலினல்
விண்டதன்னூன்மாயா விதங்கருதிமீதிலொப்பிக்
கொண்டனனென்றெவ்வொருக்காற் கூறலன்றிவேறிலையே. (௧௦)

யாகக்கொலைநலமென் றெண்ணுகின்றோனுமொருவன்
போகத்தயக்கமற்றுப் போய்ப்புகுந்தொல்வீட்டினிலுஞ்
சாகக்கொலைசகியாத் தண்ணருளுற்றோனொருவ
னாகத்துடன்வீ ழளறுயர்வென்பாருளரே. (௧௧)

பெற்றதைக்கீழாக்கிப் பெறாததனைமேலாக்குங்
குற்றமுயிரின் குணமென்றோர்பாசுரத்திற்
சொற்றனனவ்வாறுபல சொற்களுலகத்தனையும்
விற்றளித்திட்டாலும் விலைமேவாவிண்டனனே. (௧௨)

எம்மதத்திலுள்ளவர்க ளெங்கிட்டைசொன்னாலுஞ்
சம்மதமேயாமெனக்குத் தற்போதமாயிலெனப்
பொய்ம்மதத்தோர்நாணப் புகன்றருளுமப்புனிதன்
மும்மதமாப்போலு முழுஞானவீரனம்மா. (௧௩)

கற்புடையமாதர்நிகர் காதலுடைத்தொண்டருண
ரற்புதச்சீர்ச்சித்தி யநந்தமாச்செய்திட்டான்
புற்புதநீர்வாரிபுனை பூமியிலுள்ளோர்பலர்க்கும்
வெற்புயர்தீபம்போல் விளங்குசித்திசெய்திலனே. (௧௪)

கன்னடதேயத் * திறைவன் கைதொழுதுபோற்றிடவுங்
தன்னடைமேற்கொண்டொழுகுஞ் சந்நாசியாக்கியவ
னின்னவற்றேற்றென்றோ ரியற்றமிழ் † வல்லாற்கொணர்கா
லன்னவற்காளாமா றருள்புரிந்தும்விட்டானே. (௧௫)

* இறைவன் - குமாரதேவசுவாமி; † வல்லான் - சிதம்பரசுவாமி.

ஏறும்விடைபுரப்போ னேடுகைக்கொண்டேபடிப்போன்
சோறுசமைப்போன் றுகிற்பணிசெய்வோன்முதலாத்
தேறுமிமித்தர் திருத்தொண்டுசெய்பவராக்
கூறுமடியார் குழாஞ்சிறிதுங்கொண்டானே. (கசு)

அங்குவசிப்போர்வங் தன்புசெய்துபோவதற்காத்
தங்குமவரென்னச் சாற்றுமிருபாற்றவர்க்கு
மெங்குமிருந்துவிழை வெல்லாமுமெய்துவித்தான்
கங்குல்புரையுங் கழுத்துடையகாரணனே. (கஎ)

ஆனந்தமென்னு மலையில்பெருஞ்சாகரத்தி
லீனந்தவிர்ந்தே யிருந்துபலநாட்கழித்துத்
தானந்தமாதி தவிர்பதத்துற்றானவன்ற
னூனந்தவூருக் கொருகோயினல்கியதே. (கஅ)

பாந்தணிகர்கோரம் பலரிடத்துங்காட்டாத
சாந்தலிங்கமூர்த்தி சரித்திரத்திற்சற்றுரைத்தேன்
காந்தழுக்காறில்லவர்வாழ் கன்னடதேயம்புரந்த
வேந்தனருள்பெற்ற விதஞ்சிறிதுவிள்ளுவனே. (கக)

சாந்தலிங்கசுவாமிகள்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கசுல0.

---

## நாற்பதாவது
## குமாரதேவசுவாமிகள் சருக்கம்.

கருநாடதேய முழுதும்புரந்து கனவண்மை யுற்றவரசன்
பொருவாதவீர சைவத்துளார்கள் போற்றச் சிறந்தபுனிதன்
திருவார்குமார தேவப்பெயர்ச்சு சீலன் சிவன்றனருளா
லொருதாய்வயிற்று னுழையாதமுத்தி யுறுமாறு நாடினனரோ. (க)

அத்தேயம்விட்டுமேனையாதியாகுமவர்தம்மைநீங்கியகலு
டுத்தேசமானபடிநற்குருக்களுறல்பேரையென்னவினவா
முத்தேவுமானசிவலிங்கமுற்றமொய்ம்போடுசண்டுபணியா
மெய்த்தேவதேவனிவனேயெனவுள்விழைவோடுதொண்டுசெயுநாள். ()

அவிர்சாந்தலிங்கமுனியென்றநாமமணியுந்திறங்கொளாசான்
றவிசேறுமன்னர்பலர்போற்றும்வாழ்வதனைவிட்டுவந்தமகனைச்
செவிதோறுமிட்டவனையார்பதங்கள்சிந்தித்திடச்சொலியதாற்
கவிபாடும்வண்மையொடுசிற்சில்சித்திகைவந்திடச்செய்தனனே. (௩)

அத்தன்மைகண்டுகுரவன்றனைத்தனுசானனுப்புமுறையின்
மெய்த்தன்மையன்பர்பணியக்குலாவும்விமலன்றலங்கள்பலவற்
றெத்தன்மையுற்றபதிமிக்கதென்றுனிதயத்தெரிந்திடிதுமாக
னித்தன்மைகுன்றிடாவண்ணம்வைகெனச்சொற்றனுப்பினனரோ. (௪)

வெறுவாயுணர்ந்தகுரவோர்களிந்தவியன்மேதினிக்கண்முறையிற்
றகுசீடர்தம்மையனையார்களாயதருணத்தின்மற்றொர்நகரிற்
புகுமாறுரைக்கைகண்டேனிதென்னபுதுமைக்குணங்கொலறியேன்
மிகுதொண்டரோடுபுகலிப்பிரானில்வீட்டுட்செல்வார்கள்சிலரே. (௫)

அத்தேசிகன்சொல்வழுவாதவண்ணமருள்சேர்குமாரதேவ
னத்தேயமுற்றசிவனாலயத்துமேகிப்பணிந்துவருநாள்
சித்தேறவாடினனவ்விதங்கள்செப்பத்தெரிந்திலேன்வெண்
முத்தேயெனும்பலாண்முன்புதூதுமுக்கண்ணனேகு * நகர்வாய். (௬)

எவ்வூரிலுற்றதேருக்குமேலெனிரதத்திலீசனுறுநா
ளவ்வூரின்மாந்தர்பலர்கண்கள்காணவங்கேகிநின்றுதொழலும்
வெளவூற்றொர்மைந்தனிதுவீரசைவமருளென்றுநேரில்வைதான்
செவ்வூகமுற்றுளாருக்குநிந்தைதீயாக்குமென்கைதிறமால். (௭)

நின்வீரசைவமருளாகிலிந்நெடுந்தேர்நடக்கவருளே
லென்வீரமியார்செய்திடினுஞ்செலாமலேநிற்கவென்னவிசையா
வுன்வீரநெஞ்சமவேவுஞ்சிலைங்கொடொருநன்மடத்திலுற்றான்
முன்வீரர்சென்னியடுதுங்கவாளுமுடியுந்துறந்தமுனியே. (௮)

முன்னாளிழுத்தமணிதத்திரட்குழுப்பங்கிழுத்துமசையா
தின்னாவளிக்குமத்தேர்விழாவினீறெய்துமுன்னமியாதுந்
தின்னாததஞ்சைமன்னாதியோரொர்தெய்வீகமீதெனுணர்வுற்
றென்னார்செய்தார்கொலோசொன்மினென்றவீட்டத்தினோரைவினவா

ஓருசிற்சிலோர்தமொழியானடந்தவுண்மைத்திறந்தெரிதலுந்
தெருள்புத்தியோரொடம்மன்னனங்குசென்றந்தமுனிவனடிவீழ்ந்
திருள்பட்டநெஞ்சன்வசவைக்குறிக்கொடிவ்வாறியற்றியதனால்
வருபத்தர்பற்பலோராவிமாயும்வம்புற்றதென்றனனரோ. (௧௦)

அரசன்சொனண்ணியம்மாதவத்தனந்தக்கணத்திலவனூற்
றிரதந்தனிற்குலாவுந்தியாகனெதிர்நின்றுன்வீரசைவஞ்
சரதம்புணர்ந்தவருளோன்முனேறுதானத்திலேகுகவரு
முரனொன்றுதீயமருளாகினிற்கவெனமுற்சொன்மாற்றிடலுமே. (௧௧)

சேந்தன்கவிக்குநடைதந்ததானதில்லைத்தலத்திரதமொத்
தாய்ந்தந்தமாந்தர்களும்விண்ணுளோருமதியார்வமுற்றுமொழியப்
போந்தன்றுநிற்கவேண்டுந்தலத்தொர்பொன்மேருவென்னவுறலால்
வேந்தன்றுதித்தமுனியைத்தனுட்டின்மிகவைகுமாறுதொழுதான். (௧௨)

அம்மன்னனுக்கின்மொழிகூறிடாமலரனெண்ணமுற்றுமென்றான்
செம்மன்னையன்னகுருமேனிகொண்டுசிந்தைக்கனாவினிடையுற்
றிம்மண்ணின்மிக்கமுதுகுன்றிடத்திலேகென்றியம்பிடலுமப்
பொய்மன்னனுக்கவிதமுஞ்சொலாதுபோனான்விடிந்தபொழுதே. (௧௩)

---

* நகர் - திருவாரூர்.

வழியிற்றிகழ்ந்ததலமொன்றினூடும்வழிபாடுசெய்யநுழையா
தொழிவற்றபத்தியாலெலாவொர்கும்பிடுதவிக்குறித்தபதிபோய்
மொழிதற்கடங்கிடாமேன்மைதுன்றுமுத்தாநதிகசண்மூழ்கி
விழியுற்றநெற்றியார்கோயில்புக்குவெற்பன்மடந்தையொடுதொழுதான். (கச)

அங்குற்றிளப்பில்செபமுந்தியானமதுவுஞ்செய்திட்டவவன்மேற்
சங்குற்றகாதரினுமிக்கவன்புதாயாமவிருத்தைகொளலாற்
பொங்குற்றசாரமுறுபாடல்கொண்டுபுனையென்றவட்சொலுபுமற்
றெங்குற்றவர்க்குமினிதாயநூல்களீரெட்டியம்பினனே. (கரு)

கழறுந்தொகைக்குளுயர்சுத்தசாதகமெனக்குலாவுமொருநூன்
மழமைந்தர்ஞானவழிகட்கொவாதுமாயோகசாதனையினிற்
கிழமென்றிலங்குமவரேகொள்வார்கள்கீழ்முத்திரும்புமவரைத்
தழலின்கணும்றபுழுவென்னவாட்டுதகவுற்றதென்கைநிசமே. (கசு)

பந்தக்குழிக்குள்வீழாமலுய்ந்தபலமாதவர்க்குளுயர்வா
மந்தக்குமாரதேவன்றனிட்டையதிநீட்சியென்றுமமலை
வன் * தத்தவட்டிலிற்கோயில்வைத்தவன்பாலளித்ததாயு
மிந்தக்கடற்றனுலகிற்பன்மாந்தரின்றுஞ்சொல்கின்றதுளதே. (கஎ)

கற்பாரமொன்றுமேலேறிடாதுகனவாதைசெய்யிலதுசெய்
கிற்பான்வணங்குதலுநீறுகொண்டுகீழ்விட்டுமேலெய்திடல்செய்
தற்பாவுகண்டனதுகோயில்வாயிலருகிற்கலாகமுடனே
நிற்பார்செய்தார்களெனநன்னிவேதனஞ்செய்யநேர்சொலினனே. (கஅ)

அன்றந்தவிக்கிரகமோரிரண்டினடல்கூர்புறத்திலக்கற்
குற்றன்னபாரமுறலாலுறைந்தகுறிகண்டபேர்கள்பலரென்
றென்றும்புவிக்கணுவல்வாரனேகரீசன்றனெஞ்சிலெய்தத்
துன்றன்பொடம்பையருளச்சிறந்ததொண்டற்கிதாற்றலெளிதே. (ககூ)

அவ்வூர்வடக்கிலமர்துர்க்கைதன்னையருமந்திரத்தனொருவன்
வெவ்வூறுசெய்யவரலஞ்சியந்தமேலோனிடத்திலிவள்போ
யிவ்வூரொழித்தியெனநின்றிரப்பவேதோவவன்செய்திடலும்
வெளவூகமற்றுவிழிகெட்டுவந்தவழிதேடியோடினனரோ. (உ0)

இவ்வாறவன்செய்விளையாடலியாவுமியாரேயுணர்ந்துபகர்வார்
செவ்வானமேனியுறுசேயையன்னனென்றோதுவார்கள்சிலர்மற்
றவ்வானவன்றனதுபேர்கொண்மேன்மையறியாதபேருநரரோ
வெவ்வாள்விழிப்பெரியநாயகிப்பெண்வெண்பாலளிக்கைபொதுவே. ()

ஒருபாவலோனமுனிதாள்வணங்கியுபதேசமோதுகெனலு
மருளார்தனதுகுருமுன்னருய்த்தனவனேநிடுஞ்சொலதுபெற்
றிருடருஞானவழிகூறினனையார்தமுள்ளிலிசையு
மருண்மாயுமுன்னம்வெகுமூடருக்கும்வலிதோதிடத்துணிவரே. (உஉ)

---

* அத்தவட்டில் - பொற்கலம்.

இடமொன்றுஞானசித்திக்குமாரதேவன்றனுதுசிந்தை
யிடமொன்றுமிட்டலிங்கத்தொடியாவுமாமொன்றினுடெய்தியபின்
முடமொன்றுமாட்டலார்வைகுமந்தண்முதுகுன்றிலவனதடியார்
மடமொன்றுமன்னர்முதலாயசெல்வர்மகிழ்வால்விளங்கியதுவே. (உக)

முதுகுன்றில்வைகுமுநியோன்மணந்தமுதியாடன்மூதருளினுள்
மதுரங்கொள்பாடல்பொழியுங்குமாரதேவன்றன்வண்மையிவைமேற்
கதுமென்றவன்றனருள்பெற்றகங்கொள்கவிவாணருங்கைதொழவா
முதுலன்சிதம்பரப்பேர்கொண்மூர்த்தியதுவண்மையுஞ்சொலுவனே. ()

குமாரதேவசுவாமிகள்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கக௱எச.

---

## நாற்பத்தோன்ருவது
## சிதம்பரசுவாமிகள் சருக்கம்.

மன்னனென்றரன் ருனுமம்பிகை மாதுமோதும்வை வேலனு
முன்னவிர்ந்தருண் மாட்சிதன்னெடு முத்தமிழ்ப்பெருக் குங்குலாந்
தென்னனுட்டுறு மேழியங்கொடிச் செல்வர்தங்குலஞ் செய்தவ
மன்னபாலன்சி தம்பரப்பெய ரப்பன்வாயிடச் சூடினேன். (க)

கல்விகேள்வியிற்சிர்த்துமான்மலிகாளையம்பருவங்கழித்
தல்விராவுகளத்தர்வாழ்திருவாலயத்தலந்தோறும்போய்
நல்வினைப்பயனுனசித்தியுஞானமும்பெறுமாசையா
லொல்விசேடருளார்கொலென்னவுசாவலேதொழிலாயினன். (உ)

கன்னிநாட்டொடுசோழநாடுகடந்துகொங்குநன்னுடும்பார்த்
தின்னிசைத்தமிழெளவைசான்றவரேய்ந்தநாடெனுந்தொண்டைநாட்
டன்னியந்தவிர்ந்துற்றதாநடுநாட்டிற்காசிக்கதிகமாத்
தன்னியற்கைகுலாவுசீர்விருத்தாசலத்தலமேவினன். (௩)

அங்குபோயரனுரொடம்பிகையாளையுந்தொழுதங்ஙகர்
தங்குவாரிடமாதவத்தருளார்கொலென்னவினுவலு
மிங்குநேரில்குமாரதேவனிருக்கின்றுனிலிங்கம்புனை
மங்குல்போல்பவனிட்டையின்பெருவண்மையாளனெனச்சொனுர். (ச)

சென்றுதெண்டனிட்டேத்தியன்னவன்சீலங்கண்டுமிக்காசித்தா
னன்றுவந்தவன்கல்வியாதியறிந்தன்னேனுமன்பாகினன்
குன்றுவில்லெனக்கொண்டுளாரருள்கூட்டுதற்குலேப்பாருண்டோ
நன்றுபெற்றனமென்றுவந்திருநாவலோருஞ்சின்னுளுற்றுர். (௫)

தென்னனுட்டினன்கன்னடப்பெருந்தேயநீத்தவன்றன்னிடத்
தென்னகத்தருட்சீர்குலாவல்செய்தேற்றுக்கொள்ளெனச்சாற்றலு
மன்னவன்றனையந்தமாமுனியாண்டசற்குருசந்நிதி
முன்னருய்த்திடவேண்டுமென்றுளின்முன்னியேயழைத்தேகினன். (சு)

நீரைச்சென்னியில்வைத்துளாரைநினைத்துநீறணிவார்கள்வா
ழூரைக்கம்மடைப்பள்ளியாவிழைந்துண்டசிற்சிலநாளினிற்
பேரைத்தொல்பதிகண்டடைக்குற்றபெருந்தகைக்குரவன்பணிச்
சீரைத்தாங்கிவசிக்குநாளிற்குமாரதேவனைநோக்கியே. (௭)

பிந்தவந்தவனியாவனீயவற்பேணிநின்றொடுகூட்டியேன்
வந்ததென்றுயர்சாந்தலிங்கவரோதயன்றனிகேட்டலு
மிந்தமாணிடனல்லபாவலனின்னைவற்கருள்செய்துநின்
கந்தநாண்மலர்த்தாள்கள்சூட்டிடவேண்டுமென்னக்கழறினன். (௮)

அச்சொற்கேட்டலுமெற்குநீயுளையாதலாலுனக்கியான்சொலு
மெய்ச்சொற்சொற்றுநின்சீடனுக்குதியென்றுநல்விடையீந்தன
னிச்சொற்பெற்றுவணங்கித்தாமுனிருந்ததோர்தலத்தெய்தியே
பொய்ச்சொற்றீர்ந்தசிதம்பரப்பெயர்ப்புண்ணியன்றவனாகினன். (௯)

கோதில்சற்குருநாதனென்றகுமாரதேவகுணாலயன்
மீதிலன்புமிகுந்துநெஞ்சுவிடுக்குந்தூதுவிளம்பியத்
தீதிலாங்குருச்சொன்னவாகித்திகழ்ந்தநூலொருநான்கிற்கு
மாதிரம்புகழ்கின்றமாட்சிவளர்ந்தபேருரையுஞ்செய்தான். (௧௦)

தேசிகோத்தமரானமேலவர்சிற்சிலோர்முறையின்படி
யாசிவிண்டுதொழும்புசெய்துமெய்யன்பனுந்தனிச்சீடனை
யேசிலாத்தலமியாதிலேனுமுற்றேன்றமாதவஞ்செய்கெனப்
பேசிநீறளித்தேவினன்பிரிந்தேகினனவன்பேதுற்றே. (௧௧)

ஆலவாய்ப்பதிதன்னிலேகியங்குற்றவம்பிகைபொற்பதஞ்
சாலநாடிவணங்கியென்றுதவஞ்செய்தானவடண்ணருட்
கோலமெய்திமுன்வந்துபோரியிற்கோயில்கொண்டவிர்கொற்றவை
வேலனாலுயவேண்டுநீயவண்மேவுசென்னவிளம்பினள். (௧௨)

அந்தவாறவணங்குபோதலுமாமோமயிலூரும்வேற்
கந்தநாயகன்றன்னையாண்டருள்காரணக்குருக்கோலமாய்
வந்தகங்களிகூர்தரத்தகும்வாசகஞ்சிலகூறினா
னிந்தமூர்த்தியுமந்தமூர்த்தியுமேகமாகியவிர்ந்தவே. (௧௩)

பேருமொன்றுபட்டுற்றதாலனுப்பேதமுந்தவிர்ந்தின்புற்ற
னாருமோற்றயின்றற்கொர்திண்ணையிலுற்றுறங்கொரிராவினிற்
கூறுறுங்கதிர்வேலன்றன்புனைகூறையாலுடற்போர்த்தியே
யாருமன்னவன்றன்மைநன்குணர்ந்தேத்துமாறுசெய்தானரோ. (௧௪)

புண்ணியத்தினவாவுளார்பலர்போற்றியேதருபொன்கொடு
திண்ணியோர்கள்பராவுகோயிற்றிருப்பணித்திரள்செய்கையி
னண்ணித்தஞ்சையின்மன்னனுங்குற்றுநல்குமாயிரம்பொன்னினும்
பெண்ணினல்லனல்கோர்பணம்பெரிதென்றுபேசினனுமரோ. (௧௫)

மன்னன்கைப்பொருட்கல்லுஞ்சுண்ணமும்வாங்குதற்குபயோகித்தா
னன்னமன்னவன்கொட்டைநூற்றதனாலளித்தபணத்தினை
மின்னனேர்சுடர்வேற்பிரான்றிருமேனித்தொண்டினிற்சேர்த்திட்டா
னின்னஞாயத்தினாலென்றோர்ந்தவரேகதேசமிருப்பரே. (௧௬)

மற்றுளோரைவருத்திச்சேர்ப்பவர்மாழையாயிரத்துந்தமேற்
சற்றுவேர்வைசிந்தச்செய்பாட்டினர்தங்கள்காசொன்றுமேற்றமே
கற்றுளார்தவத்தோர்களென்னுங்கணத்திற்சேர்த்தவனாதலாற்
சொற்றுக்காட்டினனந்தவாதிருத்தொண்டியாவுமுடிந்தவே. (௧௭)

கண்ணுடைப்பெருவள்ளலன்றுகணித்துக்கூறிடுநூலினுக்
கெண்ணுடைப்பொருடோன்றுமாறெழுதென்னவேசிலரேற்றனர் [க
விண்ணுடைப்புலவோர்கள்வாழ்வையும்வீணென்றெள்ளுமெய்ஞ்ஞானி
டண்ணுடைக்கருத்தின்பமார்தரத்தக்கவாச்சமைத்தனரே. (௧௮)

முந்துபாட்டிற் * களாசமென்னமொழிந்ததோர்மொழியின்பயன்
வந்துதோற்றமிலாமையாலுளமாழ்கிவேலனைநாடினா
னிந்துநேர்நகைக்கோலமாமுன்னிலங்கிவேத்திரமொன்றுகைத்
தந்துகொள்ளுதியென்றப்பேர்சொலித்தன்னுருக்கரந்தானன்றே. (௧௯)

தறையில்வாழ்புலவர்க்குநல்லமுதந்தனைப்புரைசந்நதி
முறையென்றோர்கவிமாலைபோரியின்முருகன்மீதுமொழிந்திட்டோ
ரிறையுந்தீங்கில்பஞ்சவதிகாரவிளக்கமென்றோர்நன்னூலுநான்
மறையுமாகமக்குழுவுந்தோய்ந்தருண்மகவெனாவகுத்தான்மன்னோ. (௨0)

அன்னவன்றிருமூலனூலுக்கருத்தஞ்செய்யவுந்தேசித்தான்
பொன்னவாவினோர்தொண்டன்றன்னெண்ணமுற்றுமென்றுளம்பூரித்தா
னின்னநூற்குரைசெய்யொணாதெனவெஃகவேலன்மறுத்திட்டான்
பின்னப்பொன்மயற்காரனாந்தபெருந்துயர்க்களவின்றம்மா. (௨௧)

அவன்வருத்தமுணர்ந்துதன்னருகாகக்கூவியொர்செப்புக்கா
சுவகையாற்றருகென்றுவாங்கியுறுத்திப்பார்த்துப்பொன்னாக்கியே
தவபலம்பெரிதாகும்வீணிற்றயங்கிடேலெனச்சாற்றினா
னிவணமன்னவன்செய்தவாடல்களெண்ணிலாதனவென்பரே. (௨௨)

மண்ணிலெத்தனைபேர்கட்கோவவன்வாய்திறந்துபதேசித்தான்
றிண்ணிமைக்கருத்தோர்களாய்ச்சரிதஞ்சொலும்படிதேறிலார்
வண்ணிலாவியபண்பளாமொர்வண்ணாரப்பெண்புகழ்மாத்திரம்
புண்ணியத்தினர்சிற்சிலோருணர்ந்தோதிடப்பொலிவுற்றதே. (௨௩)

இட்டலிங்கமலாதொர்தெய்வமுமேற்றிடாமதத்தெய்தியுந்
துட்டநிக்கிரகஞ்செய்வேல்புனைதோள்வலான்றிருத்தொண்டுஞ்செய்
திட்டநூலுரைக்காரரிற்சிறந்தோன்சிதம்பரப்பேர்முனி
† கட்டமுத்தியிற்சேர்ந்திட்டானுடனற்சமாதியிலுற்றதே. (௨௪)

---

* களாசம் வேத்திரம், என்பன பிரம்பு. † கட்டமுத்தி - விரும்பியமுத்தி.

சீரியோர்புகழ்பாண்டிநாட்டிற்செனித்துமாதவச்செல்வனுப்
போரிமாநகர்க்கந்தன்றுளிற்புகுந்தவன்புகழ்போற்றினே
னீரின்மிக்குயர்சோலையப்பெயர்நின்மலத்தவயோகிதன்
பேரியற்கைவினவுமாறினிப்பேசிடத்துணிந்தேனரோ. (உரு)

சிதம்பரசுவாமிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௬௯௯.

நாற்பத்திரண்டாவது
## சோலையசுவாமிகள் சருக்கம்.

மலயமால்வரைச் சாரலிற்குலாம் வளமைதோய்நா டதனில்வைகிவா
மூலகின்மாந்தர்தஞ் சாதிபேதத்து டனுப்பரென்றபே ராளர்தம்மனைக்
குலவுபாலனு வந்தபுண்ணியன் குடிவளத்தினிற் குறைவில்பேறுளா
னிலவுகல்வியுந் தவமுநல்குநன் லோயனுக்கொரா னெனநிலாவினன்.(க)

சோலையப்பெயர்ச்சூடுமன்னவற்றெண்டனுமொடக்கொண்டதேசிகன்
பாலையொக்கவேமுடிவெனுத்தபின்பருவமாதொருத்தியைமணந்தனன்
சேலையன்னகண்ணவடன்வாலிபந்திருமுன்னுடற்றிரைமலிந்ததா
லோலைபற்றுகைத்தூதர்சேர்வரென்றுன்னியோர்சொலன்னவனெடோதுவான்.(உ)

இன்னநாளிலியான்விண்ணிலேகுவேனெனதுபள்ளிக்கூடந்தைநீவகித்
துன்னதன்னையோடிவளையும்புரந்தொழுகவேண்டுமென்றோதியேகினு
னன்னசொற்புரந்திடலுமூரிலுற்றூர்கள்சொன்னசொல்லறையலாவதோ
தன்னதன்னையப்பனுமுடன்பிறந்தாருமச்சொலைத்தழுவினரோ. (௩)

கல்விநல்கினன்பன்னியென்றுளிற்கருதிலாயிதென்காரணங்கொலோ [ன்
நல்வினைத்தொடர்ச்சியினர்போலுநீநரகவாதனைத்தொழில்செய்கிற்பதே
வல்விரைந்துகைவிடுதியென்றுரேவாய்படச்சொனூர்மனமெரிந்துபோ
யல்விடங்குடித்தவனைநம்புகென்றவளொடோதிமெலலடிவணங்கியே.()

உன்னையென்னனைக் கெண்மடங்குமே லுபசரிக்கவே யுன்னினேன
தற், கென்னைபாவமோ தடைசெய்திட்டதியா னினியிவூரில்வை கேமெ
னச்சொலித், தன்னையாதியோர் தம்மதெண்ணமே தவறென்றுன்னிடத்
தவசியாகியே, பொன்னைமாதரைப் புவியையென்னுமெய்ப் போதமெய்
தியேபோயினனரோ. (ரு)

போனமாதவன்பலபலூரினும்புக்கிரந்துணும்பொருவிநீரமுற்
றீனமின்றியேபகலிராவுமோரெண்ணமேகுறிக்கொடுழயன்றனன்
றேனளாவுசொற்குரவனுதுபத்தினியையங்குளார்தெண்டனிட்டுநின்
மானமோர்ந்தனஞ்சின்முறேலெனுவலிதியன்றயாவையும்வழங்கினர். ()

அவனையோர்தினம் பொருநைமாநதிக் கருகிலுற்றநெல் லையிலொ
ராண்டகை, குவலயம்புகழ் வடமலைப்பெயர்க் கொற்றவன்பசுங் குவளை

மாலையான், சிவனெனக்குறித் தடிவணங்கியிச் செல்வத்தோடருட் செல்வமும்பெறற், குவலையாலெலார்சொற் சொல்லெனாவிரந் தோதலிற் செபித்துறுதியெய்தினான். (எ)

அந்தமன்னனாற் செந்தின்மூர்த்திகா ராழிவிட்டுமீண் டதுவுமாங்கணார், வெந்தகைப்பொலா வயிணவன்பல்பா விண்டநாள்கொடை மிக வழங்கலுங், கந்தவார்குழற் கவுரிநெல்லையிற் கனவிரண்டொர்காற் காட்டியாண்டது, மிந்தவாறியன் றிட்டகாதையா யிரமுமீண்டியம்பிட வொணாதவே. (அ)

சோலையப்பெயர்ப் பரமயோகிதான் சொன்னபாடலின்றொகையநந்தமா
வேலைதொட்டுமா மலயமட்டுமே நிகவுலாவுநீர் மேவினானொர்நாட் [ம்
காலையிற்றிருக் குருகையூரினிற் கரியனன்பர்நேர் கருமவேதியர்
மாலைவீதிவா யொருமனைத்தலை வாயிலிற்சிவா வெனவிருந்தனன். (௯)

அதுவினாவியம் மனையிலுற்றதோ ரந்தணன்கொதித் தருகுவந்துநீ
கதுமெனாவெழுந் தேகுகென்னவே கடுகடுத்தனன் கண்டுதொண்டர்தம்
பொதுவனாமுநற் கடவுளேபலோர் போற்றுமாறுருப்புனையுமுண்மைதே
சதுரனன்றுநன் றெனவவ்வூர்மயா னந்தனிற்புகுந் தான்விரைந்தரோ.[ர்

வெந்தநீறுடன் முழுதணிந்துவெள் ளென்புமாலைதோண்மீதிலிட்டுவெங்
க்ந்தமாருமு மத்தெருக்கலர் கவிகைச்சூடியே கைக்கபாலத்தோ
டந்தகற்செகுத் திட்டமூர்த்திபோ னந்தவூரினந் தணர்தம்வீதிவாய்
வந்தனன்சிலோ ரோடினார்சிலோர் வாழுந்தம்மனை வாயின்மூடினார். ()

அந்தமட்டில்விட்டேகிடாதவூராலயத்தினுட்போநல்வேட்டனன்
பைந்தகைப்பிரானடியரிற்பலோர்பயமெய்திக்கபாடங்கள்சாத்தினார்
சிந்தமோதிடக்கருதுமூர்க்கர்முற்றியபேய்கள்பூதங்கள்காவலா
வந்தவாறுதோற்றியதவ்வேளையில்வடமலைப்பெயர்மன்வந்தானரோ. ()

அருள்விளைதத்தமன் மனைங்கெய்தல்கண் டந்தணாளரஃ தோதினாரவன், றெருளுமம்முனிக் கடிமையாதலிற் றெண்டனிட்டிதேன் செய்தியென்றபோ, திருளுமுற்பலத் திவர்நெறிக்கணாற் றியானிசைத்தநூ லிதனுள்வைத்துளேன், பொருளின்மிக்கதா மதையெடுத்திடப் போதல் வேட்டனன் பொய்யன்றேயென்றான். (கங)

அற்புதத்ததா மச்சொற்கேட்டபோ தங்குளார்மனத் தையமெய்தியிச்
சொற்பொயாகிலெம்முயிர் விடுக்குவஞ்சொன்னவண்ணமச்சுவடிநல்கினா
னிற்பணிந்துநீ யமயேசனா நிசமுன்வேமென்றார் நிருபனோடக்கோ
யிற்புகுந்தொர்கற் கீழொர்பெட்டகத் திட்டவாறெடுத்தீந்திட்டானரோ.

அந்தநூலின்பேரறியகிற்கிலேனகிலமீதறிந்தார்களியுளவரோ
வந்தமன்னனுஞ்சிந்தைகொந்தபல்வைணவக்குழாத்தினருமின்புற்றார்
கந்தன்றாதைபோனின்றமாதவன்கடிதுமற்றோரூர்வயினடைந்தனன்
பிந்தவன்னவன்செய்தவாடல்கள்பேசுவார்கள்பல்பெரியர்தாமுமே. ()

நீகோள்வண் டிரியுமாமுனி நிகமவாகமச் சமரசம்பெறப்
பரடுசெச்சிதா னந்தமாலையின் பாடன்முப்பதிப் படியிலுள்ளன [சித்
தோடும்வாசியைக் கொடுமுயன்றெலா வுலகமுந்தனுள்ளொளிர்தரப்பல்
தாடுவோர்கடம் மரபிலுள்ளவர்க் கார்வமிக்களித் திடுபவாகியே. (௧௬)

அவனதாமுடற் போனவாறிதென் றறியொணாதெனப் பலர்சொல்
வார்சிலோர், தவசிசேடனிட் டையிலிருக்கையிற் றழலிடைப்பொலார்
தாமமுழ்த்தலாற், சவமெனக் கழுத்தளவும்வெந்துகற் றலைபறந்துபோய்த்
தன்னோர்சீடன்முன், னுவகையோடுசிற் சிலமொழிந்துபே ரொளியிலு
ற்றதென் றோதுவார்களே. (௧௭)

உள்ளதாயவப் பனுவலொன்றுமுன் னுடலொடுற்றபோ தோதலெ
ன்றும்பின், னெள்ளநீர்தரத் தலைதனித்தபோ தியம்பலென்றுமோ துக
ருமிங்குளார், வள்ளலாமரன் றிருவருட்பெரு வாழ்வுஞ்செந்தமிழ் வள
முந் தோய்ந்ததிற், கள்ளமின்மையா லிதனிலத்தவன் கதையுரைத்த
தாங் கண்டுகொண்மினே. (௧௮)

ஆயும்வண்புகழ்ச் சோலையன்றிறத் தடியனேனறிந் திட்டமட்டினிற்
றேயும்வண்சுவைக் கவிகளாலிவண் சொல்லினேனினிச் சுரமினார்வனப்
பேயுமாதரண் மனையினிற்புணர்ந் திடுதனட்டபோ திசைவுறுதுபோந்
தாயுமானவன் சரிதமிச்சகந் தனிலுணர்ந்தவா சாற்றுவேனரோ. (௧௯)

சோலைசுவாமிகள்சருக்க முற்றிற்று.

---

ஆ- திருவிருத்தம் - ௧௭௧௮.

---

## நாற்பத்துமூன்றாவது

## தாயுமானசுவாமிகள் சருக்கம்.

சோழநாட்டிற்குடிகொள் வேளாளர்மரபினிற் சுத்தசை வாகமத்தி,
னாழமுறுபத்தியொடு வாழுமொருவன்செய்தவ மதனில்வரு புதல்வனா
டல்கூர், வேழமனையன்றாயு மானவனெனும்பெயர்மி லைந்தவன் கல்வி
கேள்வி, யூழதன்வழிக்கொடுமி கப்பொறுத்துப்பருவ முறுபுருட னாகி
னனரோ. (௧)

இருமாதரின்பமுங் கவுரிகுலமன்னவனி டங்கணக்கெழுது தொழிலுந்
திருமூலர்மரபில்வரு மவுனகுருதேசிகன் செப்புமுபதேசநிலையு
மொருபூரிமித்தமன் மாரிபெய்வித்தசிவ னுற்றசிரகிரிவாசமும்
பொருவாதகெம்பீர வுற்சாகமுங்கொண்டு பூரித்திலங்கினனே. (௨)

இளையாடனைத்தனது பணிசெயுமொர்வாலிபனு ளிச்சித்திளைத்த
தோர்ந்து, வளையார்கரத்தவளோ டதுசொலியவற்கூவிமகிழ்வி லதுபவி
யென்றலும், மிளையோனொசம்வரு மென்றஞ்சியவரடிக் கீழ்வீழ்ந்தெழுந்
தெனிலைவால், வினைபாவங்கியுய் வேசனனக்காசியைவி ரும்புபுகடந்
தானரோ. (௩)

இக்காதையான்வணங் கத்தகுமோர்பெரியவரி யம்பிடக்கேட்டது ண்டேன், டக்காரணம்புவியு ளார்சொல்லவில்லைநிச மாங்கொலோபொய் தான்கொலோ, மெய்க்காமரசமுஞ்சி னுளநுபவித்ததால் வீறுமகனொரு வனுண்டா, யெக்காலமுங்குலவ வகவலொன்றேறுதினனெ னச்சொல் வார்பலருளரே. (௪)

அத்தாயுமானவனெ னும்பெயர்த்தவசீல னருளாட்சியெய்தியணிகூர்
வித்தாரகவிபாடன் முதலாயவண்மைகளை விசையரங்கையனெனுமன்
னித்தாரணியின்மாந்தர் பலராலும்வினவுற் றெனக்குநீபணிசெயற்க
வெத்தாகமெய்தினுநல் குவனுனதுநிலையினில்வை கெனவினிதியம்பினனே. (௫)

அதுமுதன்மனைத்தலையி லவனுதவிகொண்டுறினு மானந்தநிட்டை கூடிப், பொதுமுதலினைச்சமர சந்திகழ்தரப்பெரிது போற்றலேதொழி லாகினன், விதுவணிதருஞ்சடில ரடியவனெனும்பெருமை மேன்மேலு மிஞ்சுதலினுற், கதுமெனக்காண்பவர்க ளிற்பலர்வணங்கிடுங் கழல்கொடு நிலாவினனரோ. (௬)

அந்நாளினிற்பயிரின் விளைவுகுறைவாதலினி வங்கிலமெலிவடைதல் சகியா, மைந்நாகநிகர்மன்ன னவனிருந்துழிசென்றுன் மகிமையுலகறியும் வண்ண, மிந்நாளின்மழையொன்று பெய்திடச்செய்கெனவி ரந்தன னிசைந்தவன்றான், பைந்நாகமணிதருப ரன்றனைநினைந்தொர்கவி பாடி டல்விழைந்தானரோ. (௭)

சைவசமயஞ்சமய மென்னிலதிலுறுதெய்வந் தண்பிறைமுடித்த தென்னி, லைவரையும்வென்றுகளி கூர்வதேமுத்தியெனி லறம்வளர்த்த வளைநிகரா, மைவனப்புக்கொண்டல் காள்பெய்மின்மழையெனவொர் வண்கவியுரைத்திடலுமே, செய்வரம்பிற்புனல்வ ழிந்திடும்படியதிக சீக் கிரம்பெய்ததம்மா. (அ)

அவ்வற்புதந்திகழ்த லான்மகிமைமுன்னையிலு மதிகமானதுசினுள் போய்த், தெவ்வர்க்கெமன்புரையு மன்னன்பொனுலகிடை தேவரெதிர் கொளவேகினன், மௌவற்றொடைப்புதல்வ னிதமகிதமறியாத மதலை யம்பருவமுறலா, னௌவற்பெருந்தருவி னிழல்கொள்பார்முழுதுமவ னுரியரசாகியதரோ. (௯)

அம்மாதுதருணியம் பருவத்தளாதலினு டற்கருப்புச்சிலைக்கைப்
பொய்ம்மாரனிரவுபகல் போராடலானொந்து புல்லியரிணக்கமொல்கி
மெய்ம்மாதவத்தாயு மானவனைவெஃகிவெகு விதமாகவுபசரித்துக்[ளில்,
கைம்மாநிலாவுமுதல் வாயிலுடையரண்மனைக் கண்வரவழைத்தொர்நா

தன்குறிப்புத்திகழ வனுகினளறிந்தத்த போகிதிமுனிந்திடாம [யேதி
னின்குறிப்பின்படிசெய் குவன்விரையல்சிறிதுபொறு நீயெனச்சொல்லி
யின்குணத்தரிவையரொ ளேபந்தமியர்வையுமி கழ்ந்திராவேகடந்து
வன்குரற்சியநிகர் வழுதிகாட்டுள்ளதொர்வ னத்திடைமறைந்தானரோ.

அத்தவனுரைத்தமொழி சத்தியமெனக்கருது மம்மகளிடத்தொரவுணன்
செத்தபினவன்றன்மனை யாளைநெடுநாண்மருவு சீதரன்விழைந்தவடிவே
யொத்தநுதினங்கலவி செய்ததிமகிழ்ச்சியிலு றும்படிபு ரிந்தவனிதா
வித்தரையிகழ்ச்சிமுத லாயபலதீமைகளி லாதியலலோர்பெருமையே.

அச்சுக்மமாதநுப வித்திலளெனிற்ருயு மானவனறைந்தவார்த்தை,
பொய்ச்சொழியகீதியொன் றும்புவிபுரந்துவளர் புண்ணியரிடத்திலென்
றும், பச்சுருவமால்கலையி ருக்குமெனும்வேதமொழி பழுதுபடுபாவமொ
ன்று, மெய்ச்சுடரிரண்டெனவெ றிக்குமன்றேவிதன்மி தந்தெரிகுவார்
கள்சிலரே. (௧௩)

பொய்ம்மையும்புரைதீர்ந்த நன்மைதருமாகிற்பொ ருந்துபெருவாய்
மையென்னு, மெய்ம்மறைப்படியந்த மாதிடத்தப்பொய்சொலி விலகிய
துமேம்பாடதே, கைம்மலையனையபலத் தொருவனைத்தேடாது கல்வி
யொடுஞானமெய்து, மெய்ம்மகத்துவபுருட னொருவனைவிரும்பியதும்
விபசாரமாகிடாதே. (௧௪)

மன்னவன்றேவியையு மாதவனையுஞ்சேர்த்து மதனலீலையிலியக்கிப்,
பன்னரியநிந்தையுல கஞ்சொலக்கேளாத பரதெய்வநெடிதுவாழி, நன்ன
யச்சொற்சுவையு டன்சமரசப்பொருளு நளிர்சிவகாருணியமுந், துன்ன
வெகுபாடல்பகர் வான்புகும்வனத்தொருவர் தொடர்பின்றியுலவினனே.

அந்நகரிலுள்ளவர்க ளெங்குபோயினனோவ றிந்திலேமெனநினைந்தார்
செந்நலமுடைக்கவுரி குலதீபமனையன்மனை சித்திவலியாமறைந்து
மெய்ந்நசைமலிந்துதன் னுயிரொடுகலந்தேமி ளிர்ந்துளானெனமகிழ்ந்தா
ளெந்நவையுமின்பமா மீசனருளெய்திடில னற்கிதோர்சான்றனதே. ()

அவ்வனத் தும்றதவ னங்குளகி றங்குகனி யாதியபுசித்தான்கொ
லோ, வெவ்வமென்றுல்காது கொட்டின்மலிபட்டிதொறு மிரவிலேற்
றுண்டான்கொலோ, வௌவரியசிவயோக சாதனையினூறிவரு மதியமு
தருந்தினனோ, தெவ்வரிவருறவரிவ ரெனும்விகற்பந்தவிர்சி றப்பொடு
திகழ்ந்தானரோ. (௧௭)

ஒருதினத்தொருமரத் தடியின்புதாரினிடை யுலகொடுதனையுமறந்த
நிருவிகற்பசமாதி யோகத்திருந்தான நிட்டையின்பெருமையெளிதோ
வருபசுக்கூட்டம்பு ரக்கின்றமைந்தர்சிலர் மாய்ந்தபிணமிதெனமதியா
வருகுறுமொரூரில்வளர் சிற்றரசனுக்கிந்த வதிசயமுரைத்தார்களே. ()

அப்பாதகன்சிறிது மெண்ணுதுபாராத முற்கிடையிடப்புகன்று
னிப்பாரிலுள்ளவறி வாளனொருவன்செவியி லேனுமதுநுழையவில்லை
முப்பாலதாகிநிகழ் காலமுந்தெரிகின்ற முனிவோர்களுஞ்சகித்தார்
மைப்பூவைபாகனுஞ் சம்மதித்தனனந்த வாறியற்றினரையகோ. (௧௯)

பாதியுடல்வெந்திட்ட பின்னிட்டைதவறிப்ப டித்தலையுணர்ச்சிவந்தித்
தீதிழைத்தவன்வங்கி சங்கெடுகவென்றோர்சொற் செப்புமறைந்தானெ
வோதிடுமிவுலகமவ் வரசுதத்துப்புதல்வ ருழிநின்றுபொலிவிழந்த [ளு
தாதின்னவூரென்று ரைப்பாருமுளரென்மன மவ்வளவுமிசையவில்லையே.

நான்கும்பிடும்போத ரைக்கும்பிடாதலா ஞன்பூசைசெய்தன்முறை
யோ, வேன்கும்பிடுந்தொண்டு செய்குவேனென்னுமொழி யின்பயனதா
குமுலகீர், வான்கும்பிடும்பேறு பெற்றாலுமீசனைவ ணங்குமவரடியரடி
யார், தான்கும்பிடுந்தெய்வ மென்னுமடிமைத்திறந் தலைமிசைக்கொள்
ளல்கடனே. (உக)

எப்பொருளுமீசன்வடி வேயெனுமறைத்துணிவி னைக்குறித்தந்த
வண்ண, மப்பொருளுரைத்தந்த நிலைநின்றவன்றன்னை யான்றசற்குரவ
னென்றுங், கைப்பொருளைக்காக்கும் விதிவேண்டுமோயாத காயசித்தி
யுமதற்கா, மெய்ப்பொருட்டுணையுமிக வேண்டுமுலகிற்றனிசெல் விரதி
கட்காகாததே. (உஉ)

அங்கியுமதிற்றகித் திடுமாறுசொன்னவனு மவ்வுடலுமற்றியாவு [றே
மெங்கினுமிருக்குமெய்ப் பொருள்வடிவமேயாமெ னிற்சிறிதுமீனமின்
சங்கியல்குழைக்காது முதலியகுறிக்கொளிற் றுனிடுதழற்செற்றையு
மங்கியொழியொண்ணது சமணர்முற்சம்பந்த மதலையிடுசுவடிசான்றே.

அனகவிரதங்கருணை யாநியமலம்பலகொ டவிர்தாயுமானவன்றான்
பனகமணியும்பானு ருக்கருதிடாவெறும் பாசாண்டனல்லனுடி
மனநிலைபெறும்பொழுதி லதனைக்கரைத்தெங்கு மருவுநிட்களநாட்டமுற்
றுனலரியமுத்தியே கருதிமுயலுற்றனனி வுண்மையுணர்வதுமருமையே.

முள்ளொன்றுதைத்திடினு முயிர்பதைக்கச்செயுடன் மூட்டியநெ
ருப்பிலிட்டு, மெள்ளொன்றினளவுமசை யாதுநெடுநேரம்வெந் திடநின்ற
நிலையற்பமோ, கள்ளொன்றுமதுரக்க வித்திறமுபாசனைக் கண்ணிலார்க
ளுமடைவரோ, விள்ளொன்றுதுவிதவத் துவிதமெனிரண்டுமெனும் விர
கடைவதருமையாமே. (உ௩)

முன்னியன்றனவுரினி மேனடப்பனவுமொரு முனிவன்வந்துரை
செய்தாலும், கன்னியின்றிரண்முனொரு தருணிமதலீலையின் காரணமு
ரைக்கைபோலு, மென்னிலிவ்வளவுரைத் ததுவுமிகையேயாமி கத்தொடு
பரத்துமியாது, மங்கியந்திருவருட் செயலினுக்கிலையென்ப தழிவறுஞ்
சரதமாமே. (உ௪)

காவையம்பிகைவரைசொல் சகுணபேதமுநிட்க ளப்பொருளுமேக
மென்னும், பாவைமிகநுவருயு மானவன்சரிதமிப் படியிலுணரளவுரைத்
தேன், கோவையங்கனிவாய்த்த டாதகையுமரனுங்கு மாரனுமளித்தநாட்
டிற், சிவைகுந்தப்பதியில் வருகுமரகுருபரன் றிறமினிச்செப்புவேனே.

தாயுமானசுவாமிகள்சருக்கமுற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௪௪௫.

---

நாற்பத்துநான்காவது

## குமரகுருபரசுவாமிகள் சருக்கம்.

பொருநைந்திவடகரையிற் புருடோத்தமக்கடவுள்
பெருமைமலிதருகள்ளப் பிரானென்னவாழூரி
லருண்மிகுமோர்வேளாள னருந்தவத்தின்பயனுகி
யொருபுதல்வனெழின்மிக்கா னூமையாய்ப்பிறந்தானே. (க)

ஐந்துவயதாமளவு மவனென்றும்பேசிலனுற்
றந்துளதாய்தந்தையர்தந் தனயனொடுதுணிந்தேகிச்
சிந்துமுழங்கியவோசைச் சீரார்ந்தசெந்தூரின்
மைந்துறும்வேற்படைகொடுவாழ் வானவன்பொற்றாள்வணங்கி. (உ)

இம்மகனேர்மண்டலத்தி லினியசொற்பேசிடவேண்டு
மெம்மதவாவங்ஙனமே யெளிதுமுடித்திலையாகின்
மைம்மகராலயப்புனலின் மாய்ந்தொழிவோமெனும்விரதந்
தம்மதொருமையிற்கொண்டு தக்கவண்ணமுயற்சித்தார். (௩)

உப்பிலாவெற்றன்ன மொருபோதுண்டுறைந்தாராய்த்
திப்பியசெந்தமிழ்வண்ணத் திருப்புகழாதியபோற்றி
யெய்ப்பினிலுமுயிர்விடுத லேற்றமெனுந்தேற்றமொடு
செப்பியநாற்பதிற்றைந்தாந் தினமுதிப்பக்கண்டனரே. (௪)

அன்றுபகற்பூசைமுற்றி யருக்கன்மறைந்ததற்பின்ன
ரின்றுப்யன்கைவருமோ விறப்புவருமோவென்னச்
சென்றுதிருச்சந்நிதியிற் சேயினொடுகைதொழுது
நின்றுருகுமவ்வேளை நீலமயிலோனருளால். (௫)

அருச்சகன்மீதாவேச மாகியங்கைவேலெடுத்து
மருச்செறிபூமாலையொன்றும் மதலைகழுத்தினிலிட்டுக்
கருச்சளந்தீர்த்தருணீறுங் கமண்டலதீர்த்தமும்பெய்து
விருச்சிகம்போற்றொடர்பண்டை வினைத்திறந்தீர்தரநோக்கி. (௬)

பூவென்னப்புகன்றனைப் புத்திரன்மொழிபற்றிப்
பாவென்னுமினத்துயரும் பஃறொடைவெண்பாப்பகர்ந்தா
னுவென்னவங்குற்று ரனைவோருமதிசயித்தார்
தேவென்னத்திகழ்பொருளாற் செயத்தகாதனவின்றே. (௭)

வாய்மையாற்றவம்புரிந்த மாதாவுந்தந்தையுந்தஞ்
சேய்மையலறுமாற்றஞ் செவிமடுத்துத்திருத்தியுற்று
ருமையாய்ப்பிறந்ததனு லுருத்திரசன்மன்கொலெனத்
தூய்மையோர்பலர்துதித்துத் தொழுதெழவுந்துணிந்தாரே. (௮)

முன்னமோரூமையையு முடவனையுந்திருத்தியவா
பின்னரோரூமையையும் பேசுவித்தானெனுஞ்சீர்த்தி
கன்னல்வேய்போல்வளரும் கழனிமலிதிருச்செந்தூர்
மன்னனுமுருகேசன் மாட்சியிடைவாய்ந்ததுவே. (கூ)

அமரர்களும்வியந்தோது மச்சிசுவின்றிருநாமங்
குமரகுருபரனென்றே கூறியதிவ்வுலகெல்லாஞ்
சமரநெடுந்தனிவேற்கைச் சண்முகவன்சம்மதத்தை
யெமரபினர்மாற்றுபுவே றிசைத்திடற்குவல்லாரே. (க0)

அக்குமரகுருபரனோ டருந்தவத்தோர்பலர்தாமு
மிக்குணர்ந்தபாவலரும் வேட்கையொடுகூட்டமிட்டார்
தொக்குமடாலயந்தோறுஞ் சுவைத்தமிழ்ப்பேரவைதோறும்
புக்குபசாரங்கள்பெற்றுப் புலியேறூருத்துலவினனே. (கக)

ஓதாமலுணர்ந்தானென் றுசிதகுணத்தினரெல்லாம்
பாதாரவிந்தத்திற் பணிந்தவன்சொற்பணிசெய்தார்
தாதார்பூம்பொழின்மலியுந் தருமபுரமடத்ததிபன்
மாதாவிற்கருணைமலி மாசிலாமணிக்குரவன். (கஉ)

இன்னவன்வந்துறுமாறோர்ந் தினியபரிகலமெடுத்துத்
தொன்னையில்வைத்திருமினெனச் சொல்லியெழுந்ததற்பின்ன
ரன்னவன்வந்தம்முனியே யருட்செந்தூராசானுத்
தன்னதுகண்களிற்றோற்றச் சாட்டாங்கமாத்தொழுதான். (கங)

கடல்விண்டமடைபோல்வான் கண்டுதெண்டனிட்டதுணர்ந்
துடன்வந்தோரதிசயித்தா ருவனுமவன்றனைத்தழுவி
நடனஞ்செய்திருவடியி னன்னிலைமையுணர்வித்துத்
திடமிஞ்சப்பரிகலத்தைச் சிவவேடத்துடனீந்தான். (கச)

தண்டுகுடையாளர்களாச் சாதுசங்கப்பேரரசாத்
தொண்டர்குழாம்போற்றிசைப்பச் சுகித்தாலுந்தொல்லுலகி
லுண்டுசுத்தஞானிகளென் றுரைத்தமொழிநிசமாயிற்
றண்டர்களும்பெறலரும்பே ரானந்தமடைந்தானே. (கரு)

ஞானகுருபரன்மகிமை நன்குணரமாட்டாதார்
போனவனைத்திருத்தொண்டர் புராணத்தின்கவியொன்று
லீனமுறச்செயித்தாண்டா னெனச்சொல்வாரிவனந்தத்
தானமதற்கொருபெரும்பொற் சாளிகையாயவிர்ந்தானே. (கசு)

சின்னாள்சென்றக்குரவன் றிருவாக்கின்வழிதேறிப்
பன்னுமெலைந்துழலும் பருவரன்முற்றறநீங்கி
முன்னுனகாசியினை முன்னினனங்காளின்
மின்னுறுதண்மருங்குன் மீனாட்சிவிழைந்ததனால். (கஎ)

கார்கொண்டவென்றெடுத்துக் கவின்பிள்ளைக்கவிபாடிச்
சீர்கொண்டமதுரைநகர்த் திருமலைநாயகனெனுமன்
னேர்கொண்டவரண்மனைவா யிலிற்சென்றானங்குற்றார்
கூர்கொண்டமதியிலராய்க் கொடுஞ்சொற்கள்கூறினரே. (கஅ)

அவ்வளவிலவன்றனைக்கொண் டரங்கேற்றுமாசையொழித்
திவ்வளவுஞ்செய்யாதா ளென்செய்வாளெனுஞ்சினங்கொண்
டொவ்வருமவ்வூர்க்கோட்டை யுத்தரவாயிலிற்றுயின்றான்
றெவ்வடர்வேல்வழுதிதரு திருமகண்மெய்யருள்கூர்ந்து. (கசு)

வேறு.

அந்தமன்னவன்கனவினின்முதற்குலத் தரிவைதன்னுருவாய்ப்போய்
வந்தமாதவன்சென்றதுந்துயில்வதும் வார்சடையொடுசேர்த்துச்
செந்தமிழ்க்கவிவடிவமாந்தனைக்கொடு செலநினைத்ததுஞ்சொல்லி
யிந்தமாநகரும்படியழைத்தரங் கேற்றுவித்திடுகென்று. (உ0)

சிறிதுறத்துரைத்தக்கணமம்முனி சிந்தையின்கனவூடும்
பொறிநிலாவுமார்பினனனுன்வருந்திறம் புகன்றனள்விழித்திட்டார்
செறியுமன்பொடுமன்னனுந்தவன்றனைத் தெண்டனிட்டழைத்தேகி
யறிஞர்கண்டுகண்டின்புறத்தக்கவா டம்பரம்பலகாட்டி. (உக)

சடையிற்கட்டுண்டுகிடப்பதாந்தன்னொரு சக்களத்தியின்றன்மை
யடையுமம்பிகைவடிவமாம்பிரபந்த மதனையத்தளைநீக்கி
மிடைதரும்பலபுலவருந்தவத்தரும் வேதியர்களுஞ்சூழப்
படைகொண்மன்னனுமின்புறச்சந்நிதி யினிற்படித்தனன்மன்னோ. (உஉ)

அந்தப்புத்தகந்தாங்கியூர்வலம்வரு மானையாதியின்சீருஞ்
சந்தக்கோகிலமனையமீனம்பிகை சந்நிதிச்சிறப்புஞ்சேர்த்
திந்தத்தானத்திலூறுபாட்டியம்பினு மினிதெனக்கொடுபேசு
மந்தப்பக்குவர்பலருளாரங்ஙனம் வகுப்பதென்னிசைவன்றே. (உ௩)

காப்புமுற்பகர்பருவமோரைந்தையுங் கடந்தபின்வாரானைப்
பாப்புகன்றிடத்துவக்கலுமம்பிகை பட்டர்தம்மகளாகி
மாப்புரந்தரனனையமன்மடிமிசை வந்திருந்ததுமுற்றிற்
போய்ப்புகுந்துழியறிவுறுவண்ணமே பொருக்கெனமறைந்தாளே. (உச)

மறையுமக்கணம்வந்துபோயினமகண் மானிடமலவென்ன
நிறையுமன்பினர்சிலரயிர்த்துசாவலு நிசம்படவியந்தார்த்தா
ரிறையுமித்தனைபேறுநான்பெற்றவா றென்னெனக்களிகூர்ந்தான்
குறையுஞ்சொற்றுமுற்றியதவன்றவபலங் கூறிடுந்தகைத்தன்றே. (உரு)

ஆணமிக்குமன்னத்தவற்கம்பொனு மாடையுமணிக்கூட்டுந்
தோணகல்கியென்னுலியன்றனவெனச் சொல்லுபுதொழுதேத்தி
நாணலோர்ந்துமலயத்துவசனைநிகர் நலமடைந்தனையென்றிட்
டேணருட்குரு சந்நிதிசேர்வனென் றியம்புபுநடந்தானே. (உசு)

நடந்துசோழமண்டலத்தின்வேளூரினை நண்ணுபுநகமாதுக்
கிடந்தரும்பெருமானடிதொழுதபி னெலைகவேற்குமரன்றன்
றொடர்ந்தெனைத்துதித்தேகுதியென்றலுஞ் சுரருணுமமுதென்னத்
திடந்தருஞ்சுவைத்தாயபிள்ளைக்கவித் தெரியல்செய்தணிந்தானே. (உஎ)

முன்னும்பின்னுமெத்தனைதலமோவிதி முறைப்படிதொழுதிட்டான்
றன்னுடைக்கவிவிழைபவர்க்கேதுதி சாற்றுதன்மையன்போலு
மன்னுதில்லையிற்போய்ச்செய்யுட்கோவையென் வண்டமிழ்த்தொடைசாத்திப்
பன்னுகாசிகண்டரன்பதத்தொருகலம் பகத்தொடைபுனைந்தானே. ()

நீதிநன்னெறிவிளக்கமுந்தவளநன் னிறக்கலைமகண்மாலை
யாதியாஞ்சிலபனுவலும்பகர்ந்தன னதன்றொகைமுந்நான்கென்
றோதினர்பலர்வகைதெரிந்தோர்பல ருரைப்பரப்பெருந்தேயத்
தேதின்மாற்றமுந்தருமமில்லாமையு மிலங்கல்கண்டுளநொந்தே. (உகூ)

இந்துத்தானிநாட்டினிலருந்தமிழ்நிறு விடுதன்மிக்கரிதேயா
முந்துநல்லறநடப்பதுமருமையோ வென்னமுன்னுபுமுன்னுண்
மைந்துறுங்குருகுலத்தர்வாழ்ந்திருந்தமா நகரிலந்நாள்வைகி
வெந்துவீரசேகரனெனத்திகழ்தரு மிலேச்சமன்னனைக்கண்டான். (௩0)

கண்டமன்னனீயாரெனவினுவலுங் கடற்புவிமுழுதுஞ்செ
ய்ண்டர்நாயகனடிமையென்றனனுட னவனுளனெனப்போற்றுந்
தொண்டரியாவர்க்கும்பொதுவனேவென்றனன் றுணிந்தவனுமென்ன
வுண்டலெம்மொடுசெயற்கிசைவாய்கொலென் றுசிதமில்வினுச்செய்தான்.

அவர்களுண்பனகேட்டறிந்தேனமட் டருந்திடாதேனென்றன்
றவலரும்புகழ்க்குருசொலவிலையெனச் சாற்றலுமவ்வாறே
சிவனெனுங்குருவெமக்குமாமிசந்தினச் செப்பிடவிலையென்ன
வுவகையோடுதெய்வீகமொன்றேனுமீண் டுளூற்றுதியெனச்சொன்னன்.

இன்றிராவினின்றெய்வமேயெனைத்தெரித் திடுமெனப்புகன்றோர்பால்
வென்றிவேலனைக்கருதிநொந்திருந்தனன் வேறுபல்குருவாயு
நின்றிலக்கமினெறிசெயுமவனவ னிதந்தொழுங்குருவாகிச்
சென்றிங்குற்றவன்விருப்பமீந்தனுப்புதி சீக்கிரமென்றனே. (௩௩)

அக்கணுப்பெறுமன்னவன்விடியுமுன் னம்முனிவனைக்கண்டெம்
மக்கதேசிகன்மொழியினுனின்பெரு மான்மியமறிந்துற்றேன்
றக்கவாறுநின்வேட்கைமுற்றுறச்செய்வேன் சாற்றுதியெனப்போற்ற
நக்கன்மேயகாசியின்மடமறுபத்து நான்குசெய்திடவேண்டும். (௩௪)

அதற்குவேண்டியநிலம்பொலமாதியு மாட்சகாயமுநல்கென்
றிதத்தொடோதினனங்ஙனமீதலு மெளிதினின்முடித்திட்டுக்
கதத்தராகுமத்தேயத்தார்காணுறக் கமலநான்முகனூல்சொல்
விதத்தவாமறமுழுமையுஞ்செய்தனன் விண்ணவர்வியந்தாரே. (௩௫)

ஒட்டகம்பசுமேடமாதியபல வுயிர்வதைத்தூனுண்ணுந்
துட்டர்கைப்பொருட்குலைகொடுபுலவருந் தூயமாதவத்தோரு
மிட்டமாந்தருமங்கண்மிக்கியற்றின னெறிகடலுவர்நீரால்
வட்டமாநிலமுய்யநன்னீர்பெயு மழைமுகிலுறழ்ந்தானே. (௩௬)

அங்குசிற்சிலநாள்வசித்துரைக்கரு மருந்தவநனியாற்றி
மங்குலார்பொழிற்காசியூர்புரந்தருள் வயிரவப்பெருமானுட்
பொங்குகங்கையிற்சிறியகாற்புனல்புகல் போற்கலந்தொன்றானு
னிங்குமற்றொருபிறப்பவற்கெய்திடா தெனுமொழிதிறந்தானே. (௩௭)

கனியுமின்சுவைச்சந்தமோதிடும்படிக் காசெனுமொருதொண்ட
னனியவன்பணிசெய்தனனெனச்சிலர் நவில்வரன்னவன்சாதி
தனில்வந்தோனென்பர்சிலர்சிலர்செங்குந்தர் தம்மனேச்சிசுவென்பார்
பனிமலர்ப்பொழிற்களந்தையிற்பிறந்ததாப் பகர்தன்மாற்றிலர்மன்னோ.

இல்லையம்பதிச்சிவன்படிக்காசளித் திட்டதாச்சிலர்சொல்வா
ரெல்லையின்றியவூர்தொறுமஃதிரந் தனனென்பார்சிலரின்னோன்
சொல்லைவேட்டரனளித்திடிற்காயலூர்த் துலுக்கனுதியர்ப்பாடுந்
தொல்லையன்னவற்றொடர்வுறாதெனத்தெளி தூயவர்சிலர்தாமே. (௩௯)

தய்யச்சந்தமேமிகைபடப்பாடுமத் தமிழ்ப்புலவனேவீணே
வையச்சம்மதமெனக்கிலையவன்குரு மான்மியத்துடன்சேர்த்துப்
பையக்கேட்டமட்டுரைத்ததுமுவகைமேற் படுந்தகவெனத்தேர்மின்
செய்யசொற்சுவையுணர்ந்தவரவன்றனைச் சிறிதுமெள்ளாரம்மா. (௪0)

கந்தவேள்பணிவயித்தியநாதர்தம் கலம்பகத்துடன்சிற்சில்
சந்தவின்கவியன்னவன்சொன்னவாச் சகத்தினிற்கண்டேன்மற்
றெந்தவெந்தலூர்க்கெப்பிரபந்தங்க ளிசைத்துளனோவன்னோன்
சொந்தமேனியுமுயிருமெய்தியகதி சொல்பவர்க்காணேனே. (௪௧)

செந்திலான்றிருவருளினாலூமைவாய் திறத்தலுங்கவிபாடுந்
தந்தியன்னவன்சரிதமுமவனடி சார்ந்தவன்றன்மாண்பும்
வந்திலங்கியமட்டுரைத்தேனினி மாவலியரசாட்சி
முந்தியுற்றவூராறுமாமுகப்பெயர் மூர்த்திசீர்மொழிவேனே. (௪௨)

குமாரகுருபரசுவாமிகள்சருக்கமுற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௧௭௮௭.

---

## நாற்பத்தைந்தாவது

## ஆறுமுகசுவாமிகள் சருக்கம்.

---

ஓங்கும்பெருமைத்திருக்கோவ லூரிற்குடிகொளொருமுனிவ
னுங்குப்பிறந்துவளர்ந்தோனே வலதோரூர்விட்டேவந்தோனே
தாங்குமிலிங்கதாரணத்தோன் றவத்தாலருட்பேறடைந்துய்ந்தோன்
றீங்குதவிர்த்தன்னவற்கருண்முன் செய்தகுருப்பேர்தெரிந்திலனே. (க)

தந்தக்கரித்தோற்பரன்வீர சைவாகமத்தோர்தலைவனென்பார்
கந்தக்கடவுளுபாசனையின் கனத்தோனென்பார்கவுமார
ரெந்தப்பொருளுமொன்றெனத்தேர்ந் திடும்வேதாந்தியென்பர்சில
ரந்தப்புருடனுண்மைநிலை யறிந்தோராரோவருள்சான்றே. (உ)

அல்லலொழிக்குமுதலாசா னறுமுகப்பேரணிந்தவிர்ந்து
நல்லபுலமைத்தொழில்வாய்ந்து நறுஞ்சொற்றமிழ்ப்பாப்பலபாடி
யில்லந்துறந்துமடமாத ரிச்சைக்கடனீந்தினரல்லாற்
புல்லருணராநிட்டாது பூதித்தனிநூல்புகன்றுனே. (௩)

இடமும்பொருளுமேவலும்பெற் றேனோரமுக்காறெய்திடுஞ்சீ
ருடன்வைதிகவாழ்வுறுநாளி லூரஞ்சேர்வீரபத்திரப்பேர்க்
கடகுஞ்சரனேரொருதொண்டன் கருணைக்குருவேபரமென்னுந்
திடமொன்றினையேகுறிக்கொண்டு செய்யும்பணியிற்றிறம்பாதான். (௪)

எடுத்தவுடலின்வினைமுடிவுற் றேகுந்ததிநேர்ந்திட்டமையா
லடுத்தகுருவின்முகநோக்கி யழுதானவனேனெனக்கேட்பத்
தொடுத்தவுனதுபணிவேட்கை தொலையாமையினுலென்றிடலுந்
தடுத்தவுடலோடியச்செய்திலான் றயையோவேகைத்தகைமலிந்து. (௫)

வருந்தேலுனதாருயிரினையோர் மாதாவயிற்றின்மகவாக்கித்
திருந்தாதரவாலெடுத்தாண்டு தேற்றியருள்வேனெனச்சொல்லிப்
பொருந்தோர்கணத்திலதுதனது போதவெளியிற்புகக்கவர்ந்தப்
பருந்தூலத்தைப்பிறரெடுத்துப் படியிற்புதைக்கும்படிசெய்தான். (௬)

காணுவுயிரைக்கண்டேனுட் கலக்குந்திறமைபெறுமொருவன்
வாணாளளித்தவ்வுடலினையேன் வாழ்வித்தில்லானெனமறுத்து
வீணுங்கதையென்றிடமாட்டார் விரியார்த்துளவெள்விடையுகைத்து
நீணாகப்பூணணிபரம னியமமதுவென்றுணர்ந்தோரே. (எ)

ஈண்டுமெகப்பேற்றிச்சையினு லிளைத்தபுனிதரெனையிரக்க
வேண்டுமென்னத்திருவருளை வெகுவாநினைந்தான்மெய்த்தவத்தாற்
றுண்டுமெயிலோனனையனையத் தன்மையாராந்தம்பதிக
ளாண்டுபெணிந்தவ்வளமொருநா ளிரந்தாரவர்பாலறைகின்றுன். (அ)

உமக்காண்மகவோரிரண்டுதிக்கி லவற்றுண்மூத்ததனையுரித்தோ
டெமக்கேசொந்தமாக்கொடுத்தற் கிசைவீர்கொல்லோவெனக்கேட்டா
னிமக்கார்வரைமின்னெடுசிவனே யெனமுன்னின்றாரிசைவுற்றார்
தமக்கேடறுமம்முனிகரத்தாற் றவளத்திருநீறளித்தானே. (௯)

அந்தமதியிற்சூலுண்டா யதற்குப்பத்தாமதிமுடிவிற்
சந்தமதலையொன்றுபெற்றாள் சார்த்தூலத்தின்கன்றெனவே
மைந்தனவனையம்முனிவன் மனத்துளிருந்தவுயிரென்பார்
பிந்தமூன்றுண்டாயவுடன் பிறந்ததோராண்பிள்ளையதே. (௧0)

முனிசொற்பலிதமுணர்ந்தவர்தா மொழிந்தபடியேமுதன்மகவைத்
தனியேகொடுபோயவண்விடுத்தத் தவன்பொற்கமலச்சரண்பணிந்திட்
டினியெங்கரத்துமதலையிட ரெய்தாதளிக்கைகடனென்றார்
துனியுற்றதுமாய்ந்திடிவிந்தச் சுதனைத்தருவேனெனச்சொன்னான். (௧௧)

சொன்னமொழிகேட்டுளநடுங்கித் தொழுதுபுகழ்ந்துதுரிசுடையே
மென்னவறியாமையிற்புகன்றே மெனினும்பொறுப்பதுனக்கியல்பா
முன்னதருட்சொற்பலிதமுணர்ந் திருந்துமயங்கேமெனவோதி
யன்னதாயுந்தந்தையும்போ யதற்பினறவோனம்மகவை. (௧௨)

சண்முகமெனும்பெயரிலிங்கந் தவளத்திருநீறக்கமணிந்
துண்முகமுனெக்குருகவெடுத் துச்சிமுகந்துமெய்தழுவித்
தண்முகவனைதனைநினைத்துத் தயங்காவண்ணந்தான்பழகி
விண்முகவமுதுறமுணவும் வேறாட்டாதேயுடனருத்தி. (௧௩)

மின்னனிகர்வேற்படைநிறுவி விழியாலிதுபார்த்திருவென்ன
கன்னற்மொழியாற்றியானமதும் பழக்குவித்தானுடுமேவ
னென்னதவஞ்செய்தனன்கொல்லோ யானின்பணிவேட்டனனெனச்
றன்னகுரவன்றன்பணியா மருமைசெயப்பெற்றனன்மன்னோ. [சொற்

இவ்வாற்றவன்பக்குவமெய்தியெவனப்பருவமதுமடைந்திட்
டொவ்வாமதூரத்தந்தாதி யொன்றுமுருகற்குரைத்தணிந்தா
னவ்வாறுயகாலத்தே யாறுமுகப்பேரருட்குரவன்
செவ்வானனையபெருஞ்சோதிச் சிவன்சேவடியிற்புகுந்தானே. (௧௫)

அச்சண்முகப்பேர்முனிவரனை யகிலமுழுதுஞானியென
மிச்சம்படவேசொல்லியது விருத்திவிரியாதொடங்கியென்று
மெச்சங்கத்துமழுந்தாம லேகநிலையிற்றோய்ந்ததவ
னச்சலெதுவாயினுஞ்சிறிது நழுவாவண்ணநடந்தனவே. (௧௬)

கும்பிட்டிறைஞ்சாரிடத்தொருசொற் கூறாநிலையுங்கொடுதிகழ்ந்தான்
றெம்பித்திருப்பாதிரிப்புலியூர்ச் சீரார்மடமுஞ்செய்தாண்டா
னம்பித்தனைச்சூழ்பவரறிய நவின்றதினைத்தந்நாழிகையிற்
கம்பிட்டவிர்காதுடைப்பெருமான் கழற்றாண்மலரிற்கலந்தானே. (௧௭)

ஆறுமுகப்பேர்முனிபுகழு மடுத்தபிறப்பிலவனருளாற்
றேறுமகிமைச்சண்முகப்பேர்த் தெளிஞன்செயலுஞ்சிறிதுரைத்தேன்
சாறுமலிதில்லையின்முத்துத் தாண்டவன்றன்றமிழ்ப்பாடல்
கூறுநலத்தாலரியகதிகொளுமா றுரைக்கக்குறித்தேனே. (௧௭)

ஆறுமுகசுவாமிகள்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௮௦௫.

நாற்பத்தாறுவது

## முத்துத்தாண்டவர் சருக்கம்.

ஆழியானறி யாமலர்த்தாளுளான்
வாழிடங்களுண் மாமலரோன்றெழுங்
காழியூரிற் கணிகையரியாவரும்
வீழியத்தொர் விடலையுற்றனரோ. (௧)

இட்டமங்கைய ரெண்ணிலர்ச்சேர்ந்ததாற்
குட்டநோயடைந் தான்விரற்கூட்டமுன்
னட்டமாடு நின்புறநல்லியம்
கொட்டதீர்ந்து குழிப்புண்கள்கொண்டவே. (௨)

இச்சித்தார்க ளெதிர்வரக்காணினுஞ்
சிச்சியென்றிடச் சீரழிந்தானொர்நாள்
பச்சிளங்குயி லன்னபராபரை
நச்சிடாமுன்க ணுவில்வந்தாளரோ. (௩)

காண்டலுந்தொழு தான்கலுழ்ந்தானெனல்
வேண்டலியாதறி வாயெனவிண்டனன்
றூண்டவப்பெயர் தாய்தந்தையிட்டிடப்
பூண்டவிர்ந்துபின் புண்பட்டுளானன்றே. (௪)

கட்டுத்தாண்டவ னென்னக்கழறினோர்
முட்டுத்தாண்டவ னென்றுமொழிதரப்
பட்டுத்தாபமுற் றேனவட்பார்த்தலு
நட்டுற்றாழ்குண முற்றவநல்கலே. (௫)

அன்னவன்மிசை யம்பிகையார்வமாய்ப்
பொன்னதாற்செயு மம்பலம்போற்றினு
னுன்னதின்ன லொருங்கொழிந்துய்குவா
யென்னவோதிமறைந்தனளியாமத்தே. (௬)

அன்றுதொட்டவ னைந்தொழினாடகந்
துன்றுதில்லையிற் போய்த்தொழச்சோம்பிலான்
குன்றுவில்லெனக் கொண்டவரன்னவன்
கன்றுநெஞ்சினுங் காண்டரலாயினார். (எ)

அந்தணாள ரறைதருமாற்றமே
முந்தவுற்றிட வைத்துமுறைப்படிச்
செந்தமிழ்த்துதி செய்யெனச்செப்பலுஞ்
சிந்தநேகந் தினஞ்சொலிப்போற்றினான். (அ)

எய்த்துத்தாழ்வுற வேய்ந்தவிரும்பிணிக்
கொத்துத்தீர்ந்து குலாவெழிலெய்தலுந்
தத்துத்தோய்முடத் தாண்டவனென்புலி
முத்துத்தாண்டவ னென்னமொழிந்ததே. (கூ)

வரும்வழிக்கணோர் மாசுணந்தீண்டலா
லருமருந்தென் றணிகிளர்கீர்த்தனை
பொருவிறில்லையிற் புண்ணியன்மேற்சொலி
மருளுறாதுயிர் வாழ்க்கைபெற்றானரோ. (க0)

கொள்ளிடங்கரை கொள்ளரிதாயநீர்
வெள்ளம்வந்து தடுத்ததனான்மிக
வுள்ளுடைந்தொரு கீர்த்தனையோதினான்
கொள்ளைக்காலங் கழித்தற்குறித்தரோ. (கக)

உடனந்நீர்வறந் திட்டதங்குற்றுயிர்
நடனநாயக னல்லருட்சோதியிற்
கடமதோடு கலந்துகொள்வேனெனுங்
திடமிலங்க வொருகவிசெப்பினான். (கஉ)

இன்னவண்ணந் தினந்தினமேத்தலோர்ந்
தன்னவாகனத் தார்தலைமாலையா
னின்னலின்றி யவனுய்தற்கேற்றபைம்
பொன்னளித்தன னென்றும்புகல்வரே. (கங)

கரந்தமாயைக் கடல்கடந்தப்புறஞ்
சுரந்தவின்னருட் டோற்றமிக்கெய்தலா
னிரந்தரந்தனை நீங்கலனாகிவா
ழரன்றனாதெனா ராதிரைநாளிலே. (கச)

மாறுதீர்புகழ் மாணிக்கவாசகர்
பேறுநல்குதி யென்றோர்பெருங்கவி
கூறுமக்கணங் கூட்டொடுசோதியி
லூறுதீர்கதி பெற்றுவந்தானரோ. (கரு)

முன்னடைந்தபன் முத்தர்தம்முத்தியூ
டின்னமுத்தி யினிதினிதென்னவே
பன்னவல்லமெய்ப் பாவலர்சிற்சிலோர்
நன்னர்நான்முகத் தோனனையார்களே. (கசு)

சிந்தநேகஞ்சொல் சீர்முத்துத்தாண்டவ
னந்தமுத்தி யடைந்தமைகூறினேன்
கந்தனூடற் கவிசொலக்கச்சியூர்
வந்தவேதியன் மாண்புரைப்பேனரோ. (கஎ)

முத்துத்தாண்டவர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅஉஉ.

## நாற்பத்தேழாவது
## கச்சியப்பசிவாசாரியர் சருக்கம்.

கவினுர்தொண்டைநாட்டிற் கணக்கினகரிற்றலையென்
றவிர்சீர்க்காஞ்சிப்பதியி லமையுங்குமரகோட்டம்
புவியோர்பலரும்போற்றும் புகழ்வாய்ந்திடச்செய்புனித
னவிலாகமவேதியர்த நல்லகுடியிற்பிறந்தோன். (க)

கச்சியப்பக்குருக்க ளென்னும்பெயர்தோய்காளை
பச்சிலையும்பல்பூவு முருகோன்பதத்திலிடுவோ
னச்சியவன்செயாட லனைத்துநறியதமிழான்
மெச்சிக்கொளுஞ்சொற்கவியாற் சொலவேமிகவும்விரும்பி. (உ)

ஓராறெழுத்தாற்றினமு முருவேற்றியுபாசித்தான்
சீரார்கலபக்குடைசூழ் சிகிவாகனத்துச்செவ்வே
ணோராவருதல்போன்றே நிட்டையதனிற்றோற்றித்
தாராளமதாவாக்குத் தந்தேம்பகரென்றனனே. (௩)

அன்றுமுதலாக்காந்தத் தவிர்சங்கரசங்கிதையிற்
றுன்றுகதையைக்கவியாச் சொல்லத்துவக்கிக்கொண்டா
னன்றுதவறுதயில்வே ணுளுந்திருத்திவந்தா
னென்றுமுலகிற்பல்லோ ரிசைக்குமொழிகேட்டனனே. (௪)

அத்தன்மையநூலிடத்து மருள்சேர்வியாதமுனிவன்
சித்தமறியவகுத்த சிலவற்றினைமாற்றியதா
வித்தரையின்மானிடர்தா மியம்பலுளதேயெனின்மற்
றெத்தகையபாவலரோ விகழ்புகழெய்துநரே. (௫)

தாரகன்றுன்கந்தன் றன்பாலுரைத்தற்குறைத்தான்
வாரமுடையாரொருபெண் மகளுக்கழுகைவளர்த்தா
னீரமிலருஞ்சனமக்கு மிழிவைப்பெருக்கியிசைத்தா
னுரமலையோனருள்பெற் றதனைக்குறுக்கியறைந்தான். (சு)

என்னச்சிலர்சொற்றிடுவா ரிதனுலெவரெப்பனுவற்
சொன்னபொழுதுமதனைத் துதிப்பார்சிலருமிகழ்ந்து
பன்னவலர்சிற்சிலரும் படியிலிருப்பார்கருதி
னன்னவகைஞாயமுமா மல்லாதனவுமாமே. (எ)

பொருளின்மிகையோர்செய்தல் புகழேயெனினுமிகழ்வே
யருளின்வலியோராற்ற லழிவேயெனினுமறமே
தெருளின்முதியோருணர்வார் சிறியோரறியார்சிந்தை
மருள்கொண்டுலகிற்பலர்பால் வாதிட்டுழல்வார்மன்னே. (அ)

அந்தத்திறத்தாலந்த வாதிசைவப்பனவன்
கந்தக்கடவுள்சரிதக் கவியொர்பதினாயிரமாச்
சொந்தக்கரத்தால்வரைந்து தொகுத்தான்முடிவாயதற்பி
னிந்தப்புவியிலரங்கேற் றிடுதற்கிடம்பார்த்தனனே. (௯)

எந்தச்சபையுங்கச்சி யிருபானுன்குகோட்டத்
திந்தச்சபைக்கொவ்வாதென் றேற்றகாலங்குறித்து
முந்தப்பலர்க்குஞ்சாற்றி முதியோரவைகூடியபின்
பந்தச்சுவடியவிழ்த்துப் படித்தான்முதற்பாட்டினையே. (௧0)

சிறப்புழகாரந்தகரஞ் சேர்ந்துடகாரமான
மறப்புமுதற்சீரிடமே வந்தகொடுமையெண்ணிப்
பிறப்புமிறப்புந்தவிர்க்கும் பெரும்புண்ணியகாவியத்தைத்
துறப்புமுனிவோரிகழச் சொல்லிக்கெடுத்தாயென்றும். (௧௧)

புகன்றதுவுங்கேட்டதுவும் போதும்போதுமென்று
மகன்றுபோதியென்று மழவிற்கொடுஞ்சொல்லறைந்தா
ரிகன்றுள்ளாருமன்றே யென்றென்றெண்ணியேங்கிக்
குகன்றனருளோநாடிக் கும்பிட்டாரக்குருக்கள். (௧௨)

வேறு.

அக்கணந்தலைப் பாகையுங்கடுக்கனு மவிரப்
பொக்கணத்துறு சுவடிகள்புறத்தினுந் தோன்றத்
தெக்கணத்திசைப் புலவனுத்திருவுருக் கொண்டு
மிக்கபாவல ரவைநடுப்புகுந்தனன் வேலோன். (௧௩)

வந்துதம்முடனிருந்தவன்றன்னையம் மதியோர்
முந்துபாவலர் போல்பவனேயென முன்னு
வுந்துகாவியங் கொடுவருமவன்பக ருறும்
வெந்துதாஞ்சொலுங் கொடுஞ்சொலின்விவரமும் விண்டார். (௧௪)

* அவனுந்தானுபா சித்ததுங்குமரகோட் டத்தா
னவமதாவருள் செய்ததுகவின்றமுற் றியது
மிவர்தம்பால்விரித் தொருகவிபகர்முனென் னியதும்
விவரமாப்புகன் றானுடன்வந்தவன் விள்வான். (௧௫)

---

* அவன் - கச்சியப்பசிவாசாரியர்.

இருவர்மீதினுங் குற்றமின்றிவ்விதி யருமை
பருவமில்லவ ருணர்கிலர்முதலுறப் படாதே
பொருளை யாறளித் திட்டவற் கறுமுகன்புகன்ற
வொருதொல்லேட் * டிலக் கணமுளதென்றுரைத் தெடுத்தான். (கசு)

எடுத்தவேட்டிடை யிதுமுதலியசில ஞாய
மடுத்தடுத்துரைத் திடவொணுதருந்தகைப் புலவோர்
கடுத்தமாஞ்சில தானத்திற்கழறலா மென்றேற்
படுத்தப்பட்டுள சூத்திரம்பார்த்தனர் பலரும். (கஎ)

நூறுநூறுபாப் பாடிநுந்தமைமிக நம்பித்
தேறுவீரென மகிழ்வுடன்செப்புமன் னவனைக்
கூறுகென்றுசில் கவியளவினுஞ்செவி கொடாமன்
மாறுமுற்சொலிற் செ்லல்கொடிதென்னவும் வகுத்தான். (கஅ)

இந்தகாவல னுஞ்சிவப்பனவன்வா யேத்துங்
கந்தனுதரு ளேயெனையிவ்வயிற் காட்டிற்
றந்தவேளையி லங்ஙனமுறுத்தநீ ரடித்துச்
சொந்தவேட்டினு ரூற்றிலீரென்னவுஞ் சொன்னுன். (ககூ)

கந்தன்சம்மதந் தன்னையார்கடக்கலா மென்றிட்
டந்தவேளையி லங்ஙனமேயுருக் கரந்தா
னிந்தமூர்த்தியே யவனெனத்தெரிந்தவ ணியாரு
நந்தலின்றிநல் லானந்தவாரியி னனைந்தார். (உ0)

அதற்பினன்னவன் வாயறைதரச்சினுள் வினவி
முதற்சொலங்ஙன மமைத்ததுமுருகனென் றுணர்ந்திட்
டிதத்தவாமுப சாரமிக்கியற்றியேத் தெடுத்தார்
மதத்தவாரண மனையவன்களிப்புடன் வாழ்ந்தான். (உக)

அவன்பினெய்திய வறுபவங்களுமவன் றன்மாண்
புவந்துலோகமுற் றுரைத்திறைஞ்சியதும்வீட் டேறலுஞ்
சிவன்றனுதழற் கண்வழிவந்துரூர்ச் செருத்துக்
கவன்றவானவர் சிறைவிடுங்கடவுளோர் குவனே. (உஉ)

செந்திலாதிய தலந்தொறுந்தினஞ்செயும் பூசை
யந்தியத்திலப் புராணத்தின்கவிகளு மறைந்தார்
மந்திபாய்பொழி லீழநாட்டினரதன் மாண்பா
லுந்திவீழ்பிணித் தொடர்பொழிந்தனரொனு முலகே. (உ௩)

தந்தகச்சியூர்ச் சைவவேதியன்றக வுரைத்தேன்
செந்தமிழ்க்கவி பாடெனக்குகன்சொலச் சிறந்த
பைந்தமிழ்த்தொடைப் பகழிக்கூத்தன்றிறம் பகர்வாம். (உ௪)

கச்சியப்பசிவாசாரியர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க௮௪௪.

---

* இலக்கணம் - வீரசோழியம்.

நாற்பத்தேட்டாவது

# பகழிக்கூத்தர் சருக்கம்.

தமிழ்வளர்ந்ததென் மதுரையினருகிலோர் தனியூர்ச்
சிமிழன்றன்மனைப் பாலனுப்பிறந்தவன் சேணி
னமிழ்தருந்துமின் ஞர்விழைதருதிண்டோ ளார்செ
யிமிழ்தொனிச்சமர்க் கேற்றவாளிகள்சமைத் தீவோன். (க)

பகழிக்கூத்தனென் றொருபெயரியாவரும் பகர
நிகழ்வுற்றேன்முனை நாட்புரிதவத்தினு னிரம்பித்
திகழ்சொற்சாரமார் செந்தமிழ்ப்புலமைதற் சேர்ந்தும்
புகழ்நட்டோர்கவி யாயினும்புகன்றிடா திருந்தான். (உ)

பாடுகின்றிலன் றவஞ்செய்வேனினியெனப் பலகா
ஞடுகின்றசில் புலவரைவலிதெதிர் நண்ணிக்
கூடுகென்றமின் ஞளெனப்பலகவி கூறி
யேடுகொண்டெழு தவுஞ்செய்வாளெனன்பொறுத் தனளே. (௩)

எந்தத்தெய்வமுத் தமிழ்க்கவியிச்சைமிக் கதுவோ
வந்தத்தெய்வம்வங் தென்றுதியறைகெனி லரிய
சந்தச்செய்யுளுங் கலந்துசாற்றுவலெனத் தருக்கிச்
சொந்தச்சிந்தையி னினைந்துசிற்சிலரொடுஞ் சொன்னன். (௪)

வாக்குநன்கமை தருமுனந்தேவரை வாழ்த்தி
நோக்குபான்மையெய் தாதுளநுடங்கினர் பல்லோர்
தேக்குசெந்தமிழ்ப் புலமைமுற்றியுமிதென் றேவென்
ருக்குபாடலா ரவனிலோதாதிருந் தனரே. (௫)

கரவில்சுந்தர மூர்த்திசொல்லியதமிழ்க் கவிக்காப்
பரவைதன்மனைத் தூதுசெல்சிவனுமோர் பத்த
னுரகப்பாய்சுருட் டென்றலுஞ்சுருட்டுமா யோனும்
விரதமாங்கவன் செயல்குறித்தேன்விழைந் திலரே. (௬)

முழுதுணர்ந்தமெய்ப் புலவனச்செந்தில்வாழ் முருகோன்
கழுதுங்கண்படு மொருசிசிப்பொழுதவன் கனவிற்
றொழுதகைத்திரி சுதந்தரப்பனவனுத் தோற்றி
யெழுதுசீட்டொன்று மிலைத்திருநீறுமீந் தனனே. (௭)

கொழுந்துவிட்டெழு மாணவப்பகழிக்கூத் தன்று
னழுந்துமித்திரை தவிர்ந்துவப்புடன்வியப் படையா
வெழுந்துபார்த்தலு மிரண்டுமோங்கிருக்கைகண் டவற்றை
விழுந்துதெண்டனிட் டெடுத்துவெண்ணீறணிந் ததற்பின். (௮)

சீர்த்தசெட்டிற்பூ மாதுபோற்றிடும்புகழ்ப் பகழிக்
கூத்தநின்கவி கேட்பதற்கியாம்பற்றேன் கொல்லோ
வார்த்திகல்கறி யேங்கொலோகூற்றுவ னடாமற்
காத்திடற்கறி யேங்கொலோவெனுங்கவி கண்டான். (௯)

கண்டுநான்முகக் கடவுளைக்குட்டிய கவின்கை
கொண்டசெண்முகன் வரைகவிவலிதினிற் கொடுத்தான்
விண்டுமெச்சுசீ ரவனருட்செயல்பெற மெய்ம்மைத்
தொண்டுமுன்னமே செய்திலேமெனமிகச் சோர்ந்தான். (௧௦)

வலிதுவேண்டுதெய் வானைநொந்தழும்படி வாட்கட்
புலியிற்சீறிடுங் குறமகட்பணியுமப் புத்தே
ளொலிகொள்பாப்பல புகன்றவர்த்துயர்செய்திட் டுரையாக்
கெலிகொள்பாவலர்ப் பர்டுபுகெஞ்சுதன் முறையே. (௧௧)

அவன்சொல்பாடலின் முதற்சொலேமுதலுற வமைத்துச்
சிவந்ததீஞ்சுவைப் பேரொலிச்சொற்களே சேர்த்துப்
பவங்கொல்செந்திலம் பதிப்புகழிடையிடைப் பரப்பி
யுவந்தவாறுபிள் ளைக்கவிப்பனுவலோர்ந் துரைத்தான். (௧௨)

ஆன்றமுப்பொறி மங்கலங்கடைதிரிந் ததுவுங்
கோன்றனூர்ப்பெயர்க் கமைதருபொருத்தத்தின் கொடிதும்
வான்றனைப்புரந் தானருளாற்றமிழ் வண்ண
மேன்றவண்சுவை யான்மிகவினியவா யினவே. (௧௩)

பொருத்தமாதிய சிலவகைமழையெனப் பொழியுந்
திருத்தமின்றிய வாய்க்கும்வண்சுவைபுகாச் செவிக்கும்
வருத்தமுங்களிப் புந்தருமென *வறு வகைய
வருத்தமாரிலக் கணஞ்சொலற்கீதொர்சான் றுமே. (௧௪)

வாணிகேட்டுணர் தரத்தினம்பல்விதி வகுக்கு
மேணிலாவிய முழுதுணர்புலவன்மே லெழில்வேற்
சேணிறம்பெறத் தொடுத்தணிகடம்பலர்த் தொடைநேர்
மாணிறைந்தவப் பனுவலோடவனசெந்தூர் வயிற்போய். (௧௫)

முருகன்றன்னையுந் தம்முடனொருவனு முன்னும்
பெருமைசான்றமுக் காணியரெனும்பெயர்ப் பனவ
ரிருசகத்திரர் தம்மொடும்வந்தவா றிசைத்தா
னொருவராயினு மவன்றனைமதித்திலா ருணர்ந்தே. (௧௬)

கம்மியக்குலத் தினனெனத்தெரிந்தகா ரணத்தாற்
றம்மினத்தினர் களைமதியாத்தவ றெண்ணி
யிம்மிடுக்கவன் பெறத்தகாதென்னவு மிகழ்ந்தார்
செம்மிடுக்கனுற் றிலரதுகுகனருட் செயலே. (௧௭)

---

* அறுவகையிலக்கணம் - இந்நூலாசிரியரால், எழுத்துமுதலைந்துடன் புலமையிலக்கணமுஞ் சேர்த்தியற்றப்பட்ட நூல்.

உண்டியாதியா லுரைக்கருந்துயரடைந் துழன்று
கண்டிடுங்களுத் திறநினைத்திடுந்தொறுங் களித்துத்
தெண்டிரைச்சர வணன்றன்மேற்சிற்சில்காற் சினமுங்
கொண்டிகழ்ந்துழும் மதியவ்வூர்க்குடியிருந் தனனே. (௧௮)

தெய்வசாதியிற் சேர்ந்ததெஃதாயினுஞ் செறிவார்
கைவதாற்றிப்பின் னருள்செயும்வழக்கமு நம்பு
மெய்வழக்கினர் துயருறில்வீரமே வீட்டாற்
செய்வதோர்ந்திடா தொழுகலுந்திகழ்தரும் பொருட்டே. (௧௯)

குன்றமேவிக ருரனுடைப்பகழிக்கூத் தனோர்நா
ளின்றருட்செய விலங்கிடாவிடிற்குகற் கெனச்சொல்
வன்றமிழ்க்கவி மாலையைக்கிழித்தெறி குவனியா
னென்றங்கோர்புறந் திண்ணையிற்றுயின்றன னிரவே. (௨௦)

சீட்டுத்தந்ததோன் முறைப்படிசெந்திலா னவன்றன்
மாட்டுச்சென்றவ்வூர்க் கோயிலில்வாய்த்ததோர் பதக்க
மீட்டுக்கென்றளித் தின்னதானத்தில்வை குதிபின்
பாட்டுக்காமுறும் பரிசுகாட்டுதுமெனப் பகர்ந்தான். (௨௧)

அன்னதோர்வியன் காண்டலுமருந்துயர் முழுதுஞ்
சின்னபின்னமாச் சிதறலிற்செருக்கொடு சென்று
சொன்னதான * வாற் றூரி † னுற்றூரயற் றேய்ந்தான்
மின்னனேர்வடி வேலவனவ்விர வினிலே. (௨௨)

நன்னிலைக்குல சேகரபட்டின நகரந்
தன்னின்மேவுகாத் தபெருமாண் மூப்பனென் றவன்பால்
முன்னியன்றன யாவையுமொழிந்துபின் னவன்றான்
பொன்னினுற்செய வேண்டியவிவரமும் புகன்றான். (௨௩)

விடியுற்காண்டலு மவனோர்வேந்தெனச்சிவி கையிற்போய்க்
கடிகொள்செந்திலின் கோயிலிற்பதக்கத்தின் கலக
நெடிதுவிஞ்சுமுன் குகனடத்தியவித நிகழ்த்தித்
துடிகெடாப்புல வோன்வயிற்றுரிதமாச் சென்றான். (௨௪)

செந்தின்மாநகர்த் தானிகரிருசகத் திரரும்
வந்தியாவரு பாவலன்றன்மைமா மதியா
துந்திடுந்துயர் விளைத்தனமெனப்பெரி தொல்கித்
தந்திகாணுறு மாணவந்தணர்ந்தெதிர் நடந்தார். (௨௫)

சிலமிக்கபுண் ணியத்தினன்சிவிகைவிட் டிறங்கி
யாலடிக்கண்வை கியபுலவோனடி பணிந்து
வேலனித்தனை கருணைநின்மேற்செயப் பெறலாற்
சாலவிட்புலர் பகர்தவத்தினையெனச் சாற்ற. (௨௬)

---

* ஆற்றூர் - திருச்செந்தூருக்கருகிலுள்ள வொருவூர்.
† ஆற்றூர், ஆல் ஊர் - அதாவது ஆலமரத்தடி.

அவன்கண்டுன்பெருஞ் செல்வமேசெல்வமா மந்நாள்
சிவன்செய்மாதவத் தால்வருகுமரவேள் சிந்தை
யுவந்துன்பாலிது செயச்சொலலருமை யென்றுரைத்தா
னிவர்ந்தயனமோ டிருவருஞ்செந்திலேக் கினரே. (உஎ)

பகைத்தசெந்திரு வாகியமாமியும் பாடன்
மிகைத்தவாணியா மருமகடாலுமெய் யுறவாய்த்
தகைத்தண்டாமரை யொன்றில்வீற்றிருந்தனர் போலு
முகைத்தயானத்தவ் விருவருமொழுகுமப் பொழுதே. (உஅ)

செந்தின்மாநகர்க் கடுத்தலுஞ்சிவிகைநீத் தாங்கண்
வந்திதஞ்சொல்வே தியருடன்கலந்துபோய் மதநீர்த்
தந்திமீதிலச் சுவடிவைத்தினிதுசூழ்ந் ததற்பி
னிந்திரற்கருள் செய்தசேய்சந்நிதி யெய்தி. (உகூ)

பொங்குமின்சுவைப் பனுவலைக்குறுங்கழல் புனைவித்
தங்குசெய்யவேண் டிவெலாங்குறைவற வாற்றி
வெங்குரோதமற் றந்தணருவகைமேற் கொள்ளத்
தங்குசீர்கொளம் மூப்பன்றன்சம்மதப் படியே. (ஙo)

பகழிக்கூத்தனும் பாவலன்படித்துரை விரித்தான்
குகனங்கெய்திய வுவகையின்குறிப்பெனக் கூடி
நிகழுமப்பெருஞ் சபையிலோர்புலவன்று னிகரில்
புகழெந்நாளுங்காத் திடத்தகுமொருகவி புகன்றான். (ஙக)

செந்தமிழ்க்குவாய்த் ததுதிருச்செந்திலப் பதியின்
கந்தனுக்குப்பிள் ளைக்கவிசெய்தனன் கமலை
தொங்கமார்பன்றேர்ப் பாகன்சேய்தருபெருந் தொழின்மால்
பந்தமீர்தரு பகழிக்கூத்தனெனும்வெண் பாவே. (ஙஉ)

அதனிற்குக்குடம் வெண்ணிறத்தினதென வறைந்த
விதமெல்லோர்களு மறிகிலார்மிக்கமெய்ஞ் ஞானப்
பதம்விழைந்துசற் குருமொழிப்படியுபா சனைசெய்
திதம்விளைத்திடத் தகுகவுமாரர்தம் மியல்பே. (ஙஙு)

வண்ணப்பாவலர் களும்பலராயினு மயிலோன்
றிண்ணத்தோட்கிளி வில்லிபுத்தூரனென் றிறலோர்
கண்ணப்பேசுநர் பகழிக்கூத்தனைப்புரை சிலரே
யெண்ணப்பாடினு மோசையுநிறமுமெய் தரிதே. (ஙச)

உறியிற்பாறயிர் கவர்ந்துண்டான்பருவங்க ளுன்னிச்
சிறியபாக்களாற் * கோதைதன்றாதைசெப் பியபின்
குறிசொல்வாள்புணர் கொண்கனைப்பகழிக்கூத் தன்று
னறியவண்ணமுங் கலந்துசெந்திலவை கவின்றான். (ஙரு)

* கோதை - ஆண்டாள்.

அதற்பினூமைவாய் திறந்தபாவலனவை யறைந்தான்
புதற்கொப்பாளுஞ்சில புலவர்பின்னருமவை புகன்று
ரிதற்குத்தக்கவண் ணத்திறமில்புல வோரு
மதத்தினற்றுணிந் துரைத்துமாட்சிமைகுறைந் தனரே. (௩௬)

அத்தனைப்பனு வலேயரங்கேற்றலு மன்னேன்
சித்தமின்புறப் பொன்கொடுத்தவனிடஞ் செவ்வே
ளுய்த்ததாம்பதக் கத்தினேமீட்டிருந் துழித்தான்
வைத்தனன்குல சேகரபட்டின வாணன். (௩௭)

பாப்பகர்ந்ததன் பயன்பெறுபகழிக்கூத் தனுமக்
கோப்பநந்தமுங் குமரவேளுரைப்படி செயுமம்
மூப்பனுங்கதி பெற்றதுமொழியவேண் டுவவோ
மீப்படும்புக ழூனயவெத்தனேகொலோ மிலேந்தார். (௩௮)

அந்தப்பாவலன் றயைவழிமெய்யரு ளடைந்தோ
னெந்தப்பாவல னோவக்கிரகமென் றவற்றின்
சொந்தப்பான்மைசொன் மந்திரகக்கிசத் தொன்னூற்
சந்தப்பாயிரத் தவன்றுதிசாற்றிவைத் தனனே. (௩௯)

திகழிக்கோன்புகழ் செந்திலான்விழைதரு செஞ்சொற்
பகழிக்கூத்தன்றன் சரித்திரமிங்ஙனம் பகர்ந்தே
னகழிக்கார்க்கட லகிலமீதிருவயி ணவர்தா
மிகழிற்போற்றுமா றறுமுகனுண்டசீ ரிசைப்பாம். (௪0)

பகழிக்கூத்தர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - கஅஅசு.

---

நாற்பத்தோன்பதாவது

# இ ரு வ யி ண வ ர் ச ரு க் க ம்.

தென்குருகைப்பதியினிலோர் வயிணவவேதியன்றமிழ்ச்சொற் சிலமெ
நன்குணர்ந்தோனவ்வூரி னுதிநாதனேயலது நண்ணுப்பண்போன் [ல்லா
புன்குலத்தோரானலும் பாகவதர்க்கடியவரேற் போற்றநாணன்
வன்குரங்குநாணமுறப் பிடிவாதந்தவிராத வயிரநெஞ்சான். (க)

சடகோபன்முதலினர்பன் மூர்த்திகளேப்போற்றியதுந் தவறென்கின்
றோன்,விடமார்கண்டனுமயனுந் தனேப்போல்வாரெனத்துணிந்து விளம்
பற்கஞ்சான், கடமாவிற்பொன்னகரி வலம்வருவான்முதலினரைக் கணித்
திடாதான், படநாகத்தினுங்கொடியா னெனவுலகிற்பலர்தாமும் பழிக்க
வாழ்ந்தான். (உ)

மூந்நான்குநாமமிட்டுத் துளசிமணிவடம்பூண்டு முடித்தகுஞ்சி
பின்னலப்பஞ்சகச்சச் சோமனுடனுத்தரியம் பிறங்கக்கட்டிக்
கைந்நான்கோடக்கோயிற் கருப்பகிரகத்தினிற்றற் கருதலன்றி
நெய்ந்நாறுகரத்தனிரா கவன்முதலோரையுஞ்சிறிது நினையானுனன்.(ங)

அத்தனுகயோன்றன்கனவின் முருகேசன்செந்தூரந் தணைப்த்
தோற்றிக்,கொத்தலர்பூமுடித்தவிர்முன் குடுமியும்வெண்ணீறுமலர் குமு
தவாயுஞ், சித்தமறிதரக்காட்டி நீயெமதூர்க்குகன்மீது செஞ்சொற்பா
டல், புத்தமுதமெனப்புகன்று புனேவாயேற்பயனாநந்தம் பொருந்து
மென்றான். (ரு)

அக்கனவுகாண்டலுமக் கொடியவயிணவப்பனவ னழலினூடு
புக்கபுழுவெனத்துடித்து விழித்துலகிற்றனேமணந்த புருடனன்றி
யொக்கவவனுடன்பிறந்தா ரையுமதியாக்கற்பினளே யொருவாற்றானுந்
தக்கவனல்லாவொருவன் பிடித்திழுத்தால்வருந்துதல்போற் றயங்கினனே.

மென்றுயிலுஞ்செய்யாதவ் விரவுமுழுமையுங்கழித்தான் விடிந்த
பின்னும், கன்றுதலுற்றுத்தனது கடவுளெதிர்போய்ச்சிறிதுங் கருணை
யின்றோ, குன்றுறும்வேடுவர்வணங்குங் குறுந்தேவுமெனையாளக் குறித்த
தென்னென், னென்றுழந்தானவனடைந்த துயர்வகையென்னனேயாரா
லியம்பொண்ணுவே. (௬)

அப்பகல்போய்வருமிரவி லாலயத்தின்பூசைமுடிந் ததற்பினுங்குற்
றெய்ப்பறநாரணற்கருதி யினிதுதுயின்றுனொருவ னெஃகவேலோர்
கைப்பதுமத்தேந்திமற்றோர் கரமலரிலாழிகொடு கடிதுதோன்றி
யிப்படிவம்பார்த்தனையோ வெழிற்செந்தூர்த்துதிசெயலா மெனச்சொன்னனே. ()

முன்னிரவிற்பெறுந்துயராந் தழனறுநெய்சொரிந்தாங்கு முதிர்ந்து
வேவ, வென்னினிச்செய்திடலாமென் றிடைந்துமறுநாளிரவி லியாவு
முண்டோன், சந்நிதியையடுத்தருத்த மண்டபத்திற்போய்த்துயின்றான்
சடகோபன்சொ, லின்னிசைச்செந்தமிழ்மறையா லேகபரத்துவந்தெரு
ளினமையோனே. (அ)

அன்றிரவிலாழியுஞ்சங் கமுமபயவரதமுந்தோய்ந் தவிர்காற்றோளு
முன்றிகழ்பேரருட்கமல விழித்துணையாதியகுலவு முகமுமுங்கான்
கென்றினையுஞ்சேர்த்துருக்கிச் சமைத்தனையமகுடமுத லியபல்பூணும்
வென்றிகொள்புள்ளரசிவர்ந்த கோலமுங்காணுறத்திருமால் விளங்கினனே. (௯)

காண்டலுங்கைதொழுதுருகிக் கண்கலுழ்ந்துன்றிருவடியே கருது
மென்னைத், தாண்டவம்பேயுடனுடுஞ் சங்கரன்சேயடிமைகொள்ளத் தக்
கான்கொல்லோ,வேண்டகுவின்னுழியுட னவன்வேலுங்கொண்டுவந்தோ
னெவனோவிவ்வா, றுண்டவுனையன்றிமற்றோர் தெய்வமுநான்றுதியே
னென் றறைந்தானம்மா. (௧௦)

சத்தேசித்தாகியதே யானந்தமயமாகுந் தகைதேறுன்பாற்
புத்தேளிர்க்கிதம்புரிந்து புலைத்தகுவர்குடிகெடுக்கும் புனிதமூர்த்தி
யெத்தேவுமென்வடிவ மன்றியிலைமுக்காலு மிதுமெய்நீதா
னித்தேகத்திதுகுறித்தாயத்தேகத்ததுகுறித்தா யென்றிட்டப்பர்ல்.(௧௧)

அந்தவாசனைக்கரும சேடமுனக்கிருக்கின்ற தாற்றித்தீர்த்தி
கந்தவேண்முற்றிலுமென் னங்கிசமேயுலகினிலுங் கற்றோர்சொல்வா
ரெந்தமூர்த்தியுமெனதங் கிசந்திருவங்கிசமெனச்சொ விருபாற்றேயாஞ்
சொந்தயாணவத்தொடர்பாற் றுயரடையேலெனவிரிவாச் சொல்லிப்போனான். ()

உடனெழுந்தப்பனவனெடு மாலுரைத்தபயன்சிறிது முணரானாகி [க்
யிடரொழிக்குநங்குலதே விறந்ததிங்குற்றதுமயிற்றேவேயென்றெண்ணி
கடலுலகினினியுடல்வைத்திருக்கொண்ணாதிறப்பதுவே கடமையென்னுங்
திடமருவிவிடிந்திடலு மதுசெயற்காமாறுமிகச் சிந்தித்துற்றான். (கரு)

பன்னிருதொண்டரும்பினும்பற் பலர்தாமுமடைந்தவருட் பதுமக் கண்ணன், சொன்னிசமங்கவனளவிற் றாதுளங்காயென்றுமுலைத் தோற் றமெய்தாக், கன்னிவினாவியகாம சாரமெனக்கழிந்துமந்தக் கணமக்கோ யிற், சந்நிதியிலுயிர்விடுத றருமமன்றென்றுணர்ந்ததி சயந்தானம்மா.()

அவ்விரவிற்றென்பாண்டி யாளும்வடமலையப்ப னானமன்ன
னெவ்விதத்தினாலோவவ் வூரினில்வந்துறங்குநன்பா லெழில்வேளேகி
யிவ்விவரமுழுதோதி விடிதலுமவ்வேதியன்போ யிறவாவண்ணந்
திவ்வியவெள்ளியில்விலங்குசமைத்தணிந்துபுரத்தியெனச்செப்பினனே,

பலநூற்றுநாற்பதந்த விலங்கினிறையதுங்குகவேள் பகர்ந்ததென்றிந்
நிலமீதிற்சிலர்சொல்வார் கம்மியரான்மன்னவனந் நிசிநீங்காமுன்
னிலவார்திங்களையுருக்கிச் சமைத்தாங்கேயமைத்ததற்பி னீதிகுன்றாக்
குலவீரரெண்மரையுய்த் தவனையிவண்கொணர்மினெனக் கூறினனே.()

* மற்றவர்போய்மால்கோயில் வாயிலிற்காத்திருந்தவள்ளான் வரக் கண்டுன்னைக், கொற்றவன்கூவினன்வருகென் றழைத்திட்டா ரதற்கவ னிக் குவலயத்திற், குற்றமொன்றுஞ்செய்திலனே னெனையழைப்பானே னதற்கிக் கூட்டமேனென், றெற்றநினைத்துக்காலைக் கிரியைமுதலியசில சாக் கியம்பினனே. (கஎ)

மலசலவாதனையொழிக்கு மவ்வளவிற்சம்மதித்து மாற்றிப்பின்றன்
குலமுறைச்சில்சடங்கியற்று மளவுமனம்பொறாதவராய்க் கொண்டுபோயங்
குலமுறழ்தோட்புரவலன்முன் னுய்த்திட்டாரவனிவற்கண் டென்கைகூப்பி
நலம்விளைக்கின்றானெனவின் புறத்தகுமாதனத்திருத்தி நடாத்துகின்றான்.()

புள்ளிமயிற்பரியூர்ந்து பொருப்பினந்தோறுலவுபிரான் புகன்றதா மிவ், வெள்ளிவிலங்கினைத்தரித்துக் கொளவேண்டும்வீரமயேந் திரத்தில் விண்ணோர், கொள்ளியெறும்பெனக்குலையா வண்ணமவர்விலங்கனைத் துங் கொய்தோன்மேனா, டெள்ளியநான்மறைப்பிரமற் களித்தகளித்தி டுந்தவனே செய்தாயென்று. (கக)

சொல்லியணிவித்தனன்றன் மறக்கின்முடியாமையெண்ணித்தக்கித்தற்ற
வல்லியினன்பால்வீர ரெண்மரையுமறையவரெண் மரையுஞ்சேர்த்தா
னல்லியற்கையாரியமந் தவருமலுணவாதி நடத்துதற்குங்
கல்லின்முட்டிமாய்தன்முத லியநடவாவணமவற்காத் திடற்குமாதோ.()

அத்தனையுஞ்செய்ததற்பி னுங்குறுமீரெண்மரையு மழுத்திப்பார்த்
திவ், வித்தகவேதியன்றனைநீங் கிடுமளவும்புரப்பதுநும் மீதாம்பாரஞ்,
செத்தனனேனும்மையுங்கொன்றியானுமிறப்பேனெனுஞ்சொற் செப்பிச்
செங்கோ,லுய்த்தநெல்லைக்கேகாம லங்கிருந்தேயரசாட்சியுஞற்றினனே.

கடவுளர்தஞ்சிறைவிடுத்தோன் கட்டுரையுமமுதளித்துக் காத்தோ
ன்சொல்லுந்,திடமெனநம்பாதிகழ்ந்து சிந்தையகஞ்செலுத்திடுமத் தீரன்
றன்னை, வடமலையப்பன்றனையிட் டானெனுஞ்சொன்னன்குணர்ந்து மதிக்
கின்றோர்க்கத், தடமெனவத்தண்டனையும் பொதுவேயாமெனல்விளங்
குஞ்சரதந்தானே. (௨௨)

சின்னாளச்சிறைத்துயருற் றுழன்றதனாலதற்கிசையத் திருமாறனுஞ்,
சொன்னனேயெனத்தளர்ந்திங் கனமுயலுங்குகன்றுதிநாஞ் சொல்லித்
தீர்த்தா, லென்றுங்கொலென்னுமையம் பிறந்துமுழுத்துணிவுமுண்டா
யெழிற்செந்தூர்க்கு, நன்றுகரிகப்பநிற்றுப் பத்தந்தாதிப்பனுவ னவில
லுற்றான். (௨௩)

ஒருபதுபாட்டாவதன்மு னொருகவியிற்செய்வதொன்று முணரேன்
வைவேன், முருகவென்றன்வன்றனைகொய் தாண்டருளவேண்டுமென
மொழிந்தானப்போ, தருகிருப்பார்நடுங்குறப்ப டீரெனவேயிரட்டொலி
யிட் டதுவேறாயிற், றருமதனேர்வடமலையப் பன்கனவிற்செவ்வேள்
சென் றுரைக்கலுற்றான். (௨௪)

அப்பனவனமதடிமை யாய்த்துதிசெய்கின்றானன் றவன்றாட்பூட்டின்
கைப்பருவல்விலங்கினையாந் தறித்துவிட்டோமுடனிருந்தோர் கழறக்கேட்பாய்
மெய்ப்பனுவன்முற்றலுநஞ் செந்திலிற்கொண்டரங்கேற்றி வேலைசூழு
மிப்படியிலுள்ளவர்மிக் கதிசயிக்கத்தகும்பரிசீ குதியென்றானே. (௨௫)

முக்கணன்சேயீதுரைப்ப வெழுந்துமகிழ்மன்னன்முனம் முரட்
பார்ப்பானை, யெக்கணமுங்காத்தலுத்தோர் களிலிருவரோடிவந்தாங் கிய
ல்கைசொன்னு, ரக்கணமேபோயவன்ற னடிதொழுதுவேண்டுமுப சார
மாற்றித், தெக்கணமுற்றறியவரங் கேற்றிடற்காந்தினங்குறித்துத் திரும்
பினனே. (௨௬)

காவல்புரிந்தோராமீ ரெண்மரையும்வரவழைத்துக் களிமிக்கார்ந்தள்
ளாவலடங்கிடுமளவும் பொருள்கொடுத்தும்முயிருமென தாவிதானுஞ்
சேவலங்கைக்குகனருளா லுய்ந்தவெனச்சொல்லிமனத் திருத்தியுற்றப்
பாவலனுந்தானுமற்றும் பலர்சூழத்திருச்செந்திற் பதிபுக்கானே. (௨௭)

முன்குறித்ததினத்தின்மன்னன் செயத்தகுமாடம்பரங்கண் முழு துஞ்செய்து, வன்குணத்தோரையுந்தடுத்தான் குகன்றனெதிர்கவிமுழு தும் வாசித்தாய, பின்குறித்தபனுவலுக்குச் சிறைவிடந்தாதியெனுமொ ரு பெயருஞ்சூட்டிப், பொன்குலையுமணிப்பணியும் புரவிமுதலியவுமந் தப் புலவற்கீந்தான். (உஅ)

அப்புலவன்பெயராரு மறைந்திலரியா னுந்துணிந்தொன் றமைக்கவில்லை முப்புரஞ்சுட்டான்மகனைக் கவன்கவிவேட்டவ்வளவு முயன்றதேனே வெய்ப்புமுழுமையுந்தவிர்ந்து ஞானமுற்றவாறவன்பாட் டினத்திற்றேற்று. மைப்புயனேர்மன்னுமவன் றனுமவரூர்களிற்போய் வாழ்ந்தாரன்றே. ()

குருகைநகர்வேதியனு நெல்லைநகர்வேளாளர் குலத்துவேந்தும் பொருவிறிருச்செந்தூராற் கப்பனுவல்சூட்டியமெய்ப் புகழ்கேட்டியானு மொருகவிவிடந்தாதி பாடினேனதன்பயனெய் துறத்தந்தில்லா [மே. னருளினுக்கும்வஞ்சமுண்டேன் மற்றையர்மேற்குற்றமெங்ஙனறையலா

தன்மனைவிமார்பலர்மிக் கலங்காரஞ்செய்துருகித் தனிவீழ்ந்தொஞ் சி,மன்மதனுற்றுயர்ப்படுத லுணர்காளைபிறன்மனைதோள்வாஞ்சைவிஞ்சி, வன்மனஞ்சேர்படமுயன்றுங் கெத்தனையோதொண்டர்தமை வழுத்தலோ ர்ந்தும், புன்மறவர்தேவென்றான் கவிவிழைந்தங்ஙனமுயன்றான் புனை வேற்சேயே. (௩க)

சுற்றுசடைச்சிவன்றழற்கட் சுதனருணகிரிமுதலாந் தொண்டர்பல் லோர், சொற்றுளவண்ணக்கவியா தியவெகுவாப்புனைந்திருந்துந் துதி யேனென்ற, வெற்றுரைப்பாவலனொருவற் குருகையிற்போய்த்தடுத்தா ண்டவிறேதஞ்சொன்னேன், மற்றுமவன்போலொருவன் கவிவிரும்பி வினையீரடும் வகைசொல்வேனே. (௩உ)

வேறு.

தாமரைத்தடங்கண்மேக மென்றுதண்கடற்குலா
மாமன்மக்களாயிரண்டு மாதரைப்புணர்ந்தசேய்
காமனுத்துவேதனுத்த வன்கழற்பணிந்துவாழ்
நேமமிக்குளாரொராடு நேயமுற்றுளானரோ. (௩௩)

செம்புமாநதிக்கடுத்த சினைகுந்தமென்னுமூர்ப்
பைம்புயற்புரைந்தமால் பதம்பராவுபத்தரு
டம்புராசியன்னகல்வி யாளனுமொருத்தன்வெண்
கம்புலாவுகங்கைதன் குலத்துதித்தகாளையே. (௩௪)

கும்பனன்றளித்தமுத் தமிழ்ச்சொலுங்குவிந்தபா
ரம்பசங்கமழ்ந்ததாளி னன்புமன்றியொன்றிலான்
கம்பணிந்தகாதினன் கழற்பராவுவாசர்மனைச்
செம்பபோதசக்குமரி சேசவில்லறஞ்செய்தான். (௩௫)

அந்தமாதுகொண்கனுத கக்குறிப்பின்வண்ணமே
நந்தணிந்தகைத்தலத்து காரணற்பணிந்துநீற்
றிந்தவிர்ந்தநெற்றியூடி லங்குநாமமிட்டும்வேற்
கந்தனுந்தாதையன்பி னைக்கழித்திலாளரோ. (௩௬)

உற்றவூரினிற்றனக்கு மொண்டொடிக்குமுண்டியுஞ்
சுற்றவாடையுந்தகக்கி டைத்திடாமையிற்றணிந்
தெற்றனைப்பழித்தவிர்ந்தி கம்பரம்புரக்குமோர்
கொற்றவாழியாளுறுங் குறுங்குடிக்கண்மேவினர். (௩௭)

எங்குளாருமெச்சுமாம யேந்திராசலத்தின்முற்
றங்குமத்தலத்திலித் தமிழ்ச்சொல்வாணன்மேவலும்
பொங்குசெல்வமெய்திநல்ல புத்திரப்பெறற்குறித்
துங்குநெஞ்சழிந்துநன் முயற்சிமிக்குளுற்றினர். (௩௮)

செந்தின்மாநகர்க்கண்மேய சேயமாதுசிந்தையுள்
வந்தியற்றமிழ்க்கொடின் மணாளனெற்றுதிப்பனேற்
றந்தியன்னபாலனுந் தரத்தினுக்கியைந்ததா
விந்திராதியோருமெச்ச வீகுவேனெனச்சொனான். (௩௯)

அந்தவுண்மையைத்தனய கற்குரைத்தபோதவன்
சிந்தனைக்கண்மிக்கெழுஞ் சினத்தனாகியிவ்வுடன்
மைந்தனின்றிமாயினும்பல் பேயொடாடுமையலான்
றந்தகந்தன்மீதுபாடல் சாற்றிடேனெனச்சொனான். (௪0)

அன்றுதொட்டுநெஞ்சழுங்கி யம்மடந்தைவிம்மினள்
குன்றீழ்ந்தநெஞ்சினக் குரூரனோர்கனாவில்வேள்
சென்றுநாளையின்னவேளை வெய்யிலஞ்சியோர்சிலோ
ரொன்றுமின்னவாலடிக்க னூற்றுசாவுகென்றனன். (௪௧)

அதுகுறித்தவ்வேளையங் கடைந்துசாவிலக்குற்று
ரிதுவெமக்குவேலனல்கி டுங்குழந்தையீதுய்வான்
சதுமுகற்புடைத்தவன்ன வன்றனுதுசெந்தின்மேய்ப்
பதுமமொத்ததண்டையம் பதம்பணிந்துமீண்டுளோம். (௪௨)

இன்றிவ்வூரில்வைகினனை யெம்பதிக்கணேகுவே
மென்றியம்பவன்னவற் கிரண்டுசாட்சியாலுமன்
பொன்றிநம்மனைக்கண்வம்மி னென்றழைத்தங்குய்த்தலுங்
கன்றியங்கிருந்தமாத றிந்துகாதன்மிக்குற்றான். (௪௩)

எத்திறத்தராயினுந்த மிச்சைபோனவண்ணமே
யொத்திருந்துசுகமளிக்கு மொண்டொடிக்கைமாதரார்
நத்திடற்கிசைந்திடாதி ரார்களென்றனாயமொன்
றித்திருச்சரித்திரத்தி னுலகெங்கவே. (௪௪)

மனைவியின்புறத்தனது மனகைத்திடாதுறத்
தனயனிச்சைமிஞ்சலிற் றனதுமாயனங்கித்
தினையவேலனுயினனெ னச்சொனூல்வழிக்கொடே
புனையுமின்சொன்மாலைசெய்து போற்றனண்ணினனரோ. (௪௫)

மகரகுண்டலாதியா வயங்குபூணினங்களைச்
சிகரவெற்பினுடலைச் சிவன்பராவநிற்றலைத்
தகரவார்குழற்பன்மாதர் தம்மொடாடுதன்மையைப்
பகராலுற்றனன்றனது பற்றினுக்குமொக்கவே. (௪௬)

அப்படிப்பகர்ந்தமாத மேயவன்றனுவியோ
டொப்பவட்குமாதமாத முற்றதூரசிற்றலாற்
றுப்பதைப்பழிக்குமேனி யைத்தொடுங்கைவேலினைக்
கைப்பகட்டிடன்றகர்க்க டாவலாதியைச்சொனன். (௪௭)

பத்துமாதமுங்கருப்ப முற்றலோடுபத்தியு
மொத்துநீடலுற்றதா லுவந்தபாக்களுஞ்சொனன்
மைத்துனன்குகேசனென்ற வாய்மையுங்கடந்துபோய்ச்
சத்துமுற்சொன்மூன்றுமான தாரகேசனென்றனன். (௪௮)

அந்தநாளிலன்னவர்க்கொ ராண்குழந்தைதோற்றலாற்
கந்தவேள்கடாட்சமே கடாட்சமென்றுதுள்ளினன்
மைந்தர்தம்முறைப்படிக்கொர் மூன்றுமாதமாயபின்
சந்தனுசலத்தின்மீது சலதிமோதுசெந்திலில். (௪௯)

போய்வணங்கந்தலையேந்து புனிதமாதொடுந்தனோர்
வாய்வழங்குபாடல்வாய்ந்த சுவடியோடுமேகினன்
கோய்வனங்கடந்துதண் கடற்றுறைக்கண்மேவுமுற்
சேய்வரங்கொடுத்தவுண்மை திகழுமாறுசெய்குவான். (௫௦)

கங்குலிற்சிலோர்கள்கண்ட கனவின்வண்மைகருதியே
யங்குவந்துதொண்டுசெய்யு மரசனன்னவொருவனுங்
தங்கும்வேதியக்குழாத் தரிற்பலோருமெதிர்சென்றே
கங்குபேசும்வயிணவற்கிங் கலம்விளைந்ததென்னென. (௫௧)

அதிசயித்தழைத்தவண்வொ டாழியாடலாதியாம்
விதிமுடித்துமுருகவேள்வி யன்கொள்சந்நிதிக்கணே
பதிகமாதியாவவன்ப கர்ந்தபாடலியாவையுந்
துதிசெய்திட்டபின்னரங்கொர் தொண்டன்வந்துதோற்றியே. ()

ஆலயத்தினுக்கெனக்கொ ணர்ந்தவம்பொனாயிரம்
வேலனிற்களித்திடச்சொ னனெனவிளம்பியே
சீலர்பற்பலோர்களுக் தெரிந்திடக்கொடுத்தலுஞ்
சாலவன்னவன்பயந்து சந்நிதிக்கணேகுவான். (௫௩)

உன்னைநான்றதித்ததற் குலப்பில்சேயளித்துளாய்
பொன்னையுங்கொடுப்பதே னெனப்புகன்றபொருமின
னன்னையாயவேலுளான ருச்சகன்றன்மீதுவந்
தென்னைநான்கொடுப்பினுங்கொ டேகன்ஞாயமாகுமால். (௫௪)

உன்றனுதுசேயினுக்கொ ரூறும்வந்துறாதுமெய்
யென்றறைந்துபச்சிலைக்க ணிட்டநீறமீந்தனன்
சென்றவன்றனூரினிற்பல் செல்வர்மெச்சவாழ்ந்துபின்
கன்றலின்றிநாடுறுங் கதிக்கணெய்தினனரோ. (௫௫)

குருகையூரின்வேதியக் குலத்துதித்தகோரனுந்
திருவைகுந்தமேழியாள ரிற்பிறந்ததீரனு
முருகவேள்பதத்திலோ முகுந்தனார்பதத்திலோ
மருவலென்னவைய்மெய்து மாந்தரெண்ணிலார்களே. (௫௬)

அயிலவன்றொடர்ந்திழுக்க வவன்வசத்தராகிவாழ்
வயிணவத்தரிருவருய்ந்த மாட்சியிவ்வணஞ்சொனேன்
கயிலையாளியருள்கொடுய்ந்த கருவைமேயகாவலன்
பயிலும்வண்மையுலகரா லுணர்ந்தவாறுபகர்வனே. (௫௭)

இருவயிணவர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௬௪௯.

## ஐம்பதாவது
## வரதுங்கபாண்டியர் சருக்கம்.

வழுதிதன்மரபூடே வரதுங்கனெனுமன்னன்
முழுமதியெனவந்தான் முன்னரவன்பின்னே
யெழுதெழிலதிவீர ராமனெனுந்தம்பி
விழுமியபுகழ்சால்வில் வேளெனவந்தானே. (௧)

அன்னவர்தென்மதுரை யாளரசாட்சியுளான்
பின்னவனுமொருவன் பெற்றிடுபாலகரான்
முன்னவனைக்கருவை முதுபதியிற்பினவற்
கன்னல்வளம்பொலிதென் காசியில்வைத்தனரே. (௨)

அங்கவர்தம்மரசு டாறிலொர்கூறுகொடப்
பங்கிலம்முறையே பாகம்வகுத்தனைத்
தங்கள்குலத்ததிபன் றூனுறமாமதுரைக்
கெங்கடமைத்திறையீ தென்னவனுப்புகரே. (௩)

வரதுங்கன்மனையோடு மாதவமேமுயலுற்
றரனன்பர்பணியேசெய் தடலையொடக்கமணிக்
திரதங்கொல்கரிபாய்மா வெஃகம்வில்லெஃகமே
யுரமிஞ்சுபால்வணனே டொப்பனையைத்தொழுதான். (௪)

அவன்றம்பியெனத்தோற்று மதிவீராமன்று
லுவன்தம்பொனணிமாறு ருள்ளுருகக்கவின்செய்
தெவன்பகைத்திட்டாலு மெமனுலகிடையேவி
யவன்களுஞ்சிலகாற்செய் தார்வமடைந்தானே. (௫)

அத்தகையிருவோரு மலர்தருவெண்கமலத்
துத்தமிகண்ணருளா லொண்டமிழுணர்வுமுற்றிப்
பத்தர்விருப்புறவும் பாவலர்மெச்சிடவுந்
தத்தமதியல்பளவிற் சாற்றினர்பாடல்களே. (௬)

நந்திமுதலியோர்முன் னவிறருமூன்றுநூற்
கிந்திரன்முதலோர்மெச் சிடுதமிழுருகல்கி
யந்திமதிச்சடையா ரதுபிரமோத்தரமுந்
தந்திகனடையென்னத் தருகவியாக்கிமுனேன். (௭)

தன்னதுநகர்மேவுந் தவளகிறச்சிவனுக்
கின்னமுதுறழ்வெண்பா விற்றனியந்தாதி
சொன்னபினூறுகலித் துறைதிகழதுபாடி
நன்னலமுணர்மனைபா னவிலுபுமகிழ்நாளில், (௮)

தம்பிநளன்சரிதந் தன்னைநறுந்தமிழிற்
பம்பியகாவியமாப் பாடிமுடிப்பதன்முற்
றம்பிமுகத்தனைநேர் துணைவன்வியப்பனெனு
நம்பியதைக்கொடுபோய் நாணிலதோதினனே. (௯)

அங்கதுவினவலுநம் மனையனையேனவின்றுய்
சங்கமணிந்தகுழைச் சங்கரனைத்துதியா
திங்கழிகின்றவர்சீ ரேத்துமிளங்கவிஞர்
பங்கவளற்றுழல்வா ரென்கவிபாடினனே. (௧0)

அரனருள்வேட்கையினு லாண்டிகள்போலுறுமப்
புரவலனுந்தமையன் புகல்கவிகேட்டலுநெஞ்
சுரமதுகுன்றுயுபோ யோதுமக்காவியத்தை
யிரதமிளைத்திடவே யெளிதுமுடித்தனனே. (௧௧)

வேறு.

அப்படிக்குமுற் றுறச்செய்தோனவளவி லமைதிபெற்றிருக்காம
லொப்பறுந்தனேர் தமையன்றன்மனைவியா ருற்றுழிக்கொகொட்டிச்
செப்புமிக்கவிக் காவியமுற்றுநீர் திருக்கணுக்குதிரென்றிட் [னே.
டெய்ப்பறத்தமிழ்ச் சுவைநுகர்ந்தண்ணனு டிரண்டொர்நாளிருந்தா

மங்கலத்தொடு மஞ்சளுந்துகமே வாய்ந்தவண்மணிப்பூண்கள்
பங்கமென்றிடும் கனைவனுடனினம் பகர்தமிழ்ச்சுவையார்வான்
சங்கரன்புகழ்க் கூர்மபுராணத்தைத் தமிழ்செய்தாடணிநோக்கிச்
செங்கண்மாலினை யான்கொடுத்தவதையொரு சிறுகைப்புடனிந்தாள். ()

வாங்கினனிதன் றகுதிறும்வாயினல் வகுப்பதென்விழைவென்று [ய்
னேங்கிடுந்தகைத் தெனச்சொனல்விகாதமின் றுண்மைமை மறையாளா
வேங்கிராதர்தம் வேட்டைநாய்போந்தொறும் விசையொடுமுன்னீர்க்கு
மேங்கிப்பின்னிளைத் திடும்வருந்தொறுமதை யிணையுமென்றனளம்மா.()

அந்தமாற்றம்வெந்தீச்சுடுசெலாகையி லணிச்செவிபுகச்சிந்தை
நொந்தழற்பொறிவிழிகள்சிந்திடத்தனூர் நோக்குபுவிரைந்தேகி
முந்தநன்குபாடாதவன்கெடுத்தனன் மொய்குழலிவடானும்
பிந்தவிக்கொடுஞ்சொற்சொனளென்னவே பெருகியசினங்கொண்டு. ()

தேருமானையும்பரிகளுமாட்களுஞ் செறிதருபடைகூட்டிப் [ன்
போருளுற்றியண்ணனைத்தடிகுவனெனப் புறப்பட்டான்பொய்த்தன்னே
பேருகாவணமாங்கவற்கக்குணம் பிரமன்றனமைத்தானே
வாருமஞ்சுறத்தானுமோர்தேருகைத் தவன்றனூரனுகுற்றே. (க௬)

செயிர்செய்துன்னுயிர்குடித்துநின்மனைவிதன் செருக்கழித்திடவேண்டி
யயில்கொள்வேலுடன்வந்துளேன்சமர்க்கெழுந் தருள்செனவாள்விட்டா
பயிர்செய்வாரிடமாறினோர்பாகமும் பரிந்துகொள்கலனாகி [ன்
யுயிருய்கைக்குந்தானிடுந்திறைக்கும்பொரு ளுதவுமாறிரப்போன்பால்.

வில்லைத்தாழ்த்திடற்காத்தமையனைக்கொல விரைந்தனன்விசையன்றன்
சொல்லைத்தாழ்த்திடற்காவதுசெய்திடத் துணிந்தனனதிவீரன்
கல்லைத்தாழ்த்திடத்தக்கவன்னெஞ்சுடைக் காளையரிவரென்று
லல்லைத்தாழ்த்திடத்தகுகுழற்கலைமக ளனையவரிசைவாரே. (க௭)

அவன்றனண்ணன்விற்கொடுசமர்தானுமாற் றுதுமாதவம்வேட்டா
னிவன்றனண்ணன்சொலனுப்பியேதாள்பணிந் திடும்படிபணிகொண்டா
னெவன்றனண்ணன்மேதகையனோவேல்புனைந் தெக்கலைகளுநல்கோர்
பவன்றனண்ணனேயனையமூதுணர்வுடைப் பண்டிதரறிவாரே. (க௮)

வந்ததூதுவன்பால்வரதுங்கன்வெண் பாவொன்றின்மார்த்தாண்டன்
மைந்தன்றன்னையுமிலங்கைவீடணனையு மாறில்பஞ்சவர்தம்மிற்
பைந்தகைக்கொடும்பார்த்தன்றன்னையுமெணேல் பரதராகவரென்னுஞ்
சொந்தரன்பினைப்பாரெனவமைத்தவிர் தூயசீட்டுய்த்தானே. (௨௦)

தம்பிசெய்தவெங்கொடுமையைச்சகித்ததிற் றருமனையனையானே
பம்பிடுங்கருணையிற்பெரியவன்கொலோ பழுதின்மேலவரோர்வார்
கம்பிலங்குகையனையன்னனைடுநின்று கலப்பித்திட்டதுமின்றே
வெம்பியோர்கவியுரைப்பனேலுடனவன் வெந்துநீறுவானே. (௨௧)

தமையன்சொல்கவிமுழுமையுமருட்கட றனிலெழுமமுதொப்பாஞ்
சிமையநேர்புயத்திளையவன்செய்கவி சீவதந்திரயோகத்
தமைதிபெற்றனவாமிவற்றுண்மைநன் கறிதன்மிக்கெளிதாகு
முமைமணாளனடியர்களிலொருவரை யுபாசனைபுரிவோர்க்கே. (௨௨)

சிட்டுநும்முனல்கினனெனப்போய்வரு தீரனல்கிடவாங்கிப்
பாட்டுளொன்றியபயனுணர்ந்திளையவன் பதைத்துமுன்முன்கொண்ட
கேட்டுநீர்மைமுற்றெழுந்துபால்வண்ணர்தங் கிருபைபெற்றவன்முற்போய்த்
தாட்டுணைக்கண்வீழ்ந்தழுதியானுயும்வகை சாற்றுகென்றிரந்தானே. ()

இகத்தினிற்சிலர்வரதுங்கராமனென் றியம்பவுந்திகழ்கின்ற
மகத்துவத்தவமுனியனுன்றன்னடி வணங்குதம்பியைநோக்கி
நகத்தினைக்குனித்தவன்செயலல்லது நஞ்செயலிலைகண்டாய்
சகத்திவாறுமோர்கதைதொனிதரவவன்முன்செயலென்றப்பால் (உ௪)

ஆசியான்றமெய்யுணர்வுமுன்னும்பய னனைத்துமெய்திடக்கூறிக்
காசிகாண்டமென்றுளவடமொழித்தொனூல் கவித்தமிழுருவாகப்
பேசினீங்குநின்பிழையெலாமென்றலும் பெரிதுவப்புறீஇநெஞ்சங்
கூசிமாண்புறுமண்ணியார்முன்முடி குவலயந்தொடவீழ்ந்தான். (உ௫)

எழுகவென்றடுக்கொலிபடவருத்தமிக்கியம்பல்கேட்டெழுந்தியான்செய்
வழுவெல்லாம்பொறுத்தருள்கைநுங்கடனென மலர்க்கணீர்சொரிந்திட்
பழுதில்கற்புடையருந்ததியனையள்வெம் பாவமாகியகோபங் [டான்
கொழுவலானிகழ்செய்கைநுஞ்சொந்தமாக் கூறிடப்படாதென்றும். ()

அன்றுவந்ததக்கணமரைக்கச்சையி லார்த்தவாளுறைநீத்தெற்
கொன்றுஞானமேகுறிக்கொடுசனகனிற் குலவுமண்ணனைமாய்த்திட்
டென்றுமீள்கலாநரகினுக்காட்செயா தித்திறஞ்செயுங்கோப
நன்றுதானெனநவின்றனுப்பினடனூர் நண்ணியந்நூல்செய்து. (உ௭)

நீதிநூலொன்றும்வெற்றிவேற்கையென நிலஞ்சொலும்படிசெய்து
போதினுன்முகன்படைத்தபாருளவரைப் பொன்றிடாப்புகழ்வாய்ந்தா
றீதின்மாட்சியுளானெடுபிறந்ததாற் றிருந்தியுய்ந்தனன்கோப [ன்
மாதியாஞ்சிலகுணஞ்சுதந்தரமற வழிப்பதற்கிதொர்சான்றே. (உ௮)

சிகையுமுப்புரிநூலுநன்மனைவியுந் தீயவேயெனநீத்துத்
தகைமலிந்தகல்லாடையும்புனைந்தவர் தமைநிகர்தமையன்மேற் [த
பகைமுதிர்ந்துபோர்க்கெனப்படையெடுக்கவுஞ் செயுஞ்சினப்பண்பெ
வகைசெய்யாதிந்தவுலகினிலெனவற மாய்ப்பர்நன்மதியோரே. (உ௯)

அனையதீக்குணமுழுதறச்செறிந்தவத் தாசனும்வரதுங்கன்
பனைநெடுங்கைமாவுரித்தபால்வண்ணர்மேற் பதிற்றுப்பத்தந்தாதி [ம்
நனைமலர்த்தொடைக்கொன்றைபோற்புனைந்துசின் னுட்கழித்துடனல்கு
வினையிரண்டுமொய்ந்திடுஞ்சிவகதிபெற விரைந்தனனவ்வேலை. (௩௦)

அவன்றன்பத்தினியாமதிபக்குவத் தணங்கனுண்மனநோவா
துவந்துன்சிந்தனையெங்ஙனமுள்ளதென் றுசாவினனுரகத்தா
னவந்தரும்பணியணிதருகரமுத னல்லுறுப்பெலாங்கொண்டு
சிவனைபுகுந்துளிவிருப்பதாற்பயமெமைச் சேருமோவென்றனே. (௩௧)

புகன்றவாசகமவள்செவிப்புகுதலும் பொருக்கென்றோர்குருவேபோன்
றகண்டபூரணசச்சிதானந்தமா மங்கலையறிவித்தா
ளுகந்தவ்வாறுசிந்தித்திறப்பொடுபிறப் பொழிந்தமெய்க்கதிசேர்ந்தா
னிகழ்ந்தவாறிதென்றுலகினிற்பற்பலர் நிகழ்த்தல்சத்தியமாதோ. (௧௨)

அவ்விரண்டறுபவங்களுமிருகவி யாவுருக்கொண்டன்னோன்
செவ்வியார்தரப்பகருமந்தாதியிற் சேர்ந்தனவெனச்சொல்வா
ரிவ்விதத்தொருபத்தினிதானும்வீட் டினுக்கிடரெனச்சொல்வா
னெவ்விசாரமெய்தியதவனுயினு மிளம்பருவத்தேயனே. (௧௩)

அந்தமாதுமக்கதியடைந்திட்டன ளவன்பகர்ந்தனவாய
செந்தகைக்கவியினங்களேமூவர்முன் செப்பியதேவாரந்
தந்தவாங்குறும்பலமெனப்பகர்தரு தகவினர்சிலர்க்கண்டேன்
பைந்தமிழ்க்கலைபிறந்துநீடுற்றதென் பாண்டிநாட்டிடைமாதோ. (௧௪)

அந்தப்பாண்டியனும்வரதுங்கனே யனையசீரடைந்தார்மற்
றெந்தப்பாண்டியர்களுமிலரேயென வியம்பிடத்தகுங்கண்டீர்
முந்தப்பாண்டியனுத்தடாதகைமுலை முயங்கியசிவன்முனுஞ்
சொந்தப்பாண்டிநாடாள்பவர்முறைப்படி துலங்குருச்சமைந்தானே. ()

சிவன்றன்மாமதிக்குலத்திலோர்பெண்கொளச் செம்பொனுபரணாதி
யுவந்துபூண்டமைகருதியேவரதுங்க னெனும்பெயருறுமன்ன
னவன்றனுதருள்பெறும்பொருட்டக்கமா தியவணியணிந்துற்று
னிவன்கொண்டுற்றதுமேதகையவன்கொள விழிதகையெனலாமே. ()

சேண்டியங்குமீ னக்கொடியொடுகுல சேகரனெனும்பேர்கொள்
பாண்டியன்றனூ ரம்பிகைமாலையும் பத்தினுளுயர்வான
வேண்டிகழ்ந்ததா மிலிங்கபுராணமு மாதியவிசைத்திட்டான்
பூண்டிடும்பணிகளுமிகழ்ந்தருந்தவம் புரிந்திலனிவன்போன்றே. (௧௭)

மாயவல்வினைத்தொடக்கறுத்தருள்பெறும் வரதுங்கராமன்றன்
றாயமேன்மையுமவன்மனைநன்மையுந் துணைவனுண்மையுஞ்சொன்னேன்
வேயளாவியதோளுடைக்கவுரிதன் வியன்மகளுருக்கொண்மாண்
பேயசீர்க்கவிராஜபண்டிதன்புக ழேன்றுமட்டிசைப்பேனே. (௧௮)

வரதுங்கபாண்டியர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௧௧௮௧.

---

ஐம்பத்தோன்றாவது

## கவிராசபண்டிதர் சருக்கம்.

சீர்மலிபாண்டியி னிற்றிகழ்வேம்பத்
தூர்மறையோர்தமி ழொண்சுவையோர்ந்தோ
ரார்மதுரைச்சிவ னுடலுமழகன்
கார்மலையின்புக ழுஞ்சொல்கருத்தோர். (க)

எண்டிசையும்புக ழெண்ணெண்மராகித்
தண்டிகையிற்றிரி யுந்தகவுற்றோர்
பண்டிதர்தம்மொடு பாவலராவா
ரொண்டிகழ்வாரெழி லூர்த்துவசிகையோர். (உ)

அன்னவர்தம்முளொ ரந்தணனன்பிற்
றன்னதுபத்தினி யோடுசெய்தவசாற்
கன்னல்விலேந்திய கைக்கவுமாரி
யின்னருணல்குமொ ராண்மகவீன்றான். (௩)

நாரணனும்பியி னன்முகவன்சொல்
லாரணவேதிய ருக்கரசனேயான்
பூரணவன்பொடு போற்றும்விதத்தால்
வாரணமீனிய கன்றில்வளர்ந்தான். (௪)

அம்மகனேன்றளவிற்கலைகற்று
மைம்மலையின்குல மன்னருண்மங்கை
செம்மலரேயிகர் திருவடிநல்கு
மெய்ம்மறையாலுரு வேற்றிமெலிந்தான். (௫)

அட்சரலட்சம தாதலுமவளுட்
பட்சமலிந்தது பைந்தமிழ்வாரிக்
குட்சலியாதுல வுந்திறலுற்று
னட்சணியாதிய வேவல்செய்தனவே. (௬)

வெண்டிருநோக்க மிகுந்தவிதத்தால்
மண்டியசுற்றம் வகுத்ததொர்பேர்போ
யெண்டிசையோரு மியற்கவிராச
பண்டிதனென்கை படைத்தனனம்மா. (௭)

தேவர்முதற்சிலர் சிந்தையுவத்தற்
காவலிலத்துறு மந்தணர்சொற்போற்
றுவறுபேரெழி லுந்தகவுஞ்சேர்
மாவனையாளை மணந்தனன்மன்னோ. (அ)

விண்மடவாரும் வியக்குமமாதோ
டெண்மதனுகம வின்பமயின்றான்
பெண்மகவொன்று பிறந்துசினள்போ
யுண்மலியாசை யுரந்தளர்வாநாள். (௯)

அன்னவட்ன்மக ளாசையும்விட்டுப்
பொன்னகருடு புகுந்தனளன்றேன்
மின்னனையார்பல ரும்பனிவெற்பின்
மன்னருள்வாளொனு மாதவமுற்றான். (௧0)

சத்திமதத்திடை சங்கரமுனிவோ
னத்தியதாநெறி யோகடவாமற்
பைத்திமொகுண நேர்பலராமன்
புத்திசொனூல்வழி பூசைசெய்தானே. (௧௧)

வாமநெறிக்கண் மருண்டும்வெண்மலர்வாழ்
நாமகண்மேரு நலந்தலைநீட்டும்
காமவிலோகிய கைப்பரைதன்சீர்
தேமலிசெந்தமி ழிற்கவிசெய்தான். (௧௨)

ஆயசவுந்தர லகரியலாமற்
றாயசொலானந்த லகரியுஞ்சொல்லிச்
சேயவராகிதன் மாலைசெய்தப்பான்
மாயமிலானந்த மாலைவனைந்தான். (௧௩)

ஓதுமவற்றிடை யோர்கவிதன்னிற்
காதுமராவுறழ் கடிதடமதனின்
மீதுறுசீரும் விளம்பினனங்கப்
போதுசினந்தனள் போன்றுமைசொல்வாள். (௧௪)

பெண்ணுடனேபிற வாதவர்போன்றிப்
பண்ணுறுபாடல் பகர்ந்தனையெனலும்
விண்ணுடன்மண்ணும் வெறுப்பினுமென்வாய்
நண்ணுறுமாறு நவின்றிடுமென்றான். (௧௫)

அச்சமிலாமல வாறுசொல்வானைப்
பச்சணியெய்து பராபரைநாடித்
துச்சமெனக்கரு துந்தகைநீங்க
நச்சரவம்புரை நாவைமறைத்தாள். (௧௬)

நாவுமறைந்தது நாணுடனச்ச
மேவுதலெய்தி விரைக்கழல்கும்பிட்
டியாவுமுணர்ந்த ருளின்செயலன்றோ
வோவுதலெய்த வொரேலெனவுன்னி. (௧௭)

## ஐம்பத்தோன்றாவது
## கவிராசபண்டிதர் சருக்கம்.

சீர்மலிபாண்டியி னிற்றிகழ்வேம்பத்
தூர்மறையோர்தமி ழொண்சுவையோர்ந்தோ
ரார்மதுரைச்சிவ னுடலுமழகன்
கார்மலையின்புக ழுஞ்சொல்கருத்தோர். (க)

எண்டிசையும்புக ழெண்ணெண்மராகித்
தண்டிகையிற்றிரி யுந்தகவுற்றோர்
பண்டிதர்தம்மொடு பாவலராவ
ரொண்டிகழ்வாரெழி லூர்த்துவசிகையோர். (உ)

அன்னவர்தம்முளொ ரந்தணனன்பிற்
றன்னதுபத்தினி யோடுசெய்தவசாற்
கன்னல்வில்லேந்திய கைக்கவுமாரி
யின்னருணல்குமொ ராண்மகவீன்றான். (ந)

நாரணனுபியி னுன்முகவன்சொல்
லாரணவேதிய ருக்கரசனையான்
பூரணவன்பொடு போற்றும்விதத்தால்
வாரணமீனிய கன்றில்வளர்ந்தான். (ச)

அம்மகனேன்றள விற்கலைகற்று
மைம்மலையின்குல மன்னருண்மங்கை
செம்மலரோதிகர் திருவடிநல்கு
மெய்ம்மறையாலுரு வேற்றிமொலிந்தான். (ரு)

அட்சரலட்சம தாதலுமவளுட்
பட்சமலிந்தது பைந்தமிழ்வாரிக்
குட்சலியாதுல வுந்திறலுற்று
னெட்சணியாதிய வேவல்செய்தனவே. (சு)

வெண்டிருநோக்க மிகுந்தவிதத்தால்
மண்டியசுற்றம் வகுத்ததொர்பேர்போ
யெண்டிசையோரு மியற்கவிராச
பண்டிதனென்கை படைத்தனனம்மா. (எ)

தேவர்முதற்சிலர் சிந்தையுவத்தற்
காவகிலத்துறு மந்தணர்சொற்போற்
றுவறுபேரெழி லுந்தகவுஞ்சேர்
மாவனையாளை மணந்தனன்மன்னே. (அ)

விண்மடவாரும் வியக்குமமாதோ
டெண்மதனுகம வின்பமயின்றான்
பெண்மகவொன்று பிறந்துசினுள்போ
யுண்மலியாசை யுரந்தளர்வாநாள். (கூ)

அன்னவட்ன்மக ளாசையும்விட்டுப்
பொன்னகருடு புகுந்தனளன்றோன்
மின்னனையார்பல ரும்பனிவெற்பின்
மன்னருள்வாளொனு மாதவமுற்றான். (கo)

சத்திமதத்திடை சங்கரமுனிவோ
னத்தியதாநெறி யேநடவாமற்
பைத்திடுமாசுண நேர்பலராமன்
புத்திசொனூல்வழி பூசைசெய்தானே. (கக)

வாமநெறிக்கண் மருண்டும்வெண்மலர்வாழ்
நாமகண்மேரு நலாந்தலைதீட்டும்
காமவிலேகதிய கைப்பரைதன்சீர்
தேமலிசெந்தமி ழிற்கவிசெய்தான். (கஉ)

ஆயசவுந்தர லகரியலாமற்
றாயசொலானந்த லகரியுஞ்சொல்லிச்
சேயவராயிதன் மாலைசெய்தப்பான்
மாயமிலானந்த மாலைவனைந்தான். (கங)

ஓதுமவற்றிடை யோர்கவிதன்னிற்
காதுமராவுறழ் கடிதடமதனின்
மீதுறுசீரும் விளம்பினனங்கப்
போதுசினந்தனள் போன்றுமைசொல்வாள். (கச)

பெண்ணுடனேபிற வாதவர்போன்றிப்
பண்ணுறுபாடல் பகர்ந்தனையெனலும்
விண்ணுடன்மண்ணும் வெறுப்பினுமென்வாய்
நண்ணுறுமாறு நவின்றிடுமென்றான். (கரு)

அச்சமிலாமல வாறுசொல்வானைப்
பச்சணியெய்து பராபரைநாடித்
துச்சமெனக்கரு துந்தகைநீங்க
நச்சரவம்புரை நாவைமறைத்தாள். (கசு)

நாவுமறைந்தது நாணுடனச்ச
மேவுதலெய்தி விரைக்கழல்கும்பிட்
டியாவுமுணர்ந்தரு ளின்செயலன்றோ
வோவுதலெய்த வொறேலெனவுன்னி. (கஎ)

வேறு.

தானதானன தானதானன தானதானன தானனா.

வேதன்மாறிசை யாளராதியர் வீதலாயின ரீசனார்
சாதன்மேவில ரேதினாலுனொர் தாலிகொண்வலி யாலலோ
நீதயாநிதி யோகபூரணி நீவிதானெனல் பாவமா
மாதலாலருள் கூடெரனோர்கவி யாசையானில மீதிலே. (க௯)

தனனதானன தனனதானன தனனதானன தனதனா.

எழுதினாடை னவகையாய்முனி யியல்கொணவினை யுதவியே
வழுவிலாதுயர் தமிழினலவன் வனைபல்பாடலு மிரவிலே
கழுதொடாடிய பரமனாரெதிர் கழறியேயிவ னுவலுமோர்
விழுமியோனுற வெதுசெய்தானலம் விரைவிலோதுக வெனலுமே. ()

தானதந்தன தானதந்தன தானதந்தன தானனா.

ஆறுதிங்களு ளதுசெங்கையி னானலுண்டிசெய் தீதலே
வீறுறும்பரி சாகுமன்றிவெ வேறுசிந்தைசெ யேலெனா
நீறுறுந்திரு மேனியம்பர னோர்விளம்பின னாதலா
லாறுபங்கய மாதர்தொணமெகா னரிமெஞ்சக நாணினான். (உ0)

தத்தனாதன தத்தனாதன தத்தனாதன தத்தனா.

அத்தனோதுசொ லைத்தளாமல வற்கவாறுசெ யச்சதா
சித்தமாகின ளொப்பிலாவவ திட்டவாளன்ம னைககனே
முத்தவாணகை யத்திபோலவளர் முச்சிலாள்வய தற்றைநாள்
பத்தனானுண வுக்குவேணப டிக்கெலாமும மைகருமே. (உக)

தந்தனாதன தந்தனாதன தந்தனாதன தந்தனா.

அந்தவேதிய னெஞ்சுகாசிய டைந்துமாசறு கங்கையான்
முந்தநேகசென் மங்களாலுமு திர்ந்ததீவினை சிந்துமா
றுந்தவாவது கொண்டதாலவ னென்றிவாழ்வுறு தங்கைபா
லிந்தமாமக ளிங்குவாழ்கவெ னுஞ்சொனீடவி யம்பியே. (உஉ)

தனனதத்தன தனனதத்தன தனனதத்தன தனதனா.

அவளிடத்தருமை மகளைவிட்டுவெளி யகலுமப்பனவன் மனதுளே
சிவனுயிர்த்துணைய தெனவசிக்குமுமை செயல்விளக்குபதி யுரிமையா
லிவள்வசத்துறுதன் முறையலக்கொடுசெ லினுநலத்ததெனு நினைவுறு
மிவரமித்தனையெ னளவறக்கருதி விரிநிழற்றருவை கினனரோ. (உ௩)

தனனதந்ததன தனனதந்ததன தனனதந்ததன தனதனா.

அவணிருந்ததொரு பனவன்வந்தவழி யதனிடங்கணொளி விடலுநேர்
தவமுதிர்ந்துபெறு மகண்மருங்கிலொரு தவலையுஞ்சிறித ரிசியுமோர்
கவளகுஞ்சரமெ னடையுமங்கொருகை யுறுகறண்டியுமொர் சுமையுளே
நவமுறும்பல்பொருண் முடிவதுங்கொளுவ னகைமலர்ந்தருகு நிலவினாள்.

தந்ததந்தன தந்ததந்தன தந்ததந்தன தந்தனு.

வந்தபைங்கிளியெ னுஞ்சவுந்தரிய மண்டுதென்புதல்வி புந்திதா
னிந்தவிந்தைபெற லென்கொலென்றுமெணி லன்றுணிந்துவர வுந்திறு
ணந்தணிந்தசெவி நம்பர்பங்கிலுறை நங்கையென்றுவகை பொங்கிறு
னந்தவம்பையிவ ளென்றறிந்திலன கங்கலங்கிடல்செய் வழ்பிலே. (உரு)

தத்ததத்தன தத்ததத்தன தத்ததத்தன தத்தனு.

அற்றையிற்கடிகை யொற்றையிற்றனைய டுத்தபுத்திரியை மெச்சிநீ
யிற்றையித்துணிவு பெற்றதுத்தமபி னிச்சில்சிற்பகல்க ழித்தையோ
மற்றையர்க்குளிடர் பட்டெனைக்கருதி மட்கிடிற்றுயர்மி குக்குமா
லெற்றையெச்செயலு மத்தியட்டவரி டத்திசத்தியென நத்தியே. (உசா)

தன்னதானதன தன்னதானதன தன்னதானதன தன்னனு.

சன்னியாயமகள் பின்னரேகமுதிர் சைம் பத்தலம தென்னவே
முன்னில்யாவும்வல வன்னையாச்சரண முன்னியேகினனி துண்மையால்
வன்னிகூவிளமும் வெண்மையார்பிறையு மன்னும்வார்சடில வண்ணலார்
சென்னிமாறுபத மண்ணின்மீதெளிது சென்னலாடறமிழ் வண்மையே.

தய்யதந்ததன தய்யதந்தன தய்யதந்ததன தய்யனு.

ஐயவிந்தநடை வெய்யதென்பள்பெரு கல்விஞ்சினளி லொல்லுவாள்
செய்யவுண்டியையு நொய்யதென்றுகெடல் செய்வடின்பசில வெளவுவா
ளையமின்றிமகள் சைசையுங்குணமு மல்லலும்புரிய வொல்கிடாண்
மெய்யறிந்தசிலர் வைதலும்புலவர் விள்ளலும்பெரிது நள்ளியே. (உஅ)

தானதானதன தானதானதன தானதானதன தானனு.

ஆரணுகமெல மூமோதுபுக ழாரவாவியச ரோசம்வாழ்
பூரவாகனிவி டாதநாவுடைய போதனோக்கிவ லோனுமா
கோரதானவவி ஞோர்தமீதுமெதிர் கோலமாதரய லீயவே
மாரவேள்கைபுனை சாபமீபவளும் வாரணுசிநகர் மேவினுள். (உகூ)

வேறு.

தந்தையோடுமகளுமத் தலத்திலுள்ளகங்கையிற்
சிந்தையன்பொடாடியீசர் சேவையுஞ்செய்தாயபின்
சந்தைகோடியனையசீர் தருங்கடைத்தெருக்கணே
விந்தையாவுநாடிநாடி மிகுமகிழ்ச்சியாகினுர் (௩0)

விளைபல்பண்டமாதியா விளங்கவொன்றும்வேட்டிலாள்
வளையினங்களுட்சிறந்த வகையறிந்துவாஞ்சையா
யிளையளென்றபண்புதோன் றிடச்சினுங்கலுஞ்செய்தா
டளையிதென்றவந்தணன் றயங்கவிலய்தினனரோ. (௩க)

இந்தநாட்டிலுள்ளமாந்த ரியலுணர்ந்திலார்களா
லெந்தவாறுயன்றிவுட்கி தெய்துவிப்பதென்னவே
கொந்தகத்துளாளையன்பி னேக்கினனவேளையிற்
செந்தமிழ்த்தெனுடனுமோர் செல்வன்வந்துதோற்றினன். (௩உ)

அவனெவன்கொலோசிவன்கொ லாழியங்கைமால்கொலோ
தவளமங்கைகேள்வனோ சகத்திலுள்ளமனிதனோ
லிவனுடன்கலந்துபேசி யெண்ணமுற்றவுஞ்செய்திட்
டெவனவோசகாயமுஞ்செய் தேகினுனெனச்சொல்வார். (கக)

தெய்வசித்திபெற்றுளார்கள் சிந்தையெண்ணன்முற்றுறச்
செய்வதங்கதன்பொறுப் பெனத்துணிந்துசெப்பலா
மைவனக்கடற்புனைந்த மாநிலத்தின்மாந்தரா
யுய்வதற்குதித்துளார்க ளென்றுமொப்புவார்களே. (கச)

பெற்றபெண்மகட்குமாங்கு பேணிநல்குமாறளத்
துற்றவன்னைதன்பொருட்ட தாற்றலோர்வியன்கொலோ
வற்றமிட்டவளைகளின்று மவள்கரத்தவிர்ந்தசீர்
கற்றநாவலோர்கணம்பல் கவிகளுமெழுறுமே. (கரு)

அளையளைந்தபழையபாண்ட மரிதனூரில்வதிதல்போல்
வளைகளம்பைகரதலத்தில் வாய்ந்தவண்மையோர்குவார்
தளையவிழ்ந்தமலரில்வைகு சதுமுகன்செயுடல்களின்
விளைவுவந்துமடிவுறாத மெய்யிருப்பதோர்வரே. (கசு)

கயவுருக்கொளவுணனைக் கடிந்தவீசர்காசிவிட்
டியல்வலிக்குமிக்கவேதி யக்குலத்துமுதியனு
மயலுருக்கொடவனையா தரித்துவந்தவம்மையும்
வியன்வழிக்கடந்துபாண்டி நாட்டினூடுமேவினர். (கஎ)

அன்றுமாதமாறுமுற்றி யவடொடர்ந்தமரநிழற்
றன்றுபோதவன்றனக்கொர் சோகமெய்திடச்செய்தே
கன்றுமுன்செல்வேனெனு நவின்றெளித்தவன்றனூர்ச்
சென்றுநாறுவயதுபெற்ற தேகியாய்விளங்கியே. (கஅ)

வேதியன்றனுதங்கை வீட்டின்மேவிவியனுடல்
பாதியாமெலிந்துபா யிடங்கிடக்குமவன்மக
ளாதியோர்கள்வினவவங் கவன்றனுண்மைவரவுநன்
கோதியேயுமைப்பெண ளுருக்கரந்துபோயினள். (கசு)

தந்தைவந்துளானெனுஞ்சொ றனீர்வயோதிகத்திசொல்
விந்தைகேள்வியுற்றபோத மின்னிடைக்கருங்கண்மா
னெந்தையிங்குவந்தனன்கொ லென்றெழுந்துசாவலுஞ்
சிந்தையெண்ணமுற்றவாறு செறியுமாதர்பேசினர். (உ0)

அவன்றன்வேட்கைநீடியிங்ங னுய்ந்ததென்பரப்பன்வந்
துவந்துகொண்முன்மாய்ந்திடாம லுய்ந்ததென்பருள்ளநாங்
கவன்றுபட்டபாவேம்பு காண்மினென்பர்கனலின்மே
லிவர்ந்திருந்தநோய்களெங் கிரிந்துபோயதென்பரால். (உக)

இன்னமும்பல்வாறுகூடு மேந்திழைக்குழாஞ்சொல்போ
தன்னவன்றனித்துவந் தருந்தவப்பெரும்பய
னென்னமுன்பயந்தபெண் ணிளைத்தயாக்கைகண்டுதன்
பின்னர்வந்துபோனவள் பிராட்டியென்றுணர்ந்தனன். (சஉ)

கொங்கைசற்றரும்பவந்த கோலமுஞ்சில்கோதைமா
ரங்கையாலெடுத்துநெஞ் சணைக்கநொந்தவங்கமுஞ்
சங்கையற்றியன்றவுண்மை தன்னைநன்குணர்த்தலாற்
கங்கைசக்களத்தியீடில் கள்ளியென்னவெள்ளியே. (சங)

ஆறுமாதமங்குதங்கை யாதரித்தவாறெலாங்
கூறுமாறுவினவிமற் றுடன்றொடர்ந்தகோதிலாள்
வீறுதன்மைபலவுமெண்ணி மிகவெகுண்டுதன்னுடற்
கீறுகோரமுன்னிமண் கிடந்துருண்டரற்றினன். (சச)

மாற்றிடாதவயிரநெஞ்ச மைந்தன்முன்புமாதுமை
தோற்றியன்னவன்கவிச் சுவைக்கிரங்கியண்ணலார்
சாற்றிடுஞ்சொலும்பகர்ந்து தண்ணருட்பொழிந்துதான்
றேற்றினடெளிந்தளப்பில் சிந்தையார்வமெய்தினன். (சரு)

அப்புறத்தியன்றகாதை யாரறிந்துளார்கொலோ
விப்புவிக்கணவனெய்தார்வ மியாருமெய்திலார்களே
முப்புரங்களைத்தகித்த முதல்வனுதுபத்தினி
துப்புறழ்ந்ததாள்களூடு தோய்ந்ததுண்மையாகுமே. (சசு)

அவனுரைத்தபாடலா மவற்றினூடொவொன்றையும்
புவனியிற்பன்மாந்தர்மந்தி ரத்தினிற்புகன்றதா
லெவளவோபயன்களெய்தி னர்சிலோரியம்பலிற்
றவறுபட்டதாற்பயித்தி யத்தராகினர்களே. (சஎ)

புன்மையாயவூனுடன் புகைத்தெணீருமுண்பதே
நன்மையென்றுகொண்டுளானு ஞாலமீதிலிப்பெருந்
தன்மையெய்தநல்கியாண்ட தாயருட்டவத்தரெவ்
வன்மைநண்ணநல்கிடாண் மதித்தறிந்துகொண்மினே. (சஅ)

நயமலிந்தகவிகள்சொல்வி ராசபண்டிதன்றனைக்
கயலுறழ்ந்தகண்கள்கொண்ட கவுரியாண்டகதைசொனேன்
மயலில்விண்டமொழியெயாகி மதியும்வந்துதிக்குமா
றியல்வனைந்தபுலவன்மாண் பெடுத்தினிச்சொல்வேனரோ. (சகூ)

கவிராசபண்டிதர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ०௯०.

---

## ஐம்பத்திரண்டாவது

## அபிராமப்பட்டர் சருக்கம்.



மருக்கமழ்சோலையும் வயலும்வாவியும்
பெருக்கமார்பொன்னியும் பிறங்குஞ்சோழநாட்
டருக்கன்மாமதிகன லாயகண்ணன்வாழ்
திருக்கடவூருள தெமனைச்செற்றதே. (க)

அத்தலத்துறையபி ராமியம்மையா
முத்தமிதாள்களே யுவந்துபோற்றிடும்
வித்தகன்வைதிக வேதியக்குலப்
பத்தன்வண்டமிழபி ராமப்பட்டனே. (உ)

பட்டரென்றிடும்பெயர் பாண்டிநாட்டுறை
சிட்டர்தாஞ்சிவப்பிரா மணர்க்குச்செப்புவார்
வட்டநேமியனடி யவரோர்மாதவற்
கிட்டனரிவற்கிட விமயவல்லியே. (௩)

வாமமார்க்கத்தையே மதித்துநன்கத
னேமமேகுறிக்கொடு நெடிதுபோற்றிநு
ஞமவேல்வளவன்ற னவையினுடொறுங்
காமரைந்தங்கஞ்சொல் கடமைக்காரனே. (௪)

இலகிரிகாளுமே விட்டதாலெழி
லுலகமுற்றிகழ்தரு மூறுதோய்ந்தனன்
சிலர்மன்பாலவ்விதஞ் செப்பவக்குண
நிலவுபோதீண்டுற நீர்செய்ம்மினென்றான். (௫)

ஒருதினந்தனில்வெறி யுச்சிமேற்கொளுந்
தருணமோர்ந்தவன்றனைத் தகைந்துகொண்டுபோ
யருகினிலுய்த்தன ரரசனின்றுபோய்
வருதினமியாதுசொல் வாய்விண்டென்றனன். (௬)

காருவாவெனுநிசங் கழறிடாதுவெண்
சீருவாவெனுமொழி திறம்பிச்செப்பலும்
பேருவாவனையமன் பிறங்குந்தன்சபைச்
சாருவார்பலரையுஞ் சாட்சிவைத்துப்பின். (௭)

நாளையெல்குடதிசை நாலைமூழ்கலும்
வேளைமாண்புறச்செயும் வெள்ளைமாமதி
பாளைவார்குழலியர் பரிவுமிக்குற
வாளைபாய்கீழ்க்கடன் முகட்டில்வந்திடில். (அ)

நின்னுயிருயுமின்றே னீணிலத்தின
ரென்னுரைசெய்யினுஞ் செய்கவென்றனே
மின்னும்வாட்படைகொடு வெட்டிவீழ்த்தியே
மன்னும்வேதியக்குல மாசுநீக்குவேன். (௯)

என்றுரைத்திதுநிச மேயென்றுஞ்சொலிக்
கன்றும்வெஞ்சினங்கொடு கடிதுபோக்கினன்
குன்றுறழ்வெறிகுலே குலேந்துகோதறு
நன்றுணர்ந்தகமிக நாணியஞ்சியே. (௧0)

வேதியனினிநமை வேந்தீன்வாள்கொடு
காதிடுமுன்னருட் கவுரிதாட்டுதி
யோதியங்ஙனமதி யுதித்திடாவிடின்
மாதிரமறியமாய் குவலென்றுன்னினன். (௧௧)

மற்றைநாள்கனற்குழி வளர்த்துநூறுகா
லொற்றைவாருறியதன் மேற்செய்துற்றனன்
கற்றையாம்வெங்கதிர்க் கடவுள்கீழ்த்திசைப்
பொற்றைமேற்றேரொடு பொலிவுற்றனரோ. (௧௨)

உதிக்கின்றவென்றெடுத் தோரந்தாதியான்
மதிக்கின்றசீரபி ராமவல்லியைத்
துதிக்கின்றகவியொன்று முடியுந்தோறுந்தான்
கதிக்கின்றவுறியினோர் கால்கொய்தானம்மா. (௧௩)

உறியதன்காலெழுனூற் றுன்பதற்றுநேர்
மறியணிந்தவன்றிரு மனைவிவந்திலாள்
பொறியிதான்மாய்தலே போலுமென்றெணிக்
கிறிபடூஉவாவலிற் கிளர்ந்திட்டானன்றே. (௧௪)

அன்னவாகனன்குலத் தமைந்தயாக்கைதான்
மன்னவன்பிடித்தகூர் வாளின்மாய்வுறு
தின்னவாறறிதன்மிக் கேற்றமேயென
வுன்னலுஞ்செய்தன னுரத்திலொப்பிலான். (௧௫)

எல்லவனூர்தரு மிரதமாங்கொரு
வல்லயத்தளவுபோ மாகில்வாரியீ
லல்லலுற்றிடும்படி யாழுமென்செய்வான்
சொல்லவேண்டியமற்றோர் கவியுஞ்சொல்லியே. (௧௬)

ஆதியேயந்தமா முடித்திட்டம்மைதன்
கோதில்சீர்முழுமையுங் குறித்துக்கும்பிட்டுத்
தீதினுந்தனேக்கனத் தென்னத்தேறியே
* யேதியாலொருகயிற் றினையும்வெட்டினன். (௧௭)

* ஏதி - வாள்.

அந்தவேளையிலவ னழலில்வீழுமுன்
வந்தவிர்ந்தம்பிகை வானுளோரெலாம்
பைந்தண்மாமலர்மழை பொழியப்பானுகர்
கந்தவேண்மணங்கமழ் கரத்திலேந்தியே. (கஅ)

அஞ்சனியெனத்தரை யதனில்விட்டெழிற்
கஞ்சநாண்மலர்விழிக் கருணைபெய்துதன்
செஞ்சரண்டொழுமகன் செப்புமுன்னவ
னெஞ்சகத்துறுதிபோ னிரம்புமார்வமாய். (கசு)

சடக்கெனக்கீழ்த்திசை தன்னிற்றன்கையா
லிடச்செவிக்குழையினை யெறிந்திட்டாளுடன்
கடற்புவியினரெலாங் கண்டுகைதொழூ
தடக்கருமுவப்புற வலவன்றேன்றினன். (உ௦)

களங்கமின்முழுமதி காணுநத்தினம்
விளங்கலின்மாதவ விரதரியாவரு
முளங்கசிந்தருள்விளை யாட்டென்றோர்ந்தவ
ரிளங்கருத்தினரிதோர் சாலமென்றனர். (உக)

வெஞ்சுடர்மறைதலும் விபுதர்க்கடலாரு
ளஞ்சுடருதிக்கைகண் டரசனுண்மைதோய்
நெஞ்சுடனெல்கியே நிசம்பொய்மாற்றிய
செஞ்சுடர்ப்பனவனைத் தேடியோடினன். (உஉ)

கண்டனன்மணிமுடி கமலத்தாளுறத்
தெண்டனிட்டடிகள்சீர் தெரிந்திடாமல்வெந்
தண்டனைவிதித்தவென் றன்னைத்தண்டியா
தெண்டருநலஞ்செய்தாள் ளகனச்சொன்னனரோ. (உ௩)

அன்னவற்கந்தண னரியவாசிசொற்
றுன்னதுமொழிவழி யூறெலாமொழிந்
தென்னையருள்பெற்றி யிங்கணுய்ந்துளே
னின்னகத்தையுறே லெனநிகழ்த்தினன். (உச)

அங்கவரிருவரு மளவளாயபின்
னெங்கணுற்றோர்களு மியன்றதோர்ந்தனர்
திங்களன்றிரவெலாந் திகழ்ந்ததென்செயார்
சங்கரன்மனையரு டலைக்கொண்டோர்களே. (உரு)

நாவிருமதியமோர் நாளிற்காட்டுகென்
றுவிநேர்தமிழ்ச்சுவை யடியரேத்திநும்
வேவினன்றனைத்தரும் விமலைசெய்வளென்
றேவிடத்தகுந்தகு முண்மையுண்மையே. (உசு)

இலவினிற்கனிவிழைந் திடினுமெய்தலாற்
புலமைசாலடியர்தம் புகழ்முற்போர்த்தொழில்
வலவராமன்னர்சீர் மழுங்குமாட்சிமை
நிலமொடுவானினு நிலவலுற்றதே. (உஎ)

அன்றுதொட்டந்தணற் கரசனுளென
நின்றுவேண்டுவவெலா நிரம்பச்செய்தது
மன்றுளான்மனையருள் வாய்ந்துற்றுனவற்
கின்றுணையாயது மியம்பத்தக்கவோ. (உஅ)

அதன்பினுயினுமபி ராமப்பட்டனல்
விதந்தரும்வைதிகத் திசைந்திட்டான்கொலோ
கதஞ்செய்முன்னெறிக்கொடு களித்துற்றுன்கொலோ
விதன்சரதஞ்சிவை யிதயந்தேறுமே. (உகூ)

அருள்பெறுமவர்செய்தீங் கனைத்துநன்றென்று
மிருளுறுமவர்செய்நன் றியாவுந்தீதென்றுந்
தெருள்சினூல்சொலற்கபி ராமத்தெள்ளியன்
பொருள்படுசெரிதமே போதுஞ்சாட்சியே. (௩0)

வெந்தகைப்பூர்வமீ மாஞ்சர்வெற்பிறை
தந்தவட்பரவும்வா மிகளிற்றும்நரே
யெந்தவன்சமயிக ளேனுமோருயிர்
நொந்தழப்படுத்திலா ரெனினன்னேன்பரே. (௩க)

எத்திசையினுநிறைந் தியங்குமெய்ப்பொருள்
சத்தியாயுருக்கொடு தழலின்மாய்வுறு
தத்தினமளித்தபே றடைந்தவந்தணன்
முத்திபெற்றனனென மொழியவேண்டுமோ. (௩உ)

அன்னவன்பகர்ந்தவந் தாதியொன்றுமே
பின்னமற்றெங்கணும் பிறங்கிற்றஃதலா
லென்னநூலினங்களாய் கிசைத்திட்டான்கொலோ
வன்னவெண்டாமரை வாணியோர்வளே. (௩௩)

தாட்டிகவளவர்கோன் சபதங்கூறிய
வாட்டிறம்பாழ்பட வாமவந்தண
னுட்டிருண்மலிவுறு நாளிற்றிங்களைக்
காட்டியசரித்திரங் கதையிற்சேர்ந்தபின். (௩ச)

நெல்லைமாநகர்க்கிடை நிலவுங்கோயிலி
லல்லைநீக்கிடும்விளக் கமைக்கும்வேலையோன்
றொல்லைநல்வினைப்பெருந் தொடர்ச்சியாற்றுணர்க்
குல்லைநேர்கலைகொளோர் முனிவற்கும்பிட்டே. (௩௫)

என்றனக்கொருப தேசமீந்தரு
ணன்றடைந்துயவென நவின்றுபோற்றலு
மன்றபிராமனே தியவந்தாதிப்பாட்
டொன்றளித்தனனுரு வேற்றலுற்றனன். (கசு)

வையமுந்துரகமு மதத்தவேழமுஞ்
செய்யமாமகுடமா தியவுந்திங்கள்சூ
டையன்மாமனையவ ளடிகட்கன்புமுன்
செய்யவல்லவர்கொள்சின் னங்களென்பவே. (கஎ)

அக்கவியவன்மிக வறையுமந்நாள்
கைக்கணிதருசெங்கோற் காவலன்றனெஞ்
சொக்குமங்கையர்மிசை யுய்த்திட்டுற்றனன்
மிக்கமந்திரியக மிஞ்சலுற்றதே. (கஅ)

அவ்வமைச்சாணவ மறிந்தொர்நாளிறை
யிவ்வதிகாரநிற் கீந்ததோர்ந்திலா
யெவ்வமுற்றிடைகென விகழ்ந்திட்டன்னவன்
கைவ்வயினுழியைக் கழற்றியக்கணம். (கக)

மாபலிக்கருள்செய்தார் வாழ்பொற்கோயிலிற்
றீபமிட்டௌாற்கொணர் கென்னச்சிந்தையின்
கோபமிக்குரைத்தவற் கொணரக்கண்டிதை
நீபரித்திடுகென நிகழ்த்தியீந்தனன். (௨0)

அதுமுதற்றன்னிலை யரசனெய்தினு
னிதுபரித்தவனுமேன் றிழைப்பராபரை
பொதுவறநோக்கருள் பூண்டமாண்பினுற்
சதுர்விதவுபாயமுந் தலைக்கொண்டானரோ. (௨க)

எம்மையினெத்திற மியாவர்வேண்டினுஞ்
செம்மையாவழங்கிடுந் திருக்கண்ணம்பிகை
கைம்மையின்றிப்புனை கவியொன்றோதினன்
மும்மையார்ந்தமைபலர் மொழிகுவார்களே. (௨௨)

அன்னதோர்பாடலை யணியமற்றவற்
றென்னபாட்டியாவர்சொற் றெதுபெற்றார்களோ
கன்னல்வில்லொடுமலர்க் கணைகளேந்திய
சின்னமானனையவள் சிந்தைசாட்சியே. (௨௩)

ஒருவனக்கவிமுழு துரைத்துப்போற்றிலெத்
திருவருளெய்துமோ செய்துசாற்றிடு
மருமகாரெப்பய னடைகுவார்களோ
விருபதம்பெறுதலே யேற்றமாகுமே. (௨௪)

பத்திமிக்குறுமபி ராமப்பட்டர்தஞ்
சித்தியுமவர்கவித் திறமுஞ்செப்பினேன்
புத்திரீடலிற்புக ழேந்தி யென்றபேர்
சுத்தியபுலவன்சீர் நவிலுவேனரோ. (௪௫)

அபிராமப்பட்டர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௦௪௬.

## ஐம்பத்துமூன்றாவது
## புகழேந்திப்புலவர் சருக்கம்.

பன்னருஞ்சீர்வண்மையுறு பாண்டிவளநாட்டணியாத்
துன்னலுறும்வேளாளர் தொல்குடியின்மகவானோன்
கன்னலின்பாகனையதமிழ் கற்றவர்தங்கண்போல்வான்
பொன்னவள்கோன்பதம்பரவும் புகழேந்திப்புலவோனே. (௧)

பாண்டியன்றன்முதல்வாயிற் பாவலவனுமாறு
வேண்டியதற்குடன்பாடாய் வெவ்வேறார்விட்டுவரு
மீண்டியநாவலர்க்கெல்லா மிதங்களேநிதஞ்செய்வோ
னேண்டிகழும்வெண்பாவே யெளிதாமென்றிசைக்கின்றோன். (௨)

அக்கவியானளன்சரித மத்தனையுமம்புவியின்
மக்களினஞ்சூதாடன் மறந்துய்வான்வகுத்திட்டோன்
பொய்க்கவிஞரனைவருக்கும் புலியென்றௌவையும்புகழும்
மெய்க்கவியில்வல்லனென விளம்பிடுமாண்படைந்தோனே. (௩)

அந்நாளின்மதுரைநக ராண்டிருந்தபாண்டியற்கு
மைந்நாகநடைகாட்டோர் மகள்பிறந்தாளன்னளைச்
செந்நாவலோர்புகழச் செழுந்தமிழிற்பயில்வித்தான்
கைந்நான்கிலாக்கயற்கட் கவுரியெனத்திகழ்ந்தாளே. (௪)

அன்னையினுமப்பனிலு மான்றநிலைக்குரவனெனப்
பொன்னையிகழ்புகழேந்திப் புலவோனையவண்மதித்தாள்
மின்னைநிகர்தன்மனைவி விரதமுற்றியீன்றமக
டன்னையொப்பாளென்னவவன் றானும்விழைந்தனன்மாதோ. (௫)

பூத்திலங்குகொம்புறழப் பூவையினைப்பொன்னிநன்னாட்
டாத்திமலர்த்தாரணிதோ ளடற்சோழன்வேட்டுத்தன்
சேத்திரக்குக்கொடுசென்றான் சிலநாட்சென்றப்புலவ
னாத்திரங்கொண்டரசுரைபெற் றவட்பார்க்கச்சென்றானல். (௬)

சென்றனன்சோணாட்டினிடைத் திறலொட்டக்கூத்தனெனும்
வன்றகையபாவலவன் வளவனுக்கோர்குருப்போல்வான்
றன்றலைமைகுன்றுமெனத் தானெதிர்போயுபசரித்திட்
டின்றடியேன்மனையினிடை யிருக்கவெனவழைத்தேகி. (௭)

பொன்னுலோர்விலங்கிட்டுப் புறத்தொருவரறியாமன்
மின்னார்வாழ்வயினுய்த்து விருப்பொடளித்தருண்மினெனச்
சொன்னானெவ்வொருநாட்போய்ச் சுகங்கொலென்றும்வினாவிடுவா
னின்னார்க்கிவ்விதிதானென் றிமையவருமறிவரிதே. (௮)

தன்னூரின்மமகளேபோற் றமிழ்நாட்டுவேந்துதவு
மின்னுருக்கண்டவள்கூறும் வியனார்சொற்சுவையார்ந்து
மன்னுறையுமவையினியிடை வதிதரற்கேவாஞ்சையுற்றான்
முன்னுறுமூழ்வினைப்பயனான் முரண்டலைகொள்புகழேந்தி. (௯)

பாரதத்தின்சிலகதையைப் பலவிதமாக்கற்பித்துச்
சீரவிருமடுக்குமொழித் திரள்சேர்த்துச்சிந்தைநெகிழ்
வாரமுறுகண்ணிகளின் வகையநந்தமாவகுத்திட்
ரேகத்திலுளமாத ரொருங்குவப்பவுரைத்தானே. (௧௦)

மாதர்முறையத்தனையும் வாய்ந்ததினான்மடநல்லார்
போதவுபசரித்திட்டார் புகழேந்திக்கிகழ்வுண்டோ
மாதவனைமறவாமன் மனவெளியினினைத்திந்த
வேதமொழித்தருள்கூரென் றிரந்துசின்னாளிருந்தானே. (௧௧)

வேறு.

மதத்தவாரணமேல் வளவனுற்றவன்றன் மணிமுடிமிசையொட்டக் கூத்தன்
பதத்துணைபுனைந்து வருடத்திலொருக்காற் பவனிவந்திடுதின முதித்த
ததத்தனைமடவார் களுஞ்சொலவினவி யவரிடமப்புல வன்றா [ந்தான்.
னிதத்தசொற்பலசொற் றியானதுகாண்டற் கியன்றனசெய்ம்மினென் றிர

வஞ்சகமடவார் நெஞ்சகமிசையின் மாநிலத்தியாதுதான் செய்யா
ரஞ்சலென்றவனுக் குறுதிசொற்றந்த வானைபோந்தெருவினுக் கடுத்து
மிஞ்சவேயவரை படர்தருபந்தர் மிசையொருமிரளியில் வைத்தார்
செஞ்சரண்விலங்குந் தலைமிசைக்கவித்த சித்திரச்சட்டியுமாக. (௧௨)

அதனிடைத்துளைத்த கண்வழித்தன்கண் ணுமவற்றொளிசெல விருந்து
கதமிகுமுதலை வாய்ப்படுகரியுங் கனகனுற்றுயர்கொள்கான் முளையு
மிதமிலாரவையி லழுமொருமகனு மெண்ணியதெண்ணின னவன்றன்
பதமிரண்டையுஞ்சின் மாதராங்குரத்தாற்பாய்ந்திடாவாறு பற்றினரே.

அவ்விராவதனிற் பல்லியமுதலா மளவிலாடம்பர மமையச்
செவ்வியபவனி வருதலுமந்தச் சிந்துரஞ்செங்கண்மால் வடிவம்
வெளவினனிருந்த பந்தரினருகில் வந்தொருமலையென வசையா
தெவ்விதங்குறித்தோ நின்றதாங்கியன்றா ரியாருங்கைகொட்டி நக்காரே.

நக்கபோதரசன் வியப்பொடுபயமு நாணமுஞ்சினமுமேற் கொண்டு
மக்களியாவரையு மெழுதுசித்திரம்போல் வயங்குறவடக்கியே வினவ
மிக்கநின்னம்பா ரியின்மிசைக்கவிகை மிளிர்தல்கண்டலது வேறில்லை
யிக்களிநிரவிற் காட்டுவாரற்ப ரெனல்பழமொழியன்றோ வென்றார். ()

தேவர்தம்பவனிக் கெனிற்றருநமக்கிச் செயறகாதென்பது முன்னிக்
காவலன்றனது முடிமிசைக்கமலக் கழல்சுமத்தினன்றனை நோக்கிப்
பாவலர்தேவ ரனையராலிதற்குப் பகர்திநீஞாயமென் றுரைத்தான்
கோவலன்றடையா லவன்மருமகள்சொற் கொடுத்திடாதிருந்தன ளம்மா.

அவனுடன்கவிபா டாதலமரலோர்ங் தளவிலாரவமதித் ததற்பின்
பவளவாய்க்கரியோ னருள்குறித்தவரைப் பந்தர்மீதிருந்தவன் பலரும்
விவரமாத்தெரிய வெண்சொலேயடுக்கி வெள்ளியதாமரை மிசைவாழ்
தவளபாரதியா ளருளினுலிடிபோற் சாற்றினெருதமிழ்க் கவியே. ()

அண்டமீதுலவு மருந்ததியென்னு மருந்திறற்கற்பினு ளுன்னைக்
கண்டதாலூறுபடவொணுதென்னக் கருதிநீகங்குலிற் கவிகை[பொருளா
கொண்டதுமுறைதான்' குலோத்துங்காவெனலே கூறுமக்கவிதையின்
மண்டனிபுரப்போர் மாதரார்கற்பை வளர்த்தலுங்கடமையா மன்றே.()

அக்கவிவினவி யதிசயித்தரச னங்கையாலவனையங் கெடுத்துச்
சிக்கமும்பதமும் புனைந்தமைகளைந்து சிரத்தின்மீதிருந்தவ னுடன்வைத்
திக்கும்பிழைநேர்ந் திட்டதென்னெனமிக் கெண்ணியேயானையை யுதைத்தான்
மக்களாங்கியன்ற வாறெலாம்புகன்றார் வகுத்துரைத்திடற்கரி யனவே.()

கோதில்சீரொட்டக் கூத்தன்றான்கவிதை கூறுமுன்னவன்மனைப் பொம்
யோதியதென்றுஞ் ரிலர்சொனாரங்க னுள்ளகமொருமையில் பலரு[மை
நீதிவேந்தனைக் கிகழ்வதற்கொருமை நேர்ந்தமையோர்ந்திடி னிலமுண்
டாதிநாளுமிழ்ந்திட் டளந்தளித்திடுமா லருள்விளையாடலா மம்மா. ()

எத்திறமுடையா னென்னினுமொருவற் கியல்பலாதனசெய்வா னென்னி
கைத்திறமுதவா தவமதிப்படைந்து கடைப்படுமெனற்கிதோர் கரியா[ற்
மத்திறமரச னுனைவிட்டிழியு முன்னமேயம்பொனூர்த் தலைவன்
மெய்த்திறமுடியோ டிழந்திரிதரவெல் வேந்தன்மாமகள்வின வினளால்.

வினவலுமிழுது சொரிதருகனல்போல் வெஞ்சினமிகைபடக் கொண்டு
தனதுநாயகன்செ யரசியல்வழுவாற் றழைத்ததிப்பிழையெனத் தேறி
யனகமங்களச்செந் திருவொடுகலைமின் னனையடன்னரண்மனை வாயிற்
கனமுறுகதவஞ் சாத்தியோர்தாளு மிட்டனள்கவின்வளைக் கையால். ()

ஆனைவிட்டிறங்கி யரசன்மெய்ப்புலவ ரிருவரையுநேர் நோக்கி
யேனையோரின்றித் தனிவருபிழைக்கும் விலங்கிடுமிகற்குமிக் கிரங்கிப்
பூனைபோற்கொல்லா தளித்தமைக்குவந்து புகழிகழ்வழிவுறு தென்று
தேனைநேர்மொழித்தன் மனைவியிற்குறித்தத் திறமையோர்தம்மொடுஞ் சென்றான்.

சென்றமன்கதவாங் கடைத்தமையுணர்ந்து செழியன்மாமகள்சின மஞ்சி
வென்றலதினைத் திறக்கொணுதென்றவ் வினைக்கெலாம்வித்தென வருகி
னின்றவன்றனைப்பார்த்தொருகவியினிதா நிகழ்த்தெனக்குறிப்பினுலுரைப்ப
முன்றனைமோசஞ் செயுஞ்சுணமகடான் முன்னுபுமொழிதர லானுன். ()

இழைவகிர்ந்தனைய நுண்ணிடைக்கவினு ரேந்திழாயெஃகவே லென்னக்
குழையுடன்பொருங்கூர்ங் கண்ணுறுமயிலே கொண்டகோபந்தணிக் தருள்க
மழையுறுந்தடங்கை மானவாபரணன் வந்தனனின்றிரு வாயில் [ன்றான்.
பிழைகளொன்றிரண்டுபொறுப்பதேகடமையன்றுகொல்பேதையர்க்கெ

என்றசொற்பொருளார் கலித்துறையினவி யியல்வளர்த்தவன்றிருப் புதல்வி
யுன்றனதினத்தார் தொழின்முறைநினைவா லுதித்தசொல்லிசைவுதா னுள்ளங்
கன்றலுற்றிடுமென் னுருவெழில்கழறி யழைப்பதுகடமையோ வுடனே
வன்றழற்சினந்தீர் கெனலருவருப்பே மழைக்கையுமானமு முள்ளான்.()

நாட்டிலிம்மன்ன னொருவன்றானுளனோ நான்பிழைபொறுப்பது நின்னைக், கேட்டினித்தானோ பேதையென்றீண்டுக் கிளத்திடறகுதியோ கிளர்போர், மூட்டிடத்தகுந்தீங் கிழைத்தனைய்ந்தோ வெனச்சொலி முரணொட்டக் கூத்தன், பாட்டினுக்கிரட்டைத் தாளென்றுங்கூறிப் படக்கெனமற்றுமொன்றிட்டாள். (௨௮)

இன்னசொற்றிரளிற் போர்விளைத்திடுந்தீங் கெனுஞ்சொலைமன்னனன் கெண்ணித், தன்னதுபுலவற் றனையிடற்பொருட்டாற் றடம்புயவழுதிதான் சினந்தா, லென்னவாமென்னுங் குறிப்பெனத்தேறி யியற்புகழேந்தியை நோக்கி, நின்னதுபாட்டொன் றுதிக்கினன்றென்ன நிகழ்த்திடாவண நிகழ்த்தினனால். (௨௯)

நானுனைக்கபாடந்திறவெனவேண்டே னளினநாண்மலர்ப்பொகுட்டுறை
தேனுறழ்பாவாய்நின்கரஞ்செந்தா மரையெனச்செப்பலுமிறைவன் [யுங்
பானுவின்குலத்தோனென்பதுநிசமேற் பகருமுன்றிறக்குமென்றுரைத்தான்
சூனுறுவண்ணந்திறந்தவற்பணிந்தா டொல்லபிமானமன்றன்றே. (௩0)

தன்கைதாமரையன் றென்றிடிற்சுற்பிற் றகையினிற்றாழ்வுவந் தெய்தும்
வன்கைமாவுகைக்குமன்னவன்பானு மரபினனல்லனென் றுரைத்தாற் [தா
புன்கையன்றன்னைப் புணர்ந்ததீங்கமையு மாதலிற்பொருக்கெனத் திறந்
ளென்கைநன்குணரா ரியாதுவேறொன்றாங் கியம்பினுமிழிதகையதுவே.

பம்பியபாண்டி நாட்டினர்தவத்தின் பயனெனத்திகழ்புகழேந்தி
கும்பிடுந்தன்ன திறைமகடனக்குக் குளிருமாசிகண்மிகக் கூறி
வெம்பிநீவருந்தே லவரவர்க்கமைந்த விதியெவர்விலக்கலா மெனலுஞ்
செம்பியனமைத்த வுறையுளிற்புகுந்து திருமகளருளும்வாய்ந் தனனே.()

ஒட்டக்கூத்தனுமன் னுரைபெறீஇத்தான்வா ழுறையுள்புக்குள்ளனொந் துழன்று, விட்டத்தாற்பெரிய மன்னனுமனையு மிரவெலாமியன்றன பேசி, நட்டத்தாலிழிந்த வாற்றினுக்கிரங்கி நலங்கொள்பொன்விலங்கிடற் குவந்தார், சட்டத்தாற்றாழ்ந்த குலத்தரென்றுணர்ந்துந் தமிழினுல்வணங்கு தக்கோரால். (௩௩)

உலத்தினைப்புரைதோள் வளவன்றனவையி லுறுந்தொறுமொட்டக்கூத் தனுக்கு
வலத்தினுமற்றோற் கிடத்தினுநாளும் வயங்குமாதனங்களீந் தனனோர்
கலத்தலில்கருத்தோ ராயினும்புலவோர் கவிச்சுவையளவினிற் கலந்தார்
பலத்தநிந்தனையும் புகழ்ச்சியுமிருவர் பாகமாத்திகழ்ந்தபா ரிடத்தே. ()

அந்நாளிருந்த பாண்டியன்றனிலு மதிகனுத்தமிழ்ச்சுவை யள்விற்
செந்தகைப்புலிக்கே தனனிகழ்ந்ததனுற் சீதனப்புலவனென் றுலகின்
மைந்தர்சிற்சிலர்கூ றிடப்புகழேந்தி வந்தவன்போகிடா திருந்தா
னிந்தநேபுரைசீர் பெறுமொட்டக்கூத்தற் கிலக்கினச்சனியனு மெனவே.

ஒருதினத்தரச னவைசிறந்ததற்பி னொற்றராங்கோடிவக் தும்பல் [த்தா
பெருமதம்பொழிந்து நிகளமுமுரித்துப்பெயர்ந்துபோகின்றதென் றுரை
ரருகுறுமவ்வூர்ப் புலவன்ருன்கலிங்கத் தடலிகலவருளா ரென்ரோ
திருமலிதமிழ்நாடதன்மிசைச்சினந்தோ வென்றொர்பாச்செப்பினுன்றெழித்தே. ()

அதுசொலிமுடிக்கு முன்னமேசினங்கொண் டாணவப்பாண்டிநாட் டவன்ருன், கதுமெனத்தென்ன னுகைக்குமாலியானைக் கால்விலங்கினுக் கும்வண் களியான், மதுகரமுரல்பூம் பொழில்கொள்சோணுட்டு மன்ன வன்மனைவிதா லிக்கும், பொதுவதாம்பூட் டொன் றேயென்றோர்பாடல் புகன்றனன்புயலிடி போன்றே. (௩௭)

அவனுளத்துரமும் பொருணயமாதி யனவுநன்காய்ந்தறிந் தரச [ர்
னிவனவனுறுந்தா னங்கண்மாற்றுவித்தா னென்னவுஞ்சிற்சில ரிசைப்பா
தவரெனக்கவிஞர் தாமுமற்றொருவர் தமைமதியாரெனுந் தகவு
நவரசக்கவிச்சீ ருணர்பவருவப்பு நானிலமுழுது மோங்கினவே. (௩௮)

அந்தநாளவர்வா ழூரின்வாணியப்பெண் ணுமொருகன்னிகை யனைய
செந்தமிழ்ப்புலவ ரிருவரிற்புகழேந் தியைமதித்தொட்டக்கூத் தனைநேர்
நிந்தனைபுரிந்தா ளதனையன்னவன்ரு னிருபனுக்குரைத்தன னழைத்தே
னிந்தவாறியற்றத் துணிந்தனையெனலு மிறைவனேரம்மக ளிசைப்பாள்.

உன்னதுகுடைக்கு ளடங்கிடாதனவிவ் வுலகினிலிரண்டுள வவற்றை
யின்னவையேயென் றிசைப்பவன்றனைநீயறிகுதியானறிந் துள்ளே
னென்னவோதுபுபோ யினளவனவர்ப்பார்த்தியம்புதிரென்றன னியாதுந்
தன்னவனுரையா திருந்தனன்மற்றோன் சவைமுழுதறிதரச் சாற்றும். ()

மற்றொப்பில்கொடைக்கைச் செம்பியராச வரோதயமாழைமால் வரையின், சுற்றொக்கப்படர்ந்து வளர்ந்ததுன்கீர்த்தி தூர்த்தமன்னவர் தலைத் துணிக்கும், விற்றொட்டநின்றோள் விழைதருமடவார் விரகமும டங்குரு தென்ளச், சொற்றொக்கபாட லொன்றுரைத்துணர்ந்தோர் முடி யெலாந்துள்க்குவித் தனனே. (௪௧)

இன்னவாறவரு ளியன்றனவாய வியல்விவகாரமெத் தனையோ
வன்னவைமுழுதும் விரிப்பதற்கறியே னறிந்தவர்பற்பல ரறைவா
ரென்னவாயினுமத் தகைப்புகழேந்தி யியல்பினைவிளக்கிய கருவி
சொன்னகுதனிவேற் சோழன்றனுயிர்போற் குலவியவொட்டக் கூத்தனரோ. (சஉ)

அப்புகழேந்தி யருமையையொட்டக் கூத்தனுைத்தறிபவ ரில்லை
செப்புசொற்சுவைசா லொட்டக்கூத்தன்றன் சீர்புகழேந்தியே யறிவான்
கைப்புறுவுரிமை யுடனிருவோருங் கனிந்துறவாம்படி செய்யாத்
தப்புகன்குணரிற் றவளபாரதியா டன்னையேசார்தரு மம்மா. (சங)

சூரியன்முன்ன ரொளிமழுங்கிடலாற் சுதையுமிழ்கிரணவான் மதியுஞ்
சீரியதன்றென் றிகழ்பவர்போல்வார் திறற்புகழேந்திதன் பெருமை
காரியர்தாமு மறிதரமுயன்ற நாவலன்றனையிகழ் கின்றோர்
பாரியதளையிட் டின்னல்செய்ததனாற் பாரதிபழிப்புமீங் தனளே. (சச)

இருமகார்தம்மைப் பெறுமொரேந்திழைதா னைன்றையொன்றிடர்செயக்காணி, லருமையாய்கெதன்மேற் செலுத்துவாள்கொல்லோ வதனைனன்கறியவல் லார்தாம், திருமகள்கணவ னனையவன்முடிமேற் சேவடிவைத்தவன் றன்னை, வரும்விருந்தொருவ னுற்கலைமகடான் வருத்திய வாறுணர் வாரே. (சரு)

மன்னவன்முதலா மாந்தர்பற்பலரும் வழுத்துசீர்பெறுபுக ழேந்தி
தன்னதுபகைபோன் றவிரொட்டக்கூத்தன் முன்புகழ்பயன்மிக விழைந்
கின்னமுற்றதுவும் பெற்றுவப்பெய்திக் கேழலுஞ்சீயமு மீனு [து
மன்னபல்லுருக்க ளெடுத்துமாநிலங்காத் தருளரிபதம்புகுந் தானே. ()

ஆனையைக்குத்திச் சொல்லினன் மறைத்தா ராமிருமகளிரோ ரனைபான்
மானையொத்துதித்தா ரவரையுமங்கான் மன்னவன்மனைகளாப் பகர்வார்
தேனைநேர்கவியா லவர்திறந்தெரித்த தெய்வநாவலன்பெயர் தெரியேன்
மீனையோர்கொடியா வுயர்த்தவன்பயந்த மெல்லியலாரல ரவரே. (சஎ)

அக்கதையினைவீ னுவிதின்மொழிவ தழகன்றன்றருவருப் பதுமா
மிக்கவியொன்று லிங்ஙனம்புகன்ற தேமொனிலெரியிடைப் பிறந்து
நக்கனைப்புணர்ந்தா ளனையளாய்ச்சோழ னன்மனையாமவ டன்மேன்
மக்கள்சிற்சிலரப் பிழையினைச்சூட்டி மலிநரகடைவுறு வணமே. (சஅ)

வண்டமிழ்நாட்டு மன்னவன்பேறுய் வளவனுக்கார்வ மிக்களித்த
வொண்டமிழ்ப் புகழேந்தியின்கதையவனுங் குறங்கின்முள்பெருமையோ மேரைத்தேன்
வெண்டமிழ்ப்புலவோ ராங்குராங்கினங்கள் வெருளுறவேழ மொத்தடக்கும்
தண்டமிழ்ப்புலமைத் திறலொட்டக்கூத்தன் சரித்திரஞ் சற்றுரைப்பேனே.

புகழேந்திப்புலவர்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - உகவச.

---

## ஐம்பத்துநான்காவது

## ஒட்டக்கூத்தர் சருக்கம்.

பசுபதியருளாலந்நாள் பார்முழுமையுங்கைக்கொண்ட
முசுகுந்தன்றனையாவந்த முரட்பெருவீரர்மைந்தர்
விசுவமேற்செய்ததாய மெய்த்தவப்பயனேயாகிச்
சிசுவொன்றுசோழநாட்டிற் சேயெனத்துதித்ததம்மா. (க)

அன்னசேயினுக்குப்பெற்று ரானந்தக்கூத்தனென்ன
முன்னமேநாமமிட்டார் முருகவேளருளேநாடிக்
கன்னலம்பாகேயென்னக் கவித்தமிழ்ப்பொழியுமாண்புஞ்
சொன்னவாறியற்றுமாண்புந் துரிதமாப்பெற்றானன்றே. (உ)

அத்தகவறிந்துசோழ னுதரித்தழைத்தாங்கெய்து
முத்தமிழ்ப்புலவர் தங்கண் முறையறிதலைமைசூட்டி
யெத்தனைபயன்வேட்டாலு மெளிதளித்திவனோர்தேவ
னுத்தவன்றானேயென்றிவ் வுலகமுற்றுரைக்கச்செய்தான். (ங)

வேயிணைத்தோளிபங்கன் விழியினுன்மேனுளீன்ற
சேயினுக்கிளையோர்தம்மாற் செகத்தினிற்பிறந்துள்ளேமாற்
றுயினைக்கொலினுங்கோழி தனைக்கொலாச்சாதிநாமென்
றுயிரம்விதத்தாற்சுற்றத் தவரையாதரித்தானன்னோன். (ச)

வன்குணத்தொழில்கணீத்து வருத்தமோருயிர்க்குஞ்செய்யா
வின்குணத்தினராநூல்கொண் டிடுந்தொழில்புருடர்க்கீந்து
புன்குணந்தணந்துதெய்வம் புனையுமங்கலத்தராகி
நன்குணத்தவஞ்செய்பான்மை நாரியர்கொளவுங்கண்டான். (ரு)

உரனுடையவரியாமென்றே யுரைகருமவ்வொருவன்சொற்கேட்
டரசனிவ்வுலகோரோர்தற் காவதொன்றியற்றுகென்று
னிரதமிக்கியலுமீட்டி யெழுபதென்றொருநூல்பாடிக்
கரவினெஞ்சகத்தாராந்தன் னினத்தரைக்கணமாக்கூட்டி. (சு)

மற்றையகுலத்தினோர்நம் மகிமைநன்குணரவேண்டி
யிற்றையீதரங்கேற்றற்கா யிரந்தலைதருதிரீண்டப்
பொற்றைமீதிருந்துசொல்வே னென்றனன்பொருக்கென்றீந்தா
ரற்றையாங்குரைப்பக்கேட்டோ ரதிசயித்தயர்ந்தாரம்மா. (எ)

வெட்டத்தாமிருகூறாகி விழுந்தவர்தம்மையெல்லாங்
கிட்டப்பார்த்திருந்தோர்மெச்சக் கிளர்ந்தவேலவனைப்போற்று
மிட்டத்தாற்பழையவண்ண மிலங்கிடப்பொருத்திவிட்டா
னொட்டக்கூத்தனெனுநாம முலகமுற்றுரைத்ததன்றே. (அ)

தன்னுடன்வாதுகூறித் தருக்கியபுலவோர்சென்னி
மன்னும்வார்சிகைதன்சென்னி மருவியகுடுமியோடு
துன்னுறமுடிந்திட்டீர்த்துத் தோல்வியுற்றிட்வேவென்று
மின்னும்வாட்படையாற்றுண்டா வெட்டினுன்பலரையென்பர். (கூ)

பல்வகைக்குலத்திலுள்ள பாவலர்தாமும்வந்து
நல்வசனங்கள்கூறி நாடொறும்பணியவாழ்ந்தான்
செல்வமுமளவுருமற் சேர்ந்ததோர்வியப்பாமன்றே
சொல்வலியினனும்மம்பொற் றேகையுஞ்சேர்ந்ததாலே. (க0)

அத்தகவினனவன்றே னுங்கவிர்தருமந்நாளிற்
சுத்தநீர்ப்பொன்னிநாட்டுச் சோழனேச்சுரர்வந்தெய்தி
மத்தகவேழமூரு மகபதியழைத்தானென்று
ரித்தரையாசைநீத்திட் டிமைப்பினிலேகினனே. (கக)

அன்னவனடைந்தபோதே யவன்றருகுலோத்துங்கப்பேர்
மன்னவன்றனக்குத்துங்க மறையவர்பலருங்கூடிப்
பொன்னவமணிவாய்ந்துள்ள புதுமுடியொன்றைமுன்னூல்
சொன்னமந்திரநீராட்டிச் சூப்புறப்புனைந்திட்டாரே. (கஉ)

மாதவமுனிவர்தாமும் வழுவில்வேதியருமம்பாற்
போதவெண்ணீறுமஞ்ச ளரிசியும்போட்டபின்னர்க்
காதல்கூரொட்டக்கூத்தன் கடைமணிநாவாடாமற்
பூதலமுழுதுந்தன்னேர் குடையினுட்புரப்பக்கொண்டோன். (கங)

பிரானெனவலக்கைதூக்கிப் பேசரைக்கவிமுற்றுமுன்
னிராகவனனையான்போது மெனத்தடுத்தியற்பாவல்லீர்
பராவுமின்னவன்றாள்சூடும் பண்பினின்றுனென்றென்னைச்
சுராசுரர்சொல்வாரென்றப் பாதியுஞ்சொன்னுன்மன்னே. (கச)

அத்தகைப்புலமைதோயா ரரியசொற்சுவைதேருரே
முத்தமிழ்ப்புலவர்க்கூவி மொழியுமம்மொழிவழாம
லுத்தமர்பலர்கொண்டாட வொருவருடத்துக்கோர்நாண்
மத்தகக்களிற்றவ்வாறார் வலம்வந்துங்காட்டினனே. (கரு)

வன்னியைநம்புந்தெய்வ மறையவர்மறைநீராட்டும்
பொன்னியன்மகுடமீது புலவர்பூங்கழல்கள்சூடுஞ்
சென்னியேசென்னியென்னத் திகழ்தருநிமித்தஞ்சோனாட்
டின்னிசைவேந்தர்க்கப்பே ரியாவரும்புகர்வதாமே. (கசு)

எத்தனைபுலவரோமுன் னிறைவரைவசஞ்செய்துற்று
ரத்தனைபேருளாரு மருந்தமிழொட்டக்கூத்த
னுத்தவர்முடிமேற்றந்தா னுறவைத்ததில்லையில்லை
யித்தனையதிட்டமன்னேற் றிசைந்தமையேற்றந்தானே. (கஎ)

தென்னனுடொருவிவந்த செழுந்தமிழ்ப்புலவன்ருளிற்
பொன்னதால்விலங்குபூட்டிப் பொருவிறன்னுயிரேபோலு
நன்னலமடவார்சூழ நடுவில்வைத்தளித்தவார்வஞ்
சின்னநெஞ்சுடையோர்தேருர் தெளிபவர்சிலர்தாமம்மா. (கஅ)

வீமனும்விசையன்ருனும் வென்றியும்விறலுநீங்கித்
தாமணிபடைகள்சென்னி தனிற்சுமந்திடச்செய்மாய
னுமகட்குரைத்திட்டன்ரே நலங்கிளரொட்டக்கூத்தற்
பாமரரிகழச்சில்கால் பகர்ச்சியற்றுறச்செய்தானல். (கக)

வயிணவர்பலரைச்செவ்வேள் வசஞ்செய்தான்மறுத்திடாமல்
வெயிலுமிழாழிச்செங்கை விண்ணவனிருந்தானென்றே
பயில்புகழேந்திக்காகப் பகைவரையடர்க்கும்வென்றி
யயிலவனொட்டக்கூத்தற் கருள்செயாதிருந்தவாறே, (உ0)

வெட்டுற்றதலைகடம்மை மீளவும்பொருத்தும்பாட்டோன்
றிட்டுற்றதுரைக்குஞாலஞ் செயஞ்சில்காலவன்பாற்பெற்றோன்
கட்டுற்றவிலங்குதுண்டாங் கவியொன்றுபாடடானு
முட்டுற்றவாறுஞ்சொல்லு முளரிவெண்மலராள்சான்றே. (உக)

செயமொடுதோல்விதத்தந் திறத்தினுற்பெறுவதன்றன்
றியலுமுன்வினையினுலென் றியம்பலாமிதுவேயுண்மை
மயல்செய்நீருடனூனுண்பார் மதஞ்சில்கால்வலிமைத்தாகி
யயனுவல்சமயமாறு மலமரலுற்கோர்சான்றே. (உஉ)

மேழியங்கொடியினேரும் வீரர்வங்கிசத்தினேரு
மூழிதொட்டளவளாவு மொருவழக்கிருந்தன்றேவவ்
வாழியனழைகரும்வேளே யருவராதவன்வீட்டிற்ருன்
கிழினரிவரல்லாருன் விழைதருகிழமையோரே. (உரு)

குவளையந்தாராரென்றுங் குகற்ரெழுமிலக்கத்தோடு
நவர்தம்வங்கிசத்தாரென்று நவின்றுநாயிரைதின்கின்றோ
ரெவளவுதிறல்பெற்ருலு மெறும்பினமெறும்பிப்பேர்கொள்
கவளமால்கரிகடங்க ளினமெனல்கடுக்குமாதோ. (உச)

வேறு.

உந்தியபுகழ்பெறு மொட்டக்கூத்தன்ருன்
கந்தியல்களிறுடை யிராகவன்கதைப்
பிந்தியபாகத்தைப் பிறங்குசெந்தமிழ்த்
தந்திரக்கவிகளாற் சாற்றினனரோ. (உ௫)

கம்பன்முன்னுட்கதை கழறிவிட்டது
மிம்பர்பேநற்றிவன்பினுட் கதையியம்பலும்
வும்பலவெண்மலர் மக்களும்வாரிதிச்
செம்பதுமக்கணன் ருனுஞ்செய்ததே. (உசு)

கோவையுமுலாவுமந் தாதிக்கூட்டமுந்
தேவருண்சிவனுறச் செப்பினனெனப்
பாவைமிக்குணர்சிலர் பகரக்கேட்டுளே
னாவைவேட்டுறைமின னன்குதேர்வளே. (உ௭)

உட்டன்முதிர்வெய்தலா லும்பரூர்புகுங்
கடமைநேர்ந்திட்டதாக் கணிப்பக்கார்மயி
னடனநாயகன்பத நாடிநல்லெழில்
படர்தருமனையினிற் படுத்துற்றனரோ. (உ௮)

இனிப்பிழைத்திடுங்கொலென் றெண்ணியோர்தரத்
தனித்தவன்மனையினுட் புகுந்தொர்தானத்தின்
மனித்தர்காண்பரியன வைகினன்றமிழ்த்
தொனிப்புகழேந்தியாம் பெயர்கொடூயனே. (உ௯)

அக்கணத்தவன்மக ளட்டபாலிடை
மிக்கவெண்சருக்கரை யிட்டுமேதகு
கைக்கலத்திற்கொடு காட்டிச்சற்றுநீ
யிக்கணமருந்தவே வேண்டுமென்றலும். (௩0)

செல்லுநாள்கூழதுஞ் செலுஞ்செல்லாதநா
ளொல்லுறழ்மெய்ப்புக ழேந்திப்பாவலன்
சொல்லும்வெண்பாவதன் சுவையையூட்டினு
மொல்லுமோவெனமக ளுடன்சொற்றனரோ. (௩௧)

அம்மொழிவினவலு மவன்விளங்கியே
யிம்மொழிக்கேதவ மியான்செய்தேனெனுஞ்
செம்மொழியுரைத்தவற் சென்றுபுல்லிப்பன்
மெய்ம்மொழியுளக்களி மிகச்சொன்னனரோ. (௩௨)

அதுசொலித்தீர்தலு மாங்கப்போழ்தினிற்
கதுமெனத்தூலமெய் கழித்துப்போயினன்
பதுமநாண்மலர்ப்பொருட் டுறைந்துபார்தரு
சதுமுகற்புடைத்தவன் றனதுலோகத்தே. (௩௩)

கோமளக்கவியொட்டக் கூத்தன்வீதலு
மேமவல்விலங்குமுன் னிடப்பெற்றனிநா
ணமகடானுநூல் வாங்கினளெனக்
காமரோர்வெண்கவி கழறினனரோ. (௩௪)

வெட்டத்தற்கொண்டொர்நாள் வீதிதோறும்போ
மொட்டக்கூத்தன்றன துயிர்துறந்தது
நட்டப்பாடாயெணி நலங்கொள்கம்பனு
மிட்டத்தாலொருகவி யியம்பினனரோ. (௩௫)

குட்டியபிள்ளைப்பாண் டியனுங்கோரத்தா
லட்டிசெய்வார்செவி யறுக்கும்வில்லியும்
வெட்டியவொட்டக்கூத் தனும்பின்போயதான்
மட்டில்பாவலர்களி மலிவுற்றுரென்றே. (௩௬)

தானங்காள்வனிடந் தலைதப்பும்படி
மானவேல்விழிக்கலை மடந்தைநாட்டிய
தேனளாவியசுவைத் திமுதமென்றசொல்
லானதையதனிடை யமைத்திட்டானரோ. (௩௭)

நன்னலந்தெரிசில நாவலோர்களு
மன்னனுமவன்பெரு மரபினோர்களும்
பொன்னவள்கலைமகள் புரையுமாதரு
மின்னலுற்றனவெலா மியம்பொண்ணுதவே. (௩௮)

ஓங்கியகவித்திற லொட்டக்கூத்தன்றன்
பாங்கினையிங்ஙனம் பகர்ந்திட்டேனினித்
தாங்கிசைக்கம்பன்றன் சரித்திரத்தையு
மீங்கியன்றிட்டமட் டியம்புவேனரோ. (௩௯)

ஒட்டக்கூத்தர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உ௧௬௩.

## ஐம்பத்தைந்தாவது
## கம்பர் சருக்கம்.

ஈடார்தருஞ்சோழ நாடதிலுறுந்திருவெ ழுந்தூரினிற்
பீடாருமோச்சக்கு லத்தொருவனவ்வூர்ப்பெ ருங்கோயில்வாய்
நாடாளுதிக்குந்தொ றுஞ்சென்றுசங்கூதி நல்வேலையான்
கோடூரமலதுசெய்து வருநாளிலொருநாளிற் கூறுமிடை. (௧)

கம்பத்தினருகோர்சி சுக்கண்டுபெருகுங்க ளிப்போடெடுத்
தம்பத்தனையும்வென்ற விழியுற்றமனையாள்கை யதினல்கினன்
கும்பத்தைநிகர்கொங்கை யமுதூறன்முதலாய குணமெய்தலா
னம்பத்திகண்டீச னருள்செல்வமிதுவென்ன நனியெண்ணினர். (௨)

கம்பத்தினடியிற்கி டந்திட்டதாற்கம்ப னென்னப்பெய
ரும்பர்க்குமெய்தாத பேறுனபிள்ளைக்கு வுந்தோதினு
ரிம்பர்க்குளெப்பேறு மீவானுளானென்ன வெண்ணுதசில்
வம்பர்க்கழுக்காறு மலிகின்றதெந்நாடுசேயும் வளர்வுற்றதே. (௩)

கன்னன்பிறப்பும்பி னுஷிற்றுலங்கிற்று கம்பன்பிறப்
பின்னந்தெரிந்தார்க ளிலையில்லைமுக்காலு மிதுமெய்ம்மையே
தன்னந்தனிச்செல்லு மவனேடொர்நாளங்கொர் தவயோகிதா
னன்னந்தனைப்போலு நிறவாணிமறைந்ன்க றைந்தானரோ. (௪)

அதனைச்சலிக்காம லுருவேற்றிமிகநாடி யருள்பெற்றடற்
புதனுக்கொரிணையான புலமைத்திறங்கொண்டு பொலிவுற்றான்
சுதவர்க்கமல்லாது முழுமானிடத்தன்மை தோய்வுற்றிலா
னிதனைத்தெரிந்திந்த வுலகோர்வியப்புற்றி சைத்தார்களே. (ரு)

அந்நாளினிற்சோழ னருகுற்றசெங்குந்த ராசாகுமோரி
செந்நாவலன்பற்பல் குலமுற்றபுலவோர்தி ரட்கூட்டியே
நுந்நாவினுலொவ்வொர் கவிபாடுமெனவேறு வன்றுனவா
றெந்நாவலோருஞ்செர லும்போதிலிவனுஞ்செ லினனென்றரோ. (சு)

கோக்கண்டுமக்கட்கு லஞ்செத்திலார்கொங்கு மலிதாமரைப்
பூக்கண்டுசிறுகொட்டி பூவாதொழிந்தில்ல புகழ்தோயுநின்
பாக்கண்டுபாவாணர் மறைவார்களோவம்பு பண்ணேமெனத்
தாக்கண்டுசிங்கேறெ னச்செப்பினுனுண்மை தடுமாறவே. (எ)

இவனித்தனிப்பாடல் பகர்தற்குமுன்னங்கி ருந்தோர்களா
மவரிற்சிலோர்சென்னி யறவெட்டிடுறென்று மறைவாரையோ
தவமுத்தமிழ்ப்பேறு பொன்னென்பவெய்திற்ற ருச்சூற்றிட
தெவருக்குமார்வஞ்செ யத்தக்ககுணமெய்த லினிதாகுமே. (அ)

இப்பக்குவத்திப்பொ ருட்சாரமுறுபாட லெளிதோதினேன்
மெய்ப்பக்குவத்தெத்த கைப்பாடல்பின்னுங்கொ லெனவெள்கினும்
பொய்ப்பக்குவப்பாவ லர்க்கீடிலிடியேறு போல்வானதா
லெப்பக்குவப்பேறு மெழில்வாணிவிளையாட லெனலாகுமே. (கூ)

அப்பாடலின்றன்மை யறிவுற்றுமற்றோர்க ளேயும்விட்டதா
லிப்பான்மையுலகெங்கும் விரிவுற்றியற்கம்ப னிசைநீடல்கண்
டொப்பாருமில்லாத வனவன்றனருகேயு றக்கூவிநீ
தப்பாதெனவையின்கண் வரவேண்டுமென்சொற்ற கக்கூறியே. (க0)

பொன்னுடைபணியானை பரியாதிமுதலாய போதக்கொடுத்
தின்னுமரசன்றன் அபிமானியெனுமோசை யெழல்கண்டொர்நன்
மின்னனமணமுஞ்செய் வித்தானவன்சாதி மேயார்களோ
டன்னனமகவேயெ னக்கொண்டவிருவோரு மனிகூரவே. (கக)

கைக்கோளரெனவோச்சர் களுமாணவத்தோடு களியெய்தினுர்
மிக்கோர்களாஞ்சிற்சில் குலவாணரதுகண்டு மிகவெள்கியித்
தக்கோரையனையார்த மரபூடுபிறவாத தாழ்வெண்ணினுர்
மெய்க்கோன்றனபிமானம் விழையாதபேர்முற்றும் விட்டோர்களே. ()

உளம்வெம்புதகவொன்று செய்குந்தர்மரபிற்கு ளுயர்சீலனுங்
களமொன்றுநஞ்சற்கு மவனேடுவோதாது காளிக்குமே
யளவின்றிநசைமிக்க பணிசெய்யுமோச்சர்க்கு ளதியோகனும்
வளவன்ற னவையின்க ணிருகன்களொனவொன்றி மகிழ்நாளிலே. (கஉ)

புகழேந்தியெனுமிக்க புலவோனெனாட் டிற்பொலிந்தான்கொலோ
மிகலந்தவிருவர்க்கு மொருவற்கெனச்சொல்லு மிகமற்றவற்
ககமொன்றுமுறவென்று நவிலாதவிதமென்கொ லறிகின்றிலேன்
பகநின்றமுக்கால முந்தேறுஞானத்தர் பகர்பாலதே. (கச)

அவர்மூவர்களுமீசன் முக்கண்ணெனச்சோழ னருகுற்றநன்
னவநாள்கள்பலவேயெ னச்சொல்லலாமந்த நலமொன்றுமிவ்
வவனாழியுலகுஞ்செ லக்கேட்டிலேன்கம்ப னுடன்வந்தவன்
விவகாரவிகல்செய்தி ருந்தாலதைச்சொல்லு மிகவெஃகியே. (கரு)

உறவைச்சொலற்குள்ள மொருமைப்படாதிந்த வுலகத்தினோர்
மறமிக்கபகையைச்சொ லற்கார்வநனியெய்தும் வகையெண்ணினல்
லறமுற்றநூல்சைந்த மூக்காறுமுதலாகு மகமோதுநூல்
பெறநத்துபுலவோர்க ளனையார்களேயென்பர் பெரியோர்களே. (கசு)

வேறு.

ஒட்டக்கூத்தனு மொண்டிறற்கம்பனுங்
கிட்டவைகக் கிளர்தருசோழன்றன்
னிட்டமிக்க விரவிகுலத்தினுட்
பட்டமன்னர் பலரினுஞ்சீரியோன். (கஎ)

ஆனவென்றி யிராகவனுடலை
மானவண்டமிழ் கொண்டுவகுத்திரென்
றானமொன்றுமி லேமமிக்கீந்துதா
னானமின்றி யுபசரித்தானரோ. (கஅ)

அன்றுதொட்டொட்டக் கூத்தனங்கக்கதை
நன்றுபாடல்க ளாநவின்றுமற்றோ
ரென்றுமோதல ஞகியுரம்பெறத்
தின்றுலாவிச் செருக்கினனென்பரே. (ககூ)

சிறிதுநாள்கழித் துச்சென்னிசெந்தமி
ழறிஞராமிரு வோரையுமங்கழைத்
தெறிமணிக்கிணை யாங்கவியெத்தனை
செறிதலுற்றன செப்புமென்றனரே. (உ0)

இருவர்தாமும்பப் பாதியென்க்கொடாங்
கொருமையெய்தி யுரைப்பரென்றேயந்த
திருபனெண்ணம்பி னேர்தலஃதாயினு
மருமையோடன் றதுசெய்திலார்களே. (உக)

என்னவோசிறி தேன்றமட்டுங்கவி
சொன்னவன்றுகை சொல்லுமுன்சொற்றிலான்
மன்னர்மன்னன் மறிகடற்சேதுசெய்
யன்னகாதைமட் டாயதென்றனம்மா. (உஉ)

அதுபொய்யென் றறிந் தானறசெங்குந்தனு
னிதுவரைக்கு மிசைத்ததுண் டேலொர்பாக்
கதுமெனப்புக லென்றலுங்காசில்வெண்
பதுமைதாள்கரு திப்பகர்ந்தனரே. (௨௩)

குமுதனிட்ட குலகிரிக்கூற்றினாற்
றிமுதம்வாரி தெறித்ததென்றக்கணத்
தமுதமென்ன வறைதலுமஞ்சிடா
தெமுதலென்றிரண் டாம்பாதுகைச்சொலை. (௨௪)

பற்றிவாது பகர்தலும்பாருளோர்
சொற்றிடுஞ்சொலென் றேதுணிந்தோதினா
னுற்றிவுண்மை யுணர்குவமென்னவே
வெற்றிமன்சபை விட்டகன்றார்களே. (௨௫)

இருவர்தங்குடு மிக்குமுடிச்சிட்டுத்
தெருவுதோறுந் திரிந்தனரையகோ
வொருவன்சிந்தை யுழன்றதுமற்றவன்
கெருவந்தானுங் கிளைத்தரிதாயதே. (௨௬)

சயிலம்போலுந் தனத்தொரிடைச்சிதான்
றயிர்கடைந்திருந் தாளந்தத்தாழியுட்
கையினையிட்டது காண்முளை கண்புகிற்
செயிர்விளைக்கும் *திமுதம்மன்றுளரோ. (௨௭)

புளிப்புகன்னிற் புகிற்சிறுபுத்திரன்
களிப்புநீங்கக் கரிக்குமென்றோர்கலா
வெளிற்றுநெஞ்சர் வியக்கலர்வேந்தத்தா
யளிக்கநாடிடி லார்தடுப்பார்களோ. (௨௮)

வன்றளைக்கைகொண் மாங்கொட்டக்கூத்
தன்றணிந்துவை தான்கலைத்தையலை
பின்றுதான்பிறந் தான்கம்பனென்றுசூழ்ந்
தொன்றுமாந்த ருரைத்துவந்தார்களே. (௨௯)

இடைச்சியச்சொ லியம்பிலளேலிவற்
படைக்கையாலவன் கொல்வன்மெய்பாருளீர்
கிடைக்கைகொண்டவன் றன்னைக்கெடுத்திலான்
விடைக்கவின்பெறும் வீறுடைக்கம்பனே. (௩0)

அவன்றனுள்ள மழுங்குபுபோயினா
னிவன்களிப்பெரு வாரியொடேகினா
னுவந்தமன்னனு முள்ளபன்மாந்தரு
நிவந்தவாச்சரி யச்சொனிகழ்த்தினார். (௩௧)

---

* திமுதம் - திவலை.

கொளலருந்துயர் கூரொட்டக்கூத்தன்றன்
றளவமூரற் றவளமின்னுடன்மே
லிளமையோர்க்கதி யிச்சைகொண்டாய்கொலென்
றளவுறாத வசுந்தைகள்பேசியே. (௯௨)

துவக்குப்பாடற் சுவடியைத்தீயிலிட்
டவக்கிலேச மடைந்தகத்துற்றனன்
றவற்றுமாற்றங்கம் பன்சொலுந்தன்மையோர்ந்
துவப்பொழிந்தர சுள்ளுடைந்தானரோ. (௯௩)

மன்னன்சிந்தை வருத்தமுமாறுகொ
ளொன்னலன்சின மெய்தியுஞற்றலு
நன்னகர்க்கணுற் றூர்பகர்ஞாயமு
முன்னலாலுள மொல்கியகம்பன்றன். (௯௪)

வேறு.

எவ்விதத்தினுமி ராமகாதைகவி யாதல்செய்வனென வெண்ணியே
யவ்விடத்திலும வாகிவைகுபல பாவலார்களாயிரருடன்
செவ்வியார்சிவிகை யேறியேவடதி சைக்கணேகிமிகு செல்வமோ
டொவ்விடற்கிணையில் பண்புமேவின னுளன்கொலோவென வுசாவினன்.

சீரியர்க்குளுயர் சுந்தரற்கருள்செய் சிவனிலாவுதிரு வெண்ணெய்நல்
லூரினிற்சடைய னென்றொருத்தனுள னுழுதொழிற்பயிர்மு யற்சியோன்
பாரிலித்தினம வற்குமிக்கவர்க ளிலையெனப்பலர்ப கர்ந்ததாற்
காரினங்கடலி னைக்குறித்தெழுக வின்பொரக்கடுகி யேகினான். (௯௬)

எங்குளன்சடைய னெங்குளன்சடைய னெனவினவியவ ணேகல்கண்
டங்குளார்வயலி டத்துளானெனவ ழைத்தவன்றனரு குய்ப்பநீ
யிங்குவந்ததென தின்மெலாமுயற வத்தரும்பயனெ னப்புகன்
றுங்குகொண்டுவரு முணவையேயினித ளித்தரும்பசியொ ழித்தபின்.()

அவருடன்சிலரை மனையினிற்கொடினி தமர்தரச்செயவ னுப்பிவிட்
டிவனும்வல்விரைவி லேரவிழ்த்துமுழு கிச்சிவார்ச்சனைபி யற்றியங்
குவகையோடுபுகு முன்னமேயமுத டுங்கெழிற்குரிய ருத்தியா [வாய்.
லெவர்கள்சிந்தினர்க ளோவெனும்படிகெ லனையிறைத்தனர்முன் வாயில்

வந்தவண்ணலது கண்டுநெஞ்சகம்வ ருந்தியேயவைபொ றுக்கினு
னந்தவேலைமுடி வாகுமுன்னமமு தடுநர்வேலைநிறை வாயதாங்
கிந்தவாறவன்மு யன்றபோதுசில வியல்வலார்களிவ னென்செய்வான்
சிந்தனைக்கணதி லோபமுற்றதென வோதிநாதுதெ ரிந்தனேன். (௯௮)

அவர்தமக்கிலையின் முத்துடன்பலவி ரத்தினங்களைய மைத்துணற்
குவகைகூறிவித ரணமுநெல்லினது யர்ச்சியுந்தெரித லுற்றபின்
னிவளவுங்களைமி னெச்சிலாதலினெ னச்சிலோருடனி யம்பலுந்
தவறுபேசியசில் புலவர்விட்டிலர்த ருக்கினனைசெய் தானரோ. (௯௯)

தனதுசார்பினர்கள் சொன்னபுன்மொழிகள் சடையனவார்செவியினுழை
றினவிதஞ்செய்தன வென்றுமீதறியரு ளீடுசோலிலையில் கம்பனாங் [தலுற்
கனகவாசகமி கப்பகர்ந்தவர்க டம்மையாதரவு செய்தபின்
னனமுடன்பல்கறி முதலவாமுணவ ருந்தியாருமகிழ் வாகியே. (சக)

இலைதரித்தளவ ளாயபின்னவணி யன்றவாறவனவி ஞ்வலுங்
கலைமகட்கிடம்ம னக்குலாவியக வின்கொணுவுடைய கம்பனாங்
நிலைவழக்குமுழு தும்பகர்ந்தனனி கழ்த்துகென்றுரைவ ழங்கியே
விலைவகுக்கரிய வுதவிநாடொறும்வ வேறெனுமிகவி யற்றினன். (சஉ)

பாயிரத்தினைமு டித்தபின்புயப லத்திராமகதை யைப்பதி
ணுயிரங்கவிக ளிற்சொனவன யோத்திமேவிமுடி யணியுமட்
டேயிதன்குறைய வன்சொலாவணமி யக்கனுள்பிறரும் வினவிலார்
வாயினிற்பவள்செய் வஞ்சகத்தினைம றுக்கவல்லவர்க ளியாவரே. (சங)

எட்குளெண்ணெய்புரை மாயனுடல்கமல னைச்சொலக்கதையி னிடையி
கட்குடித்துவிளை யாடலாதியவை கழறுயேபழைய காவியத் [னிற்
துட்குறித்தசரி தம்பிறழ்த்தியுமு ரைத்தனன்புலவ ரொருவிலார்
வெட்குறச்சயம்வி ளைக்கும்வாணியருள் மேவலோர்ந்துளம்வ ருண்டரோ. (சச)

தாயினும்பெருகு கருணைவித்துவச னங்கண்மீதுபொழி சடையனை .
யாயிரங்கவிக ளுக்கொர்பாடலில வைந்தனைச்சதம தற்கொர்பாட்
டேயியம்புகவெ னச்சொலுமொருவ னிவனைநூற்றுளொரு வனெனநா
ணுயினங்ஙனமு ரைக்கலாமோவ டக்கினுவைவி யக்கவே. (சரு)

அவனவைக்கணவை முழுதுமேமரூப தும்பகர்ந்தளவில் பரிசுபெற்
றுவகைமிக்குரக மீதுகாவிரியி னிடையுறங்கரிசம் நதியின்வாய்
நுவலீவனென்றுசெல வங்கிருந்தவர்க ளுளன்டிநாட கந டித்திடுஞ்
சிவனகர்ப்பனவ ரொப்பிடிப்பொணர்தி யெயன்றுசெப்பினர்தி ரண்டரோ.

அங்குசென்றுசில நாள்வதிந்துமவ ரனைவருங்குழுவி டாமையாற் [ளான்
பொங்கும்வெந்துயர டைந்துநொந்தனனெனுர் புதல்வனன்னவர்கு லத்து
வெங்குணத்தரவு தீண்டிமாய்தலின்ம யானவாய்ப்பலரு மேவினுர்
தங்குமேட்டொடுத னித்தகம்பனும வண்புகுந்துவரல் சாற்றினன். ()

சிவிகையாதியன வின்றிவந்தயர்செ யற்குறித்துவகை செப்பியுங்
கவிஞராயிரவர் சூழும்வாழ்வுடைய கம்பனென்றமைக ணித்திலா
ரவிரிலங்கையர சன்றன்மைந்தன்விடு மரவபாசமறு பட்டசீர்
நவிலுமவ்வயினி ரண்டொர்பாடல்பகர் நாமறிந்திடவெ னச்சொனுர். ()

அந்தவாறவனை றைந்தனன்பிணம தாய்க்கிடக்குமக வாகமேற்
செந்தகைக்கருடன் வந்துமோதியது சீவனெய்தியதெ ழுந்ததா
லந்தணுளர்பலர் தாமுமன்னவர்த மாதிநாதனென வாடியே
யிந்தனுன்முழுது மருண்மொழித்திரளெ னத்துணிந்தினிதியம்பினுர். ()

அன்னவர்க்குமணி யம்பலத்துறும ரற்குமன்புசெய்த கன்றுபோய்ப்
பொன்னரங்கனெதி ரோதினனதுபு கன்றுமுற்றுதலு மப்பிரா
னன்னலங்கொள்சட கோபன்மாட்சிமைந வின்றிலாயெனவி ளம்பலாற்
பன்னருங்கவிக ணூறுரைத்தனன வற்றினந்தமடி பற்றியே. (ரு௦)

அங்குமன்னர்முத லாயினோர்பெரித டர்ந்தபேரவைநி றைந்ததீர்
றங்குதற்குயரி டம்பெருமலொரு சாரிருந்துமகிழ் சடையனே
யிங்குநீயுறுத லென்னெனுஞ்சிலரொ டிணையில் கம்பனிவன் வைகுதற்
கெங்குமியாருமுணர் நல்லிடங்களீ ரைந்துபெற்றுளனெ னச்சொனான்.

வந்தசோழனுயர் கம்பனைக்கொடுமுன் வாழ்ந்தவாறமைய வைத்துபின்
னந்தராமகதை யிற்சொலாதவன்வி டுப்பவுற்றனவ னைத்தையு
முந்தை நற்புலமை யொடுநூலாவுதனி யொட்டக்கூத்தனினி தோதினன்
முந்தவின்டவனி வற்கெனக்கருதி விட்டதென்றுமொழி வார்களோ. ()

இராகவன்முனை சாட்சியுங்குநிரை யாகமாதியவி னோதமுந்
தராதலத்தின்மானே புக்கறும்புதல்வர் தம்பிடத்தரசை நல்கியே
பிராமயப்பதும டைப்பதுஞ்சொலிமி றைத்துபுண்ணியவ சத்தினற் .
பராவுமெய்க்கதிய டைந்தனன்புலவர் பலர்வணங்கியப தத்தனே. (ருங)

இம்பரிற்புலவர் குதிகொள்வாரினிமெ னப்பரிந்தொர்கவி யோதினான்
கம்பனன்னவனை திட்டமிஞ்சியது காவலன்பெரிது மாவலாய்க்
கொம்பணிச்சிவிகை யேறியிக்கவிஞர் கோமகன்செல்வழி தோறுமியான்
பைம்பயிர்ப்பகுதி கொள்கிலேனிதுமெ யென்றுருத்தரவுபண்ணினான்.

கன்னல்வில்லிபுரை மைந்தனைப்பொருவில் கம்பனீன்றுகளி யுற்றபின்
மன்னனுக்கொருபெண் மகவுதித்ததிரு வாலுடுப்புரைய வவர்வளர்ந்
தின்னலின்றிவிளை யாடலுக்குமிழி யற்கையுந்தெரிவ தாயின
ரன்னவர்க்குணிகழ் நீமையாலவர ழிந்ததாவுலக மறையுமே. (ருரு)

கம்பன்மைந்தன்வய தொருபதோடுசில கழிதருந்தறியி லொருதினத்
திம்பர்சூழிறைய வைக்கணன்னவனொ டேகினனிறையி வன்றன்வாய்
செம்பதக்கவிசொ லுங்கொலோவெனவி னவியாமெனல்செ விக்கொளா
வும்பர்போற்றுநெடு மாலுறங்கிடமொ ருங்குரைத்தியென வோதலும். ()

வேங்கடத்தில்வட வாலில்வேலையினி லென்றபோதுதடை மேவலு
மாங்கவட்கருதி யப்பனுவெனவ கட்டினன்புதல்வ னைத்துரங்
தோங்கடற்றடியி னுந்துயின்றிடுமெ னவுரைத்தொர்மக னுற்றமா
ருங்கலின்றியயர் வென்றவாறுகவி சாற்றினன்சுவைத ழைக்கவே. (ருஎ)

அத்திறந்தெரித லுங்களிப்புமலி வாகியாத்தியணி தோளினன்
புத்திவண்மையின னேதன்மாமனது புதல்வனென்றுரைபு கன்றனன்
பத்தினிக்குநிக ராயபாடறுரு பாவலோரையது சூடுவார்
நத்தியங்ஙனம ழைக்கைவாரிபுனை நானிலத்தினர்வ ழக்கமே. (ருஅ)

மற்றோர்நாளிரவி னகரிசோதனைசெய் மன்னவன்கனாயின் வடப்புறத், துற்றொருங்குபல பேய்செய்பூசனைகொ டொளிசெய்காளியியல் போர்ந்துதா, னற்றொலைந்திடுமெ னருள்கொள்கம்பன்மனை யணுகியேமகனழைத்ததாற், சொற்றொனிப்புகழ்கொ ளப்பனோதியசொ லாலுணர்ந்துகளிகூர்ந்தனன். (ருகூ)

சந்தனத்தையொரு பேயளைத்ததும தனையொர்பேய்விரலி னலெடுத்திந்தவாசநல மேயெனச்சொலிமு கந்ததுஞ்சினமெய் திடுமோர்பேயந்தவேளவளை கத்திகொண்டுவிர லைக்குறைத்ததுவு மவர்சொலுஞ்செந்தமிழ்க்கவியி னூடொலித்ததுதெ ரிந்துவெள்குபுதி ரும்பினன். ()

இந்தவண்ணமவர் செய்தவாடல்பல வென்னவேயுலகி யம்புமாலந்தவாறுமுழு தும்தெரிந்துரைசெ யற்குநானறிகி லேனயிற்கந்தவேளுமத வேளுமேயனைய காவலன்கொள்களி மிகுதியாலெந்தவாழ்வுமர சர்க்குமேலென விலங்கிடும்படியெய் தினரரோ. (கூக)

வேறு.

மன்னனிடமற்றுமொரு மன்னினிதுவந்து
நன்னலமியைந்தசொ னவின்றுறையும்வேளை
கன்னன்மதுரம்புரை கவிச்சுவைகொள்கம்ப
னன்னவனெடுஞ்சபை நினைந்துவாலானன். (கூஉ)

அன்னமிவர்வாணியை யருட்பெறுமொருத்தன்
றன்னெதியமாதிய தழங்கொலிகுறித்தாங்
கின்னவிறையாவனென வேவளவர்கோனா
றுன்னலுறுமன்விளவு சொல்லுரைசெய்தானுல். (கூ௩)

எம்மதுகவிப்புலவ னொன்றுவிடைகூற
மம்மர்கொடுநெஞ்சகம் வருந்திமிகநாணி
நம்மவனையிங்ஙன நலஞ்செய்திலமதனு
லிம்மனெவனென்றன மெனக்கருதியுற்றான். (கூ௪)

துன்பமறியாரதுகொள் வார்துடிதுடிப்பப்
பின்பதைவளர்த்துமகிழ் பெற்றியெனவந்த
மன்பதைபதைப்பவொரு வாறுமுயலுற்று
னின்பமறுமாறிவனை யெய்தியததம்மா. (கூரு)

வந்தவணிருந்திலகு கம்பனெதிர்வளவ
னிந்தநலமியாருதவ வெய்தினைசொலெனலுங்
கந்தமலிவெண்கமல பீடமிசைகவினு
நந்தமதுதாயுதவி னுளெனநவின்றான். (கூகூ)

உன்னையுனக்குதவ லுண்மையெனினீயே
யென்னதுபுகழ்க்கவி யிசைத்தனைசொலெனலு
மன்னனெனனீகொலகல் வானுமுனதேயோ
வின்னதமிழ்கற்றதனை யெண்ணுகினைவாலோ. (கூஎ)

என்னைவிழையாதம னிகத்திலைகுரங்கு
தன்னையடைதாங்காத கொம்புமுளதேயோ
வென்னவொருவெண்கவி யிசைந்தனன்வெளுத்த
வன்னையருளால்விளையு மார்வமலிவுற்றே. (௬௮)

கம்பனதுசொல்பொழுது காவலவன்வினவி
யிம்பரிடைநின்பெயரொ டென்பெயர்சொலாதுற்
றம்பலறுமெய்ப்பய னடைந்துவருவாயே
ளம்பவலதென்றொருத னுடைகலுமாறே. (௬௯)

விட்டனனவன்கடிது வேலையதன்மீதே
யிட்டகலமேறியிய லின்பமுணராதே
திட்டனிகர்சொற்கள்பகர் சிங்களவளூர்போய்ப்
பட்டசளமாவன பகர்ந்துமுடியாவே. (௭0)

மண்கொடுசெயுஞ்சுவர்கள் வைத்துயநினைத்தே
யெண்கொடுதெருத்தொறு மலைந்தவனொரேழை
கண்கொடுகரங்கொடுசெய் சைகைநிலைகருதி
வண்கொடைநெலென்றுதெரி வுற்றதுவகுத்தான். (௭௧)

வைத்திடுதொறுஞ்சுவர் சரிந்துவிழுமாழ்கிப்
பத்தியொடுவெண்கமலை பாதமலர்நாடி
யித்திருவனுடருநெ லியான்கொடுசெலளவுஞ்
சத்திகொடுநிற்றியெனுர் பாடலதுசாற்றி. (௭௨)

அப்படிநிலைத்திடல்செய் தஃதுகொடவழியே
கப்பன்மிசையேறியுயர் கன்னிவளநாட்டிற்
றப்பறவிறங்கிமுதிர் தண்டமிழ்வளர்ந்த
மெய்ப்பதியிலெய்தியும வேலைமுய்லுற்றான். (௭௩)

தேறிடமண்வெட்டியெவர் செய்துதவினரோ
கூறியலுணர்த்தியருள் கோதைதரலேயோ
வீறியலவன்சொல்பெரு நூலைமலர்வேம்பு
நாறியபுயத்திறைய நாள்விழைதலானன். (௭௪)

அந்தமுதிர்காவிய மதன்பயனெய்தாராய்ச்
செந்தமிழ்வலோர்பலர் தியக்கமுற்றுமெய்யச்
சந்தநகரிற்பலப லோர்மொழிதலாலே
யிந்தவறிஞன்செவிக ளுள்ளினுமெய்திற்றே. (௭௫)

சடையன்மரபோருறு தருக்குலையநீர்தா
முடையபுகழ்கம்மியர்கை யுதவலெனவோதிக்
கொடைநனியளித்தவிறை குன்றவெதிரொள்ளிக்
கடையர்செய்தொழிற்கொடு கலக்கமுறுகம்பன். (௭௬)

அக்கவிஞர்செல்பொழுதொ ராளெனவுடன்போய்
மிக்கவரசன்சபையி னோரமதின்மேவித்
தக்கபொருள்சொல்கையி லுவந்தீதவறுங்காற்
றுக்கமிகையெய்தின னுணர்ந்தனர்கடொக்கார். (எஎ)

மன்னனதுணர்ந்தவனை மாட்டுறவிருத்தி
யின்னபனுவற்பய னுணர்ந்தனவிருந்தா
லன்னவையனைத்தையு மறைந்திடுகவெனலும்
புன்னகையுடன்புயல் பொழிந்தெனமொழிந்தான். (எஅ)

தன்கவிகளுக்குரைசெய் வான்றகுதிகண்டு
மன்களிமலிந்தன னவைக்கணுறைவாரி
னன்கணருவப்பெனுமொ ராழியினனைந்தார்
வன்கணர்துயர்க்கடலின் மூழ்கினர்வருந்தி. (எகூ)

வேறு.

அற்றைமன்னனுங் கவற்குநல்லாடையா பரணமாதியநல்கி
யெற்றைவந்தனை நின்சரித்திரமுழு தியம்புதியெனக்கேட்டான்
கற்றைவார்குழற் கலைமகளுணர்த்துநான் கழறுறுமெனச்சொல்லி
யிற்றைதொட்டிதன் பொருள்சொலனின்கட னென்றிடற்கிசைந்தானே.

அந்தவாறிரண் டொருதினஞ்சொல்கையி லளவறுமழுக்காற்று
னுந்தசில்லிளங் கவிஞர்தாமிரவிடை நூவலொருவன்றனைக்கூவி
வந்தவின்னவன் றன்னைநின்ஞாதியா மன்னன்முற்பகர்கென்று
தந்தகீள்பொருட் கொடையுமீந்தனரவன் சபையருகினினின்றே. (அக)

வருமவன்றனை யண்ணனீயிற்றைநாள் வரையெவணிருந்தாயென்
றருகுசென்றுறத் தழுவினனவனுமாங் கவற்கிதமொழிசொன்னு
னிருவர்தம்மையுங் கண்டுமன்னவன்சிறி திதயமொல்கினனப்போ
தொருவன்றன்மனத் திடைவிடாதிருக்கும்வெள் ளுருவினடனைநாடி. ()

இந்தவேளைநின் றிருவடிச்சிலம்பிலொன் றீதியெற்கெனவாங்கி
யெந்தம்பாகத்தி லிஃதெனதின்னு மமான் றிவனிடத்துளதானி
யந்தவொன்றையுஞ் சேர்த்துநின்மனைவிதாட் கணிதரும்படிவாங்கி
வெந்தகைக்கலி யறப்பொனல்கெனச்சொலி வேந்தன்முன்வைத்தானே.

அதனைக்காண்டலு மாதவனிலஞ்திழிந் தானெனவவனுற்றே
ரிதனைமூடிடி னல்லதுவிழிக்கொணு தென்றுகண்புதைத்தாரவ்
விதமுணர்ந்துடன் மயிர்பினைக்கீழ்மகன் மெய்புதைத்தடிவீழ்ந்தான்
கதமலிந்துமன் னவர்கண்மேற்கனலெனக் கறுவிநோக்கினன்மாதோ. ()

இன்னவூரின னெனத்தெரியாதுறு மியல்வலானிவர்தம்மா
லென்னமேதற்றகன் கிலங்கியதாற்பொறுத் திரிதரத்துரத்தென்று
னன்னவாறியற் றியபினரிச்சிலம் பாரதென்றிறைகேட்பச்
சொன்னலத்தின டனதெனக்கம்பனே யிவனெனத்துணிந்தாரே. (அ௫)

துணிந்துதெண்டனிட் டளவறப்புகழ்ந்தனர் சூழ்ந்தவர்பலர்தாமும்
பணிந்துமன்னனிச் சிலம்பினையிக்கணம் பாரதிக்குதவென்று
னணிந்துகொள்ளென நீட்டலுமறைந்தபி னுத்திமாலிகைச்சோழன்
றணிந்தொர்சொற்சொலாதங்ஙனமனுப்பியசரிதமியாவையுங்கேட்டான்.

அந்தச்சோழன்றான் குலோத்துங்கனல்லனுங் கவன்றருமகனென்று
மிந்தப்பாண்டிய னந்நாளிருந்தவ னின்றவன்சேயென்றுந்
தந்தக்கார்மலை நிகர்புகழேந்திவிண் டலத்தநாளுறலென்றுஞ்
சந்தப்பாவல ராமவர்நிகழ்தரு தன்மையாலறிவாரே. (அஎ)

கம்பன்வாய்மொழி கேட்டலுமிந்திரன் கனகமாமுடிவீழ
வும்பரோடவென் றவன்றிருமரபினை னுற்றராலுழவைச்சீர்
வெம்பதாகையற் கிங்ஙனமெதிரினீ வருகெனவிளம்பிப்பின்
கும்பமாமத களிற்றினிற்கொண்டுபோய்க் கூட்டுவித்தனன்மன்னே. ()

வழுதியானையின் மிசைவருகம்பனை வளவன்றன்களிற்றேற்றித்
தொழுதுநின்பெருந் தாய்செயலறிகிலேன் சொற்பொறுத்தருளென்று
பழுதில்சீர்கொடங் நாட்டிடையுய்த்தலும் பத்தினிதனைச்சேயை
யழுதுநொந்ததாய்.தந்தையைக்கண்டுள மளவறக்களித்தானே. (அகூ)

..அழகின்மிக்கபா ரதிதுதிசிலசொலி யப்பன்றாய்கடன்றீர்த்துக்
கிழவிவாதினுற் சிறிதவமதிப்புற்றுக் கிளர்தருசிலநாட்போய்க்
கழகமெங்கணுந் தொனிதருபுகழ்கொடு கம்பன்றானிகழ்நாளிற் [னே.
பழமையாருமோர் தரித்திரனவன்சொலோர் பாக்கொளல்விழைந்தா

அவன்றனக்கிவன் பாடலின்விருப்புற லழல்புரைமிடிநீங்கி
நிவந்தசெல்வமெய் திடும்பொருட்டேயிவ னிகழ்த்தலாயிரம்பைம்பொ
னுவந்தளித்தவர்க் கேயெனக்கேட்டுநெஞ் சுழன்றொருபாயத்தாற்
கவர்ந்துகொள்வது நினைத்தனனையகோ காதலிற்கொடிதின்றே. (கூக)

தன்னையன்றிமற் றொருவரைவிழைகலாத் தகவுறுமனையாளா
மின்னையேவியன் னவன்றனக்கதிமயல் விளைவித்துக்கொணர்கென்று
னென்னைசெய்வனு யகன்மொழிதவறிடா ளேகியின்மொழிபேசி
மன்னையன்னனின் றிராக்களவாயிவண் வருமென்றோர்தினஞ்சொன்னாள்

பாய்விரித்தொரு தீபம்வைத்தேவழி பார்த்திருந்தனளன்னோன்
றோய்விருப்பொடு வந்ததிலிருத்தலுஞ் சுருக்கெனவவள்கேள்வன்
காய்விழிக்கடுங் கூற்றுவனெனத்தடி கைக்கொடுநெருங்குற்றான்
வேய்வியந்ததோ ளாள்கொண்கன்சொற்படி விளக்கினையவித்தானே. ()

இருவர்தாமுஞ்செய்வஞ்சமென்றறிந்திடா தினிக்கொல்வானெனவஞ்சிப்
பொருவில்கம்பனியா னடித்திடேலெனச்சொன்னான்புகன்மொழிமெய்யாகி
லொருதமிழ்க்கவி யிக்கணம்பகர்தியிவ் வொண்டொடிதனைக்காணி
லருவருப்பவன் பெயர்சொனுயார்கொனீ யெனவதட்டினன்மாதோ. ()

மைக்கிணைப்படும் விழிக்கணைகொண்டெனை மருட்டலினிருட்டேட
பொய்க்கிலேசமும் களவுமுற்றிருந்தனன் புணர்ந்திலனடடாமெய்
கைக்கியைந்ததோர் குறுந்தடிகொடுகழுத் தினைமுறித்திடவோங்கு
முக்கிரக்குணச் சக்களவாவவ டங்கையென்றுரைத்தானே. (௯௫)

அந்தப்பாடன்முற் றலுமுடன்றீபமிட் டவரிருவருமொன்று
வந்தப்பாவலன் றுளில்வீழ்ந்தெழுந்துள வாறெலாமுரைத்திட்டா
ரிந்தப்பாடொரு பாடலுக்காப்பட்ட ரெனவியந்துரைத்தேகித்
தந்தப்பாழியங் களிற்றினீராவோ டையைபெறச்செய்தானே. (௯௬)

எத்தகைப்பெருந் தோற்றத்தோராயினும் பிறர்மனைக்கேக்கற்றுச்
சித்தசஞ்சல முடனுயிர்ப்பயமெய்தித் திகைப்பரென்றிடுதற்கு
முத்தவாணகை யாரிலுள்விருப்பில்பொய்ம் மோகங்காட்டிடுவாரு
மித்தரைக்கணுண்டென்னற்குமீதோர்சான்றெண்ணிநன்குணர்வார்க்கே.

ஒருதினத்தினிற் கம்பன்போய்ச்சோழன்ற னுள்ளரண்மனையின்கண்
ணருமைவாசகம் பேசியுற்றனனவ னடைப்பைதாங்கிடுங்காளை
வெருவராதவ னுளவெலாம்பார்த்திறை மெல்லியலொடுதுஞ்சும்
பொருவில்கட்டிலிற் சென்டபொய்த்துயில்மெயாய்ப் போதமற்றதுமாதோ. ()

பட்டினத்தடி களினடித்தொழும்பனும் பத்திரகிரிமன்னன்
கட்டிலிற்படுத் திட்டதொர்தாதியின் கனமடைந்தனனுங்கே
மட்டில்பேரெழிற் சசியினையேநிக ரிறைமனைதன்னுக
மொட்டிடும்படித் துயின்றனளிறைகலை போர்த்ததாலுணர்ந்தில்லாள்.()

அரசன்வந்தவ ளுயிர்த்தெழச்செய்துடன் றுயின்றுளானுரென்னிற்
கரவினெஞ்சின னீயெனநினைத்துடன் கண்டுயின்றனனென்றுள்
பரவுகற்புறு மவளையவ்வறையுளோர் பாங்கருய்த்தற்பின்ன
ருரமலிந்தவா ளுறைகழித்தவனெழும் படியெழுப்பினன்மாதோ. (௧௦௦)

எத்திறத்தின னோவெனுமையமற் றினாந்தெரிதலுநீயின்
டித்திறஞ்செயத் தகுங்கொலோவென்றலு மிதுபிழையெனச்சோர்ந்தான்
மெய்த்திறற்புல வோன்றனுளாதலின் வெட்டிலன்விடுகின்றேன்
பொய்த்திறத்தொரு சமர்த்துரைக்குவனது புகன்றபோகெனச்சொல்வான்.

நெற்பணிச்செய்நென் மேனியூர்க்கற்பணி நிதஞ்செய்கங்கணவன்மின்
விற்பணித்தநன் னுதலுடைமின்மினி மினியெனுமவள்சொல்லுஞ்
சொற்பணித்தொழில் செய்ததுந்துருதுரு வென்றுடன்சொலித்தீர்த்தான்.
பொற்பணிக்கலை போர்த்துவிட்டுடனவ னறிவுறுவணம்போனுன். ()

அடைப்பைக்காரனெங் கெங்கெனவிருந்தவ னவன்வருதலுங்கையாற்
புடைக்கைக்கெத்தனஞ் செய்தலுநடந்தன புகன்றனன்பொற்றுனை
கிடைக்கெயோதில னுதலினிக்கவி கேட்டமன்னவன்றுன்மெய்க்
கொடைக்கையானல னென்றிகழ்ந்திட்டபின் கொடுத்தகிஃதெனவீந்தான்.

கண்டுகெம்பனம் மரசனேயரசனுங் கன்னனெப்பவனென்ன
விண்டுமெச்சலு முடனம்மானெனவிளித் தருகிலவ்வேந்துற்றான்
மண்டுதீச்சினத் துடனிகழ்ந்ததும்வினு வினனெனமதித்தாங்கோர்
திண்டுமாதன முங்கொடுத்திருத்தியோர் செழுந்தமிழ்க்கவிசொன்னான்.

போற்றினுந்தகப் போற்றுவர்வெஃகிய பொருள்கொடாவிடிலீனே
தூற்றினுந்துணிந் தேமிகத்தூற்றுவர் சொன்னசொற்களையெல்லா
மாற்றினும்மூர ணாகவேமாற்றுவர் வடவைநேர்கடுங்கோபக்
கூற்றினுந்தமிழ்ப் பாவலராமவர் கொடியபண்பினரென்றே. (௧0௫)

அன்னவாகனத் தயன்புணர்மனேயவ ளமர்ந்தநாவலிபெற்றா
ரென்னசொல்லினுந் தகுமெனவுரைத்திறை யெழுந்துதன்மனேபுக்கா
னின்னவாறியன் றிட்டதாற்சிறிதொல்கி யியற்றமிழ்க்கவிக்கம்பன்
றென்னனாட்டிற்றன் சிறப்பொடுபோயிவண் டிரும்புவலெனச்சென்றான்.

மதுரையிற்சில நாள்வசித்திருந்தபின் மலேயமால்வரைகாண்பான்
கதுமெனச்செல்கா லங்கொரூர்க்கழனியிற் கடைசியர்சிலர்கேட்ப
முதுபயிர்த்தலேக் கதிரினங்கற்பினர் முகம்புரைந்தனவென்றா
னிதுவினுவலு மறுத்துக்கட்டிடுகுல மிதுவென்றொளருமாதே. (௧0எ)

ஆங்கியைந்தவா றுணர்ந்தொரூர்ச்செல்கையி லறவிறைத்திடும்பாட்டோ
ரோங்கிலின்னிலே மேலெனநிறுத்தின னதன்றுணைமொழிகூட்டும் [ன்
பாங்கியாதெனக் கருதியவ்வயினிரு பகலிருந்தவன்வாயாற்
றாங்கிடும்பனி நீரெனக்கேட்டுளச் சோர்வொடுசென்றானே. (௧0அ)

அங்கொரூரினு விழந்தவள்சில்லென வலர்சிறுநெருஞ்சிக்காட்
டிங்கொருத்தியா நில்லெனநிறுத்தியே னேகினீரோவென்னப்
பொங்கொலிப்பட வழுதவீரடிக்கவி பொருடளேமுதற்சீர்க
டங்கொராச்சரி யங்தெரிந்துளமிகச் சலித்துமீண்டனன்மாதோ. (௧0௯)

சிலம்பையுங்கையிற் கொடுத்துவாங்கியகலேச் சேயிழைதிறல்வேடர்
குலம்பரிந்துறை யவுமிடந்தருந்தமிழ்க் குன்றுகாட்டிலளந்தோ
நலம்பிறங்கிய சோழநாடடைந்துசின் னாள்கழித்தலுமுன்னேப்
பலம்பொருந்திய வினேத்தொடர்பால்வரும் பயனேயும்பகர்வேனே. ()

முதலிற்றன்னது கவிகளிற்சிலர்தத்த மொழிகலந்திடலோர்ந்து
விதனமுற்றன னப்புறமம்பிகா பதிப்பெயர்மிலேந்துற்ற
சுதனங்நாட்டிறை மகளினேக்களவினிற் றோய்ந்ததாப்பலர்தாமு
மிதமின்றிப்பகர் மொழிவினுவலிற்றுயர் வேலேயினிடைவீழ்ந்தான். ()

வேறு.

மன்னவன்மனத்தினு மகளேமற்றவன்
றன்னதுவசஞ்செயுந் தன்மைதோற்றலா
லின்னவாறவனேயின் றவற்குக்காட்டிய
பின்னர்தண்டனேசெயப் பெரிதுமுன்னினான். (௧௧௨)

இந்துநேர்முகத்தியு மியல்வல்லான்றவந்
தந்துளபுதல்வனுஞ் சகசமாச்செயு
முந்துபேருறவினன் மோசம்வந்ததென்
றுந்துசீர்மன்னனுள் ளுடைந்துமாழ்கினன். (௧௧௩)

ஆண்மகார்பெண்மகா ராமவர்க்கிடை
மாண்மலியுறவது மலியின்மாரவே
ளேண்மலர்க்கணைதொடற் கிடமுண்டாமெனக்
காண்மதியினர்க்கதோர் கரியுமாயதே. (௧௧௪)

மைந்துறுகோவரண் மனையிலன்னவன்
வந்துபோய்க்களிப்புறும் வழக்கைமாற்றிலான்
செந்துவரிதழவட் சேர்ந்த தீமைதான்
பிந்துநாள்கம்பன்முற் பிறங்கக்காட்டவே. (௧௧௫)

மயிற்புரைசாயலார் தம்மின்மற்றையர்
வெயிற்படுபுழுவென வெதும்பிவெள்குற
வெயிற்புறத்தெறியுநா லேணியேறிவந்
தயிற்பொருகண்ணிதோ ளணைந்தும்போதலால். (௧௧௬)

ஒருபவுரணைத்தினத் தரசனெண்பிறைப்
புருவமின்னுரந்தப் புறத்துற்றுன்மதிட்
கருகுறுதோட்டத்தி லம்பிகாபதி
வெருவுறுதொருகவி விளம்பினானரோ. (௧௧௭)

பூவரசடியிலே புதுநிலாவிலே
வேவல்செய்திடும்பொலா விரகத்தீயினு
லாவல்கொண்டுள்ளநா னுர்பெண்ணையினுங்
காவலென்றறிவனோ வென்னக்காட்டியே. (௧௧௮)

அக்கவிவினவிய வரசனுள்விடுத்
திக்கணமவற்கொணர் கென்றுவந்தபின்
றக்கபூவரசடி தன்னிற்சாற்றிய
தெக்கவியதனையீண் டியம்புகென்றலும். (௧௧௯)

பூவரசடியிலே புதுமிடாவிலே
வேவல்செய்பயற்றினை விறகுத்தீயினு
லாவலுக்கிசைந்தவா றவித்துத்தோண்டிடிற்
காவலென்றறியுமோ கையென்றுனரோ. (௧உ0)

அங்குபோய்ப்பார்த்தலு மலர்வெண்டாமரை
தங்குவாளங்கனஞ் சமைக்கக்கண்டவன்
பொங்குபோரார்வமாய்ப் புதல்விதன்னையம்
மங்குனேர்புலவன்பால் வழங்கிலானந்தோ. (௧உ௧)

ஏதிவில்லாதிகொண் டிகன்றுபோர்செய்தன்
சாதியிலொருவனைத் தழுவுவாளெனின்
மாதிரமிகழ்ந்திடா தென்னுமானமே
நீதியல் செம்பியன் சிந்தித்தானரோ. (கஉஉ)

அத்தனைய்ருள்பெறு மந்தப்பாவல
னுத்தமமாமட லூர்ந்துங்கொள்ளலா
மெத்தனைமேன்மையெய் திடினுந்தீவினை
யுய்த்தலைத்தடுப்பதற் கொருவர்வல்லரோ. (கஉங)

கற்றுயர்கம்பனு மகனுந்தன்னரு
குற்றுணவுணச்செய லுன்னிமன்னவன்
முற்றுசிர்பெறுமகன் முளரிக்கைகளால்
வற்றுருவுவப்பொடு வட்டிக்கச்சொனான். (கஉச)

மட்டின்மாலுறக்கொளின் மதியுமானமும்
விட்டிடும்படிவரு மெனுஞ்சொன்மெய்ப்பட
வெட்டியவடியினை யெடுத்தமற்றென்றை
வட்டிலைமருங்கினை மகன்சொன்னனரோ. (கஉ(

கோனம்மானென்றசொற் கூறிக்கம்பன்ற
னனைநோக்கின னவன்கொட்டிக்கிழங்
கூனமின்றிப்பகர் வலைப்பெணேசையாந்
தேனகிலம்பெறு மென்றுசெப்பினன். (கஉகூ)

அவளெங்குற்றுளெனி லரண்மனைத்தலைக்
கவளமால்களிற்றரு கெனலுங்கண்டன
ரிவளவுதயைபுரிந் திறக்கவிட்டதுத்
தவளபாரதிபெருந் தவறென்பார்களே. (கஉஎ)

அந்தாட்டினிலமு தயின்றபின்னரம்
மைந்தன்மார்பகத்திறை மகிழ்விற்றன்கையாற்
சந்தனம்பூசித்தன் றனையட்கீதளித்
திந்தவேளையிலிவண் வருகென்றேவினன். (கஉஅ)

ளவுடைக்காமிக டனித்துக்காண்டொறு
மளவளாவுதல்வழக் காதலாலவ
முளமுறத்தழுவிவந் தானுரத்தின்மே
லெளமுலைத்தழும்பு பூணெழிலொடேய்ந்ததே. (கஉகூ)

ாட்டினன்மன்னவன் கம்பன்கண்டுடன்
கோட்டியமுகத்தனுக் குற்றங்காணுறு
நாட்டிறையவர்முறை நடாத்துகென்றுதன்
வீட்டினிற்போய்மனம் வெதும்பிவிம்மினான். (கஙo)

விம்மலுற்றனனுடன் வெள்ளைவாணியை
யெம்மகற்காத்தியென் றியல்கொண்டேத்திலா
னம்மகற்பயந்ததா யதுவினவலான்
மம்மருற்றழுந்தமை வகுக்கற்பாலதோ. (கஙக)

கம்பனேகலுமவன் மகன்முற்காவல
னிம்பரினுள்ளபேரொயிலைச்சூழுமுன்
கம்பலைதவிர்த்தருள் கடவுட்போற்றுபாட்
டெம்பருமறியநூ றியம்புவாயெனில். (கஙஉ)

என்மகடனையுனக் கீவன்முற்றுமுன்
மன்மதன்மகிழ்கவி வழங்குவாயெனிற்
கன்மமீதெனக்கொடுங் கழுவிலேற்றுவேன்
றன்மமேசாட்சியென் றுரைசெய்தானரோ. (கஙங)

அப்படிப்படியாங் கதனைச்சூழ்ந்தன
னொப்பறும்பாத்தொணூற் றொன்பதாதலுஞ்
செப்பணிமுலைகொளச் சிறுமிமேடையுற்
றெப்படிச்செல்கின்று னென்னநோக்கினள். (கஙச)

அன்னவள்பார்க்கையி லவனும்பார்த்திட
முன்னவர்செயும்வினை முடுகித்தூண்டலாற்
றன்னகங்குறித்தது தவறிச்சாயகக்
கன்னல்வில்லான்மகிழ் கவியொன்றோதினன். (கஙரு)

சற்றசைந்திடுதலுந் தனங்குலுங்கலு
முற்றணித்தாளமு முகின்மென்கூந்தலு
நற்றகையதரமு நடையுங்கொண்டதேர்ப்
பொற்றலைக்கவின்மட்டும் பொலிந்ததென்னவே. (கஙசா)

அதுதெரிந்தற்றையே யரசனங்கவற்
கதுமெனக்கொலைக்கடுங் கழுவிலிட்டனன்
வதுவைசெய்தவளிலெண் மடங்குளன்புடைப்
பதுமினியிரவிற்போய்ப் பரிந்துபுல்லியே. (கஙஎ)

செத்ததுகண்டுதன் னுறையுள்சேர்ந்துள
மெய்த்தனைப்பிரேதமா யிருந்துமாழ்கினு
ளத்தமிழ்ப்புலவன்ற னகமத்தலை
யுய்த்தவாறிருந்ததா லோர்சின்னுளரோ. (கஙஅ)

மன்னன்போய்ப்பார்த்ததன் வாயினின்றுசில்
சின்னவெண்புழுவரத் தெரிந்துகம்பன்பா
வின்னவர்றென்னென வினவிலென்மகன்
மன்னன்றன்மக டனதுகாவதே. (கஙகூ)

அவனுயிர்போம்பொழு தவடன்னுச்சுவைத்
தெவளவோகூறுபற் கறித்ததென்றலுங்
கவள்மாவனையன்போய்க் கண்டக்கன்னியைத்
தவளநீற்றறையினிற் றள்ளிநீற்றினன். (௧௪௦)

வேறு.

கம்பனன்றுதன்மகனு மிறைமகளுமெழுந்துவரக் கவிகள்பாடி
லும்பர்வியந்திட நடக்கு மொட்டக்கூத்தன்செயலு முன்னிலானவ்
வம்பரிருவருமரச தண்டமுற்றானெனமதித்து மமைந்தானில்லை
யிம்பர்வெறுத்தரசனையு மிகழ்ந்துதுறவறத்தேனு மேகிலானே. (௧௪௧)

எத்தனைதான்பொருள்கைவசத் திருந்தாலுமிவ்வுலகத் தியற்றவேண்டு
முத்தமகாரியந்தெரியார் பலரதுபோன்றவன்புலமை யொளிர்ந்ததந்தோ
மத்தகவேழத்தினுக்குப் பயந்துதன்பால்வருமரசன் மகனைக்கையில்
வைத்தவெழுத்தாணியினாற்கவியானைச்செயலிதெனவதைத்திட்டானே.

தன்னருமைக் குலக்கொழுந்தைத் தமிழ்ப்புலமைத் திறங்கொள் கம்பன் சதித்ததோர்ந்து, மன்னன்வடி வாளெடுத்தங் கோடினன்கண் டவனெடிய மாயனை, நின்னடிக்கென் றுயபுவி கடந்தோடற் கிடங் கொடுக்கை நிகழ்த்துகென்று, னின்னமுஞ்சில் சேயிருந்தாற் கொடுத் துனது கவிபுனேவ னென்றுபோனன். (௧௪௩)

பொன்றியமைந்தனைக்குறித்துச் சிற்சிலபாப்புகன்றழுது பொருமு ங்கம்ப, னின்றிதுநாஞ்செய்ததற மன்றெனவுந்தேறிமன மிடைந்தங்குற் றான், சென்றிடுமென்செலச்செலத்தன் குலக்குணமேலிட்டுமகற் செகுத் தோன்றன்னைக்,கொன்றிடலேகருமமெனத்துணிவுற்றான்வினைப்பயனைக் குலைப்பாரியாரே. (௧௪௪)

மன்னன்மனைமகளொடுதன் மகனையுந்தோற்றிட்டதுயர் வாரிவீழ்ந்தா
னின்னமுதகவிக்கம்பன் மனையதனிற்பாதியடைந்திட்டாளந்தோ
வென்னவென்பேனந்நாட்டிற் றூர்பலருநொந்தவித மியம்பற்பாற்றோ
முன்னமவர்நுபவித்த சுகமுழுதுமிதற்கீடா மொழியொண்ணாதே. ()

மட்டில்புகழுறுஞ்சோழன் றன்மரபின்கொடியாமோர் வல்லியத்தைப்
பெட்டியினுள்ளுய்த்துநனி பிரகாசந்தருமறையுட் பேணிவைத்துப்
பட்டினியாதியதுயர்ப்பட் டுழல்கின்றகம்பனையும் பரிந்துய்த்திஃது
ளிட்டிருக்கும்பொருளைவெளிப்படுத்துவதன்கடமையென வியம்பினனே.

சென்றுதிறத்தலுமதனு ளிருந்தபெரும்புலிகுதித்துச் சிறித்தன்னைக்
கொன்றுதினற்காமுயற்சி செய்ததிதுபதினுறு கூறுவிழ்க
வென்றுகவியொன்றுரைத்துக் கையினெழுத்தாணியினை யெதிர்த்தானவ்வா
றன்றுதுணிபட்டதனு லரசன்முதலோர்வியப்புற் றடிவீழ்ந்தாரே. ()

பின்னுமன்னன்றனக்கினிய சிற்பனொருவனைக்கொடொருபெட்டிசெய்து
மின்னுமம்பும்வில்லுமத் துள்ளமைத்துத்திறந்தாரை விரைந்துகொல்லு
மென்னுமியல்பினதாக்கித் திறத்தியென்றுண்டந்தவெலா மெளிதுதேற
முன்னுவன்றவாணியெங்கோமறைந்திட்டான்வினைப்பயன்முற்றியதாலந்தோ. ()

திறத்தலுமார்பகத்தருவிப்போயதுமன்னனைப்பார்த்துச்சீறிச்சொல்வான்
மறத்தகைசால்வில்லம்பு சொல்லம்பைவெல்லாதுன் வஞ்சவில்லம்
பிறத்தலெனக்கீந்ததென்சொல் லம்புனதுகுலமுழுதுமெரித்ததென்றுன்
மறத்தவில்வெண்மகள் பதத்திற்புகுந்துய்ந்தானிரவிகுலமாய்ந்ததன்றே.

இம்பரிற்பாவலர்பலரு மிகபரச்சீர்கருதுநல மெய்தவேண்டிக்
கம்பனதுசரித்திரமு மவன்மகன்காதையுங்களித்துய் கவன்றுஞ்சொன்னே
னும்பரில்வாழ்புலவர்சிறை குகன்மீட்டாங் கிவ்வுலகிலுறும்பாவல்லார்
கம்பதத்தின்றளைகளைந்தகாளமேகப்புலவன் றகைசொல்வேனே.(கடுo)

சம்பர்சருக்க முற்றிற்று.

---

ஆ_ திருவிருத்தம் - உ௲கஈ

---

ஐம்பத்தாறுவது
## காளமேகப் புலவர்சருக்கம்.

அகிலந்தனை யுண்டுமிழ்மாய னரங்கத்துற்றூர்
மகிழத்திருக் கோயிலிலுண்டி வளஞ்செய்கின்றோன்
முகிலிற்றிகழ் கோலமுந்தக்கமெய் மொய்ம்புமாய்ந்தோ
னகிலச்சுமை மாதர்நல்லாரது ராகமிக்கோன். (க)

காவைச்சிவன் கோயிலிலுற்ற கணிகைமாருட்
டேவைப்புரை யாளதிருபத்தொர் செல்வியன்னா
ளவைக்குரு வாக்கொடுசொற்படி நாளுஞ்செய்தே
சாவைத்தணந் தார்பெறுமின்பந் தலைக்கொண்டானே. (உ)

அவ்வாறவ னூர்வமெய்திக்குல வந்தநாளிற்
செவ்வாய்க்கரு மாமுகில்போலரி சீரங்கத்தி
னெவ்வாச்சுவை தோய்பலவுண்டியு மானைக்காவின்
மைவார்குழ லாள்பலருண்ண வழங்கினளே. (௩)

அப்புத்தல மாஞ்சம்புகேசுரத் தண்ணலார்முன்
னெப்புத்தவிர் மார்கழிமாதநல் லுற்சவத்திற்
செப்புத்துணை போலுமுலைச்சியர் தீபமேந்தி
யுப்புப்பெருக் கார்திருப்பாடல்களோதும்போது. (௪)

மல்லாருமென் கொங்கைகணின்பதம் வாழ்த்துமன்ப
ரல்லார்புயஞ் சேர்கவென்றோர்சொ லாய்குவந்த
தெல்லாருஞ்சொன் னாரவரோடிவ டானுஞ்சொன்னாள்
பல்லாரமொன் றாயிவடன்முகம் பார்த்துநக்கார். (௫)

வெண்ணீறணி யாதுமண்ணிட்டரி வேட்கைகொள்ளுந்
திண்ணீர்மையற் சேர்வதெண்ணிச்சிரித் தார்களென்றோர்ந்
தெண்ணீர்மைய ளாய்மனைக்காப்பினிற் றூளுமிட்டுக்
கண்ணீர்ததும் பும்படிவைகினள் காதனீத்தே. (சு)

வழக்கப்படியேயந்தவேதியன் மாதவன்றன்
முழக்கப்பெருங் கோயிலின்கைத்தொண்டு முற்றியப்பாற்
சழக்கற்றமெய் யன்பொடுதோட்சுமை தாங்கிவந்தான்
பழக்கந்தவிர் நாளிதென்றோதிப் பயணமிட்டு. (எ)

காப்புந்திற வாதவளாகிக் கடுகடுத்தா
ளேய்ப்புண்டுகொ லென்குற்றமுண்டுகொ லேதஞ்செய்யின்
மாப்புண்டுகொ லின்றுகொளிற்கு வழங்கவேண்டுங்
கோப்புண்டுகொ' லுண்மையையிக்கணங் கூறுகென்றான். (அ)

என்னான்முடி யாதனசொல்குவை யென்னிலந்தோ
நின்னாசைவிட் டுய்கலுவியை நீப்பனென்றுஞ்
சொன்னான்மனச் சாட்சியென்னச்சொலுஞ் சொற்பொயாமோ
வன்னாளுரு கித்தனதெண்ண மறைவதானாள். (கூ)

இன்றைக்கெனி னத்தினரென்னை யிகழ்ந்தவாற்றாற்
கொன்றைச்சடை யானடியாரலர்க் கூடிடாமாண்
பொன்றைப்பெரு கோன்பெனக்கொண்டுள் ளூறுதியுற்றே
னென்றைக்கு மிதிற்றிறம்பேனென் றியம்பினாளே. (க0)

அதுகேட்டலு மக்கணமூழ்கியவ் வந்தணன்றான்
பதுமாதன மிட்டுறுமோர்தவன் பக்கலேகி
விதுவேங்கிர் நீற்றுடனக்கமும் வேண்டிப்பூண்டப்
பொதுமாதுதன் வாயிலிற்சென்று புகழ்ந்துகூவி. (கக)

எனைப்பார்த்தனுப் பேகுவனென்றிரங் கிட்டபோதம்
முனைக்கோல்விழி யாளுமவ்வண்ண முகத்தைநோக்கி
மனைக்காயிரம் பங்குளத்தன்பு மலிந்துசேர்த்தாள்
வினைப்பாசத்தை யெத்திறத்தாலும் விலக்கொண்ணாதே. (கஉ)

வேறு.

இரவெலாமொரு கணப்பொழுதாக வின்பவாரியி னிடைதிளைத் திட்டார், பரவுசெங்கதிர்ப் பண்ணவன்கீழ்பாற் பருப்பதத்தினிற் பசும் பரித்தேர்மேல், வரலும்வேதிய னெழுந்துசற்றேனு மானமின்றியே, மறுபிறப்பினன்போ, லரனன்றுமங்கள் சிலசொலிவந்தா னறிஞர்சிற்சில ரதிசயித்தனரே. (கூ)

ஏனைமானிடர் காண்டொறுநகைசெய் திகழ்ந்தவாறியம் புரியனவேயா
மானையன்னகண் ணாளவளன்றி மற்றியாவரு மதிக்கலரானா
ரானையிருரி யானடியரினு மளவில்பற்பல ரவமதித்திட்டார்
சோனைமாமுகி லனையவனடியார் சுடிநும்வெட்டினுந்தோடமின்றென்று

உண்டியாதியு மவள்பொறுப்பாயு மூரிமைமேவிடலாலுனை யன்றி
யெண்டிசாமுகத்ததிபர்கள்வரினு மிணங்குறேனென வேகலந்திருந்தாள்
வண்டினம்புரை கண்களான்மருட்டும் வரைவின்மாதரார் மரபினுமிங்ஙயாள்
பண்டிருந்ததனுலவளாசை பழிநல்காதிசைப் பலிதமீந்ததுவே. (கரு)

கலந்தநெஞ்சுறு மாதர்கடம்மேற் காதல்குன்றுபு கபடமங்கையர்தோ
ளலந்தலைந்திடல் காமிகள்முறைமை யாதலாலவ ளன்பறிந்ததற்பி
னுலந்தரும்புயத்தரசர்கண் முதலாவுலகிலுள்ளவ ரொருங்குப்போற்றிசைக்கு
நலந்தரித்தல தமைவுறேனெனுமோர் நசையெழுந்தது நல்வினைவசத்தே.

அன்றிராவினி லரியவெண்ணீறு மக்கமாலையு மளித்தமாதவன்பாற்
சென்றிறைஞ்சியென் னெண்ணமீதென்னச் செப்பினனவன் றிருவுள
மகிழ்ந்து, நன்றிமந்திர மளவறச்செபித்தா னுன்முகத்தவ னன்மனையாட்டி
வென்றிநல்குவ ளவளுருவின்ன விதத்ததாமென விளம்பிவிட்டனனே.

தவளமேனியுங் கரியவார்குழலுந் தடையில்பேரருட் சலதிநேர்விழியும்
பவளவாயுநாற் கரங்களுமேடும் பளிங்குமாலையும் பரித்தபேரெழிலு
மிவளவென்றளக் கரியசீர்பிறவு மெண்ணியெண்ணிமிக் கிரவொடுபகலு
மெவளவோவுருச் செபித்தனனெதிர்வந் திணையில்வாக்களித் திட்டனளினிதே.

தெய்வவாணிவந்தோசையுநயமுஞ்செறிந்தசெந்தமிழ் வாக்களித்திடலுஞ்
சைவமேபொருளெனப்பலபாடல் சாற்றினன்சில சமயநேர்ந்திடுங்கான்
மைவனக்கிரியனையமாயனையும் வழுத்தினன்றனை வணங்கிடாமாந்தர்
நைவதுற்றிடும்படிவசைக்கவியு நவின்றிட்டான்சக நனிமதித்ததுவே.

கோளதேகுறித் தலமருங்குரங்கு கும்பமால்கரி கொடுஞ்சினச்சீயந்
தாளதாலடு சரபமாமுகினேர் தன்மைதோயுமைந் தரப்புலமையினு
நீளமாண்புடை யதுபுணர்ந்ததனு னினைத்தவாகவி நிகம்பொழிந்திடலிற்
காளமேகமென் றொருபெயரியாருங் காசினிக்கிடை கழறினரம்மா.

இரட்டையரொரு பணங்கொளுமுறைபோ லிவனொத்தானத்து
முப்பணமேற்றுன், காட்டுமால்களி றுரித்தவற்கொன்றுங் கடலின்மே
ற்றுயில் கண்ணனுக்கொன்றுந், திரட்டுபூண்முலை விலைமகட்கொன்றுந்
தினமெவ்வூரினுஞ் செலவுசெய்திட்டான், புரட்டுதீப்பசிக்கொடுமையை
ப்பலவாம் பொதுத்தலங்களிற் புசித்தொழித் தானே. (உக)

கத்திடும்புகழ் மலிகடனைக் கவின்பதித்திரு பெருக்காத்தாண்
டான், சத்திரத்திலத் தமித்திடும்போதிற் சமையற்கென்றரி சிவருமாங்
கதனைக், குத்தியேயுலை யிலிடவூரடங்குங் கொளவகப்பையன் னமிலையி
விடவு, நத்திவெள்ளிவந் தெழுமென்றோர்வெண்பா நவின்றிட்டான்ப
லர் நகைத்திகழ்ந்திடவே. (உஉ)

தில்லைவேதியர் ஞானசபையுடன் றிகழுஞ்சிற்சிலபே ரருட்பெய
ராஞ்சில், சொல்லையோர்கவி யாக்கிடநேரிற் சொல்லியங்ஙனஞ் சொன
னபின்மகிழ்ந்தார், குல்லைமாலிகைச் சேய்வளர்குமர கோட்டக்கீரையா

தியபொருட்கூட்டி, வல்லையோர்கவி சொல்லெனக்கேட்டு மகிழ்வுற்றார் கச்சி மாநகரினரே. (௨௩)

பீடிலங்கிய வேம்பத்தூர்வைகும் பிராமணப்புல வோர்சிலபேர்தா, மாடியேழுத லானியின்வரையி லமைத்தொர்வெண்கவி யறைந்திடச் சொன்னார், நாடியோதிடிற் சொல்விடக்கூடு நவின்றவற்றுளெல் லாம் பெரிதன்றன், றேடியம்படச் சொற்றனனந்தோ வுற்றதன்னின மென் றுமோர்ந்திலனே. (௨௪)

அனையெனப்பல வுலகையுமீன்று ளாறுமாதமட் டமுதிடவருந்து, முனைவனானுமக் குலத்தினனென்று முன்னிலான்கவி மொழிபவரின த்திற், றனையுஞ்சேர்த்தெணு தவர்களைப்பிரித்துத் தாவுகோடரத் துறப் பெலாஞ்சாற்றி, யினையிவாமடை யாளங்கள்காட்டு மென்றுமோர்கவி யிசைத்தனனம்மா. (௨௫)

இன்னவாம்பல சரித்திரங்களினு லியற்றமிழ்ப்புல வோரிவன்றன்வாய் பன்னலிற்பெரி யதுவசையென்று பகர்ந்துபாடலும் பாடிவைத்திட்டா ரன்னமாதங்க ளடங்கும்வெண்பாவு மவன்வினுவடை யாளங்கள்பலவுஞ் சொன்னபாடலொன் றுஞ்சமைத்திட்டா ரதுவுந்தாமிறத் தோகைதன்றெழிலே.

வசையினேடுநல் லிசைபகர்மாட்சி வழிபட்டார்பெற வழங்கிடும்வாணி யிசையுமெத்தனை புகழளித்தாலு மிளப்பமுஞ்சிறி தீதலின்சான்றாத் திசையிலக்கவி மூன்றுமோலிடலாற் றெரிந்துள்ளேனவன் சென்றபின்செயலா லசைவிலஃனவன் மெய்ப்புகழ்மேரு வதனிற்றீட்டிய வக்கரமனைத்தே.

சுருக்கவிழ்ந்தமுன் குடுமிச்சோழியனைச் சுட்டியோர்கவித் தூட ணஞ்சொன்னு, னுருக்கமோடுப சாரஞ்செய்யாதே யூறுசெய்த்தாலெ னச் சிலருரைப்பார், தருக்கநாவலர்க் கெமன்புரைதன்னைத் தருப்பணத் தினிற் பார்த்தென்றுஞ்சிலர்தாம், பெருக்கமாப்புகல் வார்கிசமெதுவோ பீடுசால்கலைப் பெண்ணறிவாளே. (௨௮)

எவளவாம்பரி யங்கொளும்விலைமின் னேனுமன்னவ னீயுமோர்ப ணங்கொண், டுவகையோடனைத் தனுப்பிடினலமா மொப்பிடாவிடி லுட னிடர்விளைப்பான், குவடுசேர்முலை யொருத்திதன்கண்ணின் குருடுநீக் கலைபரியமாக்கூடி, யவனையெள்ளுநாள் பழையகுருடியென் றழைத்தி ட்டேடெகெடுத் தகன்றனனம்மா. (௨௯)

காணினுஞ்சினங் கொளும்வயிணவர்தாங் கலைமடந்தைதன் கண் ணருளாய, வேணிகழ்ந்தபின் னுபசரித்திட்டா ரிவனோர்நாளரங் கத்தி றையவனைப், பேணினின்சிவன் பிள்ளைகடம்மிற் பெரியனீண்டுறும் பெ ற்றியென்னென்றார், காணியன்னவர் குறிப்பினில்லாம னன்றுகேண் மினெ னுநவில்கின்றான். (௩0)

தந்தைதான்பிறந் திறந்திடாமையையுந் தனதுமானத் தன்மை தோய்தலையு, மிந்தையேகுடை யாக்கொண்மைத்துனனு மெரிந்துசாம் பரா யினதையுமெண்ணி, விந்தைதோய்தரு புயத்தொரிராமன் வியன் கொள்கேரளத் தமைத்துளவிதியா, னிந்தைதீரவிக் காணிகைக்கொள்ளு நினைவினாலென நிகழ்த்தினானன்றே. (௬௧)

புனிதர்பற்பலர்போற்றியகண்ண புரத்தின்கோயிலுட் போகுமுன் னொருவ, னரியப்பாடல்சொல் வாயெனத்தடுத்தா னரனின்மாயனே யதிகமென்றுட்போ, யுனிலுநானுயர் வலன்பிறப்பொன்றே யுன்பிறப் பொர்பத்தாமுனேவணங்கு, மெனிடம்வந்துபோம் பிறவியித்தனேயென் றெண்ணெண்ணுதவா லெனமுடித்தனனே. (௬௨)

திருமுட்டத்தினை முதற்கொடுசொல்லுஞ் சீதரன்றலங் களைத்துதி செய்திட், டருமையார்சிவ தலம்பலவாழ்த்தி யானைக்காவினுக் கணியு லாச்சூட்டிப்,பொருவில்சீர்கொளா ரூர்ப்பிரான்மார்பிற் புனைந்தமாமணி புவிபுகழ்ப்பாடி,யொருமையீசனு மாலுமுற்றுமோ றுரைத்திட்டான்மது ரையினணியுணர்ந்தே. (௬௩)

கன்னலாலடு பாகுறழ்தீஞ்சொற் கவிபொழிந்திடுங் காளமேகந்தான்
மின்னல்போற்செயும் புகழுளவிலவே விகடராமன்றன் குதிரையைப்பழித்த
தன்னவாயிர முலகினர்சொல்வா ரவைமுற்றுந்தெரிந் தறைதிறமறியே
னின்னவன்செயுஞ் செயல்களிலொன்றே யேற்றமாமதை யியம்புவேனினியே. ()

வேறு.

மற்றயங் கியதோட்சோழன் வங்கிச முடிந்தவாற்று
லுற்றநாட் டரசுசெய்யு முரத்தரி லொருவனானோன்
சிற்றரசாட்சிக்காரன் றிருமலை ராயப்பேரோன்
கற்றவர் போலத்தோற்றுங் கயவரிற் றலையானனே. (௬௫)

இனத்தொன்றைக் காட்டிமான்புள் ளெண்ணில கவர்ந்துண்பார்போன் மனத்ததி வஞ்சங்கொண்டு வண்டமிழ்ப் புலவர்தம்மைச்
சினத்ததி மதுரசித்தி ரக்கவி ராயன்சேர்க்கைக்
கனத்தினாற் செயித்துநாளுங் கால்விலங் கிட்டானம்மா. (௬௬)

வன்னியக் குலத்தம்மன்னன் மறையவர் முதலோரேனு
மின்னிசைத் தமிழாற்றேற்று 'விரக்கமோர் சிறிதுமின்றி
வன்னிலைத் தளையிட்டின்னல் வாரியிற் றோய்த்தான்றேல்வி
பன்னிடப் பட்டாரேழு பதின்மரென் றுரைப்பார்பாரோர். (௬௭)

தன்னது பெயராற்செய்த தனிநக ராட்சிபூண்டு
பொன்னகர்ப் புலவர்தம்மைப் பொருவில்சூர் சிறையிட்டாற்போ
னன்னயக் கவிச்சீரோர்ந்த நறுந்தமிழ்ப் புலவர்பல்லோர்க்
கின்னல்வன் றளையிட்டவ்வா றிடுதலே யெண்ணிவாழ்ந்தான். (௬௮)

அன்னவன் றனேயிற்பட்டவந்தண னொருவன்றேவி
யொன்னலற் செயித்துமீட்கு முரத்தின னுளனென்றோர்ந்தா
ணன்னல நுகருங்கால நணுகிலி னுமுற்றுறு
மின்னருட் செயல்பெற்றேன்றன் வீதிவாய் வரக்கண்டாளே. (கசு)

ஆகலிற் கண்ணீர்சிந்தி யகங்கொதித் துறுத்துப்பார்த்தாள்
பாகமுற் றிடுமோர்மங்கை பரிந்திவ னரோவென்னி
னூகமிக் கினத்தார்தம்மீ துரிமையெய் தாதுகாள
மேகமென் றலவுங்கட்டை விளக்குமா றெனச்சொன்னளே. (சO)

பேசதைத் தான்பெருக்கப் பெருக்கச்சொல் வாரென்றேகி
யேசவென் பேரிற்குற்ற மியாதுகண் டனைசெல்லென்றான்
கூசலுற் றுபசரித்துக் கொண்கனைக் கொடியோன்செய்த
மோசமு மவன்கொண்டுள்ள மூர்க்கமு மொழியக்கேட்டான். (சக)

கேட்டலும் வீரத்தோடு கிலேசமும் பெருக்கி யன்னான்
மாட்டமு தருந்திநல்கும் வழிப்பொதி சோறுங்கொண்டு
பாட்டளி பயிலும்வெள்ளைப் பதுமைதன் னருளாலன்னோர்
தாட்டனை களைந்தல்லாது தரித்திடே னெனச்சென்றானே. (சஉ)

சென்றவ னிரண்டோர்நாளிற் றிருமலைராயனூர்புக்
கன்றணி யாடைவிற்பா ரமருமங் காடிவைகிப்
பொன்றரு மவர்பொய்வேசி புலவன்பூ சாரிதட்டா
னென்றநால் வரையும்வென்ற தெனுமொர்பாட் டியம்பினானே. (சங)

அத்தினஞ் சிவிகையேறி யதிமது ரசித்திரப்பேர்ப்
பொய்த்திறற் கவிஞன்வந்தான் புகழ்ந்தனர் சிலரன்னோர்பா
லித்திறப் பெயரிற்சுக்கு மியைந்திடி னன்றுமென்றான்
கைத்திறற் கரிபோல்வாரைக் காய்சினத் தரிபோல்வானே. (சச)

அன்னவர் சொல்லாற்றேறு மவனிவ னெதிரிற்பேசி
யின்னவன் புலவன்றனென் றெளிதுணர்ந் தினியுன்றன்னை
மன்னவன் றன்பாலுய்த்து வன்றளை யிடுவிப்பேன்கா
ணென்னலுந் தவளத்தாயா ரிதயநீ யறியாயென்றான். (சரு)

இருவரு மவையினுட்போ யெதிர்த்துவீ றியம்பாமுன்னம்
வருமவ னரசன்வைகு மடங்கலா தனத்திலன்னோ
னருகிருந் திறுமாந்திட்டா னவன்வியந் தழல்போற்சீறிக்
கருமமிங் கிதுநீசெய்தற் காரணங் கழறென்னுமுன். (சசு)

கலையுடன் பணியும்வாழுங் கமலமும் வெள்ளையாகித்
தலையொர்நான் கினனைச்சேருஞ் சரசுவதியெனுந்தாயே
யலைகடல் வளையும்பாரி னரசரா தனத்தி லென்னை
நிலைபெறச் சரியாவைத்தா ளெனும்வெண்பா நிகழ்த்தினானே. (சஎ)

அதுவினுவிடலுநெஞ்சத் தையமுஞ் சினமுமெய்திக்
கதுமெனவெமகண்டந்தான் கழறவல் லாயோவென்று
னெதுகுறித்திடினுஞ்சொல்லித் திசைதரற்கென்றுயுள்ளார்
சதுமுகன் விதித்ததாய தலைப்பொறி முடிவார்பங்கோ. (சஅ)

என்றவனுரைப்பக்கேட்டு மிகற்றிருமலோரயப்பேர்
வன்றகை மன்னன்சற்று மருளுரு மனத்தனுகிக்
குன்றநேர்மதவேழத்தின் கோட்டினுற் கூர்வாள்கட்டி
யின்றமிழ்ப் புலவன்கண்ட மதனிடை யிலங்கச்சேர்த்து. (சகூ)

பலகைமேனிறுத்தித்தாளிற் பருக்கைதோய்சிலம்பு பூட்டிக்
குலவுமிராகந்தாளங் கோதிலாவபிநயங்கள்
விலகுறுதாடச்சொல்லி வேழமீதிருந்து கொண்டு
புலவர்பற்பலர்க்குமுன்றுன் பூட்டிய விலங்குநீத்தே. (ரு0)

ஒவ்வொரு வருமொவ்வோர்பாட் டுரத்துடன் வினவவேவி
யிவ்வொருபுலவன் மாய்ந்தா லியாம்பிழைத்திடுவோ மின்றேற்
றெவ்வொருங் கெயிலோடட்ட சிவனெனச் சிதைப்பானென்றே
யவ்வொரு மன்னனெண்ணி யறைந்தமை வினவினுனே. (ருக)

அத்தனைபாட்டு நேர்தோற் றவன்மிசை யறைந்தானந்த
மத்தகவேழத் தாள்கள் வலியகை யெனுமோரைந்தும்
வைத்தவா றசையாதுற்ற மகிமையை மதிக்கபாட்டாச்
சித்தமொத் தனைசொன்னலுந் திருவருட் செயலோராதே. (ருஉ)

கொழுத்திலங் கியகுன்றேய்க்குங் குஞ்சரக்களிற்றி னெஞ்சும்
பழுத்திடும் புலமைவாய்ந்த பாவலன்கருத்தும் பாழ்த்த
சுழுத்திபித் திரையேபோலுந் தோற்றமுற்றிருந்த வென்றுல்
வழுத்தினர்க் கருள்செய்வாணி வலியலாற் பிறிதொன்றுண்டோ. (ருஙு)

தங்களைமீட்கவந்தான் றுனெனவுணரா தாரா
யங்கவிர்புலவரெல்லா மரியகேள்விகளை கேட்டார்
சிங்கமாயிரஞ்சேர்ந்தாலுஞ் சிறைவலிச் சரபமொன்றைப்
பங்கமெய்திடச்செய்யாத பான்மைபோன் முடிந்ததன்றே. (ருச)

பாம்பதற்கிணையாவாழைப் பழத்தினைப்பகர்ந்தாதி
யாம்பலகவிகடாமு மறைபவ ரகிலத்துள்ளார்
யாம்பகர்ந்திடமுற்றேரேம் பிறப்பிறப்பிலையென்சொல்லாற்
சாம்பசிவனுமூர்ச்சிட்டுஞ் சரியென்றுங் தாபித்தானே. (ருரு)

தமகண்டச்சிவனியானென்னுந் தருக்குறு தவத்தினேருஞ்
சமகண்டமொன்பதாடுங் தழைத்திருந்தடைந்தார் பல்லோர்
கமகண்டந்தன்னிற்றோன்றிக் கவிமழை பொழிந்தோர் கூட்டத்
தெமகண்டம்பாடினேர்மற் றிவனலா தொருவரின்றே. (ருசு)

திருமலைராயன்றன்பாற் சிறைத்துய ருற்றுமாழ்கும்
பெருமிதப்புலவர்தங்கள் பெருந்துயரறவே நீங்கிப்
பொருவின்மெய்யுவகைமேவிப் புக்கதம்மூர்தோ றேய்ந்தா
ரருள்வலிப்புலமைதோய்ந்தார்க் கவனிமீதரிய தின்றே. (௫எ)

அத்தனையருட்பேறுற்று மானரியடியார் கூடிப்
பத்தனென்றிறைஞ்சற்கான பயன்பெற முயலவில்லை
வித்தகப்புலமைக்காள மேகமென்றொருபேர் நாட்டி
யித்தரையினர் கண்காண விறந்தன னென்பார் மன்னோ. (௫அ)

வெண்டிங்களனையவாணி விரைமலர்ப்பதத்திற் சேர்ந்த
துண்டிந்தவுலகில்வீழ்ந்த வுடல்கன லுண்ணும் போது
கண்டின்சொலிருநாவல்லோர் கரியமாயனையோர் பாட்டின்
மண்டின்றபாணமென்ற வாய்க்கிரங்கினரென்பாரே. (௫௯)

ஓசையு நிறமுஞ்சொல்லி னுறுதியு முணர மாட்டாப்
பூசைநேர்வஞ்சநெஞ்சப் புலவர்தாம்புகலற் பாற்றோ
வேசைமால்வழிபோயுய்ந்த வியன்புகழ்க் காளமேக
மாசைதோறெய்திப்பெய்த வருந்தமிழ்ப் பெருமை யம்மா. (௬௦)

தாவில்சீர்க்காளமேகஞ் சாற்றியதமிழ்மாண் போர்ந்து
தூவினனென்றென்றுநீர்த் துளியெனக் கவிகளான்ற
காவியமொன்றாலும் கழறிவைத்திலனே யென்ன
வாவிசோர்ந்துருகிப்பேசு மவரையும் பார்த்துள்ளேனே. (௬௧)

காலமோர்மூன்றுமோர்ந்து கழறிடச்சலிப்புறாத
சீலர்பால் வினவிச் சொல்லிற் செழுந்தமிழ்ப்புலவர் தீயோன்
பாலருஞ் சிறைப்பட்டெய்த்த பருவரலொழித்தோன் காதை
ஞாலமேற்பெருந்தோர்நூலா நயம்பெறக் குலவுமன்றே. (௬௨)

தின்பெருகியநெஞ்சோனுந் திருமலை ராயன்றன்னை
மண்பெருமாரிபெய்து மாய்க்கவு மொருபாச் சொன்னான்
வண்பெருகமரரன்றி மாநிலத்தினருமின்றுங்
கண்பெரு கொளியாற் கண்டுங் கதையெனப்பகர்கின்றாரே. (௬௩)

மண்மழை பெய்யப்பாடும் வண்டமிழ்ப்புலவன் வாயா
லொண்மலி பொன்பெய் கென்று லுதவுமோவுதவி டாதோ
விண்மருவமரர் தேர்வார் மேதகு முனிவரோர்வார்
புண்மயலடைந்த நெஞ்சப் புல்லியருணர்ந்திடாரே. (௬௪)

கலகவாதிகட்கோர் கூற்றாங் காளமேகத்தின் சீரும்
புலவனென்றொருபேர் வாய்ந்தும் புரவலன்றன்னைச் சேர்ந்து
பலகவி ஞரைப்புண் செய்த பாதகனிகழ்ச்சி தானு
நிலவுடனிருளும் போன்று நிலமிசை நிகழ்ந்தவன்றே. (௬௫)

பெருகிய கடலையுண்டு பின்னும்விட்டருளும் பிட்டோன்
றரு தமிழ் விளங்கி மேன்மேற் றழைத்திடு மிக்காள் சாறு
மிருநிலத் தரசர் கூட்டத் தெமகண்டங் கேட்டு மாய்ந்தோன்
றிருமலைராய னென்னுந் தீரவா னொருவன் றானே. (௬௬)

பூவினுலொருமண்மாரி புயல்பொழிந் திட்ட நாட்டிற்
பாவினு லொன்றும் பெய்த பான்மையைப்பலகாலுன்னித்
தேவினுலதனை நம்பித் திருவருள் பெற்றோர் தங்க
ளுவினு னடந்த வென்றெந் நாடரு மூணர்ந்துய் வீரே. (௬௭)

இசை யொடு வசையும்பாடு மியற்கவிக் காளமேகந்
திசைதொறு நிறைத்துவைத்த சீர்த்தியிற் சிறிதுசொன்னே
னசை புகன் றிட்டபோது நாசமே பயக்கும் வாக்கின்
வசைகவி யாண்டான் றன்மை வந்தமட் டியம்பு வேனே. (௬௮)

காளமேகப்புலவர்சருக்க முற்றிற்று.

---

திருவிருத்தம் - உ௯௮௬.

## ஐம்பத்தேழாவது
## வசைகவியாண்டான் சருக்கம்.

காரூர் பசுஞ்சோலை மலியுங் கவின்கன்னி வளநாட்டுளே
நீரூர் தருஞ்சித் திராநன் னதிப்பக்க னிகழ்கின்றபல்
சீரூர் பராவுஞ் சிறத்தோடு மாருத திருமல்கு மோர்
பேரூ ரெனுந்தன்மை பெற்றுற்ற வோட்டப் பிடாரத்திலே. (௧)

அரிபாத மேதஞ்ச மாமென்று தொழுமந்த ணளர்க்குளோர்
பிரிவாகி நிகழ்சிக்க லார்வங் கிசத்தின் பெருஞ்சென்னிபோற்
றெரிவாகி வைகுந்த நாதத் திருப்பேர்கொள் சீலன்றனக்
குரியாள் கடைச்சேயொருத்தன் பிறந்தான்வ லுருமென்னவே. (௨)

ஆண்டா னெனப்பே ரவற்கிட்டு மகிழ்வோ டளித்திட்டதாற்
றாண்டா விளக்கிற் றிகழ்ந்தானல் வயதைந்து தோய்ந்திட்ட பின்
வேண்டா னெனத்தண்ட னைகள்செய்து தமிழோது விக்குந்தொழிற்
பூண்டானிடத்துய்த் தவற்காமு தவியும் புரிந்தார்களே. (௩)

கொல்லுங் கொலைக்கூட மேபள்ளி யென்றஞ்சு குணபேதமுற்
றல்லும்ப கலுமன்னை பரிவா லெளித்தூட்டு மன்னம்புசித்
தொல்லும் பெருந்துன்ப மயமாகி வயதொன்ப தொடுபத்துமாய்த்
தெல்லுந் தெற்றித்துப்பல் விளையாடலுஞ்செய்து திரிகின்ற நாள். (௪)

ஒன்றிற் சிவன்போலு மொருசித்த னவன்முன் னொளிர்ந் தோவுரு
வென்றிக் கொடுங்காளி மாமந் திரந்தன்னை விண்டிக்கைதயே
கன்றிச் சவிக்காம லுருவேற்று வாயேற் களிப்பெய்தவா
வென்றிட் டகன்றான வாறேசெய் தான்முன்னை மின்சேடமால். (௫)

சின்னாள் கழித்தந்த வூர்க்கோயில் வைகுந் திறற்காளியின்
பின்னு லொளித்துச் செபஞ்செய்யு மொருபுத்தி பெற்றுன்றனைப்
பன்னு ளினுந்தேடி யோடிப் பிடித்துப்பள் ளிக்கூடமுய்த்
தின்னு விளைத்துள்ள பலபாலர் வருவார்க ளெனவஞ்சியே (௬)

அவ்வாறு செல்கின்ற பலநாளு ளொருநாளி லக்காளிதான்
செவ்வாய் திறந்தந்த வாண்டா னெனும்பேர்கொள் சிறுவன்முனின்
றுவ்வாத விசைவேண்டு மோவன்றி யோவாத வசைவேண்டுமோ
விவ்வாய்மை களிலொன்று பகரய்யனருள்வே னெனச் சொல்லலும். ()

வசைதான் வழங்கென்ன வேமுன்னை வினைநின்ற வழிகேட்டதா
லிசைவாக வேயங் குதிர்ந்துற்ற வேப்பீர்க் கினத்தொன்றினு
லசையாத மெய்ச்சத்தி பெறும்வல்லெழுத்தொன்றை யவனுவினிற்
றிசைதோறுளார்பற் பலோர்க்கேமனேயென்று தீட்டிச்சொல்வாள். ()

உன்சொற் பிறந்திட்ட வாறுகுமேயன்றி யொன்றும்பொயா
தென்சொற் பகர்ந்தங்கு முன்னுற்றவாறே யிருந்தாளையோ
வன்சொற் கொடுந்தீ வரம்பெற்ற வாண்டான்முன் வருமாதரி
தன்சொற்பலிப்புகவொர் கரியாய பாடற் சமைத்தானரோ. (௯)

அக்கோயிலுறும்விக்கி ரகமார்பினெருகொங்கை யற்றேவிழத்
தக்கோர்கள் வைகச்செய் முன்கொட்டகைக்கட் டழற்பற்றிடத்
தெக்கோ னெனப்பாடல் சொன்னுன வண்ணந் திகழ்ந்திட்டவான்
மெய்க்கோர குணமிஞ்சி யிறுமாந்து பயமுற்றும் விட்டானரோ. (௧௦)

வேறு.

விடிந்து வீதியிற் போய்விளை யாடினன் விசனத்
தொடிந்து கட்டிய பிரம்புடை வாத்திய ருக்கீழ்ப்
படிந்து கற்றுள பாலர்பற் பலரவற் பார்த்துக்
கடிந்து மென்புழுப் பற்றுசிற றெறும்பினங் கடுத்தார். (௧௧)

பற்று பாலர்தா மொருநொடி யினிற்பள்ளிக் கூடத்
துற்று பாத்தியா யரின்றிரு முன்பினி லுய்த்தார்
முற்று கோபமே பொறுத்தன ரவர்முக நோக்கிச்
சுற்று வார்பொடிப் படும்படி முதற்கவி சொலாதான். (௧௨)

கூலி யீந்தனன் குறைத்தினம் பழித்திலன் கொடிய
கோலி லங்குகை வாத்தியான் கொண்ட பெண் டாட்டி
தாலி யற்றிடும் படிவரந் தாடியென் றொருபாட்
டாலி மேகத்தி னிடித்தொனி யாமென்ன வறைந்தான். (௧௩)

உரத்த வோசைமுற் றலுமவன் றலைபிளந் தொழிந்தான்
வரத்தை நல்குதெய் வத்திற்கும் வாத்தியான் றனக்குஞ்
சிரத்தை யின்றித்தீங் கிழைத்தன னிவன் றீட்டு
மரத்திற் கூர்மையுற்த் தவனென மகியுளாத் தகுவே. (௧௪)

வாத்தி யானிறத் தனுமவன் மகன்சட கோபன்
றோத்தி ரஞ்செய்தாண் டான்மலர்த் துணையடி தொழுதா
ளுத்தி ரங்கொளே லெனக்கெய்துந் திருவெலா மளித்துன்
காத்தி சம்புரப் பேனெனக் கட்டுரைத் தனனே. (௧௫)

ஆங்கு விட்டுத்தன் மனைக்குச்சென் றனவ னண்ணன்
றொங்கு பீசகோ சந்தெரி தரச்சுவர் வைத்தா
னங்கு போலவை யற்றுவீழ்ந் திடும்படி நவின்று
கங்கு னேரெம புரம்புகக் கடிதனுப் பினனே. (௧௬)

கதுமெ னச்சொலும் படியெலா நடத்திடற் கண்டு
பதுமமின்னருள் பெற்றசில் செல்வர்தாம் பயந்து
புதுமை யார்சிவி கையும்பிற பொருள்களுங் கொடுத்தா
ரதுவு மச்சட கோபனுக் கேயினி தீந்தான். (௧௭)

இடமிருந்தவர் வாழ்வுறு சீவலப்பேரிச்
சுடலையென் றொருதேவதை யாங்குறுதொடிக்கை
மடநல்லாளொரு கணிகையன்னவட் டொடர்வழக்காற்
புடவிமானிடர் விழைவுறுவணம் பொலிந்தனளே. (௧௮)

அவளைக்காண்டலு மச்சடகோபன்மாலாகி
யிவளைச்சேர்ந்தலதமைவுறே னெனவுரைத்திட்டான்
கவளவேழமன்னுனொர்பாக் கடிதவனுய்த்துத்
திவளவேயவட் புணர்ந்திவனுய்வுறச் செய்தான். (௧௯)

பலபல்பேயொடு பிணஞ்சுடுகோட்டிடைப்பயில
வலவன்றேவதை தானுமச் சுறுமெனின்மற்றூர்
நிலவுறழ்ந்தபற் காளிதன்னருள் கொடுநித்த
மலர்விளைக்குமாண் டான்கவிக்கஞ்சுறுதவரே. (௨௦)

அனையபாக்களின் பொருள்களை முன்முறையமைத்துப்
புனைகிலேனவற் றேடியப் பொலிவுறற் பொருட்டால்
வினையுந் தெய்வத்தி னருளுமே மிகுவலிதரினுங்
கனைகடற்றலத்திடக்கர்க ளடக்குதல்கடனே. (௨௧)

சிவிகை மீதவன் றன்னைவைத் தருகினிற்சென்று
புவியி லுள்ளவர் புகழவுங் கேட்டனன் புனலிற்
குவியுந் தாமரை மலர்தொறு மவ்வனிவுங் கும்பிட்
டவிய வெண்மிசை கவிசொலே லெனவுரைந் தானே. (௨௨)

பாடல் கூறிடே லெனத்தினம் பணிந்தவன் றன்னை
யாடல் போன்றிரா சாவென நீட்டியே யழைக்கில்
வீட லுற்றன வினையபல் விதங்களும் யாண்டு
நாட லிற்குடி யிருப்பவர் நன்குணைப் பாரே. (௨௩)

வாழ வல்லநல் லூர்வளர் மனிதர்கேழ் வரகுக்
கூழ தேபொரு ளாக்கொளற் கொருகவி கூறிச்
சூழ லர்சொக்கப் பழிங்களை சோற்றினுக் கலந்து
வீழ லேதொழி லாயதென் றொன்றும்வின் டனனே. (உ௪)

குருகை யூரினும் வார்தம தடியவர் கூடிப்
பொருவில் செந்தமிழ்க் கெடுப்பதற் கொருகவி புகன்று
பெருகு பேளையூர்ப் பெண்ணொருத்தியின் பிழை கண்டு
மருவு மந்நகர் மாதரார் பலரையும் வைதான். (உ௫)

மைந்தராமென மங்கலக்குறிச்சியில் வாழ்வா
ரெந்தமாதரைச் சேரினுஞ் சேர்வரேயென்று
னந்தமார்பெருங்கருணையூர்க் கூத்தப்பட்டன்றன்
சொந்தமாமனை வியைச்சொலாவாறு தூடணித்தான். (உ௬)

குலைவு ருர்மரு வியபட்டக் குறிச்சியின் கொடிக்கா
விலைக ரிந்திடு மாறொரு சாபமீங் கிட்டான்
விலையில் கூழொடு மோர்களைத் துதவுமெல் லியன்மேற்
புலையர் பேசிடுஞ் சொற்கொடோர் புன்கவிபுகன்றான். (உ௭)

வடிவு தன்மனை தீப்பட வரைக்கவி வகுத்தங்
கொடிய வேல்விழி யாண்மிசை நேயமிக் குள்ள
கொடிய னைவேண் டவளர்ந்தான் குடியொடு சீரு
மடியி னேடுகெட் டிடவரைக் கவியுரைத்தானே. (உ௮)

ஊருக் குள்ளுயர் புடைமரு தூரென வெடுத்துப்
பாருக் குள்ளவர் தனைப்புகழ் மேன்மை யும்பகர்ந்து
நீருக் குள்ளொரு கையிடு நேரிழை மான
மாருக் குந்தெரிந் திடும்படி செய்தன னக்தோ. (உ௯)

வெள்ளு ரத்தினு ளிரண்டுவே ளாளர்தம் மீதி
லுள்ளு வப்புறீஇ யொருகவி யோதிடத் துவக்கி
யெள்ளும் பாழறம் விழுந்ததாற் கெடுதிகண் டிடைந்தான்
கள்ளு நெஞ்சக மவற்கிலை யெனற்கதோர் கரியே. (௩0)

பாருண் மிக்கதென் பாண்டியி லுளபனஞ்சாடி
யூருள வாழ்பவர் தினந்தினம் வயல்வரப்புற்று
நீருடன்மலங் கழித்திடுங் கொடுமையை நேர்கண்
டியாருஞ் சொல்லியே நகும்படி யொருகவி யிசைத்தான். (௩௧)

மனைஞ்செ யோர்மனை யினரிவன் றனைமதித் திலரா
யெனைஞ்செ யின்னலும் விளைத்ததால் வள்ளியூ ரிறைதன்
வனைஞ்செய் விளரியே விடும்படி சொலிமனை மகளைப்
பினைஞ்செய் தாளிவன் கவிவிடுத் திழுபிகப்பெரிதே. (௩௨)

மெய்ய ரா வெழுத் தாறையு மிகைபட மொழிவா
ரைய மெய்துறச் சோதிக்கு மறுமுகத் தமலன்
பொய்ய னென்பனென் றவன்சொலுஞ் சொலைப்பொருட் படுத்திக்
கைய கத்துறு கணைவிடுத் திடல்கணிக் கரிதே. (௬௩)

உட்டி லைஞ்செய்செட் டிகுளமென் றுரைக்குமோ ரூரிற்
றட்டிலாமலே தினஞ்சிறு சரக்குகள் விற்குங்
குட்டி செட்டியா னையுங்குதி ரையும்வரப்பாடிற்
கெட்டியிப்புல வோனெனக் கிளத்துவே னெனலும். (௬௪)

அவன் மகட்கொடு போய்ப்புணர் வதற்கவைவருமென்
றெவள வோசினத் துட்னொரு கவியிசைத்திட்டான்
கவனமுடைவ ளிராப்பக லங்ஙனங் கண்டு
புவனி யோர்வினு விடமிகப் புலம்பிமாய்ந்தனளே. (௬௫)

மதுரை யூரினுக் கேகின னொருவிலே மடந்தை
கதுமென் றின்னவற் கண்டெழுந் திராவிதங் கருதி
யிதுசொன் னுனெனச் சொல்லாநா ணிடுங்கவி யிசைத்துப்
புதுமை யாயிரந் திகழ்மம புரம்புகுந் தினனே. (௬௬)

நயந்த சொற்சொல லறிகிலா னழலிடை நண்ணு
மயந்த னைப்புரை சொற்கொளும் வசைகவி யாண்டான்
வியந்த வேடமில் லானவன் றுனொரூர் மேவிற்
பயந்து சிற்சில ரோடலுண் டென்னவும் பகர்வார். (௬௭)

இனைய வாஞ்சிறு கதைகளைத் தனைகளோ விசைப்பா
ரனைய மட்டுநா னறிகிலே னறிந்தமட் டுரைத்தேன்
பனையை நேர்சில பெருங்கதை யுள்ளன பகர்வேன்
றினையை யொத்துநா வலரையென் னுர்திடுக் குறவே. (௬௮)

வேறு.

கோளத்து மன்னவனைக் கண்டுவரவேண்டு மெனக் கிளர்சில் லோரோ
ரேகன்று நாடகன்று நாஞ்சினு டதன்முகப்பி லுற்றுனங்கு
சாரணர்சிற் சிலரறிந்தம் மன்னனெதிர் போய்ப்பணிந்து தழலு மஞ்சும்
கோரமுறும் வாக்குடனின் னுன்வருகின் றுனெனுஞ்சொற் கூறினரே.()

அக்கணமாங் கவனடுங்கி முதலமைச்சன் றனையேவி யையநீயிங்
கெக்கடமை விதித்தாலுஞ் செய்கின்றே மெம்மிறைவற் கெதிர்வா ராமன்
மெய்க்கவியொன் றும்பகரா தேகுகெனப் பணித்துமிக வேண்டச்செய்தான்
சக்கரையோர் பாரமதி தோறுமனுப் புதிரெனுஞ்சொற்சாற்றிப்போனுன்.

வில்லுடையார் பலர்கூடி வேழமுத லியகொடுபோர் விளம்பினுலுங்
கல்லுடைய மனத்தினனுக் களிகூரு மன்னர்பிரான் கனலே போலுஞ்
சொல்லுடைய வாண்டான்றன் வரவுரைத்த போதிதுடி துடித்தானுங்
கல்லுடைய குழற்றிருமின் கலைமிளெனு மிருவரின்மே லாரோர்வீரே.

ஒருமாத முற்றிமற்றொன் றுதித்திடுநா டொறுமோட்டப் பிடாரஞ்சேர
வருமாந்த சருக்கரையாண் டாப்புலவற் கவ்வரச னனுப்பா நின்றான்
வருமாந்தர் பலர்க்களித்தானீ வைகுந்தநாதனெனும் வண்பேர்த் தந்தை
தருமாறோர் தினத்தில்வெகுதரங்கேட்டான் மிகக்கொடுக்கிற்றான் கொள்ளாதே. (சஉ)

நக்கவரிசித்தவிட்டோ டுடுப்பதற்குத் துணியு மின்றி நாட்டிலுள்ளோ
ரொக்கவருந் இடும்பஞ்ச காலத்திற்சிறிதேனு முணர் விலாமற்
சக்கரைசக் கரையென்றேசினுங்குதற்குத் தலைப்பட்டா யெனும்பாச்சொன்னா
னக்கணத்தி லவன்றலைபடீரெனவே வெடித்துயிர்போ யகன்றதம்மா. ()

தந்தைதலைதன்கவியால் வெடித்ததெண்ணித்தானுமிகத் தளர்ந்துநொந்தான்
சிந்தையறியாதவினை விளைக்குமிந்தவாக்குமொரு செல்வ மாமோ
நிந்தையெனும்பெருங்கூற்கோ ராதார மேயாகி நிகழ்ந்த தந்தோ
விந்தைபெறுமெய்யுணர்வே யரியபய னெனப்பலரும் விளம்பினாரே. ()

இளம்பருவத் துறவாளர் பலர்கூடி மலையாழத்தியன்றமாதர்
வளம்பகர்தியெனக்கேட்ப வவரையெலாம்பேய்களெனவைதப்பாட்டிற்
களம்படுநஞ்சினர்காந்தீச் சுரத்துவடிவெனுங் கணிகைகலவியின்பம்
விளம்பரிதுவெல்லத்து மிச்சந்தேனமுதினிலு மேலென்றானே. (சரு)

அன்றுசிவன்புரமூன்று மெரித்தபொழுதொரு மூவர்க்கந்தவெந்தீ
நன்றுபயந்ததுபோல வாற்றூரிற்சோமியெனு நாரிமேனி
யொன்றுமழகான் முகுந்தன் மாலானான் பிரமன்மடலூர்ந்தான்மாரன்
றன்றுகடீருருவழிந்தா னென்றானங்கனஞ்சிறிதுஞ் சாற்றினானே. (சசு)

எத்தகையதீமையினு நன்மையுஞ் சற்றிருக்குமெனற்கிஃதோர்சான்றா
மத்தகையநன்மையினுந் தீமைநுழைதலின்சாட்சி யாராயுங்காற்
பத்தருக்கே யெளியனெனப் பலசமயநூல்வகுக்கும் பரமாமுன்னோன்
செத்தபிணந் தின்பார்க்குஞ் சிறிதருள்செய்கொடுமை யினைச்செப்பலாமே.

அன்னவன்வாழக்கிரா கரத்திலொருநாலிழந்த வரிவைதானோர்
சின்னவுருவுடைப்பசுவின் கன்றினுக்குப்பாலுணவு சிறிதுமின்றித்
தன்னதுகையாற்கறந்து கொன்றிட்டாளதுகுறித்தோர் தனிப்புராணம்
பன்னரியகற்பனையு மலங்காரங்களுந்தொகுத்துப் பாடினானே. (சஅ)

ஆங்கொருகோயிலிற்பணிசெய் கணிகையர்செய் குற்றங்களவைபொறானாய்
வேங்கொடுங்கண்ணதிகாரி னெயிற்போதுமண்டபத்தின் மீதேயுய்ப்பப்
பாங்கொருசிற்றருவியென வவர்பெய்சிறுநீர்விழுதற் பார்த்ததாலே
தேங்கொலிச்சொன் மடலொன்றுபாடினான் வினவினர்தாஞ்சிரிக்குமாறே.

ஆளியற்கையுறுந்தனது நன்செயையவ்வூர்க்கணக்க னளக்கவந்தா
னீளியகையினிற்பாம்பு கடித்திடச்சொன்னான்கடித்து நெஞ்சஞ்சானாய்
வாளினால்விரற்குறைத்துவிடமேறாமையிற்பிழைத்தமலைபோய்ச்சேர்ந்தங்
காளிமடலென்றொன்று பாடியவன்றனைக்கொன்றே களித்தானம்மா. ()

கண்ணரியபுகழ்ச்சிந்துக் களஞ்சியமென்றொருபுலவன் கடல்சூழ்பாரி
லெண்ணரியபுலவர்களுக் கிடர்விளைத்துப்பொருள்வரிகொண் டிலங்குற்றான்
பெண்ணரசாவுமையாண்ட பெருநாட்டுமேத்தகவே பெரிதுசெய்தான்
றிண்ணமுறுசிலபுலவ ராண்டானைத்தொழுதவன்பாற் செலவுய்த்தாரே.

செல்லும்போதொருதேங்காய் கைக்கொடுபோயுடனிருந்து தின்
டிற்சாய்ந்தா, னெல்லுமிவனுரெனவன் னவன்சீறிப்பார்த்திடலு முலப்
பிலாத, கல்லுரைபோன்றுறிப்பா ரெனவெடுத்துவேற்றொலியா னுணச்
சொன்னான், வெல்லுமென்போற் சிந்துகள்பாடிடுவாயோ வெனவவன்
றூன்வினவினனே. (ருஉ)

கொண்டுவந்ததேங்காயை யவன்முன்வைத்துப் பார்த்தியெனக்
கூறியப்பாற், றுண்டுதுண்டென்றடிக்கொலிச்சொற் சிலசொன்னனத்
தனேதுன் டாயிற்றந்தோ, கண்டுகொண்டாயோவினனம் தலையுடைக்க
வல்லாயோகழறுகென்றூன், மண்டுபயமுற்றெழுந்து வணங்கியவன்முன்
புவந்த வழிச்சென்றூனே. (ருக)

பத்திவைராக்கியஞானங் கல்விமுதலாயநலம் படைத்திட்டாலுஞ்,
சித்தியொன்றும்பெற்றிலனேற் செயமடையானென்பதற்குஞ் செகத்
தோரெள்ளு, மெத்திறத்தீங்கினனெனினு மேதேனுந்தெய்வசித்தி யெய்
திச்செய்யுஞ், சத்தியடைந்தாலெதிர்த்தோர் தமைச்செயிப்பானெனற்கு
மிதோர் சான்றுமம்மா. (ருச)

நீட்டாண்மைப்பெண்ணொருத்தி யுனைக்கொடுப்பேனேயெனமுன்
னிகழ்த்தக்கேட்டுக், காட்டானைபோன்றமுலைக் காரிகைநீபெற்றெடுத்து
க்கண்போற்காக்கும், கோட்டானைச்சாவதற்குக் கொடுத்திடெனச்சொல்
லியுடன் கொன்றூனந்தப், பாட்டாளன்காளமே கப்புலவனெனச்சிலர்
தாம் பகர்வாரன்றே. (ருரு)

திசையறியுஞ்சிருட்டிசெயப் பிரமாவில்வலியோனுஞ் சிவகோடிக்
கிசையுநலஞ்செய்தளிப்ப நெடியோனிற்பெரியோனு மியாவுமாய்ப்பத்
தசைகுலவுமூவிலைவே லுருத்திரனிற்சீரியனுஞ் சாற்றலாமேல்
வசைபகருந்தொழிற்றலைமை யாண்டானல்லாவொருவன் வகிக்கலாமே.

தென்பாண்டிநாட்டிலுறு கைத்தாற்றுக்கடிகைநகர்த் திருமால்கோயின்
முன்பாகச்செயுமேகா தசிவிழவில் வயிணவர்தம் முறைமைதன்னு
லன்பாளனெனவிழுத்தாண் டானையுஞ்சீர்பாதந்தாங் கவரிற்சேர்த்தார்
வன்பாகச்சுமந்தலுத்து வருத்தமிகலாலொர்கவி வகுத்திட்டானே.(ருஎ)

பாளைமணங்கமழ்ந்திருக்குங் கைத்தாற்றுப்பெருமாளே பழிகாராவென்
றேளையறமுறித்தாயே நம்பியானையுங்கூடச் சுமக்கப்போமோ [தோ
வேளையிதில்விழுந்தொழிவாய் நாளைவரோஞ்சுமக்கவென விண்டானந்
தேனைநிகரவன்வாக்குப் படலுமதிலிருந்தகலை சிதைந்ததம்மா. (ருஅ)

அக்கணமச்சப்பரந்தான் முறிந்துவிழுந்ததுபலரு மகன்றுபோனார்
மைக்கடுக்குமிருளடைந்தக் கோயிலும்பாழாயதின்னு மாறவில்லை
யெக்கவிஞன்தைமாற்ற வல்லானேவறிகில்லே னியம்புமந்த
மெய்க்கவிச்சொற்படியவன்றேன்முறிந்துவிழாதேயிருந்த விதமென்னேயோ.

சாலவுபாசனைபுரிவோர் தம்முளத்திற்றங்கருளே தலைமையாகு
மாலயத்துத்தேவர்களு மத்துணைவாய்த்தாற்பெரிது மாடல்செய்வார்
மாலடியார்குலத்துதித்து மவன்கோயிலைக்கெடுத்தல் வம்பேயன்றே
நீலநிறப்பாவமிகச் செய்துவெலாங்கினைத்தொருநா ணெடிதுநேர்ந்தான். ()

ஏதுக்கிவ்வுடலெடுத்தோமினியெவ்வாறுய்வமெனவெண்ணியெண்ணில்
சாதுக்கட்கனையனைய தயரதராமன்சொன்மொழி தன்னைநம்பிச்
சேதுக்குப்போய்முழுகச் சிந்தித்துத்தனைத்தினமுஞ் சேர்வாளாமோர்
மாதுக்குங்கவல்வயி ரவனுமாடனுமெனும்பா வழங்கிப்போனான். (சூக)

அன்றுதொட்டம்மகளுநகி லாடவர்சென்றுவிரைந்தங் காணப்போதே
பொன்றுதலுற்றுரதுநான் புலியேகாதசிவிரதம் புரிதல்போன்ற
தென்றுமெவரேதுசெய்ய வந்தனரோவதுதான்செய் திடுவரென்கை
யொன்றுமெய்யாய்முடிந்ததுவன் வந்ததுகேட்டளவறகொந் துளஞ்சோர்ந்தானே. ()

,,அச்சேதுண்டாவதன்முன் னிகழாதிச்சேதுசெந்தூ ராமென்றேமற்
றெச்சேதியாலோவங் கேயிருதலத்தூமுறு மெழில்வெற்பேறி
மைச்சேலுண்கண்ணொருத்தி மாதவிடாய்க்காரியவண் மாட்டுச்சென்று
கைச்சேட்டைசெய்தகந்தா வென்னவொரு பல்லவந்தான் கழறினானே.

அந்தவொலியெழலுமெதி ரொலியெழுந்தாங் கசரீரியடடாபோது
மிந்தமட்டினிறுந்திலையேலின்றுனுயிர்க் கிறுதிவரு மினியிப்பாரின் [ற
மைந்தர்பலர்க்கெமனெனவாழ் கலைகடிதுவிண்பதிபோய் வசிப்பாயென்
றெந்தவிதத்தலத்துமிதுகண்டதின்றென் றஞ்சி வெள்கியேகினானே. ()

போம்வழிமுற்றுறுமுனமே யவனுவிலொருகொடிய புண்ணுண்டாயிற்
றும்வழிநோக்காமலழி வழிநோக்கிக்கெட்டேமென் றயர்ந்துவீழ்ந்து
சாம்வழிநோக்கிக்கிடந்தா னொருவருமாங்கவனருகிற் சாரவில்லை
வேம்வழிபாட்டேதேனும் விளம்புவானெனப்பெரிது வெருவிமாதோ.

அவனுவிற்புழுத்திரளுண் டாயதென்றுஞ்சிலர்மகிழ்வுற்றுறைவாரங்தோ
தவளாங்கத்தவளிருந்த தலத்தவையுண்டாமெனநான் சாற்றமாட்டே
னெவனேவங்கவனுயிர்போம் பொழுதுமறைந்திருந்துபார்த் தனனுமெங்கே
குவனியானென்றுரைத்தொருபெண்குதித்தோடினளெனவுங்கூறுவாரே

அன்னவனுவினிலிருந்து விளையாடினுள்செயலென் றறிவார்சில்லோ
ரின்னவனிக்கொடுமையெலா மியற்றினனென்றேதுணிவுற் றிகழ்வார்பல்
ரென்னபயனிதனாலுண் டாயவெனிற்றமிழ்ப்புலவ ரேற்றந்தானு [லா
மன்னர்முதலோரவரிற் றாழ்ந்தவரோயெனுநிசமும் வயங்கருனே. (சூள)

வல்லாண்மைக்கொடும்வாக்கின்வசைகவிதையாண்டானுன்மாய்ந்தமாந்த
ரெல்லாருமெனையரெனி லிராகவனுதியவீர ரேந்துந்திண்கை
வில்லாலுந்துருவாச முனிமுதலாகியமேலோர் வெகுண்டுசொன்ன
சொல்லாலுமாய்ந்தவரே யனையரென்கைமுக்காலுந் துணிவுதானே. ()

வாக்குவலிவெகுவாகப் பெற்றரியவண்ணமெட்டும் வழங்குவார்க்கு
மாக்குவதுமழிப்பதுவும்பொலரிதென் றுணர்ந்தோரேயான்டான்சொற்
தாக்குமதிசயமறிவார்தவஞ்சிறிதுமுயலாராய்த்தருக்கங்கற்றுப் [போய்த்
போக்குவரவுணராமற் புலம்புமிளங்கவிஞருளம் புகுந்திடாதே. (சுக)

திரிமூர்த்திகளின்பெயரும் வாகவமுந்தலமுநகர் திற்றிதன்னோ
டரிதாயகறியுமணி களும்படையுமொருவெண்பா வதனுட்சொன்ன
பெரியோனுங்காளமே கப்புலவனிலுமான்டான் பெரியோன்கண்டீ
ரெரிபோலுங்கவிபொழிந்திட் டனர்குலமறக்கெடுக்கு மியல்பிலம்மா. ()

இருநிலத்துற்றூர்பலரு மெமனிலும்பொல்லானெனவே யிதயமஞ்ச
வருள்வலியாற்கவிபாடி யம்மைபதம்புகுமான்டா னுற்றல்சொன்னேன்
மருவுமனையவளன்றி மற்றமடவார் பலரு மாதாவென்றோர்
பொருவில்பிரமாணநுவல் வீரபாண்டியப்புலவன் புகழ்சொல்வேனே.()

வசைகவியாண்டான்சருக்கம் முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உசஙஉ.

---

## ஐம்பத்தெட்டாவது
## வீரபாண்டியப்புலவர் சருக்கம்.

பொன்பார்புரக்குமகவான் புனையுமுடிகிழ்ப்புரள
வன்பார்வளையொன்றெறியும் வழுதிபுரக்குமயிமைத்
தென்பாண்டியினிற்கிழக் சிந்துக்கரையிற்றிகழ்ந்து
துன்பார்வரிலின்பளிக்குந் தூத்துக்குடியூருளதே. (க)

திருமந்திரமென்றொருபேர் செப்புவதுமுண்டதனுள்
வருமைந்தரின்மூதறிஞன் வாய்மைசிறிதுமறவான்
பருமந்தரநேர்புகழ்நோய் பாணர்குலத்திற்பிறந்தோன்
தருமந்தவறுதனுற்றும் கற்புமனையாளுடையான். (உ)

கொற்றமலிபாஞ்சாலங் குறிச்சியதனிற்குலவுஞ்
சிற்றரசனுமொருவன் சிந்தைவிருப்பிற்றிளைத்தோன்
கற்றபுலமைத்திறத்தாற் களிமேலிட்டுக்குறியா
துற்றவாக்குச்சித்தி யுறலேயுயர்வென்றுணர்ந்தான். (ங)

பழிப்பில்புகழ்சால்வீர பாண்டியனெனும்பெயரோன்
விழிப்புப்புரைமெய்யுணர்ச்சி மேவோர்பெரியோனருளா
லழிப்புந்தவிர்க்கவல்ல வாறக்கரமேசெபித்துச்
செழிப்புமருவுஞ்செந்தூர்ச் செவ்வேளுருச்சிந்தித்தான். (ச)

முன்னைநாளிற்செய்த முதிர்மாதவத்தின்பயனோ
பின்னைவருந்திச்செபித்த பெருகுஞ்செபத்தின்வலியோ
வென்னையெனநான்சொல்வே னெழில்வேற்குமரப்பெருமான்
றன்னைவசமாச்செய்து தருக்குந்தகைதோய்ந்தனனே. (௫)

அவ்வூர்க்கோயில்வைகு மமலைகளிகூர்ந்தருளால்
வெவ்வூறொழிக்கச்செய்யும் வியனூர்பிள்ளைக்கவியு
மெவ்வூர்களுக்கெவ்வெந்தப் பனுவல்களுமோவிசைத்தான்
செவ்வூழ்வலியாற்குகவேள் செயல்பெற்றவர்க்கியாதரிதே. (௬)

எந்தச்செயல்வேட்டிடினு மியற்பாசுரத்தாற்செந்தூர்க்
கந்தக்கடவுட்பாடிக் கணத்தின்முடித்தேமகிழ்ந்தா
னந்தக்கதைகளெல்லா மகிலத்தறைவார்பலபே
ரிந்தப்புவியிற்சிலரா லியான்கேட்டளவோதுவனே. (௭)

தாரமன்றிமற்றத் தையலாரையெல்லா
மீரமுறுதாயென்றே யென்றுநினைப்பேணிதுமெய்
சூரற்செகுத்தோனுணை யென்னுமொருப்பாச்சொன்னான்
பாரதனிலிவ்விரதம் பலருங்கொளற்பாற்றன்றே. (௮)

அந்தவிதியன்னவனுக் கமையத்தலையிலெழுதிக்
கந்தமலர்மேல்வாழுங் கடவுள்கரங்கடழைக
விந்தவுலகைவெறுத்திட் டிரந்துண்டதற்பின்மடவார்
பந்தஞ்சிலருக்கெழுதும் பனவன்கரமிற்றுகவே. (௯)

செய்ங்கொண்டவிர்வேற்பெருமான் சீராருள்பெற்றுளவா
றியங்கும்படிசெய்கெனவாங் கியன்றசிலர்கேட்டதனுற்
றியங்குமதியோர்சோரத் திருமந்திரத்தூர்க்கோயில்
வயங்குங்கொடிக்கம்பத்தின் மணிநாவறப்பாடினனே. (௧௦)

தன்னப்பனுக்கோதாய்க்கோ தக்கதிதிவந்திடலா
லின்னபுலவன்றேங்கா யிரண்டோமூன்றேவிரக்கிற்
றென்னஞ்சோலையினன்றான் செய்யகவியாலுதிர்வித்
தன்னவையெல்லாங்கொடுபோ யளிகூறெனச்சொன்னானே. (௧௧)

மாங்காயொடுவெற்றிலையும் வாழைப்பழமுந்தந்தாய்
தேங்காய்நெற்றுந்தருவாய் செந்தூர்முருகோனேயென்
றுங்காதரத்தோடொருபாட் டறைந்தாயிரநெற்றுதிர்த்தான்
றீங்காங்கிழ்வதொன்றுஞ் செய்ததிலையன்னவனே. (௧௨)

தன்னுண்டன்மைகெடுக்குந் தமிழ்ப்பாட்டொன்றுமாண்டான்
வன்னுவதனுற்சொல்ல வழங்கும்வாணித்தாயே
யின்னுமவின்மிசையுற் றிதமேவிளைத்தாளிதனு
லன்னுள்செயலையளத்த லார்க்குமரிதாமம்மா. (௧௩)

இந்தப்புலவனொருக்கா லெழிற்செந்தூர்க்கேகுகையி
லந்தப்பொருநைநதிநீ ரதுமேலிடலாலயர்ந்து
சொந்தக்கழியொன்றேறிச் சுருக்காவழிவிட்டிடப்போய்க்
கந்தக்கடவுட்டொழுத கதையுஞ்சொலுங்காசினியே. (௧௪)

வேறு.

கோரமிக் குடைய மிலேச்சர்தங் குலத்தோர் கொற்றவேந் தினிதனுப் பிடலாற், பாரகத் துலவு மமைச்சன்மே னியினிற் பசும்பொனு பாணமிக் கணிவோ, னாரணம் விதித்த பஞ்சகௌவியத்தோ ரகத்தினிற் பிறந்தவ னுற்றா, ரோரமே வளர்ந்து விரித்ததோர் புளிக்கீ ழும்பர்கோன்றனெ னவிருந்தான். (௧௫)

அன்னவன்றனைக்கண்டழுவபாவேனு மஞ்சுறுதப்புலவன்றன்
வன்னமைந்துறுமாதனத்தின்மீதுடன்போய்வைகியென்மாட்சிமேதித்தி
மின்னனோர்வடிவேற்குகனருட்பெருஞ்சீர் மேவியுள்மீளவொனவிரைவிற்
சொன்னபோதவன்றனைநிசயித்தருகிற் சூழ்பவர்வெருக்கொளச்சொல்வான்.

ஆயினிக்கணமேயிம்மரத்திந்த வடற்கிளைமுறிந்துவீழ்ந்திடநின்
வாயினுலொருபாட்டுரைத்தியற்றுவையேல்வளங்கிளையன்மையியிழையனைத்து
நீயிவன்கொள்ளக்கொடுக்குவனின்றேனினைத்தவாறுறக்குவனெனலுஞ்
சேயினைமலர்த்தாள்கருதல்விட்டொழியாச்சிந்தைதோய்செழுந்தமிழ்ப்புலவோன்.

அவனதாள்சுன்னக்குறிப்பிடச்செய்வித் தப்புறமெப்படியேனு
மிவனுளபுளியங்கொப்பொடிந்திடவேவேண்டுஞ்செந்தூரினுங்கிறைவா
தவர்துணைக்குருபராசெப்பேயனைய நனத்தொருருறந்திதன்கொழுநா
நவமலிதெய்வயானைதன்கணவா வென்னுமுர்பாநவின்றனனம்மா. (௧௮)

பாட்டுமுற்றுதலுங்கத்தரிக்கோலாற் றரித்தகைபோற்குறிபிருபாலுங், காட்டுபுவிழுந்ததுடனவனஞ்சிக் கான்மலர்க் கிறைஞ்சுப்பணிந் தினியென், மாட்டுளச்சினங்கொண்டொறுத்திடேலெனக்கேட் டதுசெயேனென்றபின் மகிழ்ந்து, பூட்டுபூ ணிரண்டா யிரம்பொன்மேல் விலைய யாவையும் பொருக்கெனக் கொடுத்தே. (௧௯)

இன்னமும் வேண்டுவனவெலாஞ்செய்வே னெனச்சொனு னதற்கியற்புலவோன், சொன்னசொற்றவறுதுறுற்றலேபோதும் தொகுத்தென் வேட்கைகளெலாமுதவற், கன்னவா கனனைப் புடைத்தவே ளுளனென்றறைந்தவன் றன்னக ரடைந்தான், பொன்னதாம்படிமற்றொருபொருட்சுட்டிப் புகலினுமியல்வதோர்ந்திலனே. (௨௦)

அந்தமெய்ப்புலவற்கொருமகள்பிறந்தா ளவளிளம்பருவத்தேதங்கை
மைந்தனுக்கினிதுமணஞ்செய்வித்திட்டான் மகடனையறியுநாள்வருமுன்
சிந்ததனிடைவாழ்சிங்களத்தினுக்குச் சென்றனன்மருமகன்றிரும்பி
வந்தவட்சேரக்கண்டிலன்பருவம் வருமகள்வருந்தல்கண்டனனே. (௨௧)

பத்தினியொருபாற்றங்கைமற்றொருபாற் பருவரற்படுவதும்பார்த்தான்
சத்திவேற்குமரனல்லதுதமக்கோர் தஞ்சமின்றெனத்தெளிதகவா
லத்திறத்தவர்கடம்மொடுமிசைந்து ரடைந்துசந் நதியின்முன்னு
னித்தியப்படியிற்செயுமபிடேக நேரமாத்திரைநிகழ்ந்ததுவே. (உஉ)

வேலுக்குஞ்சொல்லிமயிலுக்குஞ்சொல்லிவீ ரதண்டைகண்மிளிர்தருநின்
காலுக்குஞ்சொல்லியழுதனனென்றோர் கவிசொனான்கருநிறக்குறப்பெண்
பாலுக்குமயங்குங்குகன்றிருவருளாற் படீரெனத்திரைகயிறற்று
மாலுக்குச்சொன்னகளிறுபோற்சிந்தை மகிழ்வுறச்சேவையெய்தியதே.

காண்டலுமின்னதினத்தினின்மகளைக் கணவன்வந்தணைந்திடுமாறே
யேண்டருபுகழ்சால்வீரவாகுவைக்கொண் டியற்றுவேனென்றுரைத்திட்டா
னண்டமர்ந்துள்ளார்செவியெலாம்வினவா தவன்செவிமாத்திரம்வினவிற்
நீண்டருள்செய்தானிங்ஙனமெனவே யாவர்தம்மொடுமிசைத்தானே. ()

பூசைமுற்றியபின்னிலைத்திருநீறும் புசிப்பவும்பெற்றுளம்பூரித்
தாசையோர்புகழ்தன்னகரினுக்கேகி யறைந்தநாளினைக்குறியாக்கிக்
காசையுஞ்சொலையுமளவறச்சொரிந்து கவின்பலசெய்தனனந்த
வோசைநீடிடலாலுலகிடைவியப்பு மிகழ்ச்சியுமொருங்குமிஞ்சினவே.

குறித்தநாளந்தப்போதொருவீரன் கோளரியேறெனப்புலவன்
செறித்தமெய்யன்பிற்குறைவிடமான சேயிழையிருந்துழிச்சென்றுங்
குறித்துயிர்கலந்ததாம்பொதிசோறேற் றுன்மருகனைக்கொணர்தருவான்
மறித்தநீர்க்கடன்மேற்செல்கின்றேனுன துமணவன்சொற்படியெனமறைந்தான்.

அங்கதுநிகழ்ந்தவுடனவள்புலவற் கறைதலாலதிவியப்பெய்தி
யிங்கதும்பெற்றுயான்பெறுகில்லே னென்னிலுமேற்றநீயென்றுன்
மங்கலநின்கையணிதரப்பெறலால் வாய்ந்ததென்றவள்வகுத்திட்டா
டங்களிலுள்ளக்கலப்புமிக்குடைய தம்பதிகளின்சுபாவமதே. (உஎ)

அப்பொழுதாங்குற்றம்மருகனைக்கண் டதற்கியைந்தனவெலாமாற்றி
மைப்பொருகடன்மேற்கலமுந்தானுகி மதியம்வந்தெய்துமுனுய்த்தான்
றுப்பொடுபுரையுஞ்செழுந்தமிழ்ப்புலவோன் றுயரொழிந்துவகையிற்றுளைந்தான்.
மெய்ப்பொருணிலையமறிகிலாராய வீணருமிகப்புகழ்ந்தனரே. (உஅ)

புலவன்றன்மகளுமருகனுஞ்சசியும் போகியுமெனக்களிபூத்தார்
வலமிஞ்சுபானுகோபனைச்செகுத்த மாரதன்றாதுபோம்வாழ்க்கை
யுலகின்கண்மற்றூர்பெற்றனரந்தோ வுளத்தருண் மேலிடிலொருவற்
கலகின்றியுயர்பேறளித்திடுந்தெய்வ மறுமுகனன்றிவே றிலையே. (உகூ)

அத்தகைவீரபாண்டியப்புலவ னழிவுறுதம்பலத்துலவுஞ்
சித்தர்தங்கூட்டம்விழையினும்புகலாஞ் சிகரிகடொறுந்தினம்பற்பல்
பத்தரோடேகிச்செந்தமிழ்க்கவிகள் பாடிவீட்டுறினுமுற்றிடலா
மித்தரைமாந்தரெனவுடல்விடுத்தே யேகினன்பதத்திலென்பாரே.(௩0)

ஈசனைத்தின்கைச்சிலையினற்புடைத்திட் டிகபரமளந்ததாட்டிருமால்
பாசமார்தருதேர்ப்பரியினைமுகைக்கும் பாகனும்பரிசுபெற்ருேனும்
வாசனைப்பலத்தால்வேட்டுவச்சிசுவா மகிதலத்தினிற்பிறந்தனும்
றேசுடனயிக்கமாங்கதிவிழையுஞ் சிந்தையுமெய்தரிதம்மா.

அந்தரத்தமரர்சிறைவிடற் பொருட்டாலலைகடற்கடந்தனூதனைத்தன்
செந்தகைமகளின்புறவுமவ்வாறே செல்லவிட்டவன்புகழுரைத்தேன்
சந்தனச்சோலைக்கோளத்திறைபாற் சண்முகன்றன்னைத்துர்தனுப்பும்
கந்தசாமிப்பேர்க்கவிப்புலவோன்றன் காதையுங்கட்டுரைப்பேனே. ()

வீரபாண்டியப்புலவர்சருக்கம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - உசஅச.

## ஐம்பத்தோன்பதாவது
## கந்தசாமிப்புலவர் சருக்கம்.

வாளுகிர்ப்புலித்தோலார்த்து மறையவன்றலையிலேற்ருேன்
வேளுகாணுருவமெய்தி வியனரசாண்டவாற்ரு
ளுளுமண்டருங்கொண்டாடு நறுந்தமிழ்ப்பாண்டிநாட்டி
லீளுவரென்ருேர்சாதி யினரும்வாழ்ந்திருக்கின்ருரே. (க)

அக்குலத்தினரிற்பல்லோ ரானை நெய்தொழிலுமுள்ளிற்
புக்குளங்கலக்கும்பொல்லாப் புகைப்புனல்விலையுஞ்செய்வா
ரெக்குலத்தெவரானலு மேன்றமாதவஞ்செய்வாரேற்
றிக்குணர்புகழ்ச்சிதோய்வா ரெனுங்சந்திகழுமாறே. (உ)

அவரிடையொருசேய்தோன்றி யப்பனுற்கந்தசாமி
யெவனெனும்பெயர்சூட்டப்பெற் றின்றமிழ்சிறிதுகற்றுந்
தவமுனியொருவன்றன்னுற் சடாக்கரத்தியானமெய்திக்
குவவுறுதோளுமார்பும் கோதையர்குறிக்குநாளில். (௩)

சிறிதுநாளினத்தாருடோர் செல்வன்றன்மனையிற்கூவித்
தறிநெய்சீவனஞ்செய்துற்ருன சண்முகனருள்வந்தெய்தி
யறிவுமாண்மையுநல்வாக்கு மமராதியர்க்குமச்சஞ்
செறிதருசெயல்கள்செய்யுஞ் சித்தியுஞ்சேர்ந்தவன்றே. (௪)

அம்மனைவளருங்கன்னிக் கமைந்தபேரழகைநோக்கிக்
கைம்மலர்பற்றிடாமற் கவியொன்ருல்வியந்துசொன்னன்
மம்மர்கொண்டுள்ளானென்ன மதித்தந்தமகடன்ருதை
யிம்மனைக்கினிவாராம லேகெனவனுப்பினனே. (ரு)

வெளியினில்வந்துசிற்சில் வியன்கவிவிரைந்துபாடி
யளிநகர்கடப்பந்தாரா னருடனக்கமைந்தவுண்மை
தெளிவுறவுலகினேர்க்குத் தெரித்தனன்செல்வர்சில்லோர்
தளிமலிந்தியானமாதி கவின்பெறவழங்கினரே. (சு)

அங்கதுகண்டுமூன்ற னகத்துறேலென்றுபோக்கும்
துங்கன்மாதுலனுயந்தத் தொடிக்கைமாமயில்போல்வாளைச்
செங்கரம்பற்றநல்கித் திருத்தியுமடைந்தானென்றூற்
றங்கமாதியகண்டாலித் தரையிலார்வசப்படாரே. (௭)

பைந்தமிழ்ச்சுவைதேர்வீர பாண்டியப்புலவன்போன்றிக்
கந்தசாமிப்பேர்வாய்ந்த கவிப்புலவோனுமோர்கா
லுந்தடற்புளியின்கொம்பொன் றொடிந்திடப்பாடினனென்
றிந்தமாநிலத்திற்சில்லோ ரியம்புவாிரண்டுமெய்யே. (௮)

செந்தின்மாநகரைநாடிச் சிவிகைமீதேறிச்செல்காற்
கொந்திலங்கியபூஞ்சோலைக் குருகையூர்ப்பனவர்வந்து
வந்திடாவாறுவந்தாய் மனிதருக்கடுக்காதென்று
புந்திசேர்கந்தசாமிப் புலவனைத்தடைசெய்தாரே. (௯)

தடுத்தவர்தம்மைநோக்கிச் சண்முகனருட்பேராண்மை
யடுத்தபின்மனிதனல்லே னமரரையனையனேயான்
விடுத்துய்மினின்றேலந்தோ வெங்கவியுரைத்துநும்மைக்
கெடுத்திவண்செல்வேன்சாட்சி கேட்டெனையுணர்மினென்றான். ()

என்றவனுரைத்தபோதங் கீண்டியவீட்டத்தூடோர்
வன்றகையினன்றன்கையின் மறைத்தொருபொருளைவைத்தீ
தின்றமிழ்க்கவியாற்சொன்ன வெய்யனஞ்செலலாமின்றேற்
பொன்றயங்கியநின்யானம் பொடிப்படுமெனப்புகன்றான். (௧௧)

கொங்கைக்குச்சந்தமாகுங் கோலவேல்விழிக்குமையாந்
திங்கள்வாணுதற்குநல்ல திலகமுமாகுமாதர்
செங்குழாம்பயிலுமாழ்வார் திருநகர்மாடவீதி
தங்கியமண்ணென்வெண்பாச் சரதமாச்சாற்றினனே. (௧௨)

அக்கணமவனையன்போ டனுப்பிவிட்டவர்கடம்மி
லிக்கவிப்புலவன்வாயா லெரிநிகர்கவிகேளாமற்
றக்கவாறியலச்செய்கை தனிப்புகழ்ச்சடகோபன்றன்
மிக்கபேரருளேயென்ன வியந்துளமகிழ்ந்துபோனார். (௧௩)

வேறு.

தந்ததந்தன தந்ததந்தன தந்ததந்தன தந்தனா.

செந்திலின்கணதி யுன்புடன்கடிது சென்றனன்பல்பல் சிந்தினு
லுந்திடும்படிபு கழ்ந்தனன்சநிதி யொன்றிநின்றினிதி றைஞ்சினன்
மந்திரம்பெரிது ணிர்ந்தவந்தணரு மங்கலஞ்சொலவி ளங்கினு
னிந்திரன்றுயர்த ணந்தகந்தனரு ளிங்கடைந்துமகிழ்மைந்தனே. (௧௪)

தத்ததத்ததன தத்ததந்ததன தத்ததத்ததன தத்தன.

அச்சிகட்புணர்வி ருப்பும்விட்டுறும ருச்சகத்திரள்வ கிப்பதான்
மெச்சியற்கைபெறு மத்தலத்தருகு வெற்பெனக்குவிம ணற்கணே
பச்சிலைச்சுருள்சு வைத்திசைக்கவிப டித்திடிற்பல்வினை துப்புநீ
ரெச்சில்கைப்பகிர கத்துவிக்கிரக மிட்டபொற்கலைந னைத்ததே. (கரு)

தனனதானதன தனனதானதன தனனதானதன தனதன.

இனையவாடல்பல தலமும்வாழ்கடவு ளினமதூடெவரு முயல்கிலார்
நனையுமாடைகிற மதுசிவீரெனவி னவையில்பூசைபுரி பவனையோ
வுனையிவாறுசெய வலருளார்சொலென வுருகியேயழுது தொழுதபோ
தனையைவேலனென மலர்குராவொடுர மணிசெவேளொருவன் மிசையுலாய்.

தந்ததானதன தந்ததானதன தந்ததானதன தந்தன.

என்றனுதுபெயர் கொண்டபாவலவ னின்பமார்கவிவி ளம்புபோ
தொன்றநானருகு நின்றவாதரமு ணர்ந்திடாதவனு மிற்றதா
மன்றவாறியல லென்றுநூலபினி யன்பொடோதல்விழை மின்றதான்
மன்றநீருணர்தல் கன்றுமேனெனமி கிழ்ந்துகூறினன்வி ளங்கரோ. ()

தத்தானதன தத்ததானதன தத்ததானதன தத்தன.

அச்சொலோதிமறை யுற்றபோதகிச யித்தனேருவகை முற்றினர்
மெய்ச்சொலாயதுச கத்தின்மானிடர்மி கச்சொல்பேரொலித ழைத்ததா
லெச்சொல்யார்பெறவ ளிக்குமாறுகுக னிட்டமாயினும்வி லக்கலார்
பொய்ச்சொலேயெனநி னைக்கொணுதுயர்பு கழ்ச்சியாமதும கிக்கினே.

தனனதந்தன தனனதந்தன தனனதந்தன தனதன.

தலமதன்கணுறை பலரையுஞ்சில்கவி தையில்விளம்பியுமு வகைசெய்தா
னலர்மடந்தையர்க ளிருவருந்தனரு கமைதல்கண்டுபெரி தருமினு
னிலகுசெந்தமிழ்வ லவர்கள்கண்டுதொழு திவனெர்சிங்கமென வெருவிநூர்
நிலவணிந்தசடை விமலனைமைந்தனரு ணிறைவடைந்தபின தருமையே.

தனனதத்ததன தனனதத்ததன தனனதத்ததன தனதன.

மதனன்வெட்கமுறு திருவுருக்குமரன் மகளிர்பற்பலரொ டினிமைகூர்
பதமிதப்பகர்வ தலதுமற்றுமுள பலகவித்தொகுதி விழைகிலா
னிதமிரக்கமுறு கொடியவர்க்கியம் னெனவிளக்கமுறு பெருமையான்
விதரணக்குணமெய் தினரழைத்துதவும் விதமதற்கொர்கல மனையனே.

தானதந்ததன தானதந்ததன தானதந்ததன தானன.

மாவதன்களவு நாடினன்செயதி மாயமும்புலிய ரூர்கள்சூழ்
காவலன்புகலு மாணையின்படிகை காலிழந்ததுவு மோசைகூர்
சேவலங்கொடிகு லாவுசெந்திலிடை சேறலுந்துதிசெய் பான்மையா
னேவதன்றவைகொண் மேன்மையும்பொலியு நூலெனுண்டியுமி லாயதே.

தானதத்ததன தானதத்ததன தானதத்ததன தானனு.

யானமுற்றும்வெகு வூர்கள்சுற்றுவன வேழையர்க்கரசு போலவாழ்
மானமிக்கமனே யாணிமித்தமீனே வாய்வசித்துமகிழ் கூர்வனு
லானனக்கடவுள் வாய்விடக்கைகளி னுவிடித்தவன லாதொழிந்தே
வினமற்றபுக ழீவதற்குரிய தேயெனற்கிசைவு ரானரோ. (௨௨)

தானதானதன தானதானதன தானதானதன தானனு.

ஆலகாலமுண வானநாதனரு ளாறுமாமுகவி சாகவேள்
பாலவாவொடெனின் மேலெனுங்கமொர் பாலனீதியென நாடினு
னீலவேல்விழிமி னுளுமேனியரு னேரிலாவுவகை கூரவே
காலதாமதமி லாமலேயிணையில் காமரோடுதவி னுனமா. (௨௩)

தன்னதாந்ததன தன்னதாந்ததன தன்னதாந்ததன தன்னனு.

என்னயாண்டுபெற முன்னிவேண்டிடினு மின்னவீர்ந்துதவ னண்ணிமால்
வன்னவீர்ங்கடலின் முன்னர்ஞாங்கரொடு மன்னினுன்குமர னுண்மையே
மின்னகூர்ம்புலவன் விண்ணிலோங்குநரு மெண்ணுமான்படைதல் கண்ணிடா
தன்னம்வான்கலைகள் பொன்னிலாம்பணிக ளன்னவார்ந்தனனி மண்ணிலே.

தய்யதாத்ததன தய்யதாத்ததன தய்யதாத்ததன தய்யனு.

செய்யவேற்படைகொள் கையன்மேற்பலபல் செய்யுள்சாற்றும்வலிபெய்தினர்
வையமேற்புனித மெய்யர்தாழ்ச்சிசொலி வைததீக்குலர்த மில்லின்வாய்
பையலாப்பிறவி கொள்ளிலாற்றலொடு பௌவமேய்த்தபுக ழொல்லிவா
னையர்வேட்டிடவு மல்குசாட்சியிவ னல்லதார்க்குமிலை யுள்ளவே. (௨௫)

வேறு.

கலனணிமதனிகர் கந்தசாமிப்பேர்ப்
புலவன்முன்சிற்சினுள் போயபின்னர்பைம்
பொலன்விழைவெய்தலாற் பொருவில்கேரளத்
தலமகிபன்கொடை தன்னைநண்ணியே. (௨௬)

தன்னுடைக்கடவுள்பாற் சாற்றினுனவன்
மின்னுடைவேலொடோர் வியன்கனுவிடை
மன்னுடைமனத்தினுள் வயங்கிநின்வயி
னென்னுடைப்பாவல னுமின்னுன்வரும். (௨௭)

அன்புடனவற்கொரை யாயிரம்பொனீந்
தின்புகழ்வளர்த்தியென் றுரைத்துப்போயினுன்
றன்புறமதிக்கலாச் சாதியோனெனத்
துன்புறீஇமன்பல சூழ்ந்துற்றுனரோ. (௨௮)

மற்றைநாளாங்கவன் வரவுகேட்டலும்
பொற்றைநேர்புயத்திறை பொருக்கென்றேயெதி
ருற்றையினெஞ்சத்தோ சொவிலுள்ளத்து
வற்றைவேற்குகன்சொல லனைத்துங்கூறினன். (௨௯)

அன்னசொற்கேட்டலு மளப்பிலார்வமாய்
மன்னவனிக்கணம் வகுத்தவத்தொகைப்
பொன்னளிக்குவன்கொடு போதியென்றலும்
பன்னருந்திறலுடைப் பாவலன்சொல்வான். (கூ0)

புன்குலத்தினனெனப் புறத்தில்வைத்துநின்
பொன்குவையளித்திடப் புந்திகொண்டனே
வன்குரற்சேவலான் வரவுகண்டபின்
னென்குலமுயர்ந்தவா றேனுற்றோர்ந்திலாய். (கூக)

பூவலயத்தினிற் பொலியுமானிடர்
யாவரேயாயினு மிகல்கொல்வேந்தர்தம்
மாவலுக்கடங்குற வருள்பெற்றோரெனிற்
றேவரேயென்பதுஞ் செப்பவேண்டுமோ. (கூஉ)

அருவரேலென்றுசொற் றழைத்துக்கொண்டுபோய்த்
திருமலிமன்றனு தனத்திற்சேரவுய்த்
தருகுறுபீடமீ தவனும்வைகிநீ
தருதலைத்தருதியிச் சனத்தென்றனரோ. (கூங)

அன்னபாங்கறிந்துசற் றயிர்த்துமன்னவ
னின்னபேரவைகுறித் தின்றுநான்வரி
லென்னகம்வியப்பதொன் றெய்திற்றவ்விதம்
பன்னல்வேட்டனெனப் பகர்ந்திட்டானரோ. (கூச)

மேக்கையுங்கிழக்கையும் விளக்கிமேதகு
பாக்கைநல்கிடுமொரு பசுமரத்திடுங்
காக்கைவேற்றொலியென்றோர் கவிசொன்னனுட
னக்கைமெச்சுபொரு ணல்கினனரோ. (கூரு)

பொன்னெடுசிற்சில பொருளுமீந்தவன்
றன்னொடுமன்பத சாரியாநடந்
துன்னொடுநானொருக் காலுமொப்பலே
னின்னொடுகுகனுளா னெனப்புகழ்த்தலும். (கூசா)

சொற்றிடுஞ்சொற்கொடு துகளிலார்வமாய்
வெற்றியல்பினையலாய் மேகமேனியா
னுற்றியங்கினனின்பா லுண்மைநீயிவ
ணிற்றியென்றுரைத்தவ னீங்கிப்போயினன். (கூஎ)

ஐயமுற்றுமலே யகத்திலுள்ளதா
மெய்யறிந்துரைப்பவன் மேலைத்தெய்வமென்
றய்யவள்ளுவப்பிரா னுலகிற்கன்றருள்
செய்யசொற்றமிழ்மறை செப்பறிண்ணமே. (கூஅ)

போனவப்புலவன்மெய்ப் புகழ்கொள்பாண்டியிற்
ருனறிந்தளவினிற் றருமஞ்செய்துவாழ்ந்
தேனலிற்குறத்திதா ளிணைபராவிய
வானவன்றன்பதம் வாய்ந்திட்டானரோ. (௩௯)

செந்திலான்றருபெருந் திறல்குறைந்ததாற்
பிந்திநொந்தனனெனப் பேசுவார்சில
ரந்திவான்மதிச்சடை யவன்றன்சேயருள்
வந்திடிற்போவது வழக்கமல்லவே. (௪0)

அக்கவிஞன்பெறு மந்தவண்ணமே
மெய்க்கனகங்கொளல் வேட்டுவேண்டினேன்
செக்கர்நேர்குகப்பிரான் சிந்தைசாட்சியாப்
பொய்க்கனவ்வான்மிகப் புண்செய்தானரோ. (௪௧)

மன்னவன்கோலமா வந்துசின்மொழி
சொன்னதுண்டவைசில கவியிற்சொற்றுளேன்
பின்னரனரிமுதற் பேசுந்தேவெலாந்
தன்னதுசொரூபமாச் சாற்றினனரோ. (௪௨)

கானகர்ன்மறைபகர் கடவுட்கூட்டத்தோர்
வானவனீயென வணங்குமென்னிடம்
யானலாற்றெய்வம்வே றின்றென்றோதினு
னேனதாங்கவனிட மிசைத்திலான்கொலோ. (௪௩)

பத்தியுஞ்சித்தியும் பழுதின்முத்தியு
முத்தியினளவினி லுயர்வுந்தாழ்வுமாஞ்
சித்தியேயுலகினர் தெரிதற்பாலது
சத்தியமாமனச் சாட்சிமேலரோ. (௪௪)

கந்தசாமிப்பெயர்க் கவிஞன்கர்தையு
மந்தமாண்புறவிழைந் தடைந்ததன்மையு
மிந்தமட்டுரைத்தன னினியன்னோன்பெறு
மைந்தனெய்தியபுகழ் வகைசொல்வேனம்மா. (௪௫)

கந்தசாமிப்புலவர்சருக்க முற்றிற்று.

திருவிருத்தம் ௨௯௨௩.

ஆறாவது

## ஆறுமுகப்புலவர் சருக்கம்.

தேறுதமிழ்ப்புலமைச் சீரியருநாணமுறும்
வீறுகந்தசாமியெனும் வியன்பெயரோடுறுமொருவன்
பேறுபலவற்றினிலும் பெரிதாகப்பிறந்தமக
னாறுமுகப்புலவனென வகிலமிசையயிர்ந்தானே. (௧)

தந்தைமொழிந்திடக்கேட்டோ தவனொருவன்றரப்பெற்றோ
விந்தைபெறுமாறெழுத்தே மிகச்செபிக்கும்விரகெய்திச்
சிந்தைதெளிந்தம்பொன்மணிச் சிவிகையோதியபிறவு
நிந்தைதருமெனநீத்து நிசநெறியிற்புகுந்தானே. (உ)

வெண்ணீறுமக்கமணி யிருவடமுமெய்ஞ்ஞானத்
துண்ணீர்மையென்றுபெரி தொளிர்கல்லாடையும்புனைந்து
தெண்ணீர்மைப்பெரியவரைச் சேர்ந்துசிறியரைநீங்கிக்
கண்ணீர்மல்கிடநாளுங் கசிந்துருகித்திரிந்தானே. (௩)

கூறுமாறக்கணமே குவலயத்தெல்லாநடக்கும்
பேறுதான்பெற்றிருந்தும் பெருமிதங்கள்காட்டாம
லாறுமுகப்பரதேசி யவனிவனென்றுலகுரைப்ப
நீறுபூத்துள்ளடங்கு நெருப்பென்னநிகழ்ந்தானே. (௪)

மன்னினத்தோர்நடுங்கும் வண்டமிழ்ப்பாவழங்கொருவன்
றன்னிலுமேலாவிளங்குந் தனையனொற்கீந்தருள்கென்று
பன்னிருகைக்குருப்பரனைப் பணிந்ததவப்பயனன்றோ
தொன்னிலத்துத்தமர்வணங்கும் துறவிலவற்றோய்த்ததுவே. (௫)

செல்வமுடையானொருவன் றிர்வரியமிடியினன்போற்
பல்வகைநாடகஞ்செயினும் படைத்தபொருளிறுமாப்பா
லொல்வகைசெய்திடுமாறு மொருக்கானேர்ந்திடுமேதுபோல்
வல்வழக்கனுமவன்செய் வகையொன்றுபகர்வேனே. (௬)

திருவேடத்தவர்தம்பாற் சிறிதன்புசெயுமொருவன்
பெருவேடத்திவற்கொடுபோய்ப் பேணியுபசரித்தமுதிட்
டிருவேடத்தான்மதலைக் கினியனெனவுணராமற்
குருவேடத்தருட்பெருமை குன்றியதேயெனநொந்தான். (௭)

அந்நாளும்பொழுது மறைகின்றேனவிக்கரிய
செந்தழற்போன்றேவெதுப்புஞ் சித்திரைமாதத்தொரிரா
மந்தமாருதந்தோன்றின் மாதாவைமகர்கண்டாங்
கெந்தமானிடர்தாமு மிதயமகிழ்தகைத்தம்மா. (அ)

எந்தமாந்தருந்தென்றற் கின்புறுவாரென்றோது
மிந்தமாற்றம்பழுதென் றிக்லவருமிளம்புலவீர்
கந்தமாமலர்க்கணையாற் கலக்கமுறுமவர்பலருந்
தந்தமாதுணர்விழந்தோ ராதலினூற்றணந்தோமே. (௯)

மெய்யடியாரிலரென்றே விளம்புமவன்மொழிவினவிச்
செய்யகலைத்தவனந்தோ சிறிதுமுன்றன்சிற்றுளத்தி
லையமுறேல்பலருள்ளா ரவரடிமைத்திறத்தியர்ஞ்
செய்யவல்லேனின்விருப்பஞ் செப்புதியேயெனச்சொன்னான். (௧0)

சொன்னமொழியினவுதலுந் துணிவுன்றிச்சூழ்ச்சியிலா
னின்னதலத்தடற்காற்றென் றியங்குறச்செயென்றிடலு
மன்னவிதஞ்செயிற்கூரை யகன்றிடுமென்றனகலி
னன்னலமேபின்னரதை நானமைத்துக்கொள்வனென்றான். (௧௧)

அப்படிச்சொல்லியதவனங் கதுசெயுமென்றாய்ந்தன்று
பொய்ப்புகட்டுமொழியிதெனப் புந்தியினுட்குறித்தேயா
மெய்ப்பயன்பெற்றோர்பெருமை மேதினியோரறிவாரோ
செப்பரிதென்றேவியக்குஞ் சித்தியொன்றுஞ்செயுமுன்னே. (௧௨)

அத்தவன்றன் னுயிர்த்துணையா மயில்வேலனமர்பொருநாள்
பத்தரெனச்சூழ்ந்துமுயல் பாரிடவீரரிலொருவற்
சித்தமினைநினைத்திடலுஞ் செகமழிக்கவரும்பெருங்காற்
றொத்தவனுற்றக்கூரை யொருங்ககலவெறிந்தப்பால். (௧௩)

அம்மனையினூடுசுழன் றவனையுந்தூக்கிடத்துவக்கக்
கைம்மலராற்றவசியிரு கான்மலர்பற்றிக்கரைந்தான்
செம்மனத்தோனதுதீர்த்துச் சென்றுவருகுதுமென்று
நெய்ம்மலிபூம்பொழிற்செந்தூர் நினைத்தவ்வூரகன்றானே. (௧௪)

அன்றுமுதற்பொய்வேடத் தவர்சிலரைக்காணுறினு
நன்றுணர்வாரிவரென்றே நண்ணிநவின்றான்பிறர்க்குந்
துன்றுரகக்கடிபட்டுச் சோர்ந்துபிழைத்தோனதுதா
னென்றுதலைகாட்டிடுமீ னினுக்கும்வெருண்டிடுமாறே. (௧௫)

போனதவன்றந்தைமுதற் புலவர்பலர்க்கொருதஞ்ச
மானதிருச்செந்தூரி லவன்மகனென்றுணர்ந்திட்ட
மானவருமிவற்கந்த வலியிலையென்றேமதிப்பத்
தானடங்கியிரந்தருந்தித் தவம்பெருக்கிவசித்தானே. (௧௬)

வேறு.

ஆசில்பாடல்களுஞ்சிலபாடியே யாறெழுத்துரு வேற்றுமக்காலத்தோர், மாசிமாதம் பிறந்துசின்னுள்செல்கால் வானுளோரும் வருந்திருக்கோயில்வா, யேசில்சேவலம் புட்கொடியேறியே யெழில்விழாத்தின மாறுகழிந்தபின், காசில்சண்முக மூர்த்திவெளிப்படுங் காலையுற்றது கண்டவருய்யவே. (௧௭)

அன்றம்மூர்த்தியவ் வூர்ப்பெருவீதியி லளவிலாடம்ப ரத்தொடுலாவரி, னின்றமிழ்ப்புல மைத்திறமுந்தவத் தேற்றவேடமு மேய்ந்தவனுமிவன், முன்றருக்கொடுற் றேசிலபாடல்கண் மொழிந்துகைம்மணி யுங்கொட்டியாடினன், குன்றமோடுறழ் மாட்சிமையோர்கலாக் கோரர்சிற்சிலர் கோபங்கொண்டார்களே. (௧௮)

காவியங்கலை கட்டினுமெத்தகைக் கல்விகற்கினுங் காசினியோரெலாம்
பாவியென்றிக ழுத்தகுடிுன்குலப் பாலனை பழிப்பதுமாறுமோ
நீவிதிப்பிழை யாக்குகன்றன்முனே நின்றுபாடிடு நீர்மைதகாதுபின்
போவிரைந்தெனச் சொல்லினரக்கணம் போயினனுட் புழுங்குதலெய்தியே.

அங்குசென்றொரு கீர்த்தனைப்பல்லவ மன்பொடாறு முகச்சிவனே யெனக், கிங்குநீயினி தைந்துமுகச்சிவ னியற்கையாம்வடி வத்தினைச் சொல்லெனப், பொங்குதாளமி ாகத்தோடோதலும் பொருக்கென்றே யந்தப் புண்ணியமூர்த்திதான், றங்கும்வேற்கரத் தோடுதிரும்பிற்றுற் றுங்குவார்மிகத் தத்தளித்தார்களே. (௨௦)

பிற்புறத்து மொருமுகமுற்றுமப் பேதையார்க்கப் பெருந்தகைப் பாவல, னற்புமேன்மையுந் தோற்றற்பொருட்டன்றே வதுசெய்திட்ட தல் லாமலுமாங்கொரு, கற்புமங்கையொப் பாகுமெய்ப்பத்தன்மேற் கடிதுவந்தினிக் காணுமிக்காலத்தோ, றெற்புறத்தினி லெந்தைதன்கோ லமா விலங்கச்செய்ம்மினென் றும்பகர்ந்திட்டதே. (௨௧)

அன்றுதொட்டினி தத்தலத்தவ்விழா வமையுந்தோறுமவ் வாறு செய்கின்றனர், பின்றுதித்தலு மத்திருப்பாடலே பின்னுமாங்கவன் பே சலும்பேசுவார், சென்றுகண்டவர்க் கேட்பினுஞ்சாட்சிதாஞ் செப்புவா ர்கண்டு சேவையுஞ்செய்யலாங், குன்றுபோலவன் மாட்சியிலென்செவி குவலயஞ்சொலக் கொண்டதிம்மட்டுமே. (௨௨)

அந்தவாறு முகப்புலவோனெனு மருந்தவத்திரு வேடத்தொராண் டன்க, மைந்தர்தங்குறி கொய்பவ ராட்சிதோய் மகிதலத்தினில் வாழ்ந் தனனென்பராற், கந்தவேளருளே பொறுத்தோன்றனிக் காவலெய்திடக் காணினுங்காணலா, மெந்தவல்லப மெய்தினுந் தத்தமக் கிட்டபேறன்றி யெய்தவொண்ணுதரோ. (௨௩)

பொருளின்மிக் கவரிற்சிலர் தக்கசில் போகமும்புசி யாதொழிவா ரவா, றருளின்மிக்க வருஞ்சிலர் செய்யுமா றறிவுறும லடைந்திடு வாரை யோ, தெருளின் மிக்கவர் சித்திகள் பற்பல செய்துவீட்டினுட் சேரவல் லார்களே, யிருளின்மிக்க வராண்மை கண்டுஞ்சின மெய்திடாம லிருப் பதும் பாவமே. (௨௪)

தொடங்குகின்ற வெல்லாஞ் செயத்தக்கசீர் தோய்ந்துமீச்சுரன்றொ ல்லருளுக்கத்தா, லடங்குமாண்புட னுறுமுகப்பெயரார்ந்தமாதவனுற் றல் விளம்பினேன், படங்குலாவிய பாந்தளொன்றால் வெளிப் பட்ட கூடற்பதிவள ரம்பிகை, திடங்குலாவருட் சீர்பெறலாலுயுஞ் சீனிவா சன் சிறப்புரைப் பேனரோ. (௨௫)

ஆறுமுகப்புலவர்சருக்கம் முற்றிற்று.

---

திருவிருத்தம் - ௨௫௪.

## அறுபத்தோன்றாவது

## சீநிவாசப்புலவர் சருக்கம்.

---

அதுலப்பாண்டி யதன்றலையாநிகழ்
மதுரைக்கோயின் மடைப்பள்ளிக்காரன்றான்
வதிவையின்றியம் மாநகர்வாய்வளர்
பொதுமடந்தையர் சொற்கொடுபோற்றுவோன். (க)

எண்ணெண்ணுடை யியற்றினர்க்குங்கயற்
கண்ணென்சீர்கொள் கவுரிக்குநாடொறும்
விண்ணென்றுள்ள தலத்தினர்வெஃகுமூண்
டண்ணெனன்பிற் சமைத்தளித்தானரோ. (உ)

அந்தவேலையி னர்க்கரசாதலாற்
சொந்தமாகக் கிடைத்திடுந்துய்ப்பினத்
துந்தவுண்டபி னுற்றனயாவையுங்
கொந்தலர்ந்த குழலியர்க்கீவனால். (ங)

குரண்டநேர்நிறங் கொண்டநெஞ்சத்தவன்
றிரண்டகொங்கைச் சிறுமியர்சேர்க்கைவிட்
டிரண்டொர்நாண்மதி யிற்றிருக்கோயிற்கண்
முரண்டயங்கு முழுத்துயில்கொள்ளுவான். (ச)

அனையவேதிய னுங்குறுமந்தநாள்
வினையினற்பயன் மேவியதாலொரு
தினையுமாசிலொர் சீலவைதீகனோ
பனையையன்ன பயன்பெறநாடியே. (ரு)

அங்குவந்தன னங்கயற்கண்ணுமை
தங்குகோயிலின் சந்நிதிப்பாலிருந்
திங்குவந்தருள் கென்றவண்மந்திரங்
கங்குலும்பக லும்புகன்றானரோ. (சா)

அட்சரத்தொ ரிலக்கமதாதலு
மட்சயத்தின ராளுடைத்தேவிதா
னட்சமுத்திர மன்னதொர்கங்குல்வா
யட்சரேரிலோ ரங்கனையாவுற்றாள். (எ)

பச்சைமேனியும் பாசமொடங்குசம்
வைச்சகையும் வயங்குறக்காட்டிலா
ளிச்சைநல்குமோ ரேந்திழையேயெனத்
துச்சமாஞ்சில சொற்புகன்றானந்தோ. (அ)

ஞானமெய்தினர் நாரியர்சேரினு
மீனநோக்கியென் றேமிகவேண்டல்போ
லீனமார்தரு கன்மமிக்கேய்ந்ததா
லானசேவையை யங்ஙனமாற்றினன். (௯)

மணிவிடத்துறு மற்றொருமாதென
வெணினுந்தோடமின் றேதவத்திடமித்
துணிவிலேகுன்றிட வூறிழைக்கத்தகு
கணிகையென்று கடுகடுத்தானரோ. (௧0)

உள்ளத்தின்கருத் தொத்துவிளங்கிடுங்
கள்ளத்தன்மை கடவுளர்க்குண்டெனும்
வெள்ளச்சாகர நேர்மறைமெய்யென்பா
னெள்ளற்கேற்றசொல் லொன்றிசைத்தாளம்மா. (௧௧)

நச்சியோம தருப்பணநாளுஞ்செய்
தச்சிளைப்ப வலமருமந்தண
பச்சிலைச்சுருட் பாக்குடன்மெல்லுமென்
னெச்சிலுண்ணிலுய் வெய்துவையென்னவே. (௧௨)

அக்கொடுஞ்சொ லணிச்செவியாலுளிற்
புக்கொருங்குளம் புண்படச்சுட்டதா
லிக்கொடைங்கனை யேந்துமிறைவியை
மிக்கொலித்திகழ்ந் தான்வெறுப்பாற்றலான். (௧௩)

அன்னவன்செயு பாசனையானதி
லென்னகுற்ற மியைந்ததுவோவுமை
முன்னரெய்த முதிர்ந்தும்பயன்றரா
தின்னல்வாரி யிடைப்படச்செய்ததே. (௧௪)

கண்டுபேசிக் கனன்றிடப்பெற்றதுந்
தொண்டுதோயுந் தவத்தருட்டோற்றமே
பண்டுசூழ்வினை பாழ்படமாற்றினு
முண்டுபிற்பவத் துன்னியவூக்கமே. (௧௫)

ஒருவன்றேடிப் புதைத்திடுமொன்பொருள்
வருமொருத்தன் வசப்படுமாறுபோற்
பெருகுபாசனை யோன்பெறத்தக்கபே
றருகுறங்கொரு வன்பெறலாயதே. (௧௬)

வேறு.

சீனிவாசனென்றபேர் சிரத்தினிற்கொள்வேதியன்
யானிதற்குமுன்பகர்ந் திடத்திகழ்ந்தவியல்பினன்
வானிலேகினர்தமேனி மானவேகிடந்தவற்
றூனிரைந்துமென்கைகொண்டு தட்டினனுயிர்த்தனன். (௧௭)

எழுந்துதொட்டெழுப்பினளை யாரெனுவினுவிலா
னழுந்துசிந்தையன்பனுகி யளவறக்களித்தன்ன்
கொழுந்துவிட்டகாமமோ குறித்தமாதவங்கொலோ
செழுந்துகிற்கொண்மானெனத் திகழ்ந்ததாய்விளம்புவாள். (௧அ)

இந்தவேதியற்கெனெச்சி லீந்தளிப்பலென்றன
னந்தமாண்புணர்ந்திடா தாற்றிமீறவைதுளான்
சிந்தனைக்கணுசைமிற் கிருக்குமாகிற்செப்புதி
தந்தளப்பிலார்வமீ தலைக்கொளச்செய்வேனென்றாள். (௧௯)

அந்தமாற்றநளனைவி மனைப்புரைந்தடுங்தொழிற்
சொந்தமாக்கொடுள்ளவன் வினுவியீதொர்சுகிர்தமென்
றுந்தவாவொடென்றன்வாயி லுன்றன்வாய்பொருந்தவைத்
திந்தவேளைநல்கிலுன்ப னெனவியம்பினரோ. (௨0)

அக்கணத்திலதுசெய்திட்ட வம்மைமின்னின்மறைதலுந்
தக்கயூகம்வேறிலாத தடியனுனவவனுடன்
றிக்கர்மெச்சுபாண்டியன்றன் செல்வியென்றுர்கீர்த்தனை
சக்கரைக்குமிக்கதென்ற சுவையதாகச்சாற்றினன். (௨௧)

சோகமுற்றும்ாற்றுசோம சுந்தரற்புணர்ந்தடற்
பாகசாதனற்றுறந்த பாண்டியற்பயந்ததா
யாகமத்தொடொழுகினுற் கீதவஞ்சகஞ்செய்து
மோகவார்த்தைசொல்லினனை முழுதுமேற்கைகொடுமையே. ()

அன்றுதொட்டுநல்லகல்வி யறிவொடாண்மையருணலங்
துன்றுமேன்மையுற்றுமுற் றொழிற்செய்தன்மையோவிலான்
குன்றுண்மிக்கமலயமான கொடிகொள்வான்றன்மகண்மனங்
கன்றுநாணமெய்தியாங்கொர் காரியஞ்செய்வாளரோ. (௨௨)

ஒருதினத்திலாங்கொர்மன்ன னுத்தசெல்வனுற்றவூர்
* நிருபன்வேள்வியிற்பிறந்த நீலவல்லிதாள்களி
லருமையாமருச்சனைசெய் விப்பதன்பொருட்டதி
யுருசியார்நிவேதனஞ் சமைப்பவேண்டலுதவினன். (௨௪)

அவற்றைவாங்கியந்தச்சீநி வாசனென்னுமந்தணன்
றுவக்கும்வேலைப்பாதியிற் றுயின்றனன்றொடிக்கையா
ளொவர்க்குமிக்கமீனநோக்கி யேகியேதன்மூக்கணி
சுவர்க்கணுற்றமாடம்வைத்தத் தொண்டுமுற்றுறச்செய்தாள். ()

அருச்சகன்கையானடத்தும் வேலைமுற்றுமாயபின்
மருச்செய்நன்னிவேதனங்கள் கொணர்கவென்றுவாய்விட்டான்
குருச்செறிந்தவேத்திரக்கை நந்தியன்னகோலன்றான்
விருச்சிகச்சினங்கொடம் மடைப்பளிக்கண்மேவியே. (௨௬)

---

* நிருபன் - மலயத்துவசபாண்டியன்.

அளகமாதொருத்திவந்தவ் வேலைசெய்ததாகவோர்
கனவுகண்டுதுயில்செய்வான் கடுக்கெனத்திடுக்குற
மனதில்வந்தவாறுபேசி னுனெழுந்தம்மடைவலான்
றனதுநெஞ்சறிந்ததப்பி தங்குறித்துளஞ்சியே. (உஎ)

தழ்லவிந்துதான்றுவக்கு மையன்முற்றியுற்றதா
லழகிதென்றுநனிமகிழ்ந்து மார்செய்தாரகொலன்புடைப்
பழமையாளனியாவனே பரிந்துசெய்துளானினிக்
கிழமையோர்கள்பலர்தம்பாலும் கேட்கவேண்டுமென்றெணி. ()

அவனுளொல்கவுடனெடுத் தவற்றினைக்கொடுத்தலுஞ்
* சிவமுகக்குலத்தனேந்து தீபமுற்றுாயபின்
னிவணிலங்குமம்மைநாரி யினிமெலநாளுநேயந்ததா
முவமையற்றபணியொழிந்த தோதினுனுணர்ந்தரோ. (உகூ)

உள்ளமுக்கிலானுரைத்த வுண்மையைப்பெரியன்றுகீ
கள்ளனென்றுநாளைவேந்துன் கைதறிக்குமென்றுமே
விள்ளவஞ்சிலார்சில்கோரர் மெய்யனங்கவட்டபணிந்
தெள்ளவிட்டிடேவிரங்கி வேளையென்றிறைஞ்சினன். (௩0)

அங்கியங்கொர்கன்னிமீதி லங்கயற்கணம்மைவந்
திங்கியன்றவாறிதென் றியற்றுமுண்மையோர்தலும்
தங்கிடத்திருந்தெடுத்த தைக்கொணர்ந்துசாத்தினர்
வெங்கிலேசமற்றருச்ச கன்களிப்புமேவினன். (௩க)

கண்டதோர்கனுமெயான காரணந்தெரிந்ததா
லண்டர்மெச்சுசீநிவாச னுர்வநீடியோர்கவி
புண்டரீகநாண்மலர்ப் பொலிந்ததேனிலோதினன்
ளுண்டனென்றுணர்ந்துதுட்ட ருந்துதித்திட்டார்களே. (௩உ)

மீனையன்னகண்கொளம்மை மெய்யருட்டிறத்தினுற்
சோனைமாரியென்றுநாட கத்தமிழ்ச்சொரிந்ததா
லானையேறுசெல்வர்தாமு மன்புசெய்துபைம்பொனுந்
தானையாதியுங்கொடுத் திறைஞ்சினர்சகத்திலே. (௩௩)

வேலனென்றிலங்குமந்த வேதியன்சொல்வேணுகோ
பாலமுத்திரைப்பதங்கள் பற்பலோருநத்தினர்
ஞாலமீதும்வானமீது நன்குணர்ந்துசொல்லுங்கா
லாலமோடினமுதுமன்ன வருளின்மிக்கதில்லையே. (௩ச)

முண்டிதத்தலைக்குநீண் முடித்தலைக்குமோர்முடிச்
செண்டிசைக்கணுள்ளபேரு மினிதியம்பவிடும்வினை
கண்டினைப்புரைந்தசொற் கயற்கணம்மைகருணைதோய்
தொண்டியற்றிவற்குமோர் துலுக்கனுக்குநேர்ந்ததே. (௩ரு)

* சிவமுகக்குலத்தன் - சதாசிவமூர்த்தியின் முகத்தி லுற்பவித்த ஆதிசைவன்.

வேறு.

மதுரையம்பதியிற்செல்வ வளம்பெறுமொருமிலேச்சன்
விதுமுகத்தணங்கேபோன்று விளங்கொருமகளேபெற்றான்
சதுமுகப்பிரமனிட்ட தலைப்பொறிவலியாலன்னாட்
கதுலமாதுரியச்செஞ்சொ லருந்தமிழ்படிப்பித்தானே. (௩௬)

தன்கலையிருக்கமற்றோர் சாதியின்கலைகற்பிக்கும்
புன்கணத்தினரிந்நாளும் புவியில்வாழ்கின்றார்பொல்லாப்
பொன்கருதுவதாலன்னோன் புதல்வியாலதுவேட்டில்லா
னென்கருத்தாலவ்வாறங் கியற்றுதற்கிசைந்திட்டானே. (௩௭)

ஒருதினம்போற்பன்னாளு மொண்புகழ்ச்சீநிவாச
னருகுசென்றம்மிலேச்ச னருவராதடியேன்வீட்டிற்
றிருபொழுதினுமென்செல்விக் கினியசொற்பாடல்கற்பித்
தருகுறப்படிக்குமாட்சி யுறச்செயென்றிரந்தான்மன்னோ. (௩௮)

வசையநாசாரம்பாவ மாதியவருமென்றஞ்சி
யிசைவுறுதிருந்தபார்ப்பா னிசைந்துபோயவளேர்நோக்கி
நசைமலிந்துருகிநொந்து நாள்சிலகழிந்தபின்ன
ரசைவிலன்புடையோராகி யவரிருவருமின்பார்ந்தார். (௩௯)

தெள்ளியவுணர்வினோர்க்குஞ் சீரியபுலமையோர்க்கும்
வள்ளியவிரதத்தோர்க்கு மாசறுகுலத்தினோர்க்கும்
புள்ளியபுலிபாம்பாதி புணருறவுறினுமாகு
மொள்ளியபருவமாத ருறவொன்றுமுறவொண்ணாதே. (௪௦)

அவள்செயுந்தவத்தாலந்த வந்தணனணித்தோள்சேர்ந்தா
னிவன்முனாட்செயும்பாவத்தா லீனவூனென்றுந்தின்னும்
பவளவாயுறுமப்பாவை பணைமுலைப்போகமார்ந்தான்
கவளமால்களிறன்னார்க்கும் கருமம்வல்விலங்காமம்மா. (௪௧)

உரியவர்விரும்பிநல்கா வொண்டொடிமடவாடன்னைப்
பெரியதோர்குலத்திலுள்ளான் பேணியேபுணர்ந்திட்டாலு
மரியவெம்பகைமைபல்லோ ரவமதிப்புடனுண்டாதற்
றெரியவேண்டுநெறிக்காதைத் திறத்தினைக்கருதனன்றே. (௪௨)

அப்புணர்ப்பறிந்துமுன்போ யழைத்துவந்தவனுய்த்திட்டோன்
வெப்புறுகனல்போற்சீறி வேதியன்றன்னைநோக்கி
யிப்புவியறியநீயெம் மினத்தினிலொருவனாயிம்
மைப்புரைகண்ணாடன்னை யணைந்துவாழ்ந்திருத்தியென்றான். (௪௩)

என்றுரைத்திடல்கேட்டோனின் னெதிரிலென்வாய்ச்சொற்றாழ
வன்றுநானிந்தமாதை யணைந்ததுண்டாதலாலே
யின்றுளவாறேயென்று மியல்வனென்குலத்துநீதி
யொன்றுசிர்விடுக்கமாட்டே னுறுதியீதெனச்சொன்னானே. (௪௪)

அப்பனுமுயிர்போல்வானு மறைதகவறிந்தப்பாவை
கைப்பகடனையதாதை கழல்பணிந்தினிநின்னுனை
யிப்பனவனையல்லான்மற் றியாரொடுமிணங்கேனென்னைத்
தப்பறக்கொன்றிட்டேனின் றமர்புகழ்ந்திடவாழென்றாள். (௪௫)

அருமகளுரைத்தமாற்ற மாவியைவெதுப்பவன்றே
னொருமறைமொழிசொல்லா லுய்ம்றனனுள்ளவாறே
கருமமாங்கியன்றதந்தக் கணத்தினரவனைநீத்தார்
பெருமறையவருமந்தப் பிராமணற்றழுவிலாரே. (௪௬)

சோழனைக்கருதிலிந்தத் துலுக்கனுயிரம்பங்கேற்றங்
காழகக்கம்பனம்புங் கலைமகடனிலுமிந்த
வேழநேர்பனவன்போற்று மெனநோக்கினன்மேலேயென்
றுழநெஞ்சினர்களெல்லா மறிவதற்கஃதோர்சான்றே. (௪௭)

பொன்னிறைற்றுலுக்கன்வாழ்ந்தான் புலமையாற்பனவன்சூழ்ந்தா
னென்னினுமினத்திற்சில்கா லெணங்குநர்தாமுநேர்ந்தா
ரன்னியக்குலத்தோர் வா வதிசயமடைந்தாரெல்லாங்
கன்னிநாடென்றபாண்டி நகின்றரவுதித்தாள்கூத்தே. (௪௮)

அன்னவன்சொந்தந்தானென் றவிர்ந்தபின்னாந்தமாது
தன்னவனருந்தவேண்டா தனமெலாந்தணந்தாளென்பா
ரின்னவனவட்காவூனன் டிழிவுறுதளித்ததெய்வம்
பன்னருங்கற்பந்தோறும் பாரிப்படாதொளிர்கமாதோ. (௪௯)

தினைத்துணைநீறும்பூசாத் தீக்குலத்துதித்தபாவை
வினைத்தெறுசின்னமியாவும் வெண்புரிநாலும்வேய்ந்தோன்
றனைத்தினந்தழுவப்பெற்ற தவப்பயனுரைத்தற்பாற்றே
வனைத்துலோகமுமுன்னின்ற வம்மைதானறியலாமே. (௫௦)

இந்திரற்கெடுத்துவாழ்வித் திடுதற்கும்வல்லோரான
மந்திரப்பனவர்சிறி வாசனும்புலவன்றன்னைப்
பந்தியிற்சேராதாராய்ப் பழித்தலேதொழிலானுரா
னெந்திலாளெனினுஞ்சிந்தை நோதலுஞ்சிறிதுற்றனே. (௫௧)

அத்தனைவருத்தந்தானு மவனுறல்சகியாதாளா
யித்தலமிசையோராட வியற்றிடற்கெண்ணமுற்றாள்
சித்தருக்கரசனுகித் திருவிளையாடல்கோடி
முத்தமிழ்மதுரையூரின் முயன்றுளான்முயங்குமாதே. (௫௨)

வேறு.

செல்லைப்பதிக்கணேயோர்மிலேச்ச நெறிதுன்றுமன்ன னுறலா
லல்லைப்புரைந்த முகில்வந்துபெய்யு மணிமுற்றுமற்று விடலுங்
கல்லைக்கடுக்கு மவனெஞ்சுமுன்று கனமாயதங்கண் முனிவர்க்
கெல்லைப்படாத பணிசெய்துமாரி யெய்தாதுகொந்த னனரோ. (௫௩)

அம்மட்டில்விட்டி டாதேபிராம ணரிலாய்ந்துளாரை யழையா
நம்மத்தநால்கண் மழைபெய்திடச்செய் நோன்போதியுள்ள வெனினீ
ரெம்மத்தநல்கு பொருள்கொண்டுசெய்ம்மி னெனவோதினுன னவர்தா
மிம்மட்டளிக்க வல்லாய்கொலென்றி லக்கம்பொனேதி னர்களே. ()

அவ்வாறுநல்க மறைநாலுமோர்ந்த வறிவாளராயி ரவர்கூண்
டெவ்வாறுமோச்சும் வருணச்செபஞ்செய் தினிமண்டலத்தி லெங்கு
மொவ்வாதநல்ல மழைபெய்திடச்செய் திடுவோமெனுஞ்சொ லுரையா
வெளவார்புரஞ்சொல் பவர்மேவுகாந்தி மதிகோயில்வாய்ந ணினரே. ()

அக்கோயிலெய்தி ஞேர்தப்பிடாம லடல்வீரர்காவன் மிகவைத்
திக்கோள்பிழைக்கி லெம்மோடுசேர்ந்தெ மிரைதின்னவேண்டு மின்றேன்
மெய்க் * கோவிழந்து விடவேண்டுமென்றுர் வெஞ்சொற்சொனுன வேந்தன்
றிக்கோர்நடுக்க முற்றுர் துணிந்து சென்றேர்செபஞ்செய் தனரே. ()

ஒருமண்டலத்துள் வெகுநாள்கழித்து முரைசெய்தசொற்ற வறுமென்
றருள்கொண்டசீலர் மனநொந்துவாட வரியாயமிஞ்சி யதுவான்
றருமங்கள்யாவு நிகழாதொழிந்த வதனுனலுண்டி தணவா
வெருவந்துமுப்பி லாதுண்டுநீர்வெ றுத்துண்டுமெலிவெய்தினரே. ()

அந்நாள்கயற்க ண்ணையாளவுய்ந்த வச்சீநிவாச னடல்கூர்
கைந்நாகமென்ன வக்கோயிலூடு கவினுர்ந்தகாந்தி மதிமேற்
செந்நாவினலொர் துதிபாடியேகல் சிந்தித்துவந்து புகலு
மெய்ந்நான்மறைப்ப னவரூடுசிற்சில் விரகாளர்கண்டு மகிழா. (௫௮)

ஓராயிரக்கு வருமின்னலாதி யாவுள்ளயாவு முரையா
நீராலிமாரி யொன்றின்றுபெய்ய நின்வாயினலொர் பாடற்
றூராளமாக வுரைசெய்தியென்று தணிவோடுகெஞ்சி டலுமப்
பேராண்மையோனு மருளாலுரைப்பல் பெரியீரெனக்கை தொழுதே.

உழையென்றுநிற்கு மவள்சந்நிக்க ணுற்றுள்ளுருக்க முடனோர்
மழைபெய்யவேண்டும் வடிவேயிரங்கி யருளென்றொர்பாடல் வரையக்
கழையின்கண்வந்த பெருமான்விரும்பு கருநீலவல்லி யருளால்
விழைகின்றவேந்தும் வெருளும்படிக்கு மிகுமாரிபெய்த துடனே. (௬௦)

உகமுற்றுநாளில் வருமாரியோவெ னுள்ளக்கலக்க மலிவுற்
றிகன்மிக்கமன்ன னவ்வேதியர்ச்செ யிஃகட்டொழித்து நீர்நும்
மகநத்துமாறி னேபோமினிந்த வளவிற்செபத்தை விடுமின்
புகழ்பெற்றுளீர்க ளேயென்றபோது போதக்களித்த னரரோ. (௬௧)

அவ்வாயிரம்ப னவர்தாமுமங்க யூற்கண்ணிவாயி னமுதுண்
டொவ்வாதபேறு பெற்றுனோநத்தி யுன்னுலிநாளி லுய்ந்தோ
மெவ்வாசுநீசெ யினுமிவ்வறத்தி னெதிர்நின்றிடாதெ னலுமக்
கைவாரணத்தை யனையானுமூடு கலவேனெனுதை கறைதான். (௬௨)

* கோ - கண்.

என்னோடுபோத லேகன்றலாமஃதினமுங்கலக்க விறையே
னன்னேன்புகீர்செய் வலியாலிவேளை நானிங்குவந்த தன்றோ
முன்னோர்விதித்த மாமந்திரத்தின் முறைதீதெனக்க ருதன்மின்
பொன்னேகையாலி விடர்சற்றயின்ற தென்றேபுகன்று போனான். (௬௩)

அவனந்தவண்ண முலகின்கணுற்று மாடப்பெருக்க முளவாம்
விவரந்தெரிந்து பகர்வாரிருப்பர் வினவாதவாறு விரியேன்
குவடொன்றுகொங்கை யவளோடயின்ற கோலாகலஞ்சொல் வனவோ
விவர்பின்புசத்தி யுலகெய்தினர்க ளென்றற்கொரைய மிலையே. (௬௪)

அருள்பெற்றுரைத்த படியேநடாத்து மடல்கொண்டிலங்கு புலவோ
ரிருள்பட்டதீய வினைசெய்தபோது மிசையாமுடிந்து விடுமெய்
மருளற்றவேத நுவல்சாதியோருள் வருசீநிவாசன் மதியோர்
வெருடட்டர்பெற்ற மகளைக்கவர்ந்து மிகுமாட்சியெய்தல் கரியே. (௬௫)

சிவனுக்கொர்பாதி யெனவேவிளங்கு சிவையாளநின்ற வொருவன்
பவமொற்றைதீர வறமாயிரஞ்செய் பரிசிந்தவண்ண மினிமே
னவமிக்கதாய செங்கோட்டை யூரினல்லோனொருத் தனகுசெந்
துவரொத்தபாடல் வலிகொண்டுசிற்சில் சுகிர்தஞ்செயற் சொல்வனரோ.

சீநிவாசப்புலவர் சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௬௨௦.

## அறுபத்திரண்டாவது
## நமசிவாயப்புலவர் சருக்கம்.

வன்பார்பன்மலைச்சிறகு மறையவடும்வயிரத்தான்
மொன்பாருநாணமுறும் புகழனந்தங்கொடும்பொலியுந்
தென்பாண்டிநாட்டினிடைச் செங்கோட்டையூருளதாங்
கின்பாரும்வேளாள ரினத்தொருவன்பிறந்தானே. (௧)

பிறந்தமகன்றனக்கருமைப் பெயர்நமச்சிவாயனெனச்
சிறந்தபுகழ்த்தாதையிட்டுச் சீராட்டிவளர்த்திட்டான்
மறந்தகுநெஞ்சத்தாரு மாதுபங்கனடிசேர
வறந்தழைக்குமுபதேச மறைதொழிலோனெனச்சொல்வார். (௨)

அப்புதல்வன்வயதிரா றுகிழுருந்தமிழ்கற்று
மைப்புயனோர்குழலொருத்தி வதுவையுஞ்செய்தாயதற்பின்
பப்புபெரும்புகழ்வாய்ந்த பாபவிநாசத்தலத்தி
லொப்புரைத்தற்கரியாளா முலகாணுமீதுரித்துற்றான். (௩)

அக்கிரமத்தோர்பலரு மச்சமுறச்செயல்வேட்டு
விக்கிரமசிங்கபுர மேவியும்பல்கால்வசித்திட்
டுக்கிரதேசிகனொருவ னுரைத்தருளோர்மந்திரத்தான்
மெய்க்கிரகபலங்கொண்டு விரதமுடனுபாசித்தான். (௪)

அனவரதமைந்தெழுத்து மம்மையெழுத்தொருமூன்றும்
கனமுறவேயுருவேற்றிக் கனவிரண்டினிலுங்கண்டு
தனதுவிழிகொடும்பார்த்துத் தக்கவரம்பெற்றபின்னு
மினமெனமற்றையர்பலரு மெண்ணமறைந்திருந்தானே. (ரு)

சிங்கைவெண்பாமுதலாகச் செப்புபலபிரபந்தஞ்
சங்கையுறும்படிபாடித் தரைமுழுதும்புகழ்ந்தோத
வங்கைமதவேழமென வவிர்ந்திட்டானருட்டீம்பாற்
கொங்கையுலகாள்வடிவங் குறிப்பவர்க்கியாதரிதம்மா. (சு)

அக்கோயிற்சந்நிதியி லந்தணர்க்குமுனிவோர்க்குந்
திக்கோரெல்லாம்பரவுந் திருநீறீந்ததற்பின்னிம்
மிக்கோனுக்கீந்தருளல் விதியென்றோர்பெருவழக்கந்
தக்கோராலேற்பட்டுத் தடையின்றிநடந்ததுவே. (எ)

அந்நாளவ்வாலயத்தோ ரரசனடைந்தப்பெருமை
யிந்நாவலோற்கிசைத லென்னேயென்றதிசயித்துச்
செந்நாவின்வலிகாட்டி னல்லததுசெயவொட்டே
னென்னுமிண்டினனதுகேட் டியம்பிடிற்செய்குவலென்றான். (அ)

அப்புலவனுரத்தையுற் றரசனுலகம்மனெனுஞ்
செப்புருவவிக்கிரகத் திருக்கையின்பூஞ்செண்டினது
கைப்புகுதவிக்கணமோர் கவிபாடென்றுரைத்ததன்றிப்
பப்புபெருங்குழுவினர்கண் பார்க்கவென்றும்பகர்ந்தானே. (கூ)

செண்டலர்செங்கையுலகா ளென்னுவிற்சிறந்தனளொன்
றெண்டகையசொற்சுவைசா லொருபாடலுரைத்திட்டான்
[illegible] தான்றோடவன்கரத்தில் வந்துறலுமன்னன்முதற்
கண்டவரெல்லோருமவன் கழற்கமலஞ்சூடினரே. (கo)

அப்பாலம்மன்னவன்வெருளுற் றுணவத்தாலடியேன்செய்
தப்பாதற்பொறுத்தியெனத் தனமுந்தானையும்பணியு
மிப்பார்மெச்சிடவழங்கி யேகினனிவன்மகிமை
யொப்பவொன்னலர்தாமு முணர்ந்தொல்கவொளிர்ந்ததுவே. ()

வாளரவிற்கொடியோனும் வசைதவிதையுண்டானோ
நாளவற்கன்றொருபாட னவின்றனனுமதுநஞ்சிற்
கோளடையச்செய்யாது குணம்பொருந்தச்செய்ததெண்ணிற்
றுளமுலைக்குயில்போலுந் தகையுலகாள்செயலம்மா. (கஉ)

அவ்விருமெய்ப்புலவோரு மழன்றுபொருதழியாமற்
செவ்வியசீருறவாடிச் சென்றவிதத்தினையெண்ணில்
வெவ்வியற்கைக்குலமாய வெண்சிங்கமிரண்டெதிர்த்துங்
கௌவியொன்றையொன்றுகொல்லாக் காட்சியினைக்கடுத்ததுவே.

நல்லகுணம்பலதோயர் நமச்சிவாயப்புலவ
னில்லறத்தின்றருமங்க ளியாதொன்றும்வழுவாமற்
சொல்லரியகருணையொடுந் துடியிடைச்சீர்மனைவியொடு
நெல்லளிக்கும்பயிர்முயற்சி நெடிதுசெய்வித்திருந்தானே. (௧௪)

கயல்வாய்த்தகண்ணுடைய கவினுலகாயியைக்கூவி
யியல்வாய்த்ததந்தைமக வெனத்தான்வாய்த்திட்டதற்கும்
வயல்வாய்த்ததற்குமுது மாடுவாய்த்ததற்கும்வண்டப்
பயல்வாய்த்ததற்குமொரு பாடல்பகர்ந்திட்டானே. (௧௫)

தண்ணீர்குன்றியநிமித்தஞ் சாலிவிளைப்பவர்தம்மிற்
றிண்ணீர்மையோர்பலர்தன் சிந்தைவருந்துஞ்செயலாற்
பெண்ணீர்மைத்தேவாய பேருலகம்மனைப்பாடி
விண்ணீர்சில்வயலாவின் மேகநல்கச்செய்தானே. (௧௬)

வன்மனத்தோரொருவனிடம் வாழையிலையிரப்பவவ
னுன்மனைக்கண்ணிலைதந்த வொருமரமோன்பட்டதென்றான்
றன்மம்வளர்த்திடுமுலகாள் சரணமலர்ந்துதிபாடி
நன்மனைப்பாம்படும்புரசு நன்குதழைத்திடப்பெற்றான். (௧௭)

நெட்டைமாலுடன்பிறந்த நீலவிழியுலகாண்மேற்
கொட்டைதீர்கனிப்பாகங் குலவுதுதிசெயும்வாயான்
மொட்டையாந்தலையினிலு முடித்தலைதாழ்வென்றோர்கவி
திட்டைமேற்கொண்டொழுகுஞ் சிலர்நிமித்தம்பகர்ந்தானே. (௧௮)

எருக்குமதிதரித்தசடை யிறைவனுரிதயமுழு
துருக்குமொழிக்கிளிபோலு முலகம்மன்சந்நிதியிற்
பெருக்குபுனற்றுறையாடிப் பேரின்பம்பெற்றதனுங்
கருக்குழிமூடிடும்விதமுங் கவியொன்றாற்கழறினனே. (௧௯)

காரளத்தற்கரியபுகழ் நமச்சிவாயப்பெயரோன்
காராக்குந்தென்பொதியைக் கவின்கிரியின்களிறன்னான்
பாரளக்குநெடுமாயன் படுத்ததிருவனந்தைநகர்க்
கேரளத்துமன்னனுங் கீர்த்திமிகப்பெற்றானே. (௨௦)

பழுதறுமெய்ப்புகழோடு புனைமலர்த்தார்புனைமன்னன்
றொழுதகைமையோர்ந்துபலர் சூழ்வுறவேவாழ்வுறுநாள்
வழுதலங்காயொன்றன்றி மற்றொன்றுநன்றன்றென்
றெழுதுகவிதையுமிந்த விகதலத்தோரிசைப்பாரே. (௨௧)

திருமகளென்றன்பங்கிற் சேர்ந்தவளாமாமிக்கு
மருமகளேயென்பங்கில் வாய்ந்தகலைமகளெனினு
மருமகளாயவட்கிவடா னடங்காமையறியென்று
வுருமமிகுமந்திரிபால் வண்கவியொன்றுரைத்தானே. (௨௨)

எப்படித்தான்கவிசொலினு மிமைக்கொட்டிவிழிப்பதன்றுன்
னிப்படிக்கஃ செய்யருட்பே றெளிதாகப்பெற்றிருந்து
முப்படியும்புகழ்ந்தேத்த முதிர்பெருஞ்சித்தாடாம
லப்படியவ்வளவினிற்செய் தம்மைபதம்புகுந்தானே. (௨௩)

அன்னவிளையாடன்மற்று மவன்செய்துளானெனச்சொல்வீ
ரென்னதுஞ்சாட்சியதாக யான்வினவவிவ்வளவே
யன்னமொன்றுற்பதம்பார்ப்ப தன்றியிலையாதலினு
லின்னவிதத்தவன்மாட்சி யெளிதுணர்ந்துகொளலாமே. (௨௪)

மங்குலமர்தருபொழிற்சீர் மலிசெங்கோட்டைப்புலவ
னங்குலகாம்பிகையருட்பே றடைந்தகதையறைந்திட்டே
னெங்குலதேவாமுருகோ னினிதருளப்பெறுநலத்தாற்
பொங்குபுகழ்முதுகுளத்தூர்ப் புலவனிசைபுகல்வேனே. (௨௫)

நமசிவாயப்புலவர்சருக்க முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௨௯௪௫.

அறுபத்துமூன்றாவது
முதுகுளத்தூரர்சருக்கம்.

சேதுத்தலத்தருகேநனி திகழ்சீர்முதுகுளமென்
றோதும்பதிவந்தோன்குல மொடுபேர்வினவில்லேன்
காதுந்தொழிலில்லானவிர் கல்லாடையணிந்தோன்
வாதுண்டமனத்தோர்வெருள் வண்ணப்புலவோனே. (௧)

பொருமால்கரியினமார்தரு பொதியைக்கிடைபோய்வந்
திருமாதர்களிடைவாழ்குக னியல்பேகருதிடுவோன்
றிருமாமலைக்கொருநூறு திறற்சந்தமுமற்றும்
பெருமாண்புறுவண்ணங்களும் பிறபாக்களுஞ்சொன்னோன். (௨)

அவன்றன்சரிதம்பற்பல வேயாமவையறியேன்
சிவன்றன்விழிச்சேயாலொர் தினத்துய்ந்தமைகேட்டேன்
கவன்றன்பொடுகருதிப்பல கவியாற்றுதிசெய்து
மிவன்றன்னிடத்தருளுண்டென விலங்காதிருந்ததுவே. (௩)

பல்லூர்தொறுமேகிப்பலர் பலியேற்றனமுண்டா
னல்லூர்களிலொன்றான சுரண்டைத்திருநகரிற்
சொல்லூகமுணர்ந்தின்புறு தூயோர்சிலருறலாற்
செல்லூழ்வலியேபல்விசை சிலநாள்வசித்தானே. (௪)

அவ்வூரிலொர்வேளாளன திகமந்திரவலியால்
வெவ்வூறுறுநோய்பலவும்பிறர் மேவச்செயவல்லான்
கௌவூனசையொருவன்சில காசிந்தநிமித்தந்
தெவ்வூறடர்தருமெந்திர செபஞ்சில்பகல்செய்தான். (௫)

ஒருநாளவன்மனையின்கண வண்ணப்புலவோனுற்
றருகேயுறுபலகைத்தக வறியாமலிருந்தான்
வெருளாதிதன்மிசையுற்றனை யெனவனவன்வெம்பிக்
குருவேடமுமதியாது கொடுஞ்சொற்சிலகூறி. (௬)

என்றேவுறுமனைமீதி லிருந்தாயிதனனி
யின்றேமடிவுறுவாய்நிச மென்றேதிவிடுத்தான்
குன்றேகமழ்சிறுதாளுறு குமரன்றுதிபுகல்வோ
னென்றேனுமறுத்தோதில னுளநொந்தகன்றனே. (எ)

வெளியுற்றவனகரத்திடை வீதற்குளநாணித்
தெளிசித்தமுளார்சிற்சில ருடனவ்வகைசெப்பி
யொளிரெற்கதிரோன்மேற்கட லுறுபோதுமயானந்
தளிர்மெத்தையெனக்கொண்டு தனித்தேசயனித்தான். (அ)

அம்மந்திரவாதத்தின னகமொத்திருள்வந்து
கம்மக்குருகன்சேவடி கருதிப்பொறியாறுஞ்
செம்மன்பொடுசொல்லித்தளர் சிந்தைக்குரியோனு
மிம்மண்கொளமுடல்செய்திட லெனநொந்துபடுத்தான். (௯)

பானுளிரவாம்போது பகற்போலொருசோதி
தானுவவண்வந்தெய்திய ததனூடுசண்முகவேண்
மேனுள்பகைவெல்வேலும் வியன்றோகைமயிலும்வந்
தூனுர்தருகண்கட்கெதி ருற்றேயொளிர்ந்தனவே. (௧௦)

அவைகாண்டலுமார்வக்கட லதனூடமிழ்வாகி
யிவைகாண்டகுதவகம்மிட மேதென்றதிசயமாய்
நவைகாண்டருபொல்லான்பகை நலமாயதென்றுன்னிக்
கவைகாண்டருசூலத்தெமன் கருதானெனவுற்றான். (௧௧)

அவ்வேளையிலொருபேய்கர மணிதண்டொடுவரலுஞ்
செவ்வேலதையிருகூறெனச் செயவேமயிலுண்ட
திவ்வேளதுகண்டானவ னேவப்படலென்றோர்ந்
தெவ்வேதையுமணுகாநமை யென்றேயிறுமாந்தான். (௧௨)

அதுமாய்தலுமற்றொன்றுவந் தவ்வாறழிந்திட்ட
திதுபோற்பினுஞ்சிலவந்தவ னேயிற்றனவப்பாற்
கதுமென்றயிலொடுதோகை கரந்திட்டனவுடனே
குதுகூலமெய்துறுசேவல்குக் கூவென்றொலித்ததுவே. (௧௩)

மயினோர்கடன்மீதேகுகன் மானுங்கதிர்வந்த
தயிலாலுயுமவனுங்கது மங்கிப்புனலாடிக்
கயிலாயபதியினீறுகண் டிகைகாவியணிந்து
வெயிலேறுமுனேயந்நகர் வீதிக்கணுற்றனே. (௧௪)

அப்பாவியுரைத்திட்டசொ லவனார்ந்தமையறியா
ரிப்பாவலனைக்கொன்றன னென்றோதினரின்னோ
னெப்பாவுமறியேனவ னிவ்வாறியன்றனனென்
றொப்பாருமில்செவ்வேள்பதத் துறுசூளுரைத்தனனே. (௧௫)

கவிபாடியவலரன்றேயுள னெனமுன்புகணித்தோ
ரிவிதத்தருளுந்தோய்ந்தன னெனநன்குமதித்தார்
புவியிற்சில்விளையாடல் புரிந்தேபொதியையிலுற்
றெவிதக்கதியோவெய்தின னியான்கேட்டதிவளவே. (௧௬)

அந்நாண்மயிலொடுவேலெதி ரவிரச்செயுமடல்வேள்
பின்னுளவனெதிர்வந்து பிறங்கத்தகுமென்றே
யுன்னுமகிழ்கின்றேனத னுண்மைப்பயனியாதோ
* முந்நாணிகழ்வுந்தேர்தரு முனிவோர்பகர்வாரே. (௧௭)

சிறுதேவர்கள்பலர்தந்தயை சேரப்பெறுமொருவ
னறுதேவரிலொருவற்றொழு மவர்மேல்வெகுளுவனே
லிறுவானெனுமுண்மைப்பய னிக்காதைவிளக்கு
மறுதேவிலையென்றொன்றை வணங்கும்பயன்வலிதே. (௧௮)

சித்தர்க்கிடையுற்றான்கொல் சிவன்சேய்திருவடியின்
முத்தர்க்குளுயர்ந்தோர்புகு முறையிற்கலந்தனனோ
பத்தத்துயர்வண்ணக்கவி பாடிப்புரிதவசா
லத்தத்துடனிகலோனு மழிந்தேகல்கண்டவனே. (௧௯)

அப்பாவலனுக்காக்குக னதுசெய்தல்பொயென்னுந்
தப்பாளர்களாரென்றிடிற் றவமேவிழையாரா
யொப்பாவொருமாமந்திர வுருவேற்றுகிலாரா
யிப்பார்நசையேநண்ணி யிறக்கின்றவர்தாமே. (௨௦)

குளிர்முத்தமிழ்நாட்டேமுது குளத்தூரிடைவந்து
தெளிசொற்கவிபாடிக்குகற் சேர்ந்தோன்செயல்சொன்னேன்
வெளியெங்குநெற்குன்றென்றசொன்மிளிரும்புகழ்பெற்றுக்
களிகூரொருகவிஞன் பெறுகதியும்புகல்வேனே. (௨௧)

முதுகுளத்தூரார்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - ௨௬௬௬.

---

அறுபத்துநான்காவது

## நெற்குன்றவாணர் சருக்கம்.

---

கற்குன்ற மனையபுயத் தொண்டைமா னரசியலுங் கச்சி நாட்டி
னெற்குன்ற வாணனென்றோர் வேளாளன் பொறுமைதயை நீதி கல்வி
யற்குன்றச் செயும்பரமன் பத்திமுத லாயகுண மனைத்தும் பற்பல்
பொற்குன்ற மெனப்படைத்தோ னில்லறத்தின் றருமநன்கு புரியு நாளில்.

---

* முந்நாணிகழ்வு - திரிகாலவர்த்தமானம்.

மற்றொருவன் பொருளாட்சி மட்டிலவ னனையனொரே வங்கி சத்தோன், கற்றொருமை ப்படுவார்க்குந் தவத்தோர்க்கு முதவிசெயாக் கயமைக்காரன், முற்றொருநல் விவகார நிமித்தமவன் றனைநீயென் முன்றில் வாய்க்கி, முற்றொருநா ளேனுமிலை தைத்திடப்பார்ப் பேனெனுஞ்சொ லுரைத்திட் டானே. (௨)

அம்மொழியாங் கிருந்துமவ னஞ்சாமற் பொருண்முழுது மானன் பர்க்குஞ், செம்மொழிப்பா வலர்தமக்கும் வழங்கினன் பயிர்த்தொழிலுஞ் சென்று பாரா, தெம்மொழிச் சிலமுந்தெரியு மனைவியொடு கவிச்சுகந்துய்த் திருந்தான் மன்னன், வெம்மொழிக்கஞ் சாமலவன் பொருளினிலுங் கொடைச்செலவு மிகச்செய் தானே. (௩)

கிராமாதி பத்தியமும் விளைநிலமா தியதிருவுங் கெட்டு ளன்பிற், றராமாந்தர் கடன்றனையா ளன்கழிக்குந் ததியிலொரு தமிழ்ப்பா வல்லா, னராவினு மணியனைய கவியினஞ்சால் பனுவலொன்றுங் கவன்மேற் சொன்னு, னிராதரனு னெனச்சொல்லி விடநாணி யொருமாற்ற நிகழ்த்த லுற்றான். (௪)

உனையிந்நாள் வெறுங்கையொடு போகவிடே னென்வாய்ச்சொ லுளங்கொண் டஞ்சா, தெனையின்ன னிடங்கொடுபோய் விற்குதியேல் வேண்டுபொரு ளீவா னென்றான், றனையின்னுப் படுத்துகவி சகியாதா னென்செய்வான் சாற்று மாறும், கனையின்னன் றன்றனைக்கொண் டவனிடத்தில் விலையெனுஞ்சொ லறைந்தான் மாதோ. (௫)

அன்னவனைப் பார்த்துவிலைப் படுகுதியோ வெனவினவி யாமாமென்ற, பின்னரருந் தமிழ்ப்புலவன் விழைதருபொன் கொடுத்தனுப்பிப் பெருங்கோ பத்தான், முன்னவின்ற வாறிலையு மீர்க்குமளித் தப்பணியின் முயல விட்டா, னின்னவித முடிப்பதற்குந் திருவுளங்கொண் டிடும்பரம னியற்கை யென்னே. (௬)

தலைகொடுத்த குமணனிலு முயிர்கொடுத்த நந்தியிலுந் தமிழ்க்காத் தான்போய், விலைபடுமிந் நெற்குன்ற வாணனமே லெனத்துணிந்து விளம்ப லாகு, நிலைபொறுத்த புலமையுற்று மானத்தும் புகழ்பெரிதா நினைத்த தாலுங், கலையுணர்ச்சி சிறிதுமிலு மினத்தொடிகல் கொடுங்குணமுங் கடந்தா னம்மா. (௭)

ஆங்கவனவ் வாறிருப்ப வரதுங்கன் மனைவியையே யனைய பாரி, தேங்கமழ்சொற் புலவனுக்காக் கொண்கனிக லவனடிமைத் திறத்தோனை, பாங்கறியா தாளனுப்பி யமுதருந்தும் பொருட்டழைத்தாள் பரிந்தன் னேன்போ, யீங்கடைந்த தென்னெனநொந் துரைத்திடலு மவனொருபாட் டெழுதி யீந்தான். (௮)

கற்குமியற் றமிழறிவா கரனுகி வந்தவம்பி காளிக் கின்றியான், விற்குமொரு பாத்திரமாய் விலையானேன் வேங்கடமாம் வெற்பும் வீறூர், பொங்கவடுங் கவிஞயுந்தென் பொதியையும்போ னம்மரபும் புகழும்

பூண்ட, நெற்குன்ற மெனும்பெயரு நிலைபெறவென் றதனையவ ணிவேப் புற் ஞோர்ந்தே. (௯)

சாதலினும் பெருந்துயரெம் தமக்களித்தா யேதகுமோ தருப மோவென், ருதாத்தோ டரனேநினைத் துருகியழு தாளவன்பா லந்த வேளை, மாதவஞ்சை யாழிபெறுந் தொண்டைமான் சேவகர்போய் மன் னன் செய்யு, மேதமெண்ணு தெடுத்தபொருட் கொடுத்திரின்றே லவன் முன்வருகென்ச்சொன் ஞரே. (௧0)

சொன்னமொழி வினவியவ னென்னேவிலைக் கொண்டவன்பாற் சொன்மி னீவி, ரென்னவித மவன்சொலினு மதுசெய்வே னென்றிடலு மிவையெல் லாங்கேட், டன்னவன்று னியான்விழைந்த பயன்முடிந்த தினியிவன்ஞெண் டாசிக் கில்லேன், மன்னவன்பாற் கொடுபோமி னெ னவிடுத்தா னவரொட்வன் மனேப்பாற் சென்ருன். (௧௧)

வந்தகொழு நனையவள்கண் டழுதுவிழுந் தாங்கியன்ற வகையெல் லாங்கேட், டிந்தவிக்கட் டொழித்ததெய்வ மினியெதுசெய் தாலுநன் றே யென்று தேறி, யந்தகன்றா. தரிற்றெருடருஞ் சேவகர்க்குங் கேள்வ னுக்கு மழுதிட் டப்பாற், பைந்தண்வளம் பொலிகாஞ்சிப் பதிக்கரச ணுணவழிப் படர்தற் பார்த்தாள். (௧௨)

தீரகுணங் கொடைத்தகுதி மனேவிநல மாதியன திகழ்ந்த வாறே [டு
சீரவிர்செந் தமிழ்ப்புலமைத் திறமுமுல கினில்விளங்கச் செய்தல் வேட்
நாரணனு டருந்திருத்தாட் சிவனியற்று மாடலன்றி நவையொன்றில்லே
போரரிநேர் வயவரந்தப் புனிதனைக்கொண் டரசவையிற் புகுவித்தாரே.

அரசனவற் கண்டலுமுன் கொண்டிருந்த சினமுழுது மகன்றிட் டின்னேன், பரனடிமை யெனத்தோற்ற லால்வியந்தா னேயினிமித்தம் பாம்பிற் சீறிக், கரவுசெய லாலுரின் றலைமையிழந் தாய்கவர்பொன் கணக்கோ டந்தா, லூரனுறுதண் டனேவிதியே னெனச்சொன்னு னவன் கும்பிட் டுரைப்ப தானுன். (௧௪)

நின்பொருளே யான்றிருட்டா லபகரித்துக் கொள்ளவில்லே நிகம நூலோர், நன்பொருளென் றுரைக்குமறப் பகுதிகட்கே யளித்துள்ளே னுகப் பூணே, டென்பொளிர்மார் பினனுணர்வா னெதுசெயினுஞ் செய் திடுக வெனேநீ யென்முன், முன்பொனலன் பால்விலையா யதிற்றூழ்வெய் தாதெனவு முன்னி னுனே. (௧௫)

மன்னனம தரசாட்சிக் குரியபொரு ளிவ்வளவு வழங்க வேண்டு
மின்னவனேச் சோணுட்டிற் கொடுவிடுமி னெனவயவர்க் கியம்பி யப்பா
லன்னவனே யவைகொணர்நா ளல்லதென்னுட் டிடைவருத லாகாதென்ருன்
கன்னலம்பா கினேப்புகட்டு மென்றமொழி வினவினரிற் களிகூர்ந்தானே.

பத்தினிக்கவ் விவரமொரு பாசுரத்தால் வரைந்தனுப்பிப் படைக் கை வீரர், மத்தியிற்போய் வெள்ளாறு கடந்ததற்பின் றனியாகி மறு

வில் சைவ முத்திபெற்றோர் விதித்தபடி முதற்றில்லை நடம்புரியு முன்னோற் போற்றி, யத்திருநாட் டுள்ளதல மொவ்வொன்றுந் தனித்தனிதாழ்ந் தருள்வேட் டானே. (௧௭)

எத்தனையோ தலந்துதித்து வணங்கியபின் றிருப்புகலூ ரிடத்திலேகிப் பத்திமலி திருநாவுக் கரசுகதி யடைந்ததுவும் பரவை கேள்வ னத்தமதாற் சமைந்தசெங்கற் பெற்றதுவுங் கருதிநனி யளிகூர்ந் தாங்கு மத்தகமா முகக்கடவுள் சந்நிதியி னின்றொர்கவி வழங்கி னானே. (௧௮)

அக்கவிமுற் றிடுதலும்பின் னின்றொருத்தி யந்தாதிக் காப்பா மொன்றுள் கைக்களிறன் னனவட்பாத் துமையவளோ கலைமகளோ கவிஞர்கோயின் மிக்கபணி மகளோவென் றுன்னியரண் மனைப்பணிநீ விரும்பி நல்கி னிக்கவியப் படியாதற் கையமிலை முக்காலு மெனச்சொன் னானே (௧௯)

அரண்மனையின் பணத்தொகையா தெனவினவப் பகர்ந்திட்டா னவனுக் கஃதோர், திரணமெனத் தோற்றியதால் வருகவெனக் கொண்டுமனை சேர்த்துள் ளன்பாற், குரவனெனத் தக்கபடி யாதரித்தா னவன் மகிழ்ந்து குதுகூ லத்தாற், பரவுதிரி வந்தாதித் தமிழ்மாலை யிணையில தாப் பாடினானே. (௨௦)

பாடிமுறைப் படியரங்கேற் றிடலுமவ னரண்மனையின் பணமல் லாமற், கேடில்சிவி கையும்பணியா டையும்வழங்கிச் செல்லவுய்த்தான் கிரிப்பின் னேகிப், பேடியடி யுண்டருள்வா னருள்சுரந்தாற் பெறற்கரிய பேறொன் றுண்டோ, தேடியுண்பா னெனும்பெயரா னொருத்தியுமாய் கத்தனைசீர் செயச்செய் தானே. (௨௧)

மண்டலத்தி லன்றுமுத லம்மகனை யறிவறிந்த மாக்க ளெல்லாம், கண்டகையைப் பொன்னனையான் முதலினரை யனையனெனக் கழற லுற்றார், புண்டரிகப் பிரமன்முத லோர்பகர்தற் றருமமிகப் பொலிவுற் றாலுந், தண்டமிழ்ப்பா வலர்க்குதவ லுயர்வேயென் றிடற்கிதொரு சான்று மம்மா. (௨௨)

சென்றவன்றான் கச்சிநகர் மன்னன்முற்போய்ப் பொருட்குவை யைத் திறைபோன் றிட்டா, னன்றதுவந் திமொற்றை வினவியவேந் துளநாணி யவற்கே யீந்திட், டுன்றனதா ருன்னுயிருள் ளளவுமுன தேயாக வுதவி னேனங், கென்றனது பகுதிமுழு தேற்றவற்றி லாறிலொன் றெற் கீகென் றானே. (௨௩)

தன்னரசின் கீழ்ப்படுஞ்சிற் றரசர்களி லிவனொருவன் றானா னலு, மன்னனருந் தமிழ்ப்புலமை முதலியபண் பாற்பெரிது மதிக்கப் பெற்று, னன்னடைக் குயில்போலு மவன்மனையா ளியரளப்பி லார்வம் பூத்தா, ரின்னவெலா மடியவருக் கெளியபிரா னருட்செயலென் றெண்ணி வாழ்ந்தான். (௨௪)

முன்றனைத்தன் முன்றிலில்லைத் திலையுடனீர்க் கும்கொடுத்த மூர்க்க னேனே, தன்றனமு மிறுமாப்புந் தமோறி யன்றிருந்த தனைப்போன் றெய்த்தான், குன்றனைய பெருந்தகையன் னவனைவிழைந் தவனிலையிற் குலவச் செய்து, பின்றனைப்பல் வேலையிடா தனுப்பியகன் றியைப்பெரிது பேசி னனே. (௨௫)

பொற்புறுசெல் வமுமிடியு மாறிடற்கு மரசனுளிற் பொங்குங் கோப
மற்புருவா யினுமாகு மென்றிடற்கு நன்மனையா ளாக்கத் திற்கு
நற்புருடர் பண்பினுக்கு மேனைக்கும் பத்தரெவ ணவிவுற் றூலும்
பிற்புளகெய் திடுதற்கு மிங்கதையோர் சான்றாகும் பேசுங் காலே. (௨௬)

ஆணுருவா யுயர்குலத்திற் பிறந்துபெருஞ் செல்வமநு பவித்திட்டாலுஞ்
சேணுநில மும்புகழும் பெருஞ்சீர்த்தி விளையாமற் செத்தாராயின்
மாணுயர்தென் புகலூரான் றிருவடிக்கோர் தமிழ்மாலை வாங்கிச்சூட்டி
நாணுமட முந்தவிர்ந்து வாழ்ந்தமக ளினுந்தாழ்வா நவிலலாமே. (௨௭)

அத்தகைய நெற்குன்ற வாணனெனுந் தமிழ்ப்புலவ னருட்பே ராண்மை, துய்த்தபுல வோருமெப்பத் தருமறிவா ரேனையர்தாஞ் சுவையொன் றில்லாக், கைத்தகவி யாலேனு மொருவியனக் கணநட்டத்திற் காண்பா ரப்தேர், மெய்த்தமல ரினுந்தமிழ்ப்பா மாலையினைத் தாழ்ச்சியென நிகழ்த்தொண் ணாதே. (௨௮)

அவனிகலோன் றன்னிடத்தில் விலைப்பட்டும் பொருள்கொடுப்பவரிய பாட, னுவலுமம்பி காளியென்போ னெத்தகைய புலவோனே நுவன்ற பாடல், புவனிமிசை யொருவர்சொல்லக் கேட்டிலே னெவரெவர்தாம் புகன்று ளாரோ, நவரசப்பா வலர்பெருமை மறைதல்புரை யாச்சரிய ஞாலத் தின்றே. (௨௯)

செல்வமுங்கல் வியுங்கற்பு மனையாளும் பெற்றுவந்து சிவலோகத்தி, லொல்வதுறு நெற்குன்றவாண முதலியின்கதை யோர்ந்துளவிற் சொன்னேன், கல்வரைத்தோண் மறவர்குல திலகமெனப்பிறந்து தமிழ்க்கவியா வீசன், பல்வளஞ்சொற் றுய்ந்ததலைமலை கண்டதேவனிசை பகர்கின்றேனே. (௩0)

நெற்குன்றவாணர்சருக்க முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௨௬௬௬.

அறுபத்தைந்தாவது

## தலைமலைகண்டதேவர் சருக்கம்.

அலைகடலுடுத்தபாரி லஞ்சுறுதெதிர்த்தோர்தம்மைக்
கொலைசெயறொழிலாக்கொண்ட கொற்றவேன்மறவர்பல்லோர்
நிலைபெறமுன்னாட்செய்த நெடுந்தவப்பயனேயாகித்
தலைமலைகண்டானென்றோர் தனயன்வந்துதித்திட்டானே. (௧)

சோழநாட்டினிலுள்ளோனே தொனித்தமிழ்ப்பாண்டிநாட்டில்
வாழவந்தவனேவந்தவனைவிரித் துரைப்போர்க்காணேன்
வேழமும்வெருளச்சீறும் வேங்கையின்குலத்தோர்சேங்கன்
றாழதன்வழியிற்றேன்றி புலவல்போன்றௌளிர்ந்தானம்மா. (உ)

பாலியங்தொட்டுநல்லோர் பழக்கமுஞ்சுத்தப்பண்பு
மாலிலேத்துயின்றேன்காணு வரவிந்தப்பதத்தினன்பு
நாலியல்புடையபாவு நவின்றுநாவலனுமாசை
மேவிடுந்தகவுந்தோய்ந்தான் வெஞ்சமர்த்தொழில்கற்றிலான். (ந)

வில்லெடுத்தொருபுள்ளேனும் வீந்திடத்தெறித்திலான்றேன்
மல்லெடுத்தெவனோடேனு மாநிலத்துருண்டிலான்வன்
கல்லெடுத்தனையசிந்தைக் கவிஞருமுருகுமின்பச்
சொல்லெடுத்தடுக்கிப்பாடுந் தோற்றமேகருதிநோற்றான். (ச)

மருளறத்துறந்துநல்ல மாதவமுயன்றிட்டுண்மை
யருள்பெறுபெரியோர்நாவா லெங்தெழுத்துரைப்பக்கேட்டுப்
பொருளிதென்றுன்னியேத்திப் புராந்தகன்றிருக்கணேக்காற்
றெருளுமெய்ப்புலமையெய்தித் திகழ்முழுப்புருடனானான். (ரு)

தொழுதகைமுருகோனந்நா டோய்தருவள்ளியேபோன்
றெழுதிறற்றுணைவர்பிற்றேன் றெழிற்கருங்குயில்போல்வாளைப்
பழுதறுகுலத்தினேரும் பார்ப்பனமாக்கடாமு
மிழுதுபெய்கனலுஞ்சான்று மியன்மணமுடித்தின்புற்றான். (சு)

அன்னமைத்துனரேழ்பேரு மவர்குலமுறைதப்பாமற்
கன்னமாதியசெய்தான்ற களியொடுகுலவக்கண்டு
மின்னவனேடுங்கையு மிடைவிடாதொழுகலுற்றான்
மின்னனாளதனற்சிந்தை வெதும்புறுதுயர்மிக்குற்றாள். (எ)

அக்குறிப்பறிந்திட்டன்னே னவளுடனமுங்குறேனீ
பக்குவமறிந்துநம்மைப் பரமனுண்டருள்வானப்பாற்
றிக்குமுற்றுணர்சிரெய்துந் திருட்டொருசெல்வமன்றென்
றிக்குலத்தொழிலானாலு மியான்செயேனெனவேசொன்னான். (அ)

அதுகுறித்தந்தமங்கை யளப்பருங்கவலையாளா
யெதுசொலித்தேற்றினாலு மெழுவரோடேகுமாறே
கதுமெனச்சொல்லிநொந்து கண்கணீரிறைத்துச்சோர்ந்தாள்
விதுவணிசடிலத்தானு மிடியினல்வெதுப்பினூனே. (கூ)

உடன்பிறந்தவர்சேர்மாத ருவகைகண்டுள்ளநாணித்
திடம்பெறுமுரித்திலன்னோர் சிறிதளிப்பதுங்கையேற்றுக்
கடன்பலரிடத்தும்வாங்கிக் கனற்கொடுங்கலியால்வாடி
மடம்பொலிகற்பின்மிக்காள் வருந்தலுஞ்சகியானானான். (கo)

கமலபுங்கவன்முன்னீன்ற கலசமாமுனிவன்செய்த
விமலமுத்தமிழாற்பாடல் விதம்படவெகுவாப்பாடிச்
சமனைவென்றடியர்க்காக்குந் தன்னருண்மருதன்றன்மேல்
யமகவந்தாதியொன்று மிணையில்சீரெய்தச்செய்தான். (கக)

அத்தனைதொண்டுசெய்து மரன்றிருவருள்செய்யாமற்
சித்தநொந்துழலக்காணுந் தீமைதான்சகிக்கலாஞய்ப்
புத்தமுதுறழ்சொல்லாள்பாந் போதநீபுகன்றவண்ண
மொத்தவர்தம்மோடேகற் கொப்பினேனெனச்சொன்னனே. (கஉ)

கற்பினலவளைநீத்துக் கடுந்துறவடைந்தானில்லை
யற்பினலரனைப்போற்றி யருள்பெருதறவுநொந்தான்
முற்பிறந்தவர்பாற்கொண்கன் மொழிந்தவாறுரைத்துமீண்டாள்
வெற்பிணைத்தோளார்தாமும் விலக்கிலார்வேட்கைமிக்கார். (கங)

எழுவருமவனைநேர்கண் டிசைவுணர்ந்தேதேதோதம்
வழுவுறுசெயல்களெல்லாம் வருத்தனர்மறுத்தோதாமன்
மழுவணிவலக்கைநாதன் வடிவமானதத்தாலுன்னிப்
பழுதிலைந்தெழுத்தேயோதிப் பருவரற்கடற்றாழ்ந்தானே. (கச)

அங்கணர்திருவுள்ளப்பாங் கரறிகிற்பாரந்தச்
சிங்கநேரெழுவர்தாமுந் திருப்புவனத்தூர்வாழோர்
துங்கன்மாமனையிற்சென்று சோரஞ்செய்திடல்வேட்டுற்றூர்
தங்கமுமணியுங்கோடி தனமுமாங்குறுதலோர்ந்தே. (கரு)

வேறு.

அம்மனையில்வாழ்கிழவ னநுதினமொரவோர்பாச்
செம்மணிநிறம்பெறு சிவன்றன்மிசைசெப்பிக்
கைம்மலர்குவித்தலது கண்டுயில்வுறுதான்
மெய்ம்மறையெனைம்பொறியு மிகவுரைசெய்கின்றேன். (கசு)

இவ்விரதமோர்பதொ டிரண்டுவருடஞ்செய்
தௌவியமின்மெய்ப்பயன டைந்திலமெனநொந்
தெவ்விதமுய்வோமென விரங்குமொருநாளின்
மைவிரவுகண்டன்விளை யாடமனம்வைத்தான். (கஎ)

அன்றுதலையிற்பலி யயின்றுமூடல்பாதி
துன்றுமிமவெற்புத்வு தோகைபெறவீந்தா
னென்றுகவிபாதியினி தோதலுமதற்பின்
ஞென்றுமுதியாவண்மொளித்தலினுடைந்தான். (கஅ)

மாதம்வரையாகியும் வராதலின்வயிற்றூற்
சீதம்விழுநோய்மிகை செறிந்துசெயல்குன்றிச்
சாதல்கடனென்றுகிடை யிற்படுதலாயு
மோதவருபாதியு முரைத்தலொழிகில்லான். (கக)

வெவ்வெழுமுதற்சில விறற்படைவிடாரா
மவ்வெழுவர்தாமுமரு மைக்குரியதங்கை
வெளவெழின்மணாளனொடு வான்மதியிலாநா
டெவ்வெழிலிவாரிபுகு தோற்றமெனவுற்றார். (௨0)

புக்கமனையிற்கவர் பொருட்சுமையொரெட்டு
மெய்க்கவிஞனருகமொர் வெள்ளியன்முன்வைத்தே
நக்கன்விழைவாலொரு நடுக்கமவிணைய்தி
யொக்கநொடியிற்கடுகி யோடினர்களம்மா (௨௧)

அவ்விதமறிந்தில னவன்டனியிருந்தா
னிவ்விடையிரன்டொர்விசை யிற்கிடைகொடுள்ளான்
செவ்வியவரைக்கவி யிணைப்பகர்திறத்தால்
வெளவினனிவன்கவிஞ னென்றவன்மதித்தே. (௨௨)

* உலையுறுமிருப்புவன மொப்வுருவனொன்னுஞ்
சொலையுரைசெய்தான்கிடைகொ டேயவனெழுந்துள்
ளலைவறவிரண்டுவிசை யாமெனவிளம்பிச்
சிலைவிலுடையான்செய லெனமுடிவுசெய்து. (௨௩)

ஓசைவழிபோயவ னுடற்றழுவிநீயென்
னைசைமுடியச்செய்துயி ராகமுறவைத்தாய்
தேசைவிழியிற்சொரிய னேவலதலன்றாட்
பூசைசெய்துயுந்தவசி யேமெய்புகலென்றான். (௨௪)

அன்றவனுதித்தகவி யாமரையுமன்னோ
பின்றனியிருட்டினிடை பேசலுமொர்பாவா
நின்றறிவனென்னைவிடொர் தீபநிலவச்செய்
நன்றறிபுமூடர்களி னொருவனெனலும். (௨௫)

அக்கணம்வெளிச்சமிக வார்தரல் செய்தந்தப்
பொக்கணமொரெட்டொடு புறங்கடைதிறப்பு
மிக்கவிஞன்வைதிக வெழிற்பொலிவுநாடிப்
புக்கதுரையென்றிடலு முள்ளவைபுகன்றான். (௨௬)

இத்தனையிசைப்புமெனும யாளுடையவெண்டோட்
சித்தன்விளையாடலென வேநனிதெளிந்தப்
பத்தர்பெருமான்சுமையொ ரெட்டுமொருபால்வைத்
தத்தனியனுக்குண வருத்தியுபசாரம். (௨௭)

தக்கபடிசெய்திருவர் தாமுமவர்தம்வாய்
மிக்கமதுரக்கவி விளம்பியிமையாத
முக்கணுடையான்மகிமை முன்னிமகிழ்போர்து
மைக்கடன்முகட்டிரவி வந்தனன்வியந்தே. (௨௮)

கள்ளல்செயுமவ்வுழி கவித்தொடர்புரைத்த
வெள்ளனுமனைப்பொருளில் வேணவகவர்ந்தா
ருள்ளமைபவற்குவகை யோதுமதியோனு
மெள்ளலருள்பித்தனரு ளெய்தியவர்தாமே. (௨௯)

வெம்புகதிர்வந்திருள் விலக்கியபினன்னோர்
தம்புருடசாதன முடித்தெழுவர்தாமு
நம்புதலொடங்குவர நன்மைகள்வரைந்து
தெம்புணர்வுடன்பெறுமொர் தீரன்வசமுய்த்தார். (௩௦)

வேறு.

ஆடியபதத்தோன் றிருவருட்செயலா லளவிலார்வளைதல்போற் றோற்றி, யீடில்காரிருளி லவரவருயிர்கொண் டேகியவெழுவருங் கூடிப், பாடியபுலமைத் திறத்தொர்மைத்துனனைப் பதைபதைத்திடக்கொல்வா ரெனநொந், தேடியன்மலர்ப்பைங் குழலுடைத்தங்கைக் கென்சொல் வோமெனப்பெரி திடைந்தார். (௩௧)

கவர்ந்தகைப்பொருள்போ யதிலனுவேனுங் கவன்றிலார்மைத்து னற் கருதிச், சிவந்தகட்புனன்மிக் கிறைத்தனர்நாளுந் தேடியபொருளி லோர் பங்கிட், டுவந்தளித்திலமென் றன்னினரிரவாங் கொழிந்துசூரிய னுதித் திடலுந், தவந்தழைத்துள்ள தங்கைதான்வினவித் தமையன்மார் முன்புவீழ்ந் தழுதே. (௩௨)

யானினியுடல்வைத் திருக்கிலேனழலி லிக்கணம்வீழ்வனீ ரருந்தே ன், வானிறையனையான் வரினுநம்மரபின் வழிக்கொடுமணஞ்செயே னெ ன்றாள், வேனிதுங்கிழ்கா லவர்விடுமுடங்கல் விரித்துணர்ந்துவகைமேற் கொண்டா, ரூனிழந்திலனென் றவளுமோர்ந்தொருவா றேய்ந்தனளு யர்விலங் கியதே. (௩௩)

தலைமலைகண்டா னெனும்பெயராலுஞ் சரவணனேநிகர் தக்கோன்
கலைவலியினுநம் வாள்வலிதாழ்வே யெனக்கணித்தளவறக் களித்திந்
நிலைபெறுமுடங்கல் வாய்மையிற்கபட நேருமேற்பொருதழி குவமென்
றலைவறுமனத்தா ராமெழுவருமாங் கேகுதற்கொருமையெய் தினரே.()

சல்லடந்தரித்துக் கச்சைமேலிறுக்கிச் சாதியின்முறைப்படி யுருமா
னல்லவாயாத்துப் பணிபலபுனைந்து நனைத்தமஞ்சளின்கலை யுடுத்துக்
கல்லழுத்தாதி ரடிச்செருப்பிட்டுக் கதுமைசால்வல்லயம் பிடித்து
வல்லபோர்க்களத்துக் கேகுநர்போன்றே வழிக்கொண்டார்சகுனம்வாய்த் தனவே.

உளம்வருந்தாராய்ச் சரதமேயாமவ் வோலையென்றுன்னியாங் குற் றுற், சளமெய்தாதெனத்தேர்ந் தேகினர்நின்றூர் தமதுமைத்துனனுமம் மனையில், வளவனில்வாழ்வான் றானுமோர் விரிப்பில் வதிதல்கண்டள வற மகிழ்ந்தார் கிளருமிக்கோல நீர்கொளுநிமித்தங் கிளத்துமினெனவ வர் கேட்டார். (௩௬

னென்னவிராவி லெமைத்துரந்திட்டார் சேர்ந்தொருக்காலிகல் வாசே
லன்னவர்தம்பாற் பொருந்துமாய்ந்திடுதற் கன்றிவேறின்றெனவறைந்தார்
பன்னகாபரண னருட்செயலெனவப் பாவலரிருவரு மதித்திட்
டின்னவீரத்தீர் நும்முயற்சியின லிருவருமுய்ந்தன மென்றூர். (௩எ)

ஆலுடைக்கடவு ளடியாரமவரி லம்மனைக்குரியவ னவர்க்குப், பாலுடைச்சோறிட் டவர்கையாற்சமைத்த பருஞ்சுவையொட்டுமீந் தவற்றிற், சேலுடைக்கருங்கட் டங்கைபங்கெடுக்குந் திறத்தொராளுடனனுப் பியப்பால், வேலுடைக்குகனே யனையவன்மிடிநோய் வேரறக்களைந்த னுப் பினனே. (௩அ)

அன்னவற்களித்த பரிசெலாம்விரித்தன் டைவதாற்பனிலே யவனைத், தன்னகத்துடன்றேன் றியசகோதரன்போற் றழைப்பவைத்தன னென்பார் தக்கோர், பின்னவரிருவர் தாமுமிக்கிணங்கிப் பெரும்பயன வவற நுகர்ந்து, கன்னல்வில்லியைச்செற் றவனுலகினும்போய்க் கலந்து வீற்றிருந்தன ரம்மா. (௩௯)

எத்தனைபேர்க்கோ விடைமிசைப்பரம னெய்தியின்னருள்செய்தா னென்பா, ரித்தகைவிளையாட் டொருவருக்கேனு மியற்றினனென்கை கேட் டில்லேன், பத்தமார்மனையுஞ் சுத்தமுநழுவாப் பத்தியும்பழுதின் மாதுரிய, முத்தமிழ்க்கவியு முடையவர்பெருமை மொழிந்திடின்முற் றுறு தன்றே. (௪0)

மாவெகனமாக் கொண்டவர்பெருமை வளம்பசர்தலைமலை கண்டா ன், பாடுசொற்றமிழ்மான் பிள்ளைபெருமாள் படியினருணர்தரப் பகர் ந்தே, னுபொம்பனையாற் புகழ்பிள்ளைப்பெருமா ளையங்காரருந்தமிழ்ப் புலமைப், பிடும்யானுணர்ந்த வளவினிற்பகர்வேன் பெருந்தகை யினரு வப்புறவே. (௪௧)

தலைமலைகண்டதேவாசருக்க முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் - உஎ௩எ.

## அறுபத்தாருவது
## பிள்ளைப்பெருமாளையங்கார் சருக்கம்.

தென்கலைவயிணவன் செகமெலாம்புக
ழின்கவிப்பிரபல னிலையில்பட்டர்தம்
நன்கணத்தினர்களி லொருவனாரணன்
பொன்கழலன்றிமற் றென்றும்போற்றலான். (௧)

மருவழகியமண வாளதாசனென்
றொருபெயர்புனைந்தவ னுரைக்குமோர்சொலாற்
பொருள்பலதருங்கவி பொழிக்கும்பொற்பினிற்
பெருமிதனெனப்பலர் பேசும்பெற்றியான். (௨)

செவ்வியசொற்சுவை சிறிதுந்தேர்ந்திடா
தெளவியப்போர்பொரு மவர்களன்றிமற்
றெவ்வியற்புலவரு மிசைந்து நாடொறுந்
திவ்வியகவியெனச் செப்புஞ்சீர்த்தியான். (௩)

தேனையுமமுதையு மனையதீஞ்சொலோர்ந்
தானையின்கன்றென வமைக்கும்பாடலா
னேனையபாடலெலாவ் றேனுமோதிலான்
பூனைபோல்வஞ்சனைப் புந்திகொண்டிலான். (௪)

அயன்புரைவயிணவ வந்தணர்க்கெலாஞ்
செயந்தருமொருபெருஞ் சீயவேறனை
னயம்பொலியாய்ச்சியர் நண்ணுங்கண்ணன்போல்
வயங்குபிள்ளைப்பெரு மாளென்பேரினன். (௫)

காவிரியாற்றிடைக் கவின்செய்பாம்பணை
மேவினனல்லது வேறொர்தேவரை
நாவினாற்றுதிசெயே னென்றுநற்றமிழ்ப்
பாவினம்பற்பல பகர்ந்திட்டானரோ. (௬)

கலம்பகம்யமகவந் தாதிகற்புறழ்
நலம்பயந்திடும்படி நவின்றுநான்மறை
யிலம்பகம்புகழ்பதத் திட்டொரெட்டுமே
யலம்படாதின்புற வாசித்துற்றனன். (௭)

பூரணனென்றெண விடினும்பொங்கரு
ணாரணனொருவனே யென்றுநண்ணிலான்
பாரணங்கின்றலைப் பலதலந்தொறுஞ்
சீரணங்கினர்பல ரென்றுதேர்ந்தனன். (௮)

அப்படிக்கருதவ னரனைவேதனை
யெப்படித்தரத்தினி லெண்ணினன் கொலோ
விப்படிநெறிதவற் கிதஞ்செய்தாட்கொள்வான்
முப்படியினர்தொழு முகுந்தன்முன்னியே (௯)

ஒருபெருங்கனவினி லுலகமுண்டுமிழ்
திருநெடுமாலெனத் தெரியத்தோற்றியே
பொருவில்வேங்கடத்தினைப் புகழ்ந்துசில்கவி
தருதியென்றன்பொடு சாற்றினனரோ. (௰)

வரங்கமழும்மொழி மதித்துந்தன்னொரு
சிரங்கொடப்பணியுடன் செய்திடாமலெம்
மரங்கனைப்பாடிய வருமைவாயினாற்
குரங்கனைப்பாடிடே னென்றுகூறினன். (௧௧)

வேறு.

விண்டபோத்ரி தன்விளையாடலாற்
கண்டமாலை கதுவிடக்கண்டவன்
கொண்டவாண்மை குலைந்துசிலேடையா
மொண்டகைச்சொ லுறுமொருமாலையும். (கஉ)

திரிவந்தாதியுஞ் செப்பினனப்புறத்
தரியசோலை மலைக்கொரந்தாதியும்
பிரியமோடுரைத் தான்பினுஞ்சிற்சில
தெரியல்செந்தமி ழிற்செய்திட்டானரோ. (கங)

என்வகைப்பிர பந்தமிசைத்ததா
மண்வயிற்பல மானிடர்கூறுவார்
தண்வளம்பெறு தாமரைப்பூத்துணைக்
கண்வலான்றிரு வுள்ளங்கணிப்பவே. (கச)

சிவனைநிந்தனை செய்தவனையெலா
மிவனைச்சிற்சி ளிஞ்சைவரேசுவா
ரவன்றன்மாயவ னுகத்திற்பாதியென்
றுவந்துபாடிய பாக்களுமுள்ளவே. (கரு)

என்றென்றுந்தன திட்டதெய்வத்தையே
நன்றென்றேத்திடன் முனிகள்சம்மத
மன்றென்றோத வொண்ணுந்தனுலவன்
குன்றென்றச்சுத னைக்குறிக்கொண்டதே. (கசு)

சைவரிற்சிலர் தாமரைக்கண்ணனை
வைவதொப்ப வயிணவரியாவரு
மைவனக்கள வள்ளலைநிந்தனை
செய்வதில்லை திருவருள்சாட்சியே. (கஎ)

வானந்தத்தற வல்வில்வளைத்தவன்
கூனந்தக்கரக் கொண்டல்பொற்றாள்களிற்
றூனந்தப்புனை தாரொடுநீர்புனை
யானந்தத்தர னுடினனென்றதும். (கஅ)

அத்தன்வேத னணித்தலைகொண்டதாற்
பித்தமெய்திப் பிணஞ்சுகோட்டுறக்
கைத்தலத்ததை நீக்கிக்கயிலைமேல்
வைத்தனன்றிரு மாலெனச்சொன்னதும். (கக)

மாதவன்றன் மலர்த்திருவுந்திவாழ்
வேதனல்க விளங்கினன்மேருவின்
னுதனென்ன நவின்றதுமாதியா
நீதமுற்று நிகழ்த்துபல்கொள்கையும். (உ0)

அண்டமுண்டவ னுகத்தைச்சூலமேற்
கொண்டுளன்சிவ னென்றதிலுங்குளிர்
கண்டனைத்திருமாலரன்கான்மிசைப்
பண்டணிந்தன னென்றுசொல்பண்பினும். (உக)

மாயன்சோரியை மால்விடைப்பாகன்கைத்
தூயவோட்டிற்கொண் டானெனுஞ்சொல்லினுந்
தீயவென்றுசெப் பூர்மதவாதிகட்
கேயதீக்குண மென்றென்றுமுள்ளுவே. (உஉ)

திரிவுசொற்றிறந் தேடித்தினந்தின
மரியின்மேற்கவி பாடுமெந்தணன்
கரிவலஞ்செய் * கருவைமன்றன்னிலும்
பெரிதுநிந்தனை பேசிலனுண்மையே. (உ௩)

வளங்குலாந் † துறை மங்கலவாசன்போ
லுளங்கனன்றரி யன்பரொருவரும்
களங்கறுத்தவ ராயிரர்க்காதுதல்
விளங்கொர்பாடல் விளம்பிலர்மெய்ம்மையே. (உச)

அரனரிக்கடி மைத்திறமாற்றுவார்
பரவுபல்பவந் தீர்ந்தபின்பாண்டியன்
கரவின்மந்திரி யைப்புளிக்கண்ணுறை
யரமுளானையொப் பாவரிதுண்மையே. (உரு)

பொன்னுறைந்தபொற் பாருரத்தான்புகழ்
பன்னுநாவலர் பற்பலர்தம்மினு
முன்னுரைக்கு முரணையங்காரதா
மென்னுமாற்றமில் விம்பரிலுள்ளதே. (உ௬)

நாமமொன்றை நவின்றவர்க்கும்பெரு
வாமமார்திரு வைகுந்தநல்குமால
பாமலர்த்தொடைப் பாகவதற்கதன்
சேமநல்கல் வியனென்றுதேரினே. (உ௭)

பேரன்பார்ந்த பிள்ளைப்பெருமாட்பெயர்த்
தீரவேதியன் சீர்சிறிதோதினேன்
வாரமுத்து வயிரவன்சேருவை
காரன்மாட்சி கழறுவன்சற்றரோ. (உ௮)

பிள்ளைப்பெருமாளையங்கார்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உ௭௬.

---

* கருவைமன் - வரதுங்கபாண்டியர்.
† துறைமங்கலவாசன் - சிவப்பிரகாசசுவாமிகள்.

## அறுபத்தேழாவது
## முத்துவயிரவப்புலவர் சருக்கம்.

ஜீசவற்காரன் புல்வயலூரார் தினநம்பும்
காவற்காரன் கருமறவர்க்கோர் கண்போல்வா
னேவற்காரர் பற்பலருள்ளா னிகல்வெம்போ
ராவற்காரன் பெற்றனனோர்சே யரிதாயே. (க)

முத்துவயிரவ னென்றொருநாம மொழிந்திட்டுக்
கைத்துணையெய்துங் கார்நிறவேழக் கன்றேபோல்
வைத்துவளர்த்தான் கண்ணொளியன்றி மற்றெல்லா
மொத்துவிளங்கோர் வாலிபனென்னா வுயர்ந்தானே. (உ)

கண்ணிணையின்றித் தாழ்வுறுதுன்பக் கடன்மூழ்கி
மண்ணில்வசிக்குந் தூயர்சொல்காதை வகைதேறி
விண்ணினர்தங்காற் றளையறவெட்டி விடுவோனே
நண்ணிடனல்கத் தக்கவனென்னு நசையுற்றான். (ங)

தன்னினமுன்னுந் திபுணவொன்றுந் தானுன்னு
தின்னிசைவேதத் தோரொடுதூறவோ ரினமாக
லுன்னியுணர்ந்துன் னுயர்தவமுனிவோ னொருவன்வாய்
பன்னியவாறு சடாக்கரநன்கு பகர்ந்தானே. (ச)

இருக்கினுநிற்கினு மெங்குநடக்கினு மெவ்வாற்றாற்
றருக்கினுநொந்து தவிக்கினும்வேல்புனை தருசெங்கைத்
திருக்கிளர்தேவ னுளானெனவன்பொடு சிந்தித்தே
நெருக்கியிராப்பக லாவுருவேற்றின னெடுநாளே. (ரு)

தென்பொதியைக்குறு மாமுனிநம்பிய சிறுதாளா
னன்பொடுநாடு மவற்கெனவோர்சிறி தருள்வைத்தா
னின்பொழுகத்தகு கீர்த்தனைபாடிடு மியல்புற்றான்
வன்பொடுநாளு மிகழ்ந்தபொலாரு மதித்தாரே. (சு)

பாருலகிற்ற னினத்தருமற்றைய பலசாதிப்
பேருமகிழ்ந்து புகழ்ந்துவியந்து பெருங்கொற்றத்
தியாருமதிக்கத் தகுமவன்முத்துவ யிரவப்பேர்ச்
சேருவைகாரனொர் புலவனெனத்துதி செய்தாரே. (எ)

நீறுடியசீர்க் கவுமாரரையே நிதநாடும்
வீறார்குகவே டுதியாதலினன் மிக்கோர்தம்
பேறுமென்னக் கொண்டுமகிழ்ந்தார் பேசுற்று
வாறுயிரங்கீர்த்தனையேயாமென் றறைவாரே. (அ)

கொண்டுவாமயிலே குமரகெம்பிரான் றனையென்னக்
கண்டுநேர்சுவைக்கீர்த் தனையொன்றொருநாள் கழறுற்றான்
வண்டுசூழ்குழலார் தம்மொடவ்வாறு வரும்போதே
கண்டுபோரானந் தங்கொளவிருகண் களுமீந்தான். (கூ)

பிறவிக்குருடன் கண்பெறல்போலும் பேறென்றென்
றறல்சூழ்ந்தியபா ருலகினர்பேசன்மெ யாயிற்றான்
மறவர்க்கொருதே வனையவனெய்திய மாண்போதுந்
திறமைக்குரியார் சேடனைநேருஞ் சிலர்தாமே. (கO)

அப்புறமன்னோ னுடியவாடற் களவின்று
மெய்ப்புகழ்யாவுங் கண்பெறுதலினு மேலன்றே
முப்புரமட்டார் தந்தருள்செவ்வேன் முருகேச
னெப்புமுரிந்துற் றூர்க்கரிதியாதிவ் வுலகூடே. (கக)

சீர்வளமிக்குற் றனவுமொனூர்தந் திரண்மாயப்
போர்வலிவென்றிட் டனவுமொர்தொண்டிற் புகுபல்லோர்
நார்வரநானுற் றனவுமியற்பா நவில்கின்றோ
ரார்வமடைந்திட் டனவும்விரிப்பி னடங்காவே. (கஉ)

முத்தமிழ்ப்பாடா தொன்றினைமீற மொழிந்திட்டோ
னெத்தனைவயதோ பூவுலகத்தி லிருந்தப்பாற்
சித்தரும்விண்ணோர் தாமும்வியப்பச் செவ்வேலான்
பத்தர்வசிக்கும் பதமதனிற்போய்ப் பதிவுற்றான். (கங)

அன்னவனப்பான் மற்றொருடற்பெற் றதின்மேலா
நன்னலமெய்திச் சாமீபத்தே நணுகுற்றா
னென்னவுணர்ந்தோ ருஞ்சிலருள்ளா ரிகலோகத்
துன்னருமெய்வீ டெல்புவிவீழா துறலொன்றே. (கச)

வண்ணமலர்த்தே வுளமிகநாண வடிவேலோன்
கண்ணருள்சேர்தோய் முத்துவயிரவன் கதைசொன்னேன்
திண்ணமனக்கண் ணுன்மனையுடனோர் தேர்வேந்து
மெண்ணல்செய்பாணப் புலவனதாண்மை யிசைப்பேனே. ()

முத்துவயிரவப்புலவர்சருக்க முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உஎ௲O.

## அறுபத்தெட்டாவது
## பாணப்புலவர்சருக்கம்.

பாணர்குலத்தானொருபுலவன் பாண்டிநாட்டினிடைப்பிறந்தோ
னுணமலிவாற்கலைமகளை யாராதித்திட்டருள்பெற்றோன்
காணவிழிகளிரண்டுமிலான் கனலிற்கொடிதாங்கடுஞ்சினத்தோன்
பேணலார்க்கோரெமன்போல்வான் பெயரீண்டொருவர்பேசிலரே. ()

ஒருவரிடத்தும்போய்த்தன்மான் புணர்த்திப்பொருள்பெற்றிடானுகி
மருவுமனையிலுள்ளசெல்வ் வளமையளவிற்பயன்றுய்த்திட்
டருகுவருவார்தம்மிடத்தி லணிகூர்புலமையீல்காட்டிப்
பெருமைமிகவும்பாராட்டிப் பெருமால்களிறெருத்தவிர்ந்தானே. (உ)

அவன்றன்குலத்தோர்முதியோனு மறிஞன்புலவோரவைதொறுஞ்சொ
லிவன்றன்பெருமைமதித்தேதா லீன்றமகளைமணஞ்செய்வித்தான்
கவன்றமனத்தாளாகியவள் கருத்துமெிறிதுங்களிப்பிலளாய்த்
தவன்றன்முறைமைக்குரியபணி தன்னிற்சலிப்போடொழுகினளால். ()

அந்தமனைவிகருத்துமுழு துறிந்தும்புலவனுவனது
நந்தம்பெருமையறிவாளே னன்குறிப்பாலொளத்தேறி
யிந்தநகரிலிவட்டனிவிட் டியாமேகிடுதற்கேற்றகுற்ற
மெந்தத்தினத்திற்செய்வாளோ வென்னவெதிர்பார்த்திருந்தானே. (ச)

தேற்றமலிபாவலவனெரு தினவாயத்தெண்ணெயினனைந்தங்
காற்றமுனிவுற்றிங்ஙேர மரைப்பேனரையாதிருந்தனையென்
னேற்றமறியாயெனலுமவ ளியானைக்கன்றும்வளநாடு
தோற்றக்கொடுதான்வருதிகொலோ வெனவேதுணிந்தோர்சொற்சொன்ஞள். ()

அன்னகொடுஞ்சொல்வினவுதலு மவையான்கொணர்ந்திட்டதற்பின்னி
யென்னதுரிமைப்பணிசெய்தி யெனவேமுழுகாதிகந்தேகித்
தன்னதருமையுணர்ந்தசில தமிழ்ப்பேரறிஞர்தம்மோடு
மன்னன்வழுதிமதுரையரண் மனைவாயிலின்வாய்வாய்ந்தானே. (சு)

வந்தபுலவோனிறுமாப்பும் வடிவத்தூறும்வாயிலுளார்
கந்தமலர்வேப்பந்தொடையற் கயற்கேதனத்தாற்குரைத்திடலு
மந்தகனைமன்னவர்பார்க்க லாகாதென்றுனம்மொழியை
வெந்தகுணத்தோராகுமவர் மீண்டன்னவன்பால்விளம்பினரே. (எ)

கேட்டபுலவன்றாலவிழி கெட்டதெனினுங்கிளர்ஞான
நாட்டமுடையேனதுகோடி நயனம்புரைவதாங்கண்டாய்
வேட்டபடிசோதித்தறிந்தியான் விழைதலளித்தியதிற்பிழைத்தாற்
கூட்டநகைப்பத்தண்டனைசெய் குதியென்றெருபாட்டனுப்பினனே. ()

வரையுங்கவிதைப்பயனுணர்ந்து மன்னன்பிறர்கண்பரியானுத்
திரையுள்ளிருந்தானுப்பியந்தச் செஞ்சொற்புலவன்றனையழைத்தா
னுரைசெய்தொருவர்காட்டாமுன் னுறுமாதனத்தின்மிசையிருந்தான்
புரையில்விழியான்குருடெனுஞ்சொற் பொய்யென்றருகோர்புகன்றுரே.

நல்லவிழியைக்குருடென்ன நடிக்கின்றுனேநவின்றபடி
வல்லவருள்வாய்ந்தவன்றானே வாய்மைவெளியாமெனக்கருதி
யெல்லவருங்கேட்டிடநானிங் கிருக்கும்விதங்கூறுதியென்னச்
சொல்லவினவிமன்னனெதிர் துணிந்தப்புலவோன்சொல்கின்றான். ()

உன்னையனையா ரிகன்றெதிர்கா லோங்கத்தகும்வாட்படையினைநீ
யென்னையுறழ்வார்மிசைகனன்றுங் கெடுக்கத்தகுமோவியல்வளர்த்த
முன்னைமரபுய்ந்திடப்பிறந்த முகுந்தாவெனவோர்முதிர்சுவைப்பாத்
தன்னையுரைத்தான்வியந்துதிரை தணந்துவேட்கைதருவலென்றான். ()

மன்னன்புலவனுரைத்தபடி வல்லநாடென்வளம்பதியுஞ்
சின்னமதிவெண்மருப்பரும்புஞ் சீராரியானைக்கன்றொன்றும்
வன்னமணிப்பூணாதியவும் வழங்கியனுப்பிமகிழ்வுற்றா
னன்னமனையாள்வளர்தன்மனை யதிலப்புலவனடைந்தானே. (கஉ)

கொண்கன்வரலுமனைவியெதிர் குறுகிப்பணிந்துகோல்போலுங்
கண்கள்புனன்மிக்கிறைப்பநின்றாள் கண்ணில்புலவன்கண்டான்போற்
பெண்களரசேயனையாய்நீ பேதுற்றழலேன்பிறங்கெழிறாழ்ந்
தொண்கனகப்பூண்களுந்துறந்தே னுற்றாய்கொல்லோவுரைத்தியென்றான்.

உன்னதுடலமுழுமையுங்கண் ணுருவாமுண்மையுணராம
லென்னதகத்தாற்பகர்ந்தபிழை யினைநீபொறுத்தாளெனவிரந்தா
னன்னவனுமாங்கவளுரிமை யறிந்துநீசொன்னவைகொணர்ந்தே
னின்னமெனைநீயவமதித்தொன் றியம்பேலெனமிக்கிரந்தானே. (கச)

ஆனைக்கன்றுலவன்றுயருற் றவனாலதுவுமழுங்குறலோர்ந்
தேனைத்திருடனொருமழைக்கா ரிருட்டிற்கவர்ந்தாங்கொருமையுறும்
வேனைச்செயலாலவன்றடவி விறற்கைசுருங்கன்முகந்தேய்தல்
கூனைப்பெறுகொம்பிணைகறுத்தல் கூறற்பகருங்குவலயமே. (கரு)

கொம்புகறுத்தவிதமுணர்ந்த குருடனதுபோம்விதமறிவான்
வம்புதொலைந்ததெனச்சிறிதும் வருந்தாதுள்ளமகிழ்ந்தனனா
லம்புவியினிற்பாணன்மனைக் கானைமூதேவியெனுமொழி
செம்புநதியினிருபாலுந் திகழூர்பலவுஞ்செப்பிடுமே. (கசா)

ஞானக்கண்ணுலகினிகழ் நலந்தீதுணர்ந்துநவில்பாணன்
மானக்கண்வேண்டினும்வெள்ளை மலர்மீதிருந்தாள்வழங்கிடுவாள்
கானக்கண்ணன்கண்ணளித்துங் கண்டகாட்சிக்களிகுன்றா
தூனக்கண்வேட்டிலனெனச்சொற் றொழித்தோன்றன்னோடுறழ்ந்தானே.

இத்தகையபாவலன்பெயரு மியம்புங்கவியுமிகத்தெளித்தா
லெத்தன்மையதாம்புண்ணியத்தோ ரீரண்டும்விளங்கப்பெறுவாரோ
சுத்தமறையாகமந்துதிக்குந் தொல்வீடதனிற்றோய்வார்க்கும்
புத்தமுதினுமினிதாய புகழ்ச்சீர்மருவிற்போதநன்றே. (கஅ)

கண்ணில்லாருண்மிகப்பெரிய களியார்ந்தவனுங்கவிப்பாணன்
றிண்ணியோர்சிற்சிலர்ப்பயந்தான் றிருதராட்டிரன்மகர்போன்
மண்ணிலபவாதத்தையொரு மகவானாலும்வளர்க்கவில்லை
புண்ணியத்தான்மனைவியொடு புனிதப்பதத்திற்புகுந்தானே. (ககூ)

கொண்டிருருடுசெவிடுமூத லுவலுமெய்வூறடைந்தாலும்
வெண்டிங்களுநாணுறுங்கமல மிசைவீற்றிருப்பாள்வியனருளாற்
கண்டிலினியகவிபாடிக் கடல்சூழ்புவிபோற்றிடத்திகழ்வோர்
தெண்டிரையில்வந்தவிர் திருமின் செயல்பெற்றவரிற்சிறந்தோரே. ()

வீணப்புலவர்பெறலரிய வென்றியடைந்துமிகக்களித்த
பாணப்புலவன்சரிதமிந்தப் படியிலுணர்ந்தபடியுரைத்தே
னுணப்புலவர்களிகூர நலஞ்சேர்சத்திமுற்றத்து
ராணப்புலவன்சரித்திரஞ்சற் றறிந்தவாறீண்டறைவேனே. (உக)

பாணப்புலவர்சருக்க முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் உ௲௧.

---

## அறுபத்தோன்பதாவது
## சத்திமுற்றப்புலவர்சருக்கம்

எத்திசைக்கணும் புகழ்பெறுசோழ நாட்டிடையே
சத்திமுற்றமென் றிடும்பெயர்த்தனிநகர்ப் பிறந்தோ
னத்திநூறடு மருந்திறற்சீயவே றனையான்
பத்தியுந்தமிழ்ப் புலமையுந்தோய்தரு பண்போன். (க)

அன்னநேர்கலை மகண்மயினிகருமை யரன்மான்
முன்னவன்குக னெனுமிவர்புலமையின் மூல
மென்னவோதுவ ரிவன்மனத்தியாவருந் றனரோ
வின்னலேதரு மிடிக்கடலிடையமிழ்ந் தினனே. (உ)

மனைவிதன்னொடு நெடுந்தினமனமிக மாழ்கி
யினையவன்றுயர் களைவதற்கேதுவே தென்னு
நினைவிற்றோற்றிய வாறுதென்மதுரையி னிருபன்
றனைவிழைந்தொர்நன் னாளினிற்றனிநடந் தனனே. (௩)

அன்றுதொட்டவன் மனைவிதன்னினத்தின ரகத்திற்
சென்றுவிண்டகுற் றேவல்செய்துய்ந்தன டேம்பா
கென்றுபாவல ரிசைவுறுதமிழ்க்கவி யிசைப்ப
தொன்றுமேயுணர்ந் தோன்குறித்தேகுமூ ருற்று. (௪)

வழுதிதன்னரண் மனைக்கடைவாயில்காப் பவர்பால்
விழுமியோர்புகழ் புலவன்யான்வந்தமை வேந்தற்
றொழுதுசொற்றவ னவையிலுய்க்குதிரெனச் சொல்கா
விழுதுதோய்கன லெனச்சினந்தக்கற்றின ரிகழ்ந்தே. (௫)

எங்குபோகினுந் தெய்வசகாயமொன் றின்றே
லங்குநாடிய பயனெய்தாதென்னநன் கறிந்து
பொங்குதீஞ்சுவைப் புலவன்றனதைநனி போற்றி
யிங்குதான்பய னெய்திடவேண்டுமென் றிருந்தான். (௬)

கடுக்கனுதிய புனேங்துறில்வாயில்காத் திருக்கு
மிடுக்கரக்கணம் வேந்தனுக்குரைத்திவ னவ்வே
யடுக்கவுய்த்துப சாரமும்புரிவரா லாழி
யுடுக்குமாநிலத் தினில்வெளிப்பகட்டுமிக் குயர்வே. (எ)

அந்தநாவலன் மதுரையூர்த்தெருத்தொறு மலைந்து
சுந்தரேசுர ரருளினுற்சிற்சில தூயோ
ரெந்தனுயத்தா லோவிலிதமுதிட வருந்திக்
கந்தவார்குழ லாற்கவன்ருெருசினுட் கழித்தான். (அ)

அனையநாளிலவ் வூரிறைதன்னவைப் புலவோர்க்
கினையதாமென நாரைவாயினைப்புகன் றிடுவார்
மனையின்மாமகன் மருவிடச்செய்வலென் றிசைத்தான்
புனையுமாண்பில தவர்மிகப்புலர்ந்தன ரம்மா. (கூ)

ஒருதினத்திரா வினிலரசுருவும்வா ளேந்தித்
தெருவெலாந்திரிந் தாங்குறுதேரரு குறலும்
பொருவினுரையொன் றாற்றியேவான்வழி போய
தருமைநாவல னதனடிக்கிடந்துபாட் டமைந்தான். (க0)

நாரையேயென விளித்ததன்வாய்பனங் கிழங்கின்
சீரைமேயதுங் கால்சிவந்ததுஞ்சொலிச் சிறப்பித்
தூரையுந்தனேர் மனைவிதன்றுயரையு முறையுட்
கூரைசோர்ந்ததா தியமிடிப்பெருமையுங் கூறி. (கக)

நான்கிடப்பதுங் கைகொடுமெய்புதைத் ததுவு
மூன்கிளர்ந்தவேன் மன்னன்முற்செலமுய லுழைப்பும்
தேன்கிரித்தலை யிருல்சொரிந்தெனத்தகு தீஞ்சொல்
வேன்கிளத்திடப் பாடலொன்றிசைத்தனன் விரைந்தே. (கஉ)

உடனவ்வேந்துற முவகையெவ்வளவென்பே னேரேழ்
கடலுமேயிணை யாமரன்மனையிடங் கதுவிப்
படரிலுத்தம னொருவன்பாலவ்வயிற் படுத்தாற்
சுடருதித்தபின் னருமையாற்கொடுவரச் சொன்னுன். (கங)

அவனங்கக்கணம் விரைந்துபோயுறிந்துகாத் திருந்தான்
கவளவேழமன் வியப்பினுற்கண்டுயின் றில்லா
னிவணநேரிடச் செயலருளேயென வெளிதிற்
றவரறிந்துகொள் வார்பிறரறிகலார் தாமே. (கச)

தேரடிக்கிடந் துரியவட்குருகு தெள்ளியனு
மூரவர்க்கிதஞ் செய்துணவருந்தியு முலவாப்
பேரவாவவன் மீதுவைத்துள்ளபெண் மயிலுங்
காரணக்கன வன்றுகண்டிருக்கலா மன்னேர். (கரு)

புலவனைத்தொடர்ந் திராப்பகலளவறப் புலர்த்துங்
கலகவன்மிடித் தௌவையோடகன்றது கங்குல்
குலவுமாமதிக் குலத்திறைகொடையெனக் கூறும்
பலசெல்வத்திரு மகளுடனுதித்தது பகலே. (௧௬)

விடியற்காண்டலும் வேந்தனுள்வியன்றமிழ்ப் புலவற்
கடிவணங்குத லின்றியநயம்பகர்ந் தழைத்துக்
கடிகொள்வேம்பணி வான்மலர்க்கண்ணெதி ருய்த்தா
னெடியமாலிவ னேயெனநினைத்துட னிகழ்த்தும். (௧௭)

வெறும்புற்கைக்கலங் தஞ்சுகஞ்சோருமென் வீட்டோ
ரெறும்புக்கார்ப்பத மில்லைமன்னுமிவன வரைப்பா
நறும்பொற்புச்சொலா னவிறலுநிறுத்தின னிராச
னறும்பட்சத்தனோ வென்னவையுற்றன னவனே. (௧௮)

அக்குறிப்பறிந் தமரர்கோன்முடிவிழ வடர்த்தோ
னிக்குறைக்கவி யுரைக்குநாள்பின்னுள தென்று
மிக்குயர்ந்தவா டையும்பணிகளும்புனை வித்துத்
தொக்குறுஞ்சபை யிடையொராதனத்துறச் சொல்லி. (௧௯)

உண்பதின்பவுந் தக்கவாறமைத்தன னுரித்தால்
விண்பரந்தநா ரையினெடுவிண்டபாட் டுணர்ந்து
நண்பராப்பல நாவலர்களுநனி மதித்தார்
வண்பயோதர மனைதுயர்கருதியே வசித்தான். (௨0)

மன்னன்மாயவ னங்கிசமென்பது வயங்க
வன்னவேதியக் குசேலனுக்கவன்செய்திட் டதுபோ
லின்னபாவல னறிவுறுதிவன்மனை யாங்குத்
தன்னரண்மனைத் திருவொடுபொலிவுறச் சமைத்தான். (௨௧)

அனையசீர்செயச் சென்றவன்வந்தபின் னந்தப்
புனையிழைக்கலைச் கவினுறுபுலவனை நீநின்
மனையிற்சென்றுசின் னுள்வதிந்திவண்வரு கென்றோர்
தினையொக்கும்பொழு நல்கிடாதேசெல வுய்த்தான். (௨௨)

செல்லுவானிறை யாதுநல்காமையாற் றிகைத்தும்
வில்லுமிழ்ந்தபூ ணினத்தினிலொன்றுறவிற் றேனு
நல்லுரித்துறு மனைவியைச்சீர்செய னண்ணி
யல்லுடன்பகல் விரைந்துபோய்த்தன்னக ரணைந்தான். (௨௩)

நகரிற்சென்றுதன் மனையொடுமனைவியை நாடி
நிகரில்செல்வமாங் கமைந்ததாற்களிவிய னிறைந்து
தகரவார்குழ லாளிடநடந்தன சாற்றி
யிகல்பொல்லார்களுந் தொழும்படியிரண்டொர்நா ளிருந்து. (௨௪)

மாட்டுறுஞ்சிலர் பணிசெயவாகனத் திவர்ந்து
காட்டுநாட்டுறு சுகநுகர்ந்தேகிமுக் கண்ண
னூட்டுநீடுறு மதுரையூர்மன்னன்மு னணுகிப்
பாட்டுணின்றபிற் பாதியும்பகர்தர லானுன். (உ௫)

என்னிருங்கவிக் குறும்பினைவேருட னீர்ந்து
நன்னிலைக்குடி தாங்குநின்னட்பன்டைந் திட்ட
பின்னிகற்றெறும் பூட்கைமால்கரிபெருங் கவளந்
தின்னிற்சிற்சில தெவிட்டியதேயென முடித்தான். (உ௬)

பின்னுஞ்சிற்சில பெருங்கவியவன்மிசைப் பெய்தான்
மன்னுவந்துநின் கவியொன்றின்பெருமையை மதிக்கி
லென்னுடைச்சகா யம்பெரிதாங்கொலோ வென்று
னென்னுவன்றிடற் பாலவாங்கிருவரு மகிழ்ந்தார். (உ௭)

சத்திமுற்றத்தப் புலவனுந்தண்டமிழ் வளர்ந்த
துத்தியத்திரு மதுரையிற்றுகளில்பாண் டியனு
நத்திடும்படி வாழ்ந்தவர்நண்ணும்வீ டடைந்தா
ரித்திறற்கதை யிசைப்பவரென்றுமெண் ணிலரே. (உ௮)

நாரைவாயினுக் குவமைநன்கமைதர நவிலிற்
சீரைநல்குவ னென்னபன்முன்சொலச் செய்திட்
டோரைவிட்டுவந் தவன்சொல்கால்வினவலு முழுற்றிற்
றுரையொத்துல கனைத்தையுஞ்சூழ்பர மம்மா. (உ௯)

இட்டதெய்வஞ்சோ தனைசெய்நாள்வாயில்காத் திருக்கப்
பட்டமாந்தரு மிகழ்ந்ததுமருள்செய்நாள் பகைவே
ரட்டமன்னவ னுள்விடுத்தழைத்திதஞ் செயலும்
கட்டமுற்றுழல் பாவலருணர்வது கடனே. (௩0)

எய்த்துவாழ்வுறு சத்திமுற்றத்தியற் புலவோ
னத்துமெய்ப்புகழ்ச் சரித்திர நவின்றனனினிமேற்
சித்துவேட்கையில் பாவலர்சிந்தை முற்றுல்க
முத்துலுக்கர்தோய் புலமையின்றிற மொழிகுவனே. (௩௧)

சத்திமுற்றப்புலவர்சருக்க முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் - உ௮௬உ.

---

# எழுபதாவது.

## முத்துலுக்கப்புலவர்சருக்கம்.

புத்தரிலொருவாள்வீரன் புதல்வனுத்தோன்றியன்னோர்
செத்தனபுசித்தற்கொல்கிச் செற்றன்றித்தின்னெண்ணுதென்
றத்தகைச்சமயமொன்றுண் டாக்கியேயகிலமீது
யுத்தமுஞ்செய்துபல்லோ ருடன்படும்படிகண்டானே. (௧)

